ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

# ஏகாதச த்வாதச ஸ்கந்தங்கள்

# தமிழ் வசனம்

இவை

ஸ்ரீ - அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

இயற்றப்பெற்று







சென்னை

ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டன.

1921

# ஏகாதசஸ்கந்தத்தின் பொருளடக்கம்

நெம்பர். பக்கம்.


1 ப்ராஹ்மண சாபத்தினுல் யாதவகுலம் க்ஷீணித்த வ்ருத்தாந்தத்தைக் கூறுதல் ... 2869

2 நாரதமஹர்ஷி வஸுதேவனுக்குப் பாகவத தர்மங்களைக் கூறுதல் ... 2875

3 பகவானுடைய மாயையின் ஸ்வரூபத்தையும் அதைக் கடக்கும் வழியையும் ப்ரஹ்மஸ்வரூபத்தையும் பாகவதர் அனுஷ்டிக்க வேண்டிய கர்மஸ்வரூபத்தையும் கூறுதல் ... 2889

4 விதேஹ மன்னவன் பகவானுடைய அவதார வ்ருத்தாந்தங்களைப் பற்றி வினவுதலும் த்ரமிலன் அதற்கு மறுமொழி கூறுதலும் ... 2908

5 பகவானிடத்தில் பக்தியில்லாதவர்களின் கதி எத்தகையதென்றும் யுகங்கள்தோறும் பகவானை எவ்வண்ணம் ஆராதிக்கவேண்டுமென்றும் அரசன் வினவினதற்குச்சமஸன் மறுமொழி கூறுதல் ... 2916

6 ப்ரஹ்மாதிதேவதைகள் வந்து பரமபதத்திற்கு எழுந்தருளலாமென்று ஸ்ரீக்ருஷ்ணனுக்கு விண்ணப்பஞ் செய்ய உத்தவன் அவனைப்பிரிய முடியாமல் வருந்தி விண்ணப்பஞ் செய்தல் ... 2932

7 ஸ்ரீக்ருஷ்ணன் உத்தவனுக்கு ஆத்மஜ்ஞானம் ஸித்திப்பதற்காக அவதூதவ்ருத்தாந்தத்தில் சொன்ன குருக்களில் தான் முதலிய எட்டுப்பேர்களைக் கூறுதல் ... 2947

நம்பர். பக்கம்.

8 ப்ராஹ்மணன் அஜகரம் முதலிய ஒன்பது வஸ் துக்களி னிடத்தினின்று தெரிந்து கொண் டவிஷயங்களை யதுவுக்குக் கூறுதல் ... 2968

9 ப்ராஹ்மணன் அழுகுரல் பக்ஷி முதலிய மற்ற வைகளிடத்தினின்று தெரிந்து கொண்ட விஷயங்களை யதுவுக்குச் சொல்லுதல் ... 2979

10 ஸ்ரீக்ருஷ்ணன் ஆத்மாவுக்குத் தேஹ ஸம்பந் தாதி ரூபமான ஸம்ஸாரம் இயற்கையில் ஏற் பட்டதன்றென்று உத்தவனுக்கு உபதே சித்தல் ... 2990

11 பத்தர் முக்தர் ஸாதுக்கள் இவர்களின் லக்ஷ ணத்தையும் பக்தியின் ஸ்வரூபத்தையும் பகவான் உத்தவனுக்குக் கூறுதல் ... 3007

12 ந்யாஸமென்னும் ப்ரபத்தி வித்யையை உபதே சித்தல் ... 3024

13 ஸத்வகுணம் தலையெடுக்கில் ஜ்ஞானம் உண் டாகு மென்பதையும், ஸத்வாதி குணங்கள் கழியும் விதத்தையும் கூறுதல் ... 3032

14 பக்தியோகத்தின் சீர்மையையும், த்யானத்தின் ஸ்வரூபத்தையும், அதன் ஸாதனங்களையும் கூறுதல் ... 3053

15 பக்தியோகஞ் செய்யும் யோகிக்கு பகவத் ப்ராப்தி விரோதிகளான அணிமாதி ஸித் திகள் ஸித்திக்கும் விதத்தைக் கூறுதல் ... 3065

16 விபூதி யோகத்தை கூறுதல் ... 3074

17 வர்ணாஶ்ரம தர்மங்களை விவரித்துக் கூறுதல். 3083

18 வானப்ரஸ்தாஶ்ரம தர்மங்களையும் ஸந்யாஸா ஶ்ரம தர்மங்களையும் கூறுதல் ... 3097

| நெம்பர். | | பக்கம். |
|---|---|---|
| 19 | பக்தியோகத்தை அநுஷ்டிக்க முடியாதவனுக்குந்யாஸமென்றும் ப்ரபத்தியென்றும் வழங்கிவரும் உபாயத்தை உபதேசிக்கை... | 3109 |
| 20 | ஜ்ஞானயோகம் கர்மயோகம் பக்தியோகம் இவைகளையும் இவற்றின் அதிகாரிகளையும் நிரூபித்தல் ... | 3122 |
| 21 | கர்மஜ்ஞான பக்திகளில் அதிகாரமில்லாத ஸம்ஸாரிகளுக்கு த்ரவ்யதேசாதி குணதோஷங்களை நிரூபித்தல் ... | 3133 |
| 22 | தத்வ ஸங்க்யைகளின் விரோத பரிஹாரமும் ப்ரக்ருதி புருஷர்களின் விசாரமும், ஜன்ம மரணாதி ஸ்வரூப நிரூபணமும் ... | 3150 |
| 23 | மனத்தை அடக்குவதற்கு உபாயஞ் சொல்ல முயன்று அதற்கு நிதர்சனமாகப் பிக்ஷு கீதத்தை கூறுதல் ... | 3172 |
| 24 | ஸ்ருஷ்டி ஸம்ஹார க்ரமங்களை நிரூபித்தல் ... | 3195 |
| 25 | ஸத்வாதி குணவ்ருத்திகளையும் குணயுக்த வஸ்துக்களையும் குணாதீத வஸ்துக்களையும் நிரூபித்தல் ... | 3203 |
| 26 | துஷ்ட ஸஹவாஸத்தினால் யோக நிஷ்டைக்கு விக்னம் வருமென்றும் சிஷ்ட ஸஹவாஸத்தினால் அந்த யோகநிஷ்டை வளர்ந்து வருமென்றும் நிரூபித்துக்கொண்டு ஸங்கத்தினால் யோகப்ரஷ்டனாவானென்பதற்கு உதாஹரணமாக ஐலவ்ருத்தாந்தத்தைக் கூறுதல் ... | 3215 |
| 27 | உத்தவர் கர்மயோகத்தைப்பற்றி வினவுதலும் ஸ்ரீக்ருஷ்ணபகவான் அதை நிரூபித்துச் சொல்லுதலும் ... | 3225 |

நெம்பர். பக்கம்

28 முன்பு விஸ்தரித்துச் சொன்ன ஜ்ஞானயோகத்தைச் சுருக்கிக் கூறுதல் ... 3238

29 பகவான் உத்தவருக்கு மீளவும் பக்தியோகத்தைக் காட்டிலும் ஸுகரமான உபாயத்தை உபதேசித்தல் ... 3258

30 ஸ்ரீக்ருஷ்ணன் மௌஸல வியாஜத்தினால் தன் குலத்தை ஸம்ஹரித்தல் ... 3270

31 ஸ்ரீக்ருஷ்ண நிர்யாணமும், வஸுதேவாதிகள் பரலோகம் போதலும் ... 3279

# த்வாதசஸ்கந்தத்தின்
## பொருளடக்கம்.


32 மேல் வரப்போகிற ஸோமவம்ச பரம்பரையைக் கூறுதல் ... 3285

33 ஸ்ரீசுகர் பரீக்ஷித்து மன்னவனுக்குக் கலியுக ப்ராதுர்ப்பாவத்தின் அடையாளங்களைக் கூறுதல் ... 3291

34 பூமிகீதங்களால் ராஜ்யதோஷாதிகளையும், தோஷ பூயிஷ்டமான கலியில் தோஷங்களைப் போக்குவது ஸ்ரீஹரி நமஸ்காரமே யென்பதையும் கூறுதல் ... 3303

35 நைமித்திகம் முதலிய நான்குவகை ப்ரளயங்களை நிரூபித்தல் ... 3316

36 ஸ்ரீசுகர் பரீக்ஷித்துக்கு மீளவும் சுருக்கமாக ப்ரஹ்ம ஸ்வரூபத்தை உபதேசித்துத் தக்ஷக ஸர்ப்பம் கடிப்பதனால் நேரும் மரண பயத்தைப் போக்குதல் ... 3329

37 பரீக்ஷித்து மோக்ஷம் அடைதலும், ஜனமேஜயன் ஸர்ப்பயாகஞ் செய்தலும், வேதங்களின் சாகைகளை நிரூபித்துக் கூறுதலும் ... 3334

38 அதர்வ வேதத்தின் விபாகத்தைக் கூறுதல்... 3351

39 மார்க்கண்டேயர் தவஞ் செய்தலும், அவர் காமாதிகளால் மயங்காதிருத்தலும், நரநாராயணர்களை ஸ்தோத்ரஞ் செய்தலும் ... 3356

40 மார்க்கண்டேயர் பகவானுடைய மாயையைக் காண வேண்டுமென்று விரும்ப அவ்விருப்பத்தைப் பகவான் நிறைவேற்றுதல் ... 3369

41 ருத்ரன் மார்க்கண்டேயருக்கு வரங் கொடுத்தல் ... 3375

42 மஹா புருஷனுடைய அங்கோபாங்கங்களான அஸ்த்ர பூஷணாதிகளை நிரூபித்தலும், த்வாதசாதித்ய வ்யூஹவர்ணனமும் ... 3385

43. இப்புராணத்தில் சொன்ன விஷயங்களின் சுருக்கமும், பாகவத மஹிமையும் முதலியவை. ... 3397





ஸ்ரீ க்ருஷ்ணாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீபாகவதம்.

## ஏகாதசஸ்கந்தம்.

(ப்ராஹ்மணசாபத்தினால் யாதவகுலம் க்ஷீணித்தவ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீ க்ருஷ்ணன் பலராமனும் தானுமாகிப் பூதனைசகடயமளார்ஜுனாதிகளான ஆஸுரப்ரக்ருதிகளை வதித்து யாதவர்களால் சூழப்பட்டுக் குருபாண்டவாதிகளுக்கு விரைவில் முடிக்கவல்ல கலஹத்தை விளைவித்து அதர்மிஷ்டர்களையெல்லாம் ஒழித்து இங்ஙனம் பூமியின் பாரத்தை நீக்கினான். ஜகதீசனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் சத்ருக்களாகிய துர்யோதனாதிகளால் கபடத்தை உட்கொண்ட சூதாட்டம் அவமதி த்ரௌபதியின் தலைமயிரைப் பிடித்திழுக்கை முதலிய பல அபகாரங்கள் செய்து கோபமுறும்படி செய்யப்பட்ட பாண்டவர்களை நிமித்தமாகக் கொண்டு கௌரவர்பக்ஷத்திலும் பாண்டவர்பக்ஷத்திலும் ஸஹாயமாகச் சேர்ந்த மன்னவர்களை ஒருவரையொருவரால் அடித்து முடித்து இங்ஙனம் பூமியின் பாரத்தை நீக்கினான். இவ்வளவென்று அளவிட்டறிய முடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களையுடைய அப்பரமபுருஷன் தன் புஜங்களால் பாதுகாக்கப்பட்ட யாதவர்களைக் கொண்டு

பூமிக்குப் பாரமான ராஜர்களின் ஸைன்யங்களையும் ராஜர்களையும் மடித்து மீளவும் தனக்குள் அம் மஹானுபாவன், 'பூமியின் பாரத்தை இவ்வளவு நீக்கி யும் அது நீங்கவில்லையென்றே நினைக்கின்றேன். ஏனெ னில், ஒருவராலும் பொறுக்க முடியாத யாதவகுலம் இன்னம் அப்படியே இருக்கின்றதல்லவா? இந்த யா தவ ஸைன்யத்திற்கு மற்றொருவனால் எவ்விதத்திலும் பரிபவம் உண்டாகாது. இனி இதை அழிக்கவல்லவன் எவனுமே இல்லை. ஏனெனில், இந்த யாதவஸைன் யம் என்னையே பற்றியிருப்பது. என்னைப்பற்றினவர்க ளுக்கு ஒருகாலும் கெடுதி உண்டாகாதல்லவா? அந்த யாதவர்கள் என்னையே கதியாகப் பற்றினமையால் வீர்ய ஸௌர்யாதிகள் அமைந்து பெருமையுடையவர்க ளாயிருக்கின்றார்கள். ஆகையால் இவர்கள் ஒருவரா லும் பரிபவிக்க முடியாதவர்கள். மூங்கில்புதரில் மூங் கில்கள் ஒன்றோடொன்று இழைத்துக்கொள்கையால் புதர் முழுவதும் அழிந்துபோகும்படி நெருப்பு உண்டா வதுபோல், இந்த யாதவகுலத்தில் தனக்குள் கல ஹத்தை உண்டாக்கி அதை முடித்துப் பூமியின் பாரத் தை முழுவதும் நீக்கி அவதார ப்ரயோஜனம் கைகூடப் பெற்றுப் பசி தாஹம் முதலிய ஊர்மிகளின்றிச் சாந்த மான ஸ்ரீ வைகுண்டமென்கிற என் ஸ்தானத்திற்குப் போய்ச் சேருகிறேன்' என்று சிந்தித்தான். ஸத்ய ஸங் கல்பனும் ஸர்வேஸ்வரனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் தனக்குள் நிச்சயித்துக்கொண்டு ஸமர்த்த னாகையால் ப்ராஹ்மண சாபமென்னும் வ்யாஜத்தினால் தன்னுடையதான யாதவகுலத்தை யெல்லாம் ஸம்ஹா ரஞ் செய்தான். அப்பகவான் அளவற்ற லாவண்யமு டைய தன் திவ்யமங்கள விக்ரஹத்தினால் உலகத்தி

லுள்ள லாவண்யத்தையெல்லாம் பறித்து (மூன்று லோகங்களிலுமுள்ள லாவண்யமெல்லாம் ஸமுத்ரத்தில் குளப்படிபோல் அப்பரமனுடைய திவ்யமங்கள விக்ரஹ லாவண்யத்தில் உள்ளடங்கினதாகையால் தன் திருமேனியைக் கண்டபின்பு எங்கும் லாவண்யமே இல்லையென்று தோன்றும்படி செய்து) தன் கடைக்கண்ணோக்கத்தினால் ப்ராணிகளின் கண்ணோக்கத்தையும் பறித்துத் தன் மொழிகளால் அவற்றை நினைக்கும் ப்ராணிகளின் மனத்தையும் பறித்து, ஆங்காங்கு அடையாளஞ் செய்யப்பட்ட தன் அடிவைப்புக்களால் அவற்றைக் காண்கிற ப்ராணிகளின் மற்றோரிடம் போகை முதலிய செயல்களையும் பறித்து (இங்ஙனம் அப்பொழுதுள்ளவர்களின் கண் முதலிய இந்த்ரிய வ்யாபாரங்களை யெல்லாம் தன்னிடத்திலேயே நிலைநின்றிருக்கும்படி செய்து) மேல் பிறக்கப்போகிறவர்கள் ஸம்ஸாரத்தைக் கடந்து கரையேறும்பொருட்டுப் பூமியில் நன்கு பாடத்தகுந்த தன் புகழைப் பரப்பி இதனால் அஜ்ஞானகார்யமான ஸம்ஸாரத்தை அனைவரும் கடப்பார்களென்று நினைத்துத் தன்னிடம் போய்ச் சேர்ந்தான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—யாதவர்கள் ப்ராஹ்மணர்களிடத்தில் மிகுந்த விஸ்வாஸமுற்று அவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் ப்ரீதியுடன் நிறைவேற்றிக் கொடுக்குந் தன்மையர்; தானசீலர்களில் சிறப்புடையவர்; என்றும் தவறாமல் பெரியோர்களைப் பணியும் ஸ்வபாவமுடையவர்கள்; மற்றும், ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலேயே நிலைநின்ற மனமுடையவர்கள். இத்தகையரான யாதவர்களுக்கு ப்ராஹ்மணசாபம் எப்படி உண்டாயிற்று? ப்ராஹ்மணஸ்ரேஷ்டரே! (எப்படியேனும் உண்டாயிருக்குமாயினும்,) அது எங்

தக் காரணத்தைப்பற்றி உண்டாயிற்றோ அதையும், அது எத்தகையதோ அதையும், ஒருவரோடொருவர் ஒத்த மதியுடைய அந்த வ்ருஷ்ணிகளுக்குத் தங்களுக்குள் கலஹம் எப்படி உண்டாயிற்றோ அதையும், பரப்ரஹ்மோபாஸனத்தினால் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையரான ரிஷிகளுக்கு யாதவர்களைச் சபிக்கும்படியான பேதபுத்தி எப்படி உண்டாயிற்றோ அதையும் ஆகிய இவையெல்லாவற்றையும் எனக்கு விவரித்துச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அழகெல்லாம் அமைந்து மிகவும் மங்களமான திவ்யமங்கள விக்ரஹத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீ க்ருஷ்ணபகவான் தேவதைகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் செய்யமுடியாத மங்களமான செயல்களை நடத்திக்கொண்டு த்வாரகையில் இருந்து விளையாடலுற்றுப் பெரும் புகழுடையவனாகிப் பூமியின் பாரத்தை நீக்குகையாகிற தன் கார்யம் சிறிது குறையாயிருக்கப்பெற்றுத் தன்னுடையதான யாதவகுலத்தை அழிக்க நினைத்தான். புண்யங்களை விளைப்பவைகளும் பாடுகிற ஜனங்களுக்குக் கலியுகத்தினால் நேரும் பாபங்களைப் போக்குபவைகளும் மிக்க மங்களங்களுமான செயல்களைச் செய்துகொண்டு வஸுதேவனுடைய க்ருஹத்தில் வாஸஞ் செய்பவனும் காலத்தைச் சரீரமாகக்கொண்டு லோக ஸம்ஹாரஞ் செய்பவனுமாகிய அப்பரமபுருஷன், முனிவர்களைத் தன் ஸங்கல்பத்தினால் தூண்ட, விஸ்வாமித்ரர், அஸிதர், கண்வர், துர்வாஸஸ்ஸு, ப்ருகு, அங்கிரஸ்ஸு, கஸ்யபர், வாமதேவர், அத்ரி, வஸிஷ்டர், நாரதர் முதலிய அம்முனிவர்கள் த்வாரகைக்கு அருகாமையிலுள்ள பிண்டாரகமென்னும் புண்ய தீர்த்தத்திற்கு வந்தார்கள். அந்தப்

புண்ய தீர்த்தத்தில் விளையாடிக்கொண்டிருக்கிற யாதவ குமாரர்கள் அம்முனிவர்களிடஞ் சென்று பாதவந்தனஞ் செய்து தாங்கள் விநயமற்றவராயினும் விநயமுடையவர்கள்போல் நடனஞ் செய்துகொண்டு ஜாம்பவதியின் பிள்ளையாகிய ஸாம்பனுக்குக் கர்ப்பமுடைய பெண்ணின் வேஷம்போட்டு அம்முனிவர்களிடம் கொண்டுபோய் நிறுத்தி 'ஓ அந்தணர்களே! கர்ப்பிணியும் ப்ரஸவகாலம் ஸமீபிக்கப் பெற்றவளும் புதல்வன் பிறக்க வேண்டுமென்று விரும்புகின்றவளுமாகிய இக் கருங்கண்ணி தான் நேரில் கேட்க வெட்கமுற்று எங்களைக் கொண்டு கேட்கின்றாள். இவள் பிள்ளையைப் பெறுவாளா? பெண்ணைப் பெறுவாளா? எங்கும் தவறாத நெஞ்சென்னும் உட்கண்ணுடையவர்களே! இதை இவளுக்குச் சொல்வீர்களாக' என்று வினவினார்கள். மன்னவனே! இங்ஙனம் வஞ்சிக்கப்பட்ட அம்முனிவர்கள் கோபமுற்று 'மந்தபுத்தியர்களே! இவள் உங்கள் குலத்தையெல்லாம் பாழ் செய்வதான உலக்கையைப் பெறப் போகிறாள்' என்று மொழிந்தார்கள். அந்த யாதவ குமாரர்களும் அதைக் கேட்டு மிகவும் பயந்து சீக்ரமாக ஸாம்பனுடைய அரைத்துணியை அவிழ்த்து அவனுதரத்தில் இரும்புமயமான உலக்கையைக் கண்டு, 'ஆ! மந்தபாக்யர்களாகிய நாம் என்ன செய்தோம்! நம்முடையவர்கள் நம்மை என்ன சொல்வார்கள்!' என்று தமக்குள் மனவருத்தமுற்று அவ்வுலக்கையை எடுத்துக்கொண்டு க்ருஹத்திற்குச் சென்றார்கள். அனந்தரம் அக்குமாரர்கள் அவ்வுலக்கையை ராஜஸபையில் கொண்டுபோய் முகவொளி மழுங்கப்பெற்று ஸமஸ்த யாதவர்களும் சேர்ந்திருக்கையில் ராஜனாகிய உக்ரஸேனனுக்குத் தாங்கள் செய்ததை யெல்லாம் விண்ணப்

பஞ் செய்தார்கள். மன்னவனே! த்வாரகையிலுள்ளவர்கள் அனைவரும் வீணாகாததான விப்ரசாபத்தைக் கேட்டு உலக்கையையும் கண்டு முதலில் வியப்புற்று உடனே மிகுதியும் பயந்து பயத்தினால் உடம்பெல்லாம் நடுங்கப்பெற்றார்கள். யாதவர்களுக்கு ராஜனாகிய அவ்வுக்ரஸேனன் அவ்வுலக்கையைச் சூர்ணஞ் செய்வித்து அந்தச் சூர்ணத்தையும் அதில் மிகுந்த இருப்புத் துணுக்கைகளையும் ஸமுத்ரஜலத்தில் கொண்டுபோய்ப் போடுவித்தான். அந்த ஸமுத்ர ஜலத்தில் ஒரு மத்ஸ்யம் அவ்விருப்புத்துணுக்கையை விழுங்கிற்று. இருப்புச்சூர்ணங்களோ வென்றால் ஸமுத்ர ஜலத்தின் அலைகளால் ஆங்காங்குக் கரையோரங்களில் தள்ளுண்டு நின்று, நீண்டு பருத்து மூன்று நுனியுடையவைகளுமாகிய கோரைகளாய் முளைத்தன. இருப்புத் துணுக்கையை விழுங்கின மத்ஸ்யம் மற்றும் சில மத்ஸ்யங்களோடு செம்படவர்களால் வலையில் பிடியுண்டது. அதைப் பிடித்த செம்படவன் அம்மத்ஸ்யத்தின் உதரத்திலிருந்த இருப்புத் துணுக்கையைப் பாணத்தின் நுனியில் வைத்தான். வருங்காலம் நிகழ்காலம் கழிகாலம் ஆகிய மூன்று காலங்களிலுமுள்ள விஷயங்களை யெல்லாம் அறிந்த மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ப்ராஹ்மணசாபத்தை வீணாக்கவல்லவனாயினும் அங்ஙனம் நினைக்கவில்லை. அவன் காலரூபியாய்க்கொண்டு ஸம்ஹரிக்க நினைத்திருப்பவனாகையால் அதை அங்ஙனமே நடக்கும்படி அனுமோதனஞ் செய்தான். ஒன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ நாரதமஹர்ஷி வஸுதேவனுக்குப் பாகவத தர்மங்களைக் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கௌரவகுலத்தை மேன்மைப்படுத்துந் தன்மையனே! நாரதமஹர்ஷி ஸ்ரீக்ருஷ்ணனைப் பணிவதில் பேராவலுடையவராகி அந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய புஜங்களால் பாதுகாக்கப்பட்ட த்வாரகாபுரியில் நிரந்தரமாக வாஸஞ் செய்துகொண்டிருந்தார். (ஜ்ஞானுதிகரான அத் தேவர்ஷி பரமாத்ம ஸாக்ஷாத்காரமுடையவராகையால் அவருக்கு ஸ்ரீக்ருஷ்ணனைப் பணிவதில் அத்தகைய பேராவல் உண்டாயிருக்க வேண்டிய அவஸ்யம் என்னென்று சங்கிக்கவேண்டாம்). ராஜனே! கண்களைப் படைத்தவன் எவன்தான் தன்னைப் பணிகிற ஸகல ஜனங்களின் ம்ருத்யுவையும் போக்கவல்லவைகளும் ஜ்ஞானுதிகர்களான ப்ரஹ்மருத்ராதி தேவஸ்ரேஷ்டர்களால் பணியப் பெற்றவைகளுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களைப் பணியாதிருப்பான்? வஸுதேவன் ஒருகால் தேவர்ஷியாகிய நாரதர் தன் க்ருஹத்திற்கு வர அவரைப் பூஜித்து ஸுகமாக உட்கார்ந்திருக்கின்ற அம்முனிவரை நமஸ்கரித்து இங்ஙனம் மொழிந்தான்.

வஸுதேவன் சொல்லுகிறான்:—மஹானுபாவரே! நீர் மூன்று லோகங்களையும் ஸஞ்சரித்துக் கொண்டிருப்பது என்னைப் போன்ற ஸமஸ்த ப்ராணிகளின் க்ஷேமத்திற்காகவேயன்றி வேறு காரணத்திற்காகவன்று. உத்தமஸ்லோகனான பகவானுடைய ஸ்வரூப ஸ்வபாவாதிகளை அறிவிக்கும் த்வாரமாயிருப்பவர்களான உம்மைப்போன்ற பெரியோர்களின் யாத்ரை ஸம்ஸார தாபங்களால் பீடிக்கப்பட்ட ப்ராணிகளின் க்ஷேமத்திற்காகவே யல்லவா? தாய்தந்தைகள் வருவது பிள்ளை

களின் ஸுகத்திற்காக வல்லவா? (எங்களுடைய யாத்ரையை விசேஷித்துப் புகழ்கின்றனையே. தேவாதிகளுடைய யாத்ராதிகார்யங்களும் கர்மலோகங்களின் க்ஷேமத்திற்காகவே யல்லவா. அவற்றை விட்டு இதைப் புகழ்வதேனே? என்றால்) பர்ஜன்யன் முதலிய தேவதைகளின் நடத்தை ப்ராணிகளின் துக்கத்திற்கும் ஸுகத்திற்கும் பொதுவாயிருக்கின்றது. (ஒருகால் துக்கத்தையும் ஒருகால் ஸுகத்தையும் கொடுக்கும். அச்சுதனிடத்தில் நிலைநின்ற மனமுடைய உம்மைப்போன்ற ஸாதுக்களின் நடத்தையோவென்றால் எப்பொழுதும் ஸுகத்தையே கொடுக்கும். தேவதைகளை எவர்கள் எப்படி பணிகின்றார்களோ, அவர்களை அத்தேவதைகள் அப்படியே அனுஸரிப்பார்கள். ஏனென்றால், அந்தத் தேவதைகள் நிழலைப் போன்று ப்ராணிகளின் பணிதலுடைய தாரதம்யத்தை அனுஸரித்துப் பலன் கொடுப்பார்கள். ஸாதுக்களோவென்றால் ஸம்ஸாரதாபங்களால் வருந்தின ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் அவர்களுடைய துக்கங்களையெல்லாம் போக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவர்கள். ப்ரஹ்மர்ஷியே! இங்ஙனம் வஸ்துஸ்திதி இருக்கையால் உம்முடைய வரவு மாத்ரத்தினாலேயே நாங்கள் க்ருதார்த்தர்களானோம். (ப்ரயோஜனங்களெல்லாம் கைகூடப் பெற்றோம்). நீர் எந்த தர்மங்களை அனுஷ்டித்ததனால் பகவான் உம்மிடத்தில் அருள்புரிந்தானோ, அத்தகைய பாகவத தர்மங்களை அறிய விரும்புகிறேன். இந்தப் பாகவத தர்மங்களைக் கேட்பானாயின், அவன் ஸர்வவிதமான ஸம்ஸாரபயத்தினின்றும் விடுபடுவானல்லவா? (பரமபுருஷனைப் புதல்வனாகப் பெற்ற நீ மற்றொருவனைப்போல ஏன் இங்ஙனம் வருந்துகிறாய்? என்கி

ஷீரோ, சொல்லுகிறேன். கேளும்.) நான் பகவானுடைய மாயையினால் மதிமயங்கிப் பிள்ளையைப் பெற வேண்டுமென்னும் விருப்பத்துடன் மோக்ஷங் கொடுக்க வல்லனாகிய அனந்தனை ஆராதித்தேனும். மோக்ஷத்திற்காக ஆராதிக்கவில்லை. (அதனால் நான் பகவானைப் புதல்வனாகப் பெற்றேனன்றி வேறில்லை. நான் மோக்ஷத்திற்காக ஆராதனஞ் செய்யாமையைப் பற்றி வருந்துகிறேன்.) நல்லொழுக்க முடையவரே! ஆகையால், விசித்ரமான துக்கங்களை விளைப்பதாகிய ஸம்ஸார ஸாகரத்தினின்று நான் எப்படி ஸுகமாக விடுபடுவேனோ, அங்ஙனம் உண்மையாக நீர் என்னைக் கற்பிக்க வேண்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! இங்ஙனம் மிகுந்த மதியுடைய வஸுதேவனால் வினவப் பெற்ற தேவர்ஷியாகிய நாரதர் தான் சொல்ல வேண்டியவைகளான பகவானுடைய குணங்களால் பகவானைப் பற்றி நினைவு மூட்டப்பெற்று மனக்களிப்புற்று அவ்வஸுதேவனைக் குறித்து மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—ஸாத்வத ஶ்ரேஷ்டனே! நீ நன்றாக நிச்சயித்தனை. (இதுவே பரமார்த்த மென்னும் நிச்சயபுத்தியுடையவன் நீயே). ஏனென்றால் ஜகத்திற்கெல்லாம் க்ஷேமத்தை விளைப்பவைகளான பாகவத தர்மங்களை அறிய விரும்புகின்றனை யல்லவா? பாகவத தர்மம் கேட்கினும் வாயால் சொல்லினும் நெஞ்சால் நினைக்கினும் ஆதரஞ் செய்யினும் அதில் முயன்றவர்களை அனுமோதனஞ் செய்யினும் தேவதைகளுக்கு த்ரோஹம் செய்தவர்களையும் ஸமஸ்த ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்தவர்களையும் உடனே அது புனிதஞ் செய்யும். (நீ எனக்கு மஹோபகாரஞ் செய்தனை.

ஏனென்றால்) பகவானைக் காதால் கேட்கினும் வாயால் சொல்லினும் அவன் அவர்களுக்குப் புண்யத்தை விளைவிப்பான். அவன் மிகவும் மங்கள ஸ்வரூபன்; அமங்களங்களை யெல்லாம் போக்குந் தன்மையன; ஷாட்குண்ய பூர்ணன்; கர்மத்தினால் விளையும் விகாரங்களின்றி என்றும் விளங்குந்தன்மையன். அத்தகையனான ஸ்ரீமந் நாராயணனை நீ இப்பொழுது எனக்கு நினைவு மூட்டினை. நீ கேட்ட இவ்விஷயத்தில் மஹானுபாவனாகிய விதேஹராஜனுக்கும் ருஷபகுமாரர்களுக்கும் நடந்த பழையதான ஸம்வாதத்தை உத்தரமாகச் சொல்லுகிறார்கள். (உன் கேள்வி விதேஹராஜனுடைய கேள்வியைப் போன்றதாகையால் அதற்கு என்ன உத்தரமோ அதுவே உன்கேள்விக்கும் உத்தரம்.) ஸ்வாயம்புவமனுவுக்கு ப்ரியவ்ரதனென்னும் புதல்வன் இருந்தான். அவன்பிள்ளை நாபி. அவன் பிள்ளை ருஷபன். மோக்ஷதர்மங்களைச் சொல்ல விரும்பி அவதரித்த வாஸுதேவாம்சமென்று அவனைச் சொல்லுகிறார்கள். அவனுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களெல்லோரும் வேதத்தையும் அதன் பொருளான ப்ரப்ரஹ்மத்தையும் உள்ளபடி அறிந்தவர்கள். (சிலர் வேதத்தின் கரை யறிந்தவர்கள். சிலர் வேதம் வேதத்தின் பொருளான பரப்ரஹ்மம் ஆகிய இரண்டின் கரையும் அறிந்தவர்கள்). அவர்களுக்குள் பரதனென்பவன் முதல்வன். அவன் ஸ்ரீமந்நாராயணனையே ப்ராப்யமும் ப்ராபகமுமாகப் பற்றினவன். அஜநாபவர்ஷமென்று வழங்கி வருகிற இவ்வர்ஷம் அந்தப் பரதனுடைய ஆட்சிக்குட்பட்டு அவன் பெயரால் பாரத வர்ஷமென்று அற்புதமாய் ப்ரஸித்தி பெற்றது. அப்பரதன் போகங்களெல்லாம் அனுபவிக்கப்பெற்றதும் தன் வசத்திலிருப்

பதுமாகிய இப்பூமண்டலத்தையெல்லாம் துறந்து க்ரு ஹத்தினின்றும் புறப்பட்டுத் தன் வர்ணாஸ்ரமங்களுக் குரிய தர்மங்களை அனுஷ்டித்துப் பரமபுருஷனை உபா ஸித்து மூன்று ஜன்மங்களால் அப்பரமபுருஷனுடைய பதவியைப் பெற்றான். அப்பரதன் தம்பிகளான மற்ற தொண்ணூற்றொன்பது பேர்களில் இலாவர்த்தன் முத லிய ஒன்பது பேர்கள் இப்பாரதவர்ஷத்தின் கண்டங் களான ஒன்பது த்வீபங்களுக்கு ப்ரபுக்களாயிருந்தார் கள். மற்றவர்களில் எண்பத்தோரு பேர்கள் த்விஜா திகளாய் கர்மதந்த்ரத்திற்கு ப்ரவர்த்தகர்களானார் கள். மற்ற ஒன்பது பேர்கள் ஜ்ஞானம் வைராக்யம் முதலிய பாக்யமுடையவர்களும் பரமார்த்தத்தை நிரு பிக்குந் திறமையுடையவர்களும் அத்யாத்மவித்யையில் நன்கு ஸ்ரமப்பட்டு அவ்வாத்மவித்யையில் ஸமர்த்தர் களும் திகம்பரர்களுமான முனிவர்களாயிருந்தார்கள். அவர்கள் கவி, ஹரி, அந்தரிக்ஷன், ப்ரபுத்தன், பிப்ப லாயனன், ஆவிர்ஹோத்ரன், த்ரமிலன், சமஸன், கர பாஜனன் என்னும் பெயருடையவர்கள். அத்தகையர் களான இவர்கள் பகவானுக்குச் சரீரமும் சேதனு சேதன ரூபமுமாகிய ஜகத்தை யெல்லாம் பரமாத்மா வைக்காட்டிலும் பேதப்படாததாகவே பார்த்துக்கொ ண்டு பூமண்டலம் முழுவதும் திரிந்தார்கள். அவர் கள் எங்கெங்குப் போகவேண்டுமென்று விரும்புகிறார் களோ, அங்கங்கெல்லாம் அவர்களுக்குத் கதி தடை படாதிருந்தது. அவர்கள் எங்கும் மனப்பற்றில்லாத வர்கள். அவர்கள் தேவர் ஸித்தர் ஸாத்யர் கந்தர்வர் யக்ஷர் மனுஷ்யர் கின்னரர் நாகர் இவர்களின் லோகங் களையும், முனிவர் சாரணர் பூதநாதர் வித்யாதரர் த்வி ஜர் கோக்கள் இவர்களின் ஸ்தானங்களையும் இஷ்டப்

படி சுற்றிக்கொண்டிருந்தார்கள். இங்ஙனம் ஆங்காங்குத் திரிந்துகொண்டிருக்கிற அந்தக் கவி முதலியவர் ஒருக்கால் பாரதவர்ஷத்தில் ரிஷிகளால் அனுஷ்டிக்கப்படுகிற மஹானுபாவரான ஜனக மஹாராஜனுடைய ஸத்ரயாகத்திற்குத் தற்செயலாய்ப் போய்ச் சேர்ந்தார்கள். மன்னவனே! யஜமானனாகிய நிமிமஹாராஜன் ப்ராஹ்மணர்கள் உருவங்கொண்ட ஆஹவனீயம் முதலிய அக்னிகள் ஆகிய அனைவரும் ஸூர்யன்போல், திகழ்கின்ற மஹாபாகவதர்களான அந்த ருஷபகுமாரர்களைக் கண்டு எதிர்கொண்டார்கள். விதேஹ மன்னவன் அவர்கள் நாராயணபராயணர்களென்று அடையாளங்களால் அறிந்து ஸந்தோஷமுற்று அவர்களுக்கு ஆஸனம் அளித்து அதில் உட்கார்ந்திருக்கின்ற அம்மஹானுபாவர்களை உரியபடி பூஜித்தான். மிகவும் ஸந்தோஷமுற்றிருக்கிற அவ்விதேஹமன்னவன், தங்கள்தேஜஸ்ஸினால் ப்ரகாசிப்பவர்களும் ப்ரஹ்மபுத்ரர்களான ப்ருகு முதலியவர்கள்போன்றவர்களுமாகிய அம்மஹானுபாவர்களை வணக்கத்துடன் வினவினான்.

விதேஹமன்னவன் சொல்லுகிறான்:—நீங்கள் ஷாட்குண்யபூர்ணனாகிய பகவானுடைய பாரிஷதர்களென்று (பாரிஷதர்போன்றிருக்கையால் பாரிஷதர்களேயென்று) நினைக்கிறேன். விஷ்ணுபக்தர்கள் உலகங்களைப் புனிதஞ்செய்யும்பொருட்டு முழுவதும் திரிகின்றார்களல்லவா? (ஆகையால் விஷ்ணுபக்தர்களாகிய நீங்களும் உலகங்களைப் புனிதஞ்செய்யும்பொருட்டுத் திரிகின்றீர்கள்.) கர்மவசத்தினால் பற்பல சரீரங்களைப் பெறுகின்ற ஜீவாத்மாக்களுக்குப் பற்பல சரீரங்களுக்குள் மனுஷ்யசரீரம் கிடைப்பது அரிது. அது

வும் ஒரு க்ஷணத்தில் அழியுந்தன்மையது. மிகுந்த ஸு-க்ருதத்தினால் கிடைக்கக்கூடியதாகையாலும் எல்லா விதத்திலும் பகவானை ஆராதிப்பதற்கு உபயோகப்படுவதாகையாலும் மனுஷ்யசரீரம் சிறப்புடையது. ஆகையால் அது பெரும்பாலும் துர்லபம். அங்ஙனம் துர்லபமான அம்மனுஷ்யஜன்மம் பெற்றாலும் ஸர்வேஶ்வரன் ப்ராப்யனென்று அவனைப் பெறுகைக்கு அனுரூபமாயிருக்கும் உபாயத்தைப் பரிக்ரஹிக்க வேண்டுமென்னும் ருசி ஒருவர்க்கும் பிறவாது. இது உண்டாகிலும் உண்டாம். பகவானுக்கு அன்பர்களான உங்களைப்போன்ற பெரியோர்களின் தர்சனம் கிடைப்பது மிகவும் துர்லபமென்று நான் நினைக்கின்றேன். இந்த ஸம்ஸாரத்தில் ப்ராணிகளுக்கு அரைக்ஷணகாலமாயினும் ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸம் நேருமாயின், அது நிதியைப் போல் புருஷார்த்தங்களை யெல்லாம் ஸாதித்துக்கொடுக்கும். கர்மத்தினால் விளையும் பிறவிமுதலிய விகாரங்களற்ற பகவான் எந்த தர்மங்களால் அருள்புரிந்து தன்னைச் சரணம் அடைந்தவனுக்குத் தன்னையும் கொடுப்பானோ, அப்படிப்பட்ட பாகவததர்மங்களை நாங்கள் கேட்கக்கூடுமாயின் அவற்றை எங்களுக்குச் சொல்வீர்களாக.

நாரதர் சொல்லுகிறார்:—வஸுதேவனே! இங்ஙனம் மஹானுபாவனாகிய நிமியால் வினவப்பட்ட அந்த ருஷபகுமாரர்கள் ஸதஸ்யர்களோடும் ருத்விக்குக்களோடும் கூடின அந்நிமி மன்னவனை ப்ரீதியுடன் பூஜித்து மொழிந்தார்கள்.

கவி சொல்லுகிறான்.—இங்குப் பிழைத்திருக்கும் பொழுது என்றும் தவறாமல் அச்சுதனுடைய பாதாரவிந்தங்களைப் பணிகையே எவ்விதத்திலும் பயமில்லாத

தென்று நினைக்கிறேன். (எல்லாவற்றிலும் சிறந்த நன்மை முக்தியே. அதைப் பெறுமுபாயம் பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணிகையே. அதுவே பாகவத தர்மம்). ப்ரக்ருதியின் பரிணமமாகையால் பொய்யென்று சொல்லத்தக்கதாகிய தேஹத்தில் ஆத்மாபிமானத்தினால் பயந்த மதியுடைய புருஷன் சேதனசேதனரூபமான ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவான பரமபுருஷனைப் பணிவானாயின், அவனுக்கு எல்லாவிதத்திலும் பயம் நீங்கி மோக்ஷம் உண்டாகின்றது. பகவான், அறிவில்லாத புருஷர்கள் அனாயாஸமாகத் தன்னை அடையும்பொருட்டுப் பஞ்சராத்ரம்முதலியசாஸ்த்ரங்கள் மூலமாய் ஶ்ரவணம் கீர்த்தனம் ஸ்மரணம் பாதஸேவனம் அர்ச்சனம் முதலிய எந்த உபாயங்களைச் சொன்னானோ, அவையே பாகவததர்மங்களென்று அறிவாயாக. ராஜனே! இந்தப் பாகவததர்மங்களை நன்றாக அனுஷ்டிக்கிறவன் எவ்விதத்திலும் நல்லவழியினின்று நழுவமாட்டான். (உபாயாந்தரங்களை அனுஷ்டிப்பவர்களுக்குக் கெடுதி வருவதுபோல் பகவத்தர்மநிஷ்டர்களுக்கு எவ்விதக்கெடுதியும் உண்டாகாது).இந்தப்பாகவததர்மங்களில் கண்ணை மூடிக்கொண்டு ஓடுவானாயினும் அவன்நடை தடைபடாது; அவன் விழவுமாட்டான். (ஒருவன் நல்ல ராஜமார்க்கத்தில் கண்ணை மூடிக்கொண்டு ஓடுவானாயினும், அவனுக்குத் தடுக்காது. அவன் அதில் தவறி விழவும் மாட்டான். மற்ற உபாயங்களை அனுஷ்டிப்பவர்கள் சிறிது ஊக்கம் தவறினும் தடைபடுவார்கள்; அதினின்று விழவும் விழுவார்கள்). ஸம்ஸாரவாஸனாரூபமான ஸ்வபாவத்தைத் தொடர்ந்த ஜீவன், சரீரம் வாக்கு மனம் மற்ற ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்கள் புத்தி மதி இவைக

ளால் என்னென்ன செய்கிருனே, அவற்றை யெல்லாம் ஸ்ரீமந்நாராயணுயவென்று அவன் திருவடிகளில் அர்ப்பணஞ் செய்யவேண்டும். ஆத்மா பரமாத்மாவுக்கு உட்படாமல் ஸ்வதந்த்ரனுயிருப்பவனென்னும் துரபிமானத்தினுல் பயம் உண்டாகின்றது. இங்ஙனம் பகவானிடத்தில் விமுகனுயிருப்பவனுக்குத் தேஹாத்மப்ரமமும் அதைப்பற்றின நினைவும் தான் பரமாத்மாவுக்குச் சரீரபூதனென்னும் நினைவில்லாமையும் உண்டாகின்றன. இந்த ஸ்வதந்த்ராத்மப்ரமம் தேஹாத்மப்ரமம் முதலியவை அவனுடைய மாயையினுல் விளைகின்றன. ஆகையால் வேதாந்தங்களை ஓதியுணர்ந்தவன் குருவே தெய்வமென்னும் புத்தியுடையவனுகி என்றும் மாருமல் அனன்யப்ரயோஜனமான (வேறு ப்ரயோஜனங்களை எதிர்பாராத) பக்தியுடன் அந்த ஜகதீசனையே பணியவேண்டும். தேஹம் ஆத்மாவல்லாததாயினும் ஆத்மா ஸ்வதந்த்ரனல்லாதவனுயினும் அங்ஙனம் அபிமானிக்கிற ஜீவனுடைய மனத்தினுல் தேஹம் ஆத்மாவாகவும் ஆத்மா ஸ்வதந்த்ரனுகவும் தோற்றுகின்றன. ஸ்வப்னத்தில் அனுபவிக்கிற மனேரதங்களெல்லாம் நிலையற்றவையாயினும் நிலை நின்றவையாகத் தோற்றுவதுபோலவே தேஹம் ஆத்மாவாகவும் ஆத்மா ஸ்வதந்த்ரவஸ்துவாகவும் தோற்றுகின்றன. ஆகையால் அனுதிகர்மானுகுணமாகத் தேஹத்தை ஆத்மாவாகவும் பரமாத்மாவுக்கு மிகவும் பரதந்த்ரமாயிருக்கையையே ஸ்வரூபமாகவுடைய ஆத்மாவை ஸ்வதந்த்ரவஸ்துவாகவும் நினைக்கச்செய்கின்ற மனத்தைத் தேஹாத்மாக்களின் உண்மையை நிச்சயிக்கும் புத்தியால் தடுக்கவேண்டும். அதனுல் அபயம் (எவ்விதத்திலும் பயமில்லாத மோக்ஷம்) உண்டாகும். சக்கரக்கையனு

கிய பகவானுடைய அவதாரங்களும் மிகவும் மங்கள மான அவ்வவதாரங்களில் செய்த செயல்களும் எவ்வெ வை உண்டோ, அவைகளைக் கேட்பதும், மற்றும் அப் பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை வெளியிடு கிற பாட்டுக்களையும் திருநாமங்களையும் வெட்கமின்றி ப்ரேமத்துடன் பாடுவதும் செய்துகொண்டு சரீரத்தில் ஆஸக்தியின்றித் திரியவேண்டும். இப்படி செய்வானா யின், அவனுடைய மனம் பகவானிடத்தில் ஊக்கமுற் று மெல்லமெல்ல அவனிடத்தில் நிலைப்படும்). இங்ஙன ம் பகவானுடைய அவதாரங்களையும் செயல்களையும் உட்கொண்ட பாட்டுக்களையும் திருநாமங்களையும் பாடு வதும் கேட்பதுமாகிற வ்ரதத்தில் நிலைநின்று தனக்கு அன்பனாகிய பகவானுடைய நாமஸங்கீர்த்தனத்தினால் அனுராகம் வளர்ந்து மனம் உருகப் பெற்று விலக்ஷண னாகிப் பித்தம் பிடித்தவன்போன்று உலகத்தவர்களைக் காட்டிலும் விலக்ஷணனாகி ஒருக்கால் பக்தர்களுக்குத் தோற்குந்தன்மையனான பகவானை நினைத்துச் சிரிப்ப தும், ஒருக்கால் அவனுடைய அனுபவத்திற்கு விச்சே தம் வருகையில் 'இத்தனைகாலம் என்னை உபேக்ஷித்த னையே' யென்று அழுவதும், ஒருக்கால் ஆவலின்மிகுதி யால் நேரே கண்டனுபவிக்க விரும்பி உரக்க முறையிடு வதும், ஒருக்கால் ஸந்தோஷத்தின் மிகுதியால் பாடுவ தும் ஆடுவதுமாயிருப்பான். ஆகாசம் காற்று அக்னி ஜலம் பூமி தேஜஸ்ஸுக்கள் ஜந்துக்கள் திசைகள் மரம் முதலியவை நதிகள் ஸமுத்ரங்கள் மற்றுமுள்ள ப்ராணி கள் இவையெல்லாம் பகவானுடைய சரீரங்களென்னும் எண்ணத்துடன் அவற்றை யெல்லாம் வணங்குவான். தன்னையும் பகவானுக்குச்சரீரமாகவும் ஆனதுபற்றி யே தன்னை அவனைக்காட்டிலும் வேறுபடாதவனாகவும்

பாவிப்பான். (மனத்தை அடக்குவதற்கு வேண்டிய உபாயங்களை அனுஷ்டிப்பதிலேயே ஆயுளெல்லாம் முடிந்துபோம்போலிருக்கிறதே. பிறகு மனஅடக்கம் எப்பொழுது உண்டாகும்? பிறகு எப்பொழுதுதான் பகவத்பக்தி உண்டாகுமென்று சங்கிக்கவேண்டாம்). போஜனஞ் செய்பவனுக்குப் போதுமென்னும் புத்தியும் சரீரபுஷ்டியும் பசியின் அடக்கமுமாகிய இம்மூன்றும் ஆஹாரம் புசித்தவுடனே ஒரேகாலத்தில் உண்டாவது போல், பகவானைச் சரணம் அடைந்தவனுக்கு அந்தப் பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைப் பற்றின தத்வஜ்ஞானமும் ப்ரீதிரூபமான பக்தியும் சப்தாதி விஷயங்களில் வைராக்யமும் ஆகிய இம் மூன்றும் ஒரே காலத்தில் உண்டாகின்றன. ராஜனே! பிறகு பசி தாஹம் முதலிய ஊர்மிகள் தொலையப் பெறுகையாகிற ஒன்றான மோக்ஷத்தைப் பெறுவான். ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்யுந்தன்மையைத் துறந்து ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸ்னேஹம் உண்டாகப்பெற்று இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கெட்டாத பகவானிடத்தில் மிகவும் நிலைநின்ற மனமுடையவனும் சுத்த ஸ்வபாவனுமாகி, ஸூர்யன் உதித்துத் தன்கிரணங்களால் உலகங்களைப் புனிதஞ் செய்வதுபோல், தன்பாத தூளிகளால் மூன்று லோகங்களையும் புனிதஞ் செய்வான்.

மன்னவன் சொல்லுகிறான்:—பகவானைச் சரணம் அடைந்த பாகவதனைப் பற்றிச் சொல்வீர்களாக. அவன் எத்தகைய தர்மங்களை அனுஷ்டிப்பான்? மனுஷ்யர்களுக்குள் அவன் எத்தகைய ஸ்வபாவமுடையவனாயிருப்பான்? அவனுடைய ஆசாரம் எத்தகையதாயிருக்கும்? அவன் பேச்சு எத்தகையதாயிருக்கும்? (எந்த

அடையாளங்களால் அவன் பாகவதனென்று அறியலாமோ அத்தகைய அடையாளங்களைச் சொல்வீர்களாக).

ஹரி சொல்லுகிருன்:—ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழு வரையிலுள்ள ஸமஸ்த பூதங்களிலும் தன்னிடத்திலும் பகவான் அமைந்திருக்கிருனென்றும் ஸமஸ்த பூதங்களும் தானும் பகவானுக்குச் சரீரங்களென்றும், பரமாத்மாவான அப்பகவானிடத்தில் ஸமஸ்த பூதங்களும் அமைந்திருக்கின்றனவென்றும் எவன் ஆராய்ந்தறிகிருனே, அவன் பாகவதோத்தமன். (இதுவே பாகவதன் அனுஷ்டிக்குந்தர்மம்); ஈஶ்வரன் ஸர்வாந்தராத்மாவென்றும் எங்கும் நிறைந்தவனென்றும் அறியாமல் அவனிடத்தில் கேவலம் தெய்வமென்னும் புத்தியையும், அவனுக்கு உட்பட்ட பாகவதர்களிடத்தில் ஸ்னேஹத்தையும், ஒன்றும் அறியாத மூடர்களிடத்தில் தயையையும், த்வேஷிகளிடத்தில் உதாஸீனபுத்தியையும் எவன் செய்கிருனே, அவன் பாகவதர்களில் மத்யமன். எவன் ப்ரதிமையில்மாத்ரம் பகவானுக்குப் பூஜை செய்கிருனே, எவன் பக்தர்களிடத்திலும் பசுக்கள் ப்ராஹ்மணர் அக்னி முதலியவைகளிடத்தில் அந்தப் பகவானுக்குப் பூஜை செய்கிறதில்லையோ, அவன் ப்ராக்ருதபக்தன். (பாகவதர்களில் அதமன்-அப்பொழுதுதான் புதிதாகப் பகவானிடத்தில் பக்தி செய்ய ஆரம்பித்தவன்). இவ்வுலகத்திலுள்ள விஷயங்களெல்லாம் பகவானுடைய மாயையின் பரிணாமமேயென்று நிச்சயித்து இஷ்டமான விஷயங்களையாவது அனிஷ்டமான விஷயங்களையாவது இந்த்ரியங்களால் க்ரஹித்தும் எவன் இஷ்ட விஷயங்களை விரும்புவதும் அனிஷ்டவிஷயங்களை த்வேஷிப்பதும் செய்யாதிருக்கிருனே, அவன் பாகவதோத்தமன். எவன் பகவானிடத்தில் மனம்

செல்லப்பெற்றுத் தேஹத்தின் ஜன்மமரணங்கள், ப்ராணன்களின் வாட்டமாகிற பசி, என்ன வருமோ என்று மனத்தின் கலக்கமாகிற பயம், புத்தி விஷயங்களில் இவற்றைப் பெறவேண்டுமென்று செல்லுகையாகிற ஆசை, இந்த்ரியங்கள் ஶ்ரமப்படுகையாகிற வருத்தங்கள் ஆகிய ஸம்ஸாரதர்மங்களால் எவன் மோஹியாதிருக்கிறானோ, அவன் பாகவதர்களில் சிறந்தவன். காமம் காமத்திற்கு விதைகள்போன்ற கர்மங்கள் கர்மவாஸனைகள் ஆகிய இவை எவன்மனத்தில் சிறிதும் உண்டாகாதிருக்கின்றனவோ, ஜகத்திற்கெல்லாம் ஆதாரனும் ஜகத்தை ஆதாரமாக வுடையவனுமாகிய வாஸுதேவனையே எவன் ஆஶ்ரயித்திருக்கிறானோ, அவன் பாகவதர்களில் சிறந்தவன். (இவையே பாகவதனுடைய ஆசாரங்களாம்). ஜன்மம் கர்மம் ப்ராஹ்மணாதிவர்ணம் ப்ரஹ்மசர்யாதி ஆஶ்ரமம் தேவத்வ மனுஷ்யத்வாதி ஜாதிகள் ஆகிய தேஹ தர்மங்களால் எவனுக்குத் தேஹத்தில் அஹம்பாவம் (நானென்னும் புத்தி-ஆத்மாபிமானம்) உண்டாகாதிருக்கின்றதோ; அவன் பகவானுக்கு மிகவும் அன்பனாயிருப்பான். 'இவன் பந்து. இவன் சத்ரு' என்னும் பேதபுத்தியும் பணங்களிலும் தேஹத்திலும் 'இது என்னுடையது. இது பிறனுடையது' என்னும் பேதபுத்தியும் இன்றி எவன் ஸமஸ்த பூதங்களிடத்திலும் ஸமனாகி இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டிருக்கிறானோ, அவன் பாகவதர்களில் சிறந்தவன். மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவாயிருக்கையாகிற ஐஶ்வர்யத்தை உனக்குக் கொடுக்கிறேனென்று சொல்லினும், அதைப் பொருள் செய்யாமல் பகவானுடைய பாதாரவிந்தங்களைக்காட்டிலும் ஸாரமானது மற்றொன்றும் இல்லை யென்னும் நினைவு

எப்பொழுதும் மாறப்பெருமல் ஒருவராலும் வெல்ல முடியாத மஹானுபாவனுகிய அப் பரமபுருஷனிடத்தில் நிலைநின்ற மனமுடைய ப்ரஹ்மாதிதேவர்களுக்கும் தேடத்தகுந்தவையாகிய அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணிகையினின்று எவன் மீளாதிருக்கிருனே, அவன் விஷ்ணுபக்தர்களில் சிறந்தவன். பகவானைச் சரணம் அடைந்த பாகவதர்களின் ஹ்ருதயம், பெரிய அடிவைப்புக்களுடையவைகளான (ஓரடியில் உலகங்களையெல்லாம் அளக்கவல்ல பெருமையுடையவைகளான) பகவானுடைய பாதாரவிந்தங்களின் கிளைகள்போன்ற விரல்களிலுள்ள நகங்களாகிற ரத்னங்களின் குளிர்ந்த ஒளிப்பெருக்கினுல் தாபங்களெல்லாம் தீரப்பெற்றிருக்கும். அத்தகையதான பாகவதர்களின் ஹ்ருதயத்தில் மீளவும் தாபங்கள் எங்ஙனம் உதிக்கும்? சந்த்ரன் உதித்திருக்கும் பொழுது ஸூர்யகிரணங்களால் விளையும் தாபம் உண்டாகுமோ? (இங்ஙனம் தாபமே உண்டாகப் பெருதவர்கள் பகவானுடைய பாதாரவிந்தங்களினின்று எங்ஙனம் சலிப்பார்கள்?) மன்னவனே! பாகவதர்களின் ஸ்வபாவம் இத்தகையதாயிருக்கும். மனேபாவமின்றி அவசமாகச் சொன்னபோதிலும் பாபராசிகளைப் போக்கவல்ல மஹானுபாவனுகிய பரமபுருஷன் தானே நேரில் வந்து ப்ரீதியின் பெருக்காகிற சங்கிலியால் கட்டுண்ட பாதாரவிந்தங்களுடையவனுகிய எவனுடைய ஹ்ருதயத்தை எப்பொழுதும் விடாதிருக்கிருனே, அவன் பாகவதோத்தமனென்று சொல்லப்படுவான். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ பகவானுடைய மாயையின் ஸ்வரூபத்தை யும் அதைக் கடக்கும் வழியையும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் பாகவதர் அனுஷ்டிக்க வேண்டிய கர்மஸ்வரூபத்தையும் கூறுதல். }

நிமிமன்னவன் சொல்லுகிறான்:— *ஸர்வஸ்மாத்பர னும ஸர்வநியாமகனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவின்மாயை மாயாவிகளையும் மதிமயங்கச் செய்யுந் திறமையுடை யது. அத்தகைய மாயையின் ஸ்வரூபத்தையும் அதன் கார்யத்தையும் அறிய விரும்புகிறேன், மஹானுபாவர் களாகிய நீங்கள் அதை எனக்குச் சொல்வீர்களாக. (நீங்கள் மாயையின் ஸ்வரூபத்தை முன்னமே சுருக்க மாகச் சொன்னீர்கள். ஆயினும் அதை விசதமாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்). ஸம்ஸார தாபங் களால் மிகவும் தபிக்கப்பட்டவனும் மரணம் அடையுந் தன்மையனுமாகிய நான் பகவானுடைய கதைகளாகிற அம்ருதத்தை உட்கொண்டிருப்பதும் அந்த ஸம்ஸார தாபங்களைப் போக்கும் மருந்துமாகிய உங்கள் வார்த் தையைக் கேட்டுக்கொண்டிருப்பினும் அதில் த்ருப்தி உண்டாகப் பெறுதிருக்கின்றேன்.

அந்தரிக்ஷன் சொல்லுகிறான்:— ஸ்தூல சேதனு சேதன ரூபமான ஜகத்தாய் விரிய வேண்டுமென்று விரும்பின பகவான் எதைக் கொண்டு இந்த ஜகத்தை யெல்லாம் படைத்தானே, அத்தகையதான இந்தப் பகவானுடைய மாயை ஸத்வாதிகுணங்களின் ஸம் பந்தமற்றதும் சரீரஸம்பந்தமின்றிப் பரிசுத்தமாயிருப் பதும் ஸ்வயம்ப்ரகாசமுமாகிய ஜீவனுடைய ஸ்வரூ பத்தில் சரீரஸம்பந்தம் ஸத்வாதிகுணங்களுக்கு உட் பட்டிருக்கை தேஹாத்மப்ரமம் முதலிய விபரீதங்களை

* ஸர்வஸ்மாத் - எல்லாவற்றிலும், பரனும் - மேலானவனும்.

விளைக்குந்தன்மையது. (பகவானுடைய மாயை ஸத்வ ரஜஸ்தமோகுணங்களின் ஸமுதாயரூபமும் தேஹம் இந்த்ரியம் முதலியவைகளாய்ப் பரிணமிக்குந்தன்மைய தும் ஜடமுமாயிருக்கும். சுத்தஸ்வரூபனான ஜீவாத்மா வினிடத்தில் சரீரஸம்பந்தம் தேஹாத்மப்ரமம் முதலிய விபரீதங்களை விளைக்கை அந்தமாயையின் கார்யமே. மற்றும், மஹத்து முதல் ப்ருதிவி வரையிலுள்ள ஜகத் தும் அதன் கார்யமே). ஜாக்ரதவஸ்தையில் (விழித்துக் கொண்டிருக்கும் பொழுது) மனத்தின் ஸம்பந்தமுடைய இந்த்ரியங்களால் ஆத்மாவல்லாததும் நிலையற்றதுமா கிய தேஹம் முதலிய வஸ்துக்களில் ஆத்மாவென்றும் நிலைநின்றதென்றும் இது முதலிய ப்ரமம் உண்டாகின்ற து. ஸ்வப்னவஸ்தையில் (கனுக்காணும்பொழுது) வெளி யிந்த்ரியங்களோடு ஸம்பந்தப்படாத அந்தக்கரணத்தி னால் ப்ரமம் உண்டாகின்றது. அதுவும் ஸ்வப்னத்தில் காண்கிற நிலையற்றதான தேஹாதிவஸ்துக்களில் நிலை நின்றதென்னும் இது முதலிய ப்ரமமே. பாஹ்யமான ப்ராஹ்மணத்வம் முதலிய தர்மங்களைப் பற்றின அறிவும் ஆந்தரமான ஸுகம் துக்கம் முதலியவற்றைப்பற்றின அறிவுமின்றி அவற்றிற்கு மூலமான கர்மவாஸனை யொன்றுமாத்ரமே மிகுந்திருக்குந்தசை ஸுஷுப்தி யென்னும் அவஸ்தையென்று கூறப்படும். அதுவும் ப்ர க்ருதியின் கார்யமே. (ஜீவனுக்கு பாஹ்யேந்த்ரியங்கள் அந்தரிந்த்ரியமான மனம் அவற்றிற்கு ஆதாரமான தேஹம் அதனால் ஏற்பட்ட ஜாக்ரத்து முதலிய அவஸ் தைகள் ஆகிய இவையெல்லாம் மாயையெனப்படுகிற ப்ர க்ருதியின் கார்யமாய் உண்டாயிருப்பவை.) ஜீவனுக்கு ஜாக்ரத்து ஸ்வப்னம் ஸுஷுப்தி என்னும் இம் மூன்று அவஸ்தைகளில் ஏதேனுமொன்று மாறுதிருக்கும்.

(ஆனால் இம் மூன்று அவஸ்தைகளும் ஜீவனுக்கு எப்பொழுது நிவர்த்திக்குமென்றால்) ப்ரக்ருதியின் பரிணாமமான சரீரம் விட்டு முக்தாவஸ்தை எப்பொழுது நேரிடுமோ, அப்பொழுதுதான் இம் மூன்று அவஸ்தைகளும் நிவர்த்திக்கும். தேஹஸம்பந்தத்தினால் விளையும் அவஸ்தைகள் மூன்றும் தீண்டப்பெறாத முக்தியே நான்காமவஸ்தை. (ஜாக்ரத்து முதலிய அவஸ்தைகள் மூன்றும் ப்ராக்ருதசரீரஸம்பந்தத்தினால் விளைபவையாகி ஔபாதிகங்களாகையால் நிலையற்றவை. அவற்றை நிலைநின்றவையென்று நினைப்பது ப்ரமமே). ஜீவஸ்வரூபம் ராகம் த்வேஷம் முதலியவை தீண்டப்பெறாமல் பரிசுத்தமாயிருப்பது; ஜாக்ரத்து முதலிய அவஸ்தாபேதங்களின்றி என்றும் ஒருவாறாயிருப்பது; ஜ்ஞானத்தையே வடிவாக உடையது. ஆயினும் அந்த ஜீவஸ்வரூபம் ப்ரக்ருதியின் பரிணாமமான தேஹஸம்பந்தத்தைப் பெற்று ஸ்வப்னத்தில் காண்கிற யானை குதிரை முதலியவை நிலையற்றவையாயினும் நிலைநின்றவையாகத் தோற்றுவதுபோல், இந்த்ரியம் முதலியவைகளால் ஜாக்ரத்து ஸ்வப்னம் ஸுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளையுடையதுபோல் தோற்றுகிறதும் தேஹம் இந்த்ரியம் மனம் இவற்றின் ஸம்பந்தம் உண்டாகப்பெறுவதும் ஆகிய இதெல்லாம் ஜ்ஞானஸ்வரூபனான ஜீவனுடைய அநாதியான புண்ய பாபரூபமான கர்மத்தின் பலனாய் விளைகின்றது. மாயையின் கார்யமான ஜாக்ரத்து முதலிய இம் மூன்று அவஸ்தைகளும் முக்த்யவஸ்தையில் தொடராமையாலும் அதற்கு முன்பும் ஓரவஸ்தையில் மற்றோரவஸ்தை தொடராமையாலும் ஜீவனுடைய அநாதியான புண்ய பாப ரூப கர்மத்தின்பலனாக ஏற்பட்டவையேயன்றி அவனுக்கு இயற்கையில் ஏற்பட்ட

வயைன்று. ஸ்வப்னத்தில் அனுபவிக்கிற ஸுகம்.
றதாகிக் கர்மத்தின் பலனாக எங்ஙனம் விளைகின்றதோ, அங்ஙனமே அநித்யங்களான இவ்வவஸ்தைகளும் கர்ம பலன்களே. இங்ஙனம் இவ்வுண்மையை ஆராய்ந்தறிவானாயின், அற்பஸுகங்களுக்காகச் செய்யும் வ்யாபாரத்தினின்று மீளுவான். ஸர்வகாரணனாகையால் தான் முன்னமே ஸித்தமாயிருக்கின்ற மஹாபுஜனாகிய பரமபுருஷன் ஸமஸ்தபூதங்களுக்கும் அந்தராத்மாவாகி ப்ரத்யக்ஷாதி ப்ரமாண ஸித்தங்களான இந்த ப்ருதிவி முதலிய மஹாபூதங்களைக்கொண்டு தனக்குச் சரீரபூதர்களான ஜீவாத்மாக்களின் புருஷார்த்த ஸித்திக்காக மேன்மையும் தாழ்மையுமான பலபூதங்களைப் படைத்தான். (ஜீவாத்மாக்கள் தன்னை ஆராதிப்பதற்கு உபயோகப்படக்கூடியவைகளான கரண களேபரங்களைப் பெற்றுத் தன்னை ஆராதித்து மோக்ஷரூபமான சிறந்த புருஷார்த்தத்தைப் பெறவேண்டுமென்று பரமபுருஷன் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணினான்). (ஆனால் கரண களேபரங்களைப் பெற்ற ஜீவாத்மாக்கள் அனைவரும் பகவானை ஆராதித்து மோக்ஷத்தை ஏன் பெறவில்லையென்றால், சொல்லுகிறேன்.) இங்ஙனம் ஈச்வரன் பஞ்ச மஹாபூதங்களைக் கொண்டு ஸ்ருஷ்டித்த சரீரங்களில் ஜீவன் ப்ரவேசித்து ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் அந்தக்கரணம் ஆகிய பதினொரு வழிகளில் தன் ஜ்ஞானத்தைச் செலுத்திச் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கிறானன்றி ஈச்வரனை ஆராதிக்கிறதில்லை. அந்த ஜீவன் பரமபுருஷனை ஆராதித்து மோக்ஷத்தைப் பெறவல்லவனாயினும் பகவானால் படைக்கப்பட்ட சரீரத்தை ஆத்மாவாக நினைத்து அந்தர்யாமியாகிய பரமபுருஷனால் கார்யங்களில் நன்கு முயலுக்

திறமை அளிக்கப்பெற்ற இந்த்ரியங்களால் சப்தாதிவிஷயங்களை அனுபவித்துக்கொண்டு மேன்மேலும் இந்த விஷயங்களிலேயே மனப்பற்று செய்கின்றான். இந்த ஸம்ஸாரத்தில் ஜீவன் பூர்வஜன்மத்தில் ஏற்பட்ட கர்மவாஸனைகளால் மேன்மேலும் தேஹ ஸம்பந்தத்திற்கு ஹேதுவான வாஸனைகளோடு கூடிப் புண்ய பாபகர்மங்களைச் செய்துகொண்டு அந்தந்த கர்மங்களின் பலனான ஸுக துக்கங்களை அனுபவியாநின்றுகொண்டு துக்கமே மிகுந்திருக்கப்பெற்றுச் சுழன்றுகொண்டிருக்கின்றான். இங்ஙனம் ஜீவன் புண்ய பாபகர்மங்களால் விளைகிறவைகளும் பற்பல துக்கங்களை விளைப்பவைகளுமான தேஹங்களைப் பெறுநின்றுகொண்டு ப்ரக்ருதிக்கு உள்பட்டு மஹாபூதப்ரளயம்வரையில் ஜன்மமரணங்களை மாறிமாறி அனுபவிக்கிறான். (மஹாபூதப்ரளயம் எத்தகையதென்றால், சொல்லுகிறேன், கேள்). மஹாபூதப்ரளயம் ஸமீபித்திருக்கும்பொழுது ஆதியந்தமில்லாத காலத்தைச் சரீரமாகவுடைய பரமபுருஷன் பஞ்சபூதங்களும் சப்தாதி விஷயங்களுமாகிய ஸ்தூலரூபமான ப்ரபஞ்சத்தை நாமரூபவிபாகமில்லாததும் தமஸ்ஸென்று கூறப்படுவதுமாகிய ஸூக்ஷ்மப்ரக்ருதிக்குப் பிடித்திழுக்கிறான் (ஸூக்ஷ்மப்ரக்ருதியில் மறையும்படி ஸங்கல்பிக்கிறான்). அப்பொழுது நூறுவருஷங்கள்வரையில் மிகவும் பொறுக்கமுடியாத அனாவ்ருஷ்டி உண்டாகும். அத்தகைய அனாவ்ருஷ்டிகாலத்தினால் மிகுதியும் உஷ்ணம் வளரப்பெற்ற ஸூர்யன் மூன்று லோகங்களையும் எரிப்பான். ஸங்கர்ஷணனுடைய முகத்தினின்று மேல்நோக்கி யெரிகின்ற ஜ்வாலைகளையுடைய அக்னி காற்றினால் தூண்டப்பட்டுப் பாதாளம்முதல் உலகங்களை யெல்லாம் தஹித்துக்கொண்டு நாற்

புறத்திலும் வளர்ந்துவரும். அப்பால் ஸாம்வர்த்தகமென்கிற ப்ரளயகாலத்து மேகங்களின் கூட்டம் யானைத் துதிக்கைகள்போன்ற ஜலதாரைகளுடன் நூறுவர்ஷங்கள்வரையில் மழை பெய்யும். அதனால் ப்ரஹ்மாண்டம் ஜலத்தில் முழுகிப்போம். மன்னவனே! அனந்தரம் ப்ரஹ்மாண்டத்திற்குள்ளிருக்கிற ஜீவவர்க்கம் ஜலத்தில் மூழ்கின அந்த ப்ரஹ்மாண்டத்தை விட்டுத் தமஸ்ஸென்கிற ஸூக்ஷ்மப்ரக்ருதியில் மறைகின்றது. அப்பொழுது அந்த ஜீவவர்க்கம் ஜ்ஞானஸங்கோசத்தை அடைந்து கட்டையில்லாத அக்னி போன்றிருக்கும். அனந்தரம் ப்ரளயகாலவாயுவினால் கந்தமென்னும் தன்குணம் பறியுண்ட பூமி ஜலமாய் விடும் (ஜலத்தில் மறையும்). அந்த ஜலமும் அந்த ப்ரளயவாயுவினால் ரஸமென்கிற தன்குணம பறியுண்டு தேஜஸ்ஸாய்விடும் (தேஜஸ்ஸில் மறையும்) அனந்தரம் ப்ரளயகாலத்திலுண்டான தமஸ்ஸினால் ரூபமென்கிற தன்குணம் பறியுண்ட தேஜஸ்ஸு வாயுவில் மறைகின்றது. தனக்குக் காரணமும் லயம் ஸமீபிக்கப் பெற்றிருப்பதுமாகிய ஆகாசத்தினால் ஸ்பர்சமென்கிற தன்குணம் பறியுண்ட வாயு ஆகாயத்தில மறைகின்றது. காலத்தைச் சரீரமாகவுடைய ஈச்வரனால் சப்தமெனகிற தன் குணம் பறியுண்ட ஆகாசம் தங்காரணமான பூதாதியில் மறைகின்றது. கர்மேந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் ஆகிய பத்து இந்த்ரியங்களும் மனம் புத்தி இவைகளும் தத்தம் அதிஷ்டானதேவதைகளுடன் தம்காரணமாகிய ஸாத்விகாஹங்காரத்தில் பிரவேசிக்கின்றன. அவ்வஹங்காரம் தன்கார்யங்களுடன் தன்காரணமான மஹத்தத்வத்தில் மறைகின்றது. அந்த மஹத்தத்வத்திற்கும் காரணமாகிய பகவானுடைய

இம்மாயை ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு உபயோகப்படுந்தன்மையது; சிவப்பு வெளுப்பு கறுப்பு என்னும் இவ்வர்ணங்களை யுடையது (சிவப்பு வர்ணமுடைய ரஜஸ்ஸு, வெளுப்பு வர்ணமுடைய ஸத்வம், கறுப்பு வர்ணமுடைய தமஸ்ஸு ஆகிய இக்குணங்களையே வடிவாகவுடையது.) இங்ஙனம் மாயையின் ஸ்வரூபத்தையும் அதன் கார்யத்தையும் உனக்கு மொழிந்தோம். இன்னம் எதைக் கேட்க விரும்புகின்றனை?

மன்னவன் சொல்லுகிறான்:—மஹர்ஷீ! இந்த்ரியங்களை வெல்ல முடியாதவர்களால் கடக்க முடியாத இத்தகைய ஈச்வரமாயையைப் புத்தி ஸூக்ஷ்மமில்லாத எங்களைப்போன்றவர் எப்படி ஸுகமாகத் தாண்டக்கூடுமோ, அந்த உபாயத்தைச் சொல்லவேண்டும். (மதியுடையவன் பகவானிடத்தில் பக்தியை வளர்த்திக்கொண்டு அதனால் மாயையைக் கடந்து அப்பகவானை அடையவேண்டுமென்று முன்னமே மொழிந்தமையால் பக்தியே இதற்கு உபாயமென்று ஏற்படுகின்றது. ஆயினும் மதியில்லாத மந்தர்களுக்குப் பகவானிடத்தில் பக்தி உண்டாவது அரிதாகையால் ஏதேனுமொருவழியில் அவர்கள் அதைச் சம்பாதித்துக்கொள்ளவேண்டும். ஆகையால் அதற்கு வழியென்னென்று தெரிந்துகொள்வதற்காக மீளவும் வினவுகிறேன்.)

ப்ரபுத்தன் சொல்லுகிறான்:—ஆணும் பெண்ணுமாய்க் கலந்திருக்கும் ப்ராணிகள் அனிஷ்டபரிஹாரத்திற்காகவும் இஷ்டப்ராப்திக்காகவும் பற்பல கர்மங்களைச் செய்துகொண்டிருப்பினும் அவர்களுடைய நினைவுக்கு நேரே விரோதமாக அனிஷ்டமே விளைவதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். துர்லபமும் மரணாந்தமான ஸாஹஸகார்யங்களைச் செய்து ஸம்பாதிக்கவேண்

டியதாகையால் ம்ருத்யுவைப்போன்றதும் என்றும் வருத்தத்தையே விளைப்பதுமாகிய பணத்தையும் அநித்யங்களான வீடு வாசல் பிள்ளை நண்பர் பசுக்கள் முதலியவற்றையும் வேண்டியவளவு ஸாதித்துக்கொள்வானாயினும்அவற்றால் என்ன ஸுகம் உண்டாகும்? ஒரு ஸுகமும் உண்டாகாது. இவ்வுலகத்தில் பணம் வீடு வாசல் முதலியவற்றால் விளையும் ஸுகம் நிலையற்றதும் கடைசியில் துக்கத்திற்கே ஹேதுவுமாயிருப்பதுபோல் ஸ்வர்க்காதி பரலோக ஸுகமும் நிலையற்றதென்றே அறிய வேண்டும். ஏனென்றால், அதுவும் ப்ராணிகளுடைய கர்மத்தினால் விளையுமதல்லவா? மற்றும், அது வர்த்தமான தசையிலும் துக்கரூபமாகவே இருக்கும். ஏனென்றால், மண்டலேச்வரர்கள் தன்னைப்போலவே மற்றவர்களும் ஸுகிப்பதைக் கண்டு தத்தம் ஸுகத்தில் அவ்வளவாக ஆதரம் உண்டாகப்பெறாதிருப்பது போலவே ஸ்வர்க்காதி லோகங்களிலும் தங்களைப்போல் பிறரும் ஸுகிப்பதைக் கண்டு தங்கள்ஸுகத்தை ஆதரிக்கமாட்டார்கள். மற்றும், தங்களைக்காட்டிலும் மேற்பட்ட ஸுகம் அனுபவிப்பவர்களைக்கண்டு தங்கள் ஸுகத்தை இதென்ன ஸுகமென்று உபேக்ஷிக்கும்படியாயிருக்கும். இதுவும் நிலை நிற்பதன்றே யென்று நினைக்கில் பரிஹரிக்கமுடியாத மஹத்தான பயமும் உண்டாகும். ஸ்வர்க்காதிபரலோக ஸுகமும் இங்ஙனம் இணையும் எதிரும் அழிவுமுடையதாகையால் துக்கரூபமாகவேயிருக்கும். இங்ஙனம் இஹபரஸுகங்களிரண்டும் நிலையற்றதாகையால் அதில் வெறுப்புற்று நிலை நின்றதாகிய சிறந்த நன்மையை அறிய விரும்பி வேதங்களை நன்குணர்ந்தவனும் யோகத்தினால் பரப்ரஹ்மத்தின் ஸ்வரூப ரூப குணவிபூதிகளை ஆராய்ந்தறிந்தவனும் ராக

த்வேஷாதிகள் நீண்டப் பெருதவனுமாகிய குருவைப் பற்றவேண்டும். அந்தக் குருஸந்நிதியில் அக்குருவையே தனக்குத் தெய்வமாக நினைத்து அவனுக்குக் கபடமின்றிப் பணிவிடைகள் செய்து பாகவத தர்மங்களை அப்யஸிக்கவேண்டும். ஸர்வாந்தராத்மாவும் தன்னைப் பற்றுகிறவர்களுக்குத் தன்னைக் கொடுக்கும் மஹோதாரனுமாகிய பரமபுருஷன் அப் பாகவத தர்மங்களால் ஸந்தோஷம் அடைவான். (அவை யாவையெனில், சொல்லுகிறேன்.) முதலில் தேஹம் தேஹாநுபந்திகள் ஆகிய அனைத்திலும் மனப்பற்றில்லாமையை அப்யஸிக்கவேண்டும். மனவருத்தமுற்ற ப்ராணிகளிடத்தில் தயையையும் தன்னோடொத்தவர்களிடத்தில் ஸ்னேஹத்தையும் தனக்கு மேற்பட்டவர்களிடத்தில் வணக்கத்தையும் அவரவர்களுக்குத் தகுந்தபடி நிஷ்கபடமாக அப்யஸிக்கவேண்டும். ஸ்நானாதிகளால் விளையும் பாஹ்யசுத்தியும் விஷ்ணுசிந்தனத்தினால் விளையும் ஆந்தரசுத்தியும் ஆகிய இரண்டு விதமான சுத்தி, தத்தம் வர்ணாஶ்ரமங்களுக்கு உரிய தர்மங்களை அனுஷ்டிக்கை, உபவாஸாதி ரூபமான தவம், ஸுகதுக்காதிகளைப் பொறுக்கை, மனோவாக்காயங்கள் மூன்றும் ஒத்திருக்கையாகிற ஆர்ஜவம், ருதுகாலம் தவிர மற்ற காலங்களில் ஸ்த்ரீஸங்கமில்லாமை, ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்யாமை, த்வந்த்வங்களென்கிற சீத உஷ்ண ஸுக துக்காதிகளால் ஸ்வபாவம் மாறப்பெறுமல் அவைகளைத் துல்யமாகப் பாவிக்கை, ஸமஸ்த சேதனங்களிலும் ஸமஸ்த அசேதனங்களிலும் ஈஶ்வரன ஒருவனுகவே அமைந்திருக்கிருனென்னும் பாவனை, ப்ரக்ருதியின் பரிணாமமான தேவமனுஷ்யாதி ஸகல சரீரங்களிலும் ஜீவாத்மாக்கள் அனைவரும் ஜ்ஞானத்

தையே வடிவாகவுடையவராகையால் ஒருவாருயிருப் பவரென்னும் பாவனை, அந்த ஜீவாத்மாக்கள் அனைவ ரிடத்திலும் ஈஶ்வரன் உள்ளே புகுந்து ஒருவாருகவே நியமித்துக் கொண்டிருக்கிறுனென்னும் பாவனை, தேஹம் தவிர மற்ற பரிக்ரஹங்களில்லாமை, க்ருஹம் முதலியவற்றில் அபிமான மற்றிருக்கை, பரிசுத்தமான மரவுரிகளை உடுத்திக்கொள்தல், ஏதேனும் தெய்வாதீன மாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷ முற்றிருக் கை, பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை அறிவிக்கிற சாஸ்த்ரத்தில் மிகுந்த ஆதரம், தேவ தாந்தரவிஷயமானவற்றில் நிந்தை, ப்ராணுயாமங் களால் மனத்தையும் பொய் பேசாமையால் வாக்கை யும் அனீஹையினுல் கர்மத்தையும் உபவாஸாதிகளால் சரீரத்தையும் அடக்குகை, ப்ராணிகளுக்கு ஹிதஞ்செய் கையாகிற ஸத்யம், அந்தக்கரண நிக்ரஹம், பஹிரிந் த்ரிய நிக்ரஹம், அற்புதச்செயலுடையவனுகிய பகவா னுடைய அவதாரம் செயல்கள் குணங்கள் இவற்றைக் கேட்கை, கீர்த்தனஞ் செய்கை, த்யானிக்கை, செயல் களை யெல்லாம் பகவானுக்காகச் செய்கை (செய்யும் செயல்களை யெல்லாம் பகவானிடத்தில் அர்ப்பணஞ் செய்கை), யாகம் தானம் தவம் குளம் கிணறு முதலி யன வெட்டுவிக்கை மற்றும் தனக்கு இஷ்டமான நடத்தை மனைவி மகன் மனை ப்ராணன் ஆகிய இவற் றை யெல்லாம் பகவானிடத்தில் அர்ப்பணஞ் செய்கை, இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனையே தனக்கு நாதனுகவு டைய மனுஷ்யர்களிடத்தில் ஸ்னேஹம், ஜங்கமஸ்தா வரரூபமான மற்ற பூதங்களிடத்தில் வெகுமதி, ஸாதுக்களான பெரியோர்களிடத்தில் பரிசுத்தமான பகவானுடைய புகழைப்பற்றி ஒருவர்க்கொருவர் பேசிக்

கொள்கை, அந்தப்புகழை அனுபவிக்கையால் ஒருவர்க்கொருவர் அனுராகமும் ஒருவர்க்கொருவர் ஸந்தோஷமும் உண்டாகப்பெறுகை ஆத்யாத்மிகம்முதலிய தாபங்களினின்று மனத்தைத் திருப்பிக்கொள்கை, பாபங்களின் ஸமூஹங்களைப் போக்கவல்ல மஹானுபாவனுகிய பிரமபுருஷனைத் தாங்கள் நினைப்பதும் ஒருவர்க்கொருவர் நினைவு மூட்டுவதுமாகி ஸாதனபக்தியால் ப்ரீதிரூபமான பக்திஉண்டாகப்பெற்று அதனுல் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெறுகை, உலகத்தவர்களைக் காட்டிலும் விலக்ஷணர்களாகி ஒருகால் அச்சுதனைப் பற்றின சிந்தையால் ரோதனஞ் செய்கை, ஒருகால் சிரிக்கை, ஒருகால் ஸந்தோஷப்படுகை, ஒருகால் அவனைப்பற்றிப் பேசுகை, ஒருகால் நர்த்தனம் செய்கை, ஒருகால் கானஞ் செய்கை, ஒருகால் அந்தப் பகவானுடைய ஸ்வரூப ஸ்வபாவாதிகளை ஆராய்கை, கர்மத்தினுல் விளையும் பிறவியற்ற அப்பரமபுருஷனை மனத்தினுல் பெற்று ஸந்தோஷமுற்றிருக்கை ஆகிய இவ்விதமான பாகவத தர்மங்களை அப்யஸித்துக்கொண்டு ஸ்ரீமந் நாராயணனுடைய ஆராதனத்தில் நிலைநின்று அந்த ஆராதனத்தினுல் உண்டான பக்தியினுல் எவ்விதத்திலும் கடக்கமுடியாத பகவானுடைய மாயையை அனுயாஸமாகத் தாண்டுவான்.

ஜனகமன்னவன் சொல்லுகிறுன்:—நாராயணனென்று பேர்பெற்றவனும் பரப்ரஹ்மமென்று கூறப்படுகின்றவனுமாகிய பரமாத்மாவின் ஸ்வரூப நிச்சயத்தை எமக்குச் சொல்வீர்களாக. நீங்கள் பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை நன்ருக ஆராய்ந்தறிந்தவர்களல்லவா?

பிப்பலாயனன் சொல்லுகிறுன்:—மன்னவனே! சேதனுசேதன ரூபமான இந்த ஜகத்தின் ஸ்திதி ஸ்ருஷ்டி

ப்ரளயம் இவற்றிற்குக் காரணமும் தனக்குத் தானே காரணமன்றி வேறுகாரண மற்றதும் ஸ்வப்னம் ஜாக ரம் ஸுஷுப்தி இவற்றைக் காட்டிலும் வேறுபட்ட தான முக்தாவஸ்தை ஆகிய எல்லா அவஸ்தைகளிலும் ஜீவாத்மாக்களிடத்தில் அந்தராத்மாவாய் அமைந் திருப்பதும் தேஹம் இந்த்ரியங்கள் ப்ராணன்கள் ஹ்ரு தயம் இவை எதனுடைய தூண்டுதலால் முயற்சி கொள் கின்றனவோ அத்தகையதுமாகிய வஸ்துவே பரப்ரஹ்ம மென்று அறிவாயாக. மனம் வாக்கு முதலிய கர்மேந் த்ரியங்கள் கண் ஜீவன் ப்ராணன்கள் செவி முதலிய மற்ற இந்த்ரியங்கள் இவையெல்லாம், அக்னியின் ஜ்வா லைகள் அக்னியைப்போல், இப்பரப்ரஹ்மத்தை அறிய வல்லவையல்ல. வேதாந்தரூபமான சப்தமும் 'இப்பரப் ரஹ்மம் கண்முதலிய ஜ்ஞானேந்த்ரியங்களாலாவது வாக்கு முதலிய கர்மேந்த்ரியங்களாலாவது அறியப்படு வதன்று' என்று உலகத்தில் தத்தம் விஷயங்களை அறியவைகளாக ஏற்பட்டிருக்கின்ற சக்ஷுராதி இந் த்ரியங்களுக்கு விஷயமன்றென்று தெரிவிக்கின்றது. அவ்வழியால் அது பரமாத்மவிஷயத்தில் ப்ரமாண மாகின்றது. 'வேதாந்தங்கள் இந்த்ரியாதிகளுக்கு விஷயமன்றென்று நிஷேதிக்கிறதாயின் அவை பரப்ரஹ் மத்தை எப்படி அறிவிப்பவையாம்?' என்றால், இந்த்ரி யாதிகளுக்கு விஷயமன்றென்று நிஷேதரூபமான அர்த் தத்தின் மூலமாய் அதை அறிவிக்கின்றன. பரப்ரஹ் மம் இல்லாத பக்ஷத்தில் இந்த்ரியாதிகளுக்கு விஷயமன் றென்று எதை நிஷேதிக்கும்? நிஷேதமே ஸித்திக் காது. ஆகையால் நிஷேதரூபமான அர்த்தத்தினால் பரப்ரஹ்மம் உண்டென்று வேதாந்தங்கள் அறிவிக்கின் றன. (இங்ஙனம் பரப்ரஹ்மம் ப்ரத்யக்ஷம் முதலிய

மற்ற ப்ரமாணங்களால் அறிய முடியாததென்றும் வேதாந்தரூபமான சப்த ப்ரமாணத்தினால்மாத்ரமே அறியக்கூடியதென்றும் ஏற்படுகின்றது. இப்படியாயின் யோகாப்யாஸத்தினால் பரிசுத்தமான மனத்தினால் ப்ராஹ்மத்தை அறியக்கூடுமென்று வேதாந்தங்கள் மூறையிடுகின்றனவாகையால் மனமும் ப்ரமாணமாயிருக்க, சப்தப்ரமாணம் ஒன்றே உள்ளதென்று எப்படி நிர்ணயிக்கமுடியுமென்றால், யோகபரிசுத்தமான மனம் ப்ரமாணமென்று அறிவதற்கும் வேதாந்தசப்தமே காரணமாகையால் வேதாந்த சப்தமொன்றே ப்ரமாணமென்று நிர்ணயிக்கத்தடையில்லை. ஸத்வ ரஜஸ் தமஸ் ஸுக்களென்கிற மூன்று குணங்களே வடிவாயிருக்கப் பெற்றதும் கார்யங்களுக்குஆதாரமாகையால் ஸூத்ரம் போன்றதும் முதலிலிருப்பதுமாகிய ப்ரதானம் மஹத்து அஹங்காரம் இவைகளும் மற்றவைகளும் தத்வங்களென்றும், ஜீவன் நன்மை தீமைகளை அறிந்து கர்மங்களை அனுஷ்டித்து அவற்றின் பலனை ஸ்வர்க்காதிகளை அனுபவிப்பவனென்றும், ஜ்ஞானேந்த்ரியகர்மேந்த்ரியங்களால் சப்தாதி விஷயங்களைப்பெற்று அவற்றின் பலனை ஸுகதுக்கங்களை அனுபவிப்பவனென்றும் சொல்லுகிறார்கள். இத்தகைய சேதநாசேதனங்களெல்லாம் சிந்திக்க முடியாத பற்பல சக்திகளையுடைய பரப்ரஹ்மத்திற்குச் சரீரமாகி அதனால் நியமிக்கப்பட்டிருக்கின்றன. பரப்ரஹ்மமோவென்றால் அவற்றைக்காட்டிலும் வேறுபட்டு விலக்ஷணமாயிருக்கும். ஜீவன் உத்பத்திமரணம் வளர்தல் குறைதல் முதலிய விகாரங்களற்றவன். ஏனென்றால், அந்த ஜீவன் வருவதும் போவதுமாயிருக்கின்ற தேஹங்களின் வருங்காலம் போங்காலம் முதலிய அந்தந்த காலங்களை அறிந்தவன். (அவஸ்தை

 மூன்று

களையுடைய வஸ்துக்களை ஸாக்ஷாத்கரிக்குந்தன்மை யுடையவன் அந்த அவஸ்தைகளை அடையமாட்டான்). அவன் தேவாதி சரீரங்களில் மோக்ஷம்வரையில் ஸர்வ காலமும் மாறுதிருப்பவன். அவன் கேவலஜ்ஞானஸ்வரூ பன். ப்ராணவாயு ஒன்றுயினும் ஸ்தான பேதத்தினு லும் கார்ய பேதத்தினுலும் பலபிரிவுகளைப் பெறுவது போல, ஜீவனும் ஒருவனுயிருப்பவனுயினும் இந்த்ரிய பலத்தினுல் 'காண்கிறேன், கேட்கிறேன்' என்னும் இவை முதலிய ஜ்ஞான விகற்பங்களுக்கிடமாயிருக்கின்றுன். அண்டஜம் ஜராயுஜம உத்பிஜ்ஜம் ஸ்வேதஜம் என்று பலவகைப்பட்ட அந்தந்த சரீரங்களில் ஜீவன் ப்ராண வாயுமூலமாய் ப்ரவேசித்து அவற்றைத் தரித்துக்கொ ண்டிருக்கிறுன். அவன் விகாரங்களின்றி என்றும் ஒரு வாறுயிருப்பவன். (இத்தகையனுன ஜீவன் எல்லார்க்கும் அனுபவஸித்தனுயிருப்பானே வென்றுல், அது கிடை யாது.) இயற்கையில் விகாரங்களற்றவனுயினும் விகாரங் களுக்கிடமாகி இருந்தும் இல்லாதவன்போலவே இருப் பான்; ஸ்பஷ்டமாகத் தோற்றமாட்டான். 'ஆனுல், அந்த ஜீவன் எப்பொழுது ஸ்பஷ்டமாகத் தோற்றுவான்? அங்ஙனம் தோற்றுமைக்குக் காரணம் என்?" என்றுல்; இந்த்ரியங்களின்கூட்டமும் அஹங்காரம் முதலிய மனேவ்ருத்திகளும் ஒழிந்து சரீரஸம்பந்தமும் தொலை கையில் ஜீவாத்மாக்களாகிய நமக்கு நமது உண்மை யான ஸ்வரூபம ப்ரகாசிக்கும். மனேவ்ருத்திகளும் தே ஹாத்மப்ரமமுமே ஆத்மஸ்வரூபம் தோற்றுமைக்குக் காரணம். தேஹாத்மாபிமானம் நீங்குமாயின், தேஹ த்தின் தோற்றமில்லாமல் ஆத்மஸ்வரூபம் உள்ளபடி ப்ரகாசிக்கும். (ஆனுல் அஹங்காரம் முதலிய மனே வ்ருத்திகள் எப்பொழுது நிவர்த்திக்கும்? ஆத்மஸ்வ

றன. (௨௦

ரூபத்தைப்பற்றின நினைவு எதனால் உண்டாகும்?' என்றால், சொல்லுகிறேன். ) பணம் முதலியவற்றில் விருப்பங்களைத் துறந்து பத்மநாபனுடைய பாதாரவிந்தங்களில் என்றும் மாறாதபக்தி உண்டாகப்பெற்று அதனால் ஸத்வாதி குணங்கள் மூலமாய் விளைகிற புண்யபாபகர்மங்களால் உண்டாகிற ராகத்வேஷாதிகளான மனமலங்களை அழிக்கவேண்டும். எத்தகைய தோஷங்களுமின்றி நிர்மலமான கண்களையுடையவனுக்கு ஸூர்யனுடைய வெளிச்சம் தோற்றுவதுபோல், அங்ஙனம் ராகத்வேஷாதிகளற்றுப் பரிசுத்தமாயிருக்கின்ற மனத்தில் தேஹாதி உபாதிகளின்றிப் பரிசுத்தமாயிருப்பதும் பகவானுக்குச் சரீரமாயிருப்பதுமாகிய ஆத்மஸ்வரூபம் உள்ளபடி தோற்றும். பக்தி நிர்மலமான மனத்தினால் ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை ஸாக்ஷாத்கரிக்கலாம்.

மன்னவன் சொல்லுகிறான்:—ஜீவன் எதை அனுஷ்டித்தால் சீக்ரத்தில் புண்யபாபகர்மங்களை உதறி மனம் பரிசுத்தமாகப்பெற்று ஸம்ஸாரபந்தத்திற்கு ஹேதுவான ஸமஸ்த கர்மங்களின் நிவ்ருத்திக்குக் காரணமும் பரபக்தியென்றும் பரஜ்ஞானமென்றும் பெயருடையதுமாகிய ஜ்ஞானத்தைப் பெறுவானோ, அத்தகைய கர்மயோகத்தை எங்களுக்குச் சொல்லுவீர்களாக. முன்பு என் தந்தையாகிய இக்ஷ்வாகுவின் அருகில் ஸனகாதி முனிவர்கள் வந்திருக்கும்பொழுது இங்ஙனமே இந்தக் கேள்வியை நான் கேட்டேன். ப்ரஹ்மபுத்ரர்களாகிய அந்த ஸனகாதி முனிவர்கள் அதற்கு மறுமொழி கூறவில்லை. அதற்கு என்ன காரணமோ அதையும் சொல்வீர்களாக.

ஆவிர்ஹோத்ரன் சொல்லுகிறான்:—கர்மமென்றும் அகர்மமென்றும் விகர்மமென்றும் கர்மம் மூன்று

விதமாக வேதத்தில் வழங்கி வருகின்றது. இது உலகத்தில் வழங்கிவருவதன்று. அவற்றில் பலனை உத்தேசித்துச் செய்யுங் கர்மம் கர்மமென்றும், பலனை எதிர்பாராமல் ஜ்ஞானத்தை முன்னிட்டுச் செய்யும் கர்மம் அகர்மமென்றும், நிஷித்தகர்மம் விகர்மமென்றும் கூறப்படும். வேதம் ஈஸ்வரனுடைய அபிப்ராயரூபமாகையால் அதை உள்ளபடி அறிவது அருமை. அதில் வழங்கிவருகின்ற மூன்றுவகையான கர்மங்களிலும் அறியவேண்டிய அம்சங்கள் பலவாகையால் அவற்றை ஆராய்ந்தறிவது எளிதில் ஆகக்கூடியதன்று. ஆகையால் அவ்விஷயத்தில் பண்டிதர்களும் மதிமயங்குகிறார்கள். அதைப்பற்றி நீ பாலனாயிருப்பதை அறிந்து உனக்குப் பிடிபடாதென்று உன்கேள்விக்கு மறுமொழி கூறவில்லையேயன்றி வேறில்லை. (பரமபுருஷனுடைய ஆராதனரூபமான கர்மயோகம் வைதிகமென்றும் தாந்த்ரிகமென்றும் இருவகைப்பட்டிருக்கும். அவற்றில் வைதிகம் நித்யமென்றும் நைமித்திகமென்றும் காம்யமென்றும் மூன்றுவகைப்பட்டிருக்கும்.) ஹிதத்தையும் அஹிதத்தையும் அறிவிக்குந்தன்மையதாகிய இவ்வேதம் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறியமுடியாத அர்த்தங்களை மொழியுந் தன்மையது. அது அறியாத மூடர்களுக்கு அவ்வர்த்தங்களைத் தெளிவாக அறிவிக்கின்றது. ஆயினும் அப்பொருள்கள் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு எட்டாதவையாகையால் அதன் அபிப்ராயத்தை எளிதில் அறியமுடியாது. அவ்வேதம் ஸ்வர்க்காதி பலன்களைக் குறித்து யாகாதிகர்மங்களை விதிக்கினும் அதற்கு அதில் அபிப்ராயமில்லை. உலகத்தில் குழந்தைகளுக்கு ஔஷதம் கொடுக்கிறவர்கள் 'இதைச் சாப்பிட்டால், உனக்குக் கற்கண்டு கொடுப்பேன்; லட்டு

கொடுப்பேன்' என்று ஆசைமூட்டி ஔஷதங் கொடுப்பதுபோல, வேதம் ஸ்வர்க்காதி பலன்களால் ஆசைமூட்டிப் புண்ய பாப கர்மங்களினின்று விடுபடும்பொருட்டு யஜ்ஞாதிகர்மங்களை விதிக்கின்றது. ஔஷதம் சாப்பிடுவதற்குக் கற்கண்டு லட்டு முதலியவை பலனன்றே. ஆரோக்யமே யல்லவா பலன். அங்ஙனமே யஜ்ஞாதி கர்மங்களுக்கு மோக்ஷமே பலனன்றி ஸ்வர்க்காதிகள் பலனன்று. இவர்களுக்கு அதில் ஆசை உண்டாகும்பொருட்டு ஸ்வர்க்காதிபலன்களைச் சொல்லிற்றே யொழிய அதில் அபிப்ராயமன்று. ஆகையால் ஸ்வர்க்காதியான அவாந்தர பலன்களைத் துறந்து மோக்ஷத்தையே பலனாக உத்தேசித்துக் காம்யகர்மங்களையும் அனுஷ்டிக்கவேண்டும். (நித்யநைமித்திக கர்மங்களைப் பலன்களில் அபிஸந்தியின்றிப் பக்தியோகத்தின் அபிவ்ருத்திக்காக அனுஷ்டிக்கவேண்டும்.) ஒன்றும் தெரியாத மூடன் இந்த்ரியங்களை அடக்கியாளமுடியாமல் வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை அனுஷ்டிக்காமல் நிஷித்த கர்மங்களையும் நடத்திக்கொண்டு வருவானாயின், அவன் வேதவிருத்த கர்மங்களை அனுஷ்டிக்கையும் வேதங்களில் விதித்த கர்மங்களை அனுஷ்டிக்காமையுமாகிற அதர்மங்களால் ம்ருத்யுவினிடத்தினின்று ம்ருத்யுவைப் பெறுவான். ஆகையால் வேதங்களில் விதிக்கப்பட்ட நித்யம் நைமித்திகம் காம்யம் என்கிற மூன்றுவகைக் கர்மங்களையும் ஈஶ்வரார்ப்பணமென்னும் புத்தியுடன் அனுஷ்டித்துக்கொண்டே அந்தந்த அவாந்தர பலன்களில் மனப்பற்றின்றி யிருப்பானாயின் நைஷ்கர்ம்ய ஹேதுவான (ஸம்ஸாரபந்த ஹேதுவான ஸகலகர்மங்களின நிவ்ருத்திக்கு ஹேதுவான) ஜ்ஞானஸித்தியைப் பெறுவான்' கர்ம

யோகம் ஜ்ஞானயோகத்திற்கு ஹேது. ஆனால் யஜ்ஞாதிகர்மங்களுக்கு வெவ்வேறு பலன்கள் ஏன் கூறப்பட்டிருக்கின்றன. வென்றால், அது உண்மையன்று; அர்த்தவாதமே. ஸம்ஸாரிகளுக்கு அவற்றில் முயற்சி உண்டாகும்பொருட்டு வேதங்கள் வேறு பலன்களைக் கூறுகின்றனவேயன்றி அவற்றிற்கு அதில் கருத்தில்லை. எவன் ஹ்ருதயக்ரந்தியை (அஹங்கார மமகாராதி ரூபமான ப்ரக்ருதிஸம்பந்தகார்யத்தைச்) சீக்ரத்தில் போக்கிக்கொள்ள விரும்புகிறானோ, அவன் தாந்த்ரிகமான (பஞ்சராத்ர தந்த்ரங்களில் சொல்லப்பட்ட) கர்மத்தினாலும் விதிப்படி பகவானை ஆராதிக்கவேண்டும். (தாந்த்ரிகம் வைதிகம் என்று இருவகையான கர்மயோகத்தினாலும் பகவானை ஆராதித்துக்கொண்டு வருவானாயின், சீக்ரத்தில் பக்தியோகம் கைகூடப்பெற்று ப்ரக்ருதிஸம்பந்தத்தினின்று விடுபடுவான். ஆசார்யனிடத்தினின்று அனுக்ரஹம் பெற்று அவ்வாசார்யனால் பகவானை ஆராதிக்கவேண்டிய விதங்களெல்லாம் கற்பிக்கப்பெற்றுத் தனக்கு இஷ்டமான மூர்த்தியுடன் கூடின பரமபுருஷனை ஆராதிக்கவேண்டும். அந்தப் பரமபுருஷனுக்கு எதிரே உட்கார்ந்து ப்ராணாயாமம் பூதசுத்தி முதலியவைகளால் தேஹத்தைச் சுத்திசெய்து சிறந்த அங்கந்யாஸங்களாலும் கரந்யாஸங்களாலும் ரக்ஷை பண்ணிக்கொண்டு அப்பரம புருஷனை ஆராதிக்கவேண்டும். அர்ச்சாவிக்ரஹம் முதலியவற்றிலாவது ஹ்ருதயத்திலாவது பகவானைத் தனக்குக் கிடைத்த பூஜாத்ரவ்யங்களால் ஆராதிக்கவேண்டும். முதலில் துளஸீ சந்தனம் புஷ்பம் முதலிய பூஜாத்ரவ்யங்களை ப்ரோக்ஷணாதிகளாலும் பூமியை விளக்குவது மெழுகுவது முதலியவைகளாலும்

தேஹத்தை அங்கந்யாஸாதிகளாலும் பகவானுடைய மூர்த்தியை ஜலம் சேர்த்து அலம்புவது முதலியவைகளாலும் ஸம்ஸ்கரித்து ஸித்தப்படுத்திக்கொண்டு அனந்தரம் ஆராதனத்திற்குத் தொடங்கவேண்டும். பாத்யபாத்ரம் முதலிய பாத்ரங்களை ஸ்தாபித்து மனஸூக்கதுடன் மூர்த்தியில் பகவானை ஆவாஹனஞ்செய்து ஹ்ருதயம் முதலிய அங்கங்களில் ஹ்ருதயாதி மந்த்ரங்களாலும் மூலமந்த்ரத்தினாலும் ந்யாஸம்பண்ணிக் கொண்டு மூலமந்த்ரத்தினால் பகவானை ஆராதிக்க வேண்டும். ஹ்ருத்யம் முதலிய அங்கங்களோடும் ஸுதர்சனசக்ரம் முதலிய உபாங்கங்களோடும் பரிவாரங்களோடும் கூடிய பகவானுடைய அந்தந்த மூர்த்தியை அந்தந்த மந்த்ரங்களால் பாத்யம் அர்க்யம் ஆசமனீயம் முதலியனவும் ஸ்னானம் வஸ்த்ரம் பூஷணம் முதலியனவும் ஸமர்ப்பித்துப் பூஜிக்கவேண்டும். கந்தம் புஷ்பம் அக்ஷதை மாலை தூபம் தீபம் (மதுபர்க்கம்) நைவேத்யம் இவை முதலிய உபசாரங்களால் பரிவாரங்களோடு கூடின பகவானை விதிப்படி ஆராதித்து ஸ்தோத்ரங்களால் துதித்து நமஸ்காரம் செய்யவேண்டும். தன்னை அந்தப் பகவன்மயமாகவே தியானித்துக்கொண்டு அப் பகவானுடைய மூர்த்தியை ஆராதிக்கவேண்டும். பகவானுக்கு அமுதுசெய்யப்பண்ணின அன்னத்தைப் போஜனத்திற்காக ஸ்வீகரித்துத் துளஸிபுஷ்பம் முதலியவற்றைச் சிரஸ்ஸில் தரித்து மூர்த்தியில் ஆவாஹனஞ் செய்யப்பெற்ற பகவானைப் பரமபதம் முதலிய அவன் ஸ்தானத்தில் ஸுகமாக எழுந்தருளியிருக்குமாறு உத்வாஸனஞ் செய்து பூஜையை முடிக்க வேண்டும். அக்னி ஸூர்யன் ஜலம் முதலிய இடங்களி

லும் * அதிதியிடத்திலும் ஹ்ருதயத்திலும ஸர்வாந்தராத்மாவான ஸர்வேஶ்வரனை இவ்வண்ணம் எவன் ஆராதிக்கிறானோ, அவன் சீக்ரத்தில் ஸம்ஸாரத்தினின்று விடுபடுவான். மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

விதேஹ மன்னவன் பகவானுடைய அவதார வ்ருத்தாந்தங்களைப் பற்றி வினவுதலும் த்ரமிலன் அதற்கு மறுமொழி கூறுதலும்.

மன்னவன் சொல்லுகிறான்:—பகவான் தன்ஸங்கல்பத்தினால் எந்தெந்த அவதாரங்களால் எந்தெந்த கார்யங்களைச் செய்தானோ, செய்கிறானோ, செய்யப்போகிறானோ, அந்தந்த அவதாரங்களையும் அந்தந்த அவதார சேஷ்டிதங்களையும் எமக்குச் சொல்வீர்களாக.

த்ரமிலன் சொல்லுகிறான்:—அளவிடமுடியாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடைய பகவானுடைய குணங்களை எவன் கணக்கெண்ண விரும்புகிறானோ, அவன் பாலபுத்தியுடையவனேயாவான். ஏனென்றால், நெடுங்காலமாக மிகவும் ப்ரயத்னப்பட்டுப் பூமியிலுள்ள தூள்களை எண்ணினாலும் எண்ணக்கூடும். பலவகைப்பட்ட விசித்ர சக்திகள் அமைந்த பகவானுடைய குணங்களையோ வென்றால், ஒருகாலும் எண்ண முடியாது. ஆதிதேவனாகிய நாராயணன் தான் படைத்த ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்களால் ப்ரஹ்மாண்டமாகிற பட்டணத்தைப் படைத்து அதில் தன்னுடைய அம்சத்தினால் ப்ரவேசித்து அப்பொழுது புருஷனென்னும் பெயர் பெற்றான். இதை வைராஜபுருஷாவதாரமென்பர்கள். இதுவே அவதாரங்களுக்குள் முதலவதாரம். இந்த வைராஜ

---

* அதிதி—விருந்தாளி.

புருஷன் மூன்று லோகங்களும் பாதம் முதலிய அவயவங்களாகப்பெற்ற தேஹமுடையவன். இவனுடைய இந்த்ரியங்களால் வ்யஷ்டி ஜீவர்களென்றும் ஸமஷ்டி ஜீவர்களென்றும் வழங்கிவருகிற இருவகைப்பட்ட ஜீவர்களுடைய இருவகை இந்த்ரியங்களும் உண்டாயின. இவனுடைய ஜ்ஞானம் இந்த்ரியங்களின் மூலமாய் அறிய வேண்டிய நிர்ப்பந்தமின்றி எல்லாவற்றையும் ஸ்வயமாகவே ஸாக்ஷாத்கரிக்குந்திறமையுடையது. இவனுடைய ஶ்வாஸவாயுவினிடத்தினின்றே ப்ராணிகளின் பலமென்கிற தாரண ஸாமர்த்யமும் ஓஜஸ்ஸென்கிற ப்ரவ்ருத்தி ஸாமர்த்யமும் ஈஹையென்கிற சேஷ்டையும் உண்டாகின்றன. அத்தகையனான இவ்வைராஜபுருஷனே ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸென்கிற ப்ரக்ருதியின் குணங்களால் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு ஆதிகர்த்தாவாயிருக்கின்றான் (உபாதான காரணமும் நிமித்தகாரணமுமாயிருக்கின்றான்). பகவான் ஜகத்தைப் படைக்கும்பொருட்டு முதலில் ரஜோகுணத்துடன்கூடி ப்ரஹ்மதேவனாயிருந்தான் (ரஜோகுணம் தலையெடுத்த ப்ரஹ்மதேவனென்னும் ஜீவனிடத்தில் அனுப்ரவேசித்து அவனைச் சரீரமாகக் கொண்டு அவனேயென்னும்படி அமைந்திருந்தான்.) ஜகத்தின் ஸம்ஹாரத்திற்காகத் தமோகுணத்துடன் கூடி ருத்ரனாயிருந்தான். (ஸம்ஹாரகாலத்தில் ரஜோகுணம் தலையெடுத்த ருத்ரனென்னும் ஜீவனிடத்தில் அனுப்ரவேசித்து அவனைச் சரீரமாகக் கொண்டு அவனே யென்னும்படி அமைந்திருந்தான்.) ஜகத்தைப் பாதுகாக்கும்பொருட்டு ஸத்வகுணத்துடன்கூடித் தானே விஷ்ணுவாய் அவதரித்தான். அப்பரமபுருஷன் யஜ்ஞங்களுக்கு நிர்வாஹகன். அவ்விஷ்ணு ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்

யர்களென்கிற மூன்று வர்ணத்தவர்களின தர்மங்களுக்கு அணைபோன்றிருந்தான். இங்ஙனம் அவன் ஜகத்திற்கு உபாதானகாரணமாயிருக்கிறான்; அத்தகைய பரமபுருஷனிடத்தினின்று ப்ரஜைகளின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் உண்டாகின்றன. மற்றும் அப்பரமபுருஷன் தர்மனுடைய பார்யையும் தக்ஷருடைய புதல்வியுமாகிய மூர்த்தியென்பவளிடத்தில் நரனென்றும் நாராயணனென்றும் இரண்டு உருவங்களுடன் அவதரித்து ஸம்ஸாரபந்தத்திற்கு ஹேதுவான ஸமஸ்த கர்மங்களின் நிவ்ருத்தியை விளைவிப்பதாகிய ஜ்ஞானயோகத்தை நாரதாதிகளுக்கு உபதேசித்தான்; நரநாராயணரூபியான அப்பரமபுருஷன் இப்பொழுதும் நாரதர் முதலிய ரிஷிஸ்ரேஷ்டர்களால் பணியப்பட்ட பாதாரவிந்தங்களுடையவனாகிப் பதரிகாஸ்ரமத்தில் இருக்கின்றான். இந்த்ரன் பதரிகாஸ்ரமத்தில் தவஞ்செய்கின்ற நாராயணனைக் கண்டு 'இவன் தவத்தினால் என் ஸ்தானத்தைப் பெற விரும்புகிறான்' என்று பயந்து அவனுடைய தவத்தை அழிக்கும்பொருட்டு மன்மதனை அவனுடைய பரிவாரங்களுடன் அனுப்பினான். அம்மன்மதன் அப்ஸரஸ்த்ரீகளின் கூட்டங்களோடும் வஸந்தருதுவோடும் மந்தமாருதத்தோடும் (பசுந்தென்னலோடும்) பதரியென்று ப்ரஸித்தமான அப்பகவானுடைய ஆஸ்ரமத்திற்குச் சென்று அவனுடைய மஹிமையை அறியாதவனாகையால் ஸ்த்ரீகளின் கடைக்கண்ணோக்கங்களாகிற பாணங்களால் அவனை அடித்தான். ஆதிதேவனாகிய நாராயணன் இந்த்ரன் செய்த அவ்வக்ரமத்தை அறிந்து ஜிதேந்த்ரியனென்னும் கர்வமின்றிச் சிரித்து நடுங்குகின்ற அம்மன்மதன் முதலியவர்களைக் குறித்து ' ஓ மன்மத! ஓ மந்தமாருத!

ஓ அப்ஸரமடந்தையர்களே! நீங்கள் பயப்படவேண்டாம். நான் செய்யும் அதிதிஸத்காரத்தைப் பெற்றுக் கொள்வீர்களாக. இந்த என்னாச்ரமத்தைச் சூன்யமாகாதபடி செய்வீர்களாக. (அதிதிகளில்லாத ஆச்ரமம் சூன்யமேயல்லவா?)' என்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! அபயங் கொடுப்பவனாகிய ஸ்ரீமந்நாராயணன் இங்ஙனம் மொழிகையில் மன்மதன் முதலிய தேவதைகள் வெட்கத்தினால் தலை வணக்கமுற்று மன இரக்கத்துடன் மேல்வருமாறு மொழிந்தார்கள்.

காமாதிகள் சொல்லுகிறார்கள்:—நாங்கள் அபராதஞ் செய்திருப்பினும் நீ எங்களிடத்தில் இங்ஙனம் அனுக்ரஹம் செய்வதென்னும் இது ஆச்சர்யமன்று. ஏனென்றால், நீ காமம் க்ரோதம் முதலிய விகாரங்களற்றவன்; ஹேயங்களுக்கிடமான ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன்; ஆத்ம ஸாக்ஷாத்காரஞ் செய்து அவ்வாத்மானுபவத்தினால் ஸந்தோஷமுற்ற ஜிதேந்த்ரியர்கள் வந்து பணியப்பெற்ற பாதாரவிந்தங்களுடையவன். (உன் பக்தர்களுக்கே காமாதி விகாரங்கள் உண்டாகிறதில்லையென்றால், உனக்கு அவை எங்ஙனம் உண்டாம்?) உன்னைப் பணிந்து அதனால் ஸ்வர்க்காதிலோகங்களைக் கடந்து பரமபதத்தை அடைபவர்களாகிய உன் பக்தர்களுக்கு இந்த்ராதி தேவதைகளால் பற்பல விக்னங்களும் உண்டாவது வழக்கமே. (ஏனென்றால் 'இவர்கள் நம்மைக் கடந்து நமக்கும் கிடைக்க அரிதான பரமபதத்திற்குப் போகிறார்கள்' என்னும் பொறாமையினால் இந்த்ராதிதேவதைகள் உன் பக்தர்களுக்கு விக்னங்களைச் செய்கின்றார்கள்.) உன்னைப் பணியாத மற்றவனோவென்றால், பயிரிடுங் குடிகள்

அரசனுக்குக் கப்பங்கொடுப்பதுபோல யஜ்ஞத்தில் இந்த்ராதி தேவதைகளுக்குப் புரோடாசம் முதலிய அவரவர் ஹவிர்ப்பாகங்களைக் கொடுக்கிறானகையால் அவனுக்கு அவர்களால் விக்னங்கள் எவையும் நேரிடு கிறதில்லை. ஆனால் உன் பக்தனுக்கு விக்னங்கள் நேரிடி னும் நீ அவனுக்கு ரக்ஷகனாயிருக்கின்றனையாகையால் அவன் அந்த விக்னங்களின்தலைமேல் அடிவைத்து நடக்கிறான். இப்படியானபின்பு உனக்கு விக்னங்களென் கிற சங்கைக்கும் இடம் உண்டோ? சிலர் பசி தாஹங் களையும் குளிர் வெய்யில் மழை காற்று ப்ராணன் நாக் கின் போகங்கள் சிஶ்னத்தின் போகங்கள் இவைகளை யும் தவத்திற்கு விக்னம் செய்கையால் கரையற்ற கடல் போல் கடக்கமுடியாத எங்களையும் கடந்தும் கடைசி யில் பயனற்ற கோபத்திற்கு உட்பட்டுக் குளப்படியில் முழுகுகிறார்கள்; வருந்தியும் அனுஷ்டிக்க முடியாத தவத்தையும் சாபாதிகளால் அழித்துக்கொள்கிறார் கள். (உன்னிடத்தில் பக்தி இல்லாமல் வெறுமனே தவஞ் செய்கிறவர்களுக்கு இரண்டு வழிகள் ஏற்பட்டிருக்கின் றன. அவர்கள் எங்களுக்காவது கோபத்திற்காவது உட்படுகிறார்கள். அதில் எங்களுக்கு உட்படுகிறவர்கள் காமபோகங்களையாயினும் அனுபவிக்கிறார்கள். கோ பத்திற்கு உட்படுகிறவர்களோவென்றால், மிகவும் மந்த புத்தியர்களே. ஏனென்றால் அவர்கள் போகமோக்ஷங் களிரண்டுமின்றி வீணாகக் கோபத்திற்குட்பட்டுச் சா பங்கொடுப்பது முதலியன செய்து அருந்தவத்தை யெல்லாம் அழித்துக்கொள்கிறார்கள்.)

த்ரமிலன் சொல்லுகிறான்:—அந்தக் காமன் முத லியவர் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் அவர் களுடைய லாவண்யாதி கர்வத்தை அழிக்கவிரும்பித்

திறமைகள் அமைந்த பகவான் மிகவும் அற்புதமான காட்சியுடையவர்களும் நன்கு அலங்கரித்துக்கொண்டு தனக்குச் சுஶ்ரூஷை செய்பவர்களுமாகிய சில மடந்தையர்மணிகளை அவர்களுக்குக் காண்பித்தான். தேவதைகளின் பணிக்காரர்களான அந்தக் காமாதிகள் அழகிய உருவங்கொண்ட ஸ்ரீமஹாலக்ஷ்மிகள்போன்ற அம்மடந்தையர்மணிகளைக் கண்டு அவர்களுடைய ரூபஸௌஷ்டவத்தினால் தங்கள் ஒளி மழுங்கப்பெற்று அவர்களுடைய மேனியின் மணத்தை மோந்து மதிமயங்கினார்கள். தேவர்களுக்குத் தேவனான ப்ரஹ்மதேவனுக்கும் சியாமகனான அந்த நாராயணன் மன்மதன் முதலியவர்களைக் கண்டு 'இம்மடந்தையர்களுக்குள் உங்களோடொத்த உருவமுடைய ஒருத்தியை அழைத்துக்கொண்டு போவீர்களாக. 'எல்லாரும் எங்களுக்கு மேற்பட்டவர்களேயொழிய எங்களோடொத்தவள் ஒருத்தியும் இல்லையே' என்கிறீர்களா? ஆயினும் ஒருத்தியை அழைத்துக்கொண்டு போவீர்களாயின், அவள் உங்கள்ஸ்வர்க்கத்திற்கெல்லாம் அலங்காரமாயிருப்பாள்' என்றான். அந்தத் தேவப்ருத்யர்கள் அப்படியேயென்று பகவானுடைய ஆஜ்ஞையை அங்கீகரித்து அவனை நமஸ்கரித்து அப்ஸரமடந்தையர்களில் சிறந்த ஊர்வசியென்றும் ப்ரஸித்திபெற்ற ஒருமடந்தையர்மணியை அழைத்து அவளை முன்னிட்டுக்கொண்டு தேவலோகம் போய்ச்சேர்ந்து தேவஸபையில் இந்திரனுக்கு நமஸ்காரஞ்செய்து தேவர்கள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கையில் நாராயணனுடைய பலத்தை மொழிந்தார்கள். இந்திரன் அதைக் கேட்டு வியப்புற்றுப் பயந்தான். தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாது காக்குந்தன்மையனும் எங்கும் நிறைந்த

வனுமாகிய அப்பகவான் ஹம்ஸரூபியாகவும் தத்தாத்ரேயராகவும் ஸனகாதிமஹர்ஷிகளாகவும் எங்கள் தந்தையும் மஹானுபாவனுமாகிய ரிஷபனாகவும் ஜகத்தின் க்ஷேமத்திற்காகத் தன் அம்சத்தினால் அவதரித்து ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிவிக்கவல்ல ஜ்ஞானயோகத்தை உபதேசித்தான். அவ்விஷ்ணுவே ஹயக்ரீவனாய் அவதரித்து வேதங்களைப் பறித்துக் கொண்டுபோன மதுவென்னும் அஸுரனைக் கொன்று அவ்வேதங்களை மீட்டுக்கொண்டு வந்தான். மற்றும், இப்பரமபுருஷன் மத்ஸ்யாவதாரஞ் செய்து ஸத்யவ்ரதனென்னும் மனுவையும் பூமியையும் ஓஷதிகளையும் ரிஷிகளையும் ரக்ஷித்தான். வராஹாவதாரஞ் செய்து ப்ரளய ஜலத்தினின்று பூமியை மேலுக்குக் கொண்டு வருகின்ற இம்மஹாவிஷ்ணு ஹிரண்யாக்ஷனை முடித்தான். மற்றும், இவன் கூர்மாவதாரஞ்செய்து அமிருதம் கடைவதற்காக மந்தரபர்வதத்தைத் தன் முதுகில் தரித்தான். மற்றும். இவன் முதலையிடம் அகப்பட்டு வருந்தித் தன்னைச் சரணம் அடைந்த கஜேந்திரனை அம்முதலையிடத்தினின்று விடுவித்தான். வாலகில்யரென்னும் ரிஷிகள் கஶ்யபற்காக ஸமித்துக் கொண்டு வரும்பொழுது மிகவும் அற்பசரீரர்களும் தவத்தினால் இளைத்தவர்களுமாயிருக்கையால் குளப்படியைக் கடந்து வரமுடியாமல் அதில் மூழ்கி இந்திரனால் பரிஹாஸஞ் செய்யப்பெற்றுத் தன்னைத் துதிக்கையில் இப்பரமபுருஷன் அவர்களை அவ்வாபத்தினின்று விடுவித்தான். ப்ரஹ்மஹத்யையில் அகப்பட்டுக்கொண்ட அவிந்திரனையும் அதினின்று விடுவித்தான். மற்றும், ஹிரண்யகசிபுவின் க்ருஹத்தில் அடைப்புண்டு அநாதைகளாயிருந்த தேவஸ்த்ரீகளை அவ்வாபத்தினின்று விடு

வித்தான். மற்றும், இவன் நரஸிங்கமாய் அவதரித்து ஸாதுக்களுக்கு அபயங்கொடுக்க முயன்று அஸுரஸ்ரேஷ்டனாகிய ஹிரண்யகசிபுவைக் கொன்றான். மற்றும், இப்பரமபுருஷன் தேவாஸுரயுத்தத்தில் இந்த்ராதிதேவதைகளுக்கு உபகாரஞ் செய்யமுயன்று அஸுரஸ்ரேஷ்டர்களை வதித்தான். மற்றும், மன்வந்தரங்களனைத்திலும் தன்னுடைய அவதாரங்களால் உலகங்களைப் பாதுகாத்தான். வாமனனாய் அவதரித்து யாசிக்கிற வியாஜத்தினால் பலிசக்ரவர்த்தியிடத்தினின்று பூமியைப் பறித்து அதிதியின் பிள்ளைகளான இந்திரன் முதலிய தேவதைகளுக்குக் கொடுத்தான். ஹைஹயர்களின் குலத்திற்குத் தூமகேதுவாகிய பரசுராமனாய் அவதரித்து இருபத்தொருதடவைகள் க்ஷத்ரியர்களை வதித்துப் பூமியில் க்ஷத்ரியப்பூண்டே இல்லாதபடி செய்தான். மற்றும், அவ்விஷ்ணு ஸீதாபதியாகிய ஸ்ரீராமனாய் அவதரித்து உலகங்களின் பாபங்களைப் போக்கவல்ல புகழ்களுடையவனாகி ஸமுத்ரத்தில் ஸேதுவைக் கட்டி இராவணனையும் இலங்கையிலுள்ள மற்ற அரக்கர்களையும் வதித்து இப்பொழுது விளக்கமுற்றிருக்கின்றான். கர்மத்தினால் விளையும் பிறவியற்ற இம்மஹாபுருஷன் பூமியின் பாரத்தை நீக்கும்பொருட்டு யதுவம்சத்தில் அவதரித்துத் தேவதைகளாலும் செய்யமுடியாத செயல்களை நடத்தப்போகிறான். மற்றும், இவன் புத்தாவதாரஞ் செய்து யஜ்ஞஞ் செய்யத்தகாதவர்களாயிருந்தும் தங்கள் நிலைமையைக் கடந்து யஜ்ஞஞ் செய்கின்ற தைத்யர்களை வேதசாஸ்த்ரத்திற்கிணங்காத வீண்வாதங்களால் மதிமயங்கும்படி செய்யப்போகிறான். மற்றும், கலியுகத்தின் கடைசியில் (கல்கியவதாரஞ் செய்து) பூமியைக் கைப்பற்றியாள்கின்ற சூத்ரர்களை

வதிக்கப்போகிறான். நீண்ட புஜதண்டங்களையுடையவனே! ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவான பரமபுருஷனுடைய செயல்களையும் அவதாரங்களையும் உனக்கு நிரூபித்துச் சொன்னேன். இத்தகைய செயல்களும் அவதாரங்களும் அளவற்றவை. அவற்றிற்கு எல்லையே கிடையாது. நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

பகவானிடத்தில் பக்தியில்லாதவர்களின் கதி எத்தகையதென்றும் யுகங்கள்தோறும் பகவானை எவ்வண்ணம் ஆராதிக்கவேண்டுமென்றும் அரசன் வினவினதற்குச் சமஸன் மறுமொழி கூறுதல்.

மன்னவன் சொல்லுகிறான்:—ஆத்மவித்தமர்களே! (ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தவர்களில் சிறந்தவர்களே!) இவ்வுலகத்தில் ப்ராணிகள் தன்னைப்பற்றினவர்களின் ஸம்ஸாரபந்தத்தைப் போக்கவல்ல மஹானுபாவனாகிய பகவானைப் பெரும்பாலும் பணிகிறதில்லை. இந்த்ரியங்களை வெல்லமுடியாமையால் விருப்பங்கள் ஓயப்பெறாமல் அவற்றைப் பெறுதற்காகவே அலைகின்றார்கள். அவர்களுடைய நிஷ்டை எத்தகையது? (அவர்களுக்கு எதில் ஆஸக்தி? எது ப்ராப்யம்? அதற்குக் காரணம் என்ன? இதை விவரித்து மொழிவீர்களாக.)

சமஸன் சொல்லுகிறான்:—நான்முகனைச் சரீரமாகவுடைய பகவானுடைய முகம் புஜம் துடை பாதம் இவற்றினின்று ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் வைஸ்யர் சூத்ரர் என்கிற நான்கு வர்ணத்தவர்களும் ஸத்வாதி குணங்களோடுகூடி ப்ரஹ்மசர்யாதி ஆஸ்ரமங்களுடன் தனித்தனியே உண்டானார்கள். நான்குவர்ணங்களாகவும்

நான்கு ஆஶ்ரமங்களாகவும் பிரிந்திருக்கிற இந்த ப்ராணிகளுக்குள் தங்களுக்கு ஸாக்ஷாத்காரணனும் ஸர்வநியாமகனுமாகிய பரமபுருஷனை எவர்கள் பணிகிறதில்லையோ, மற்றும் அவமதிக்கிறார்களோ, (தேவதாந்தரங்களோடு ஸமமாக நினைக்கிறார்களோ), அவர்கள் வர்ணாஶ்ரமங்களினின்று நழுவி நரகத்தில் விழுகிறார்கள். (பரமேஶ்வரன் தன்னைப் பணிந்து உஜ்ஜீவிக்கும்படி ஆத்மாக்களுக்குக் கரணகளேபரங்களை அளிக்க, அவற்றைக்கொண்டு அவனைப் பணியாமல் அவனை அவமதிக்கிறவர்கள் க்ருதக்னர்களேயல்லவா? பரமபுருஷன் தங்களுக்குக் காரணனென்றும் அவன் ஸர்வநியாமகனென்றும் ஸர்வஸ்மாத்பரனென்றும் அறிவு நேரப்பெற்றும் அவனைப் பணியாதவர்கள் க்ருதக்னர்களேயாகையால் அவர்கள் நரகத்தில் விழுகிறார்களென்பது ஸத்யமே. அத்தகைய அறிவில்லாத கேவல மூடர்களின் கதி என்னென்றால், சொல்லுகிறேன்). பகவானுடைய கதைகளைக் கேட்பதும் அவனுடைய குணங்களைக் கீர்த்தனஞ் செய்வதுமாகிய இவற்றிற்கு வெகுதூரத்திலிருக்கிற ஸ்த்ரீகளும் ஶூத்ராதிகளும் உங்களைப்போன்ற பாகவதர்களால் தயை செய்யத் தகுந்தவர்களே. (இவர்களும் பாகவதர்களின் க்ருபைக்கு விஷயமாகி ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடுகிறார்கள்.) ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் வைஶ்யர் என்கிற மூன்று வர்ணத்தவர்களும் வேதாதிகாரமுடையவர்களாகையால் தத்வஜ்ஞானம் பெற்றுப் பகவானுடைய பாதாரவிந்தங்களை அடைவதற்கு உரியவர்களாயிருந்தும் வேதங்களில் சொல்லுகிற அர்த்தவாதங்களில் மனம் சென்று ஸ்வர்க்கம் முதலிய பலன்களை விரும்பி அவற்றிற்காக முயற்சி செய்கிறார்களன்றிப் பகவானுடைய பாதாரவிந்

தங்களைப் பணிகிறதில்லை. ஸம்ஸாரபந்தத்திற்கிடமாகாத கர்மமே கர்மமென்கிற கர்மத்தினுண்மையை அறியாதவர்களும் அதை யறிந்த பெரியோர்களைப் பணிந்து கேட்டுத் தெரிந்துகொள்வதற்குரிய வணக்கமற்றவர்களும் மூர்க்கர்களுமாயிருந்தும் தங்களைப் பெரிய பண்டிதர்களாக நினைத்துக்கொண்டு செவிக்கினியவைகளான அர்த்தவாதவாக்யங்களால் மதி மயங்கி 'அப்ஸரமடந்தையர்களோடு கலந்து விளையாடப்போகிறோம்' என்னும் இவை முதலிய * சாடுவாக்யங்களைப் பிதற்றுகிறார்கள்; ரஜோகுணத்தினால் கோரமான அபிசாராதிஸங்கல்பமுடையவர்களும் ஸ்வர்க்காதி போகங்களில் விருப்பமுற்றவர்களும் ஸர்ப்பம்போல் கோபமுறுந்தன்மையர்களும் தாறுமாறுங்காரிகளுமாகி அச்சுதனுக்கன்பர்களான பெரியோர்களைப் பரிஹஸிக்கின்றார்கள். அத்தகைய மூடர்கள் ஸ்த்ரீகளைப் பணியுந் தன்மையர்களா யிருப்பார்களன்றிப் பெரியோர்களை அடுத்துப் பணியமாட்டார்கள்; ஆணும்பெண்ணுமாய்க் கலந்தனுபவிக்கும் ஸுகத்தையே முக்யமாகவுடைய இல்லறவாழ்க்கையில் இருந்து ஒருவர்க்கொருவர் ஆசீர்வாதங்களைச் செய்கிறார்கள்; லோபத்தினால் அன்னதானம் வஸ்த்ரதானம் இவை செய்யாமலும் தக்ஷிணைகள் கொடாமலும் கேவலம் ஜீவனத்திற்காக யாகஞ் செய்கிறார்கள்; ஜீவனத்திற்காகப் பசுக்களை ஹிம்ஸிக்கிறார்கள்; அது ஹிம்ஸையென்று சிறிதும் ஆராய்ந்தறியமாட்டார்கள். துஷ்டர்கள், பணம் முதலியன அமைந்திருக்கையாகிற ஸம்பத்து க்ராமாதிபத்யம் முதலிய ஐஶ்வர்யம் நற்குலத்தில் பிறத்தல் கல்வி கொடை

---

* சாடுவாக்யம்—இனிய வசனங்கள். பொருளில்லாமற் போயினும் செவிக்கினிமையாயிருக்கை.

அழகிய உருவம் அமைந்திருத்தல் தேஹபலம் ஸ்ரௌதஸ்மார்த்த கர்மானுஷ்டானம் ஆகிய இவைகளால் கர்வமுண்டாகப்பெற்று அதனால் மதிமயங்கி ஈச்வரனையும், அவனுடைய ஸ்வரூப ஸ்வபாவாதிகளை உள்ளபடி அறிந்து அவனிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களும் அவனுக்கன்பர்களுமான பெரியோர்களையும் அவமதிக்கின்றார்கள். இங்ஙனம் இருக்கின்ற அவர்கள் ஸமஸ்த ஆத்மாக்களிடத்திலும் அந்தராத்மாவாய் அமைந்து அவர்களுக்கு நியாமகனாயிருப்பவனும் ஆகாசம்போல் அவர்களுடைய தோஷம் தீண்டப் பெறாமல் பரிசுத்தனும் சிறந்த புருஷார்த்தஸ்வரூபனும் வேதாந்தங்களால் அறியக்கூடிய ஸ்வரூப ஸ்வபாவங்களையுடையவனுமாகிய ஈச்வரனைப் பெரியோர்களிடத்தில் கேட்கிறதில்லை. ஆகையால் அவர்கள் வேதத்தினுடைய தத்வார்த்தத்தை அறிந்தவர்களல்லர். பின்னையோவென்றால், தங்கள் மனோரதங்களைப் பற்றின பேச்சுக்களைப் பேசிக்கொண்டு பொழுது போக்குகிறார்கள். ஏனென்றால், அவர்கள் ஒன்றுமறியாத மூடர்களல்லவா? (ஸந்தானத்திற்காக விவாஹஞ் செய்துகொள்ள வேண்டுமென்றும், ருதுகாலத்தில் மனைவியைப் புணர வேண்டுமென்றும், யாகத்திற்காகப் பசுவை வதிக்க வேண்டுமென்றும், ப்ரதிக்ரஹம் முதலியவற்றால் பணம் ஸம்பாதிக்கவேண்டுமென்றும் சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றனவாகையால் அதன்படி நடக்கிறவர்களை எங்ஙனம் பழிக்கலாமென்றால், சொல்லுகிறேன், கேள்.) உலகத்தில் ஸ்த்ரீகளைப் புணர்தல் மாம்ஸம் புசித்தல் மத்யபானம் செய்தல் ஆகிய இவை ப்ராணிகளுக்கு ராகத்தினால் நித்யமாய் ப்ராப்தங்களாயிருக்கின்றன. ஆகையால் சாஸ்த்ரங்கள் அவற்றைச் செய்யவேண்டு

மென்று விதிக்கிறதில்லை. பின்னையோ வென்றால், நிய மிக்கின்றன. (ஸ்த்ரீகளை நினைத்தபடி புணரலாகாது. விதிப்படி மணம்புரிந்து அவளையே புணரவேண்டும். அதிலும் ருதுகாலம் தவிர மற்றகாலங்களில் புணரலா காது. யாகந்தவிர மற்ற காலங்களில் மாம்ஸத்தைப் புசிக்கலாகாது; மத்யபானமும் செய்யலாகாது. என்று நியமிக்கின்றன). ஸ்த்ரீ ஸம்போகம் மாம்ஸபோஜனம் மத்யாபானம் ஆகிய இவற்றினின்று மீண்டிருக்கையே சாஸ்த்ரத்திற்கு ப்ரியமாயிருக்கும். (ஆனால் மனைவி யைப் புணர்தல் யாகத்தில் மாம்ஸத்தைப் புசித்தல் மத் யபானஞ் செய்தல் ஆகிய இவற்றை நிந்திக்கலாமோ வென்றால், அவற்றின் உபயோகத்தை அறியாமல் கேவ லம் தேஹ ஸுகத்திற்காகவே உபயோகப்படுத்துவார் களாயின் அவை நிந்திக்கத் தக்கவைகளேயாம்). தனத் திற்குத் தர்மானுஷ்டானமே பலன். (ப்ரதிக்ரஹம் முதலியவற்றால் ஸம்பாதித்த பணத்தைக் கொண்டு பக வானுடைய ஆராதனரூபமான தர்மங்களை அனுஷ் டிக்கவேண்டுமன்றி அதை வேறுவிதமாக உபயோகப் படுத்தலாகாது.) தர்மானுஷ்டானத்தினால் சேதனு சேதனங்களின் உண்மையைப் பற்றின அறிவும் பகவா னுடைய உண்மையைப் பற்றின அறிவும் உண்டாகும். அந்த ஜ்ஞானத்தினால் பசி தாஹம் முதலிய ஊர்மிகள் தீண்டப் பெருமையாகிய சாந்தியும் உண்டாகும். சிலர் இங்ஙனம் ஜ்ஞானத்திற்கிடமான தர்மானுஷ்டானத் தையே ப்ரயோஜனமாகவுடைய தனத்தின் உபயோ கத்தை அறியாமல் விஷயபோகத்திற்காக உபயோகப் படுத்துகிறார்கள். அவர்கள் தேஹத்திற்கு எவ்விதத் திலும் தடுக்க முடியாத வீர்யமுடைய ம்ருத்யு நேரு வதை அறிகிறதில்லை. (ஆகையால் அவர்கள் நிந்திக்

கத் தக்கவர்களே.) யஜ்ஞத்தில் மத்யபானமும் பசு மாம்ஸபக்ஷணமும் ப்ராணனைச் சரீரமாகவுடைய பரமாத்மாவுக்குப் பக்ஷணமாக விதிக்கப்பட்டவை. இங்ஙனமே ஸ்த்ரீகளைப் புணர்வதும் ஸந்ததிக்காகவேயன்றிக் கேவலஸம்போகத்திற்காக வன்று. இந்த அபிஸந்தியோடு நடத்துவார்களாயின் மத்யபானம் மாம்ஸபக்ஷணம் ஸ்த்ரீஸம்போகம் ஆகிய இவை நிந்தைக்கிடமாகமாட்டா; பரிசுத்தங்களேயாம். இப்படியாயின் பசுவை வதிப்பது ஹிம்ஸையாகாது; பின்னையோவென்றால், பசுசரீரம் பெற்ற ஜீவாத்மாவின் உஜ்ஜீவனத்தின் பொருட்டேயாம். இங்ஙனம் பரிசுத்தமான தங்கள் வர்ணாச்ரம தர்மங்களின் மர்மத்தை மூடர்கள் அறியாமல் போகத்திற்காகவே பசுஹிம்ஸாதிகளை நடத்துகிறார்கள். இங்ஙனம் ஏற்பட்டிருக்கிற தர்மஸூக்ஷ்மத்தை அறியாத அஸத்துக்கள் வணக்கமின்றித் தங்களைத் தாங்களே ஸத்துக்களாக அபிமானித்துக்கொண்டு 'நமக்கு என்ன வருமோ' என்கிற சங்கையில்லாமை மாத்ரமன்றியே 'நமக்கு ஒரு கெடுதியும் இல்லை' என்று பெரிய நம்பிக்கையுமுடையவர்களாகிப் பசுக்களுக்கு த்ரோஹஞ் செய்கிறார்கள். அந்தப் பசுக்கள் பரலோகஞ் சென்று தங்களுக்கு த்ரோஹஞ் செய்த அப்புருஷர்கள் அவ்விடம் வர, அவர்களைப் பக்ஷிக்கின்றன. மற்றும், அம்மூடர்கள் பிறருடைய தேஹங்களில் த்வேஷங்கொண்டு அபிசாரம் முதலிய கொடிய செயல்களைச் செய்கிறார்கள். அந்த த்வேஷம் தங்களுக்கும் பிறர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் நியாமகனும் துக்கங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பரம புருஷனிடத்திலேயே போய் முடிகிறதாகையால், அவர்கள் அவனையே த்வேஷித்தவராவார்கள். மற்

றும், அவர்கள் பிள்ளை பெண்டிர் முதலிய அனுபந்தங்களோடு கூடியதும் பிணம்போன்றதுமாகிய தேஹத்தில் ஸ்னேஹம் வேரூன்றப் பெற்றுக் கடைசியில் நரகத்தில் விழுகிறார்கள். இவர்கள் ஜ்ஞானநிஷ்டையையும் அடைந்தவர்களல்லர்; கேவல மூடத்தனத்திலும் சேர்ந்தவர்களல்லர்; தர்ம அர்த்த காமங்களையே ப்ரதானமாகக் கொண்டவர்கள்; ஒரு க்ஷணமாயினும் வ்யாபாரமில்லாமல் ஓய்ந்திருக்குந் தன்மையரல்லர்; தேஹாதிகளை நிலைநின்றிருப்பவைகளென்று நினைத்து அவற்றின் க்ஷேமத்திற்காகவே ஓயாமல் கார்யஞ் செய்து கொண்டிருப்பார்கள். ஒன்றுந்தெரியாத மூடர்கள் தத்வஜ்ஞர்களுடைய அனுக்ரஹத்தினாலும் உபதேசாதிகளாலும் கரையேறுவார்கள். ஜ்ஞான நிஷ்டர்களோவென்றால் தாங்களே கரையேறுகிறார்கள். இரண்டிலுஞ் சேராத இம்மூடர்களோ வென்றால், தாங்களாகவும் கரையேற வழியில்லை; பிறரை யடுத்தும் கரையேற மாட்டார்கள். பின்னையோ வென்றால், தங்களை ஒன்றுக்கும் வழங்காதபடி பாழாக்கி விடுவார்கள். (கடைசியில் ஸ்தாவர ஜன்மத்தையே பெறுவார்கள்). ஆத்மகாதகர்களான இம்மூடர்கள் பசி தாஹம் முதலியவைகளால் பீடிக்கப்பட்டுத் தாங்கள் அஜ்ஞானிகளாயிருந்தும் தங்களை ஜ்ஞானிகளாகப் பாவித்துக்கொண்டு சிலகாலம் செல்லுகையில் தங்கள் மனோரதங்களெல்லாம் பாழாகப் பெற்றுச் செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யாமல் ஜீவதசையிலேயே வருத்தப் படுவார்கள். மற்றும், அவர்கள் தாங்கள் மிகவும் ப்ரயாஸப்பட்டு ஸம்பாதித்த வீடு வாசல் பிள்ளை நண்பர் பெண்டிர் முதலியபரிக்ரஹங்களை யெல்லாம் துறந்து வாஸுதேவ பராங்முகர்களாகையால் (ஸர்வாந்தராத்மாவான பரம

புருஷனிடத்தில் மனஞ்சொல்லப் பெறுதவராகையால்) நரகத்திற்குப் போகவேண்டுமென்னும் விருப்பமற்றவராயினும் நரகத்தை அடைகின்றார்கள். வாஸுதேவ பக்தர்களோவென்றால், அங்ஙனம் நரகத்தை அடையமாட்டார்கள்; அவ்வாஸுதேவனுடைய வாஸஸ்தானமான பரமபதத்தையே அடைவார்கள். அவர்கள் என்றும் மீண்டு ஸம்ஸாரத்தை அடையமாட்டார்கள்.

மன்னவன் சொல்லுகிறான்:—அப்பகவான் எக்காலத்தில் எந்த நிறமுடையவனு யிருப்பான்? எத்தகைய ஆகாரமுடையவனு யிருப்பான்? எந்த நாமத்தைச் சொல்லி எந்த விதியின்படி அவனைப் பூஜிக்க வேண்டும்? இதையெல்லாம் எங்களுக்குச் சொல்வீர்களாக.

கரபாஜனன் சொல்லுகிறான்:—அப்பகவான் க்ருதயுகம் த்ரேதாயுகம் த்வாபரயுகம் கலியுகம் என்கிற நான்கு யுகங்களிலும் பலவகை நிறங்களும் பலவகை நாமங்களும் பலவகை ஆகாரங்களுமுடையவனுகிப் பலவகைகளால் பூஜிக்கப்படுவான். க்ருதயுகத்தில் வெளுப்புநிறமும் நான்கு புஜங்களும் உடையவனுகி ஜடைகள் தரித்து க்ருஷ்ணாஜினத்தினுல் யஜ்ஞோபவீதம் அணிந்து அக்ஷமாலை தண்டம் கமண்டலு இவைகளை ஏந்திக்கொண்டு ப்ரஹ்மசாரிவேஷத்துடன் விளங்குவான். அந்த க்ருதயுகத்தில் பகவானை ஆராதிக்கிற மனுஷ்யர்கள் சாந்தர்களாயிருப்பார்கள். அவர்களுக்கு எவரிடத்திலும் வைரம் உண்டாகாது. அவர்கள் ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பர்களாயிருப்பார்கள்; எல்லாவற்றையும் ஸமமாகப் பார்ப்பார்கள்; வெளியிந்த்ரியங்களையும் உள்ளிந்த்ரியமான மனத்தையும் அடக்

கிக்கொண்டு த்யானயோகத்தினால் பகவானை ஆராதிப்பார்கள். பரிசுத்தனாகையால் ஹம்ஸனென்றும், அழகிய நிறமுடையவனாகையால் ஸுவர்ணனென்றும், தர்ம நிர்வாஹகனாகையால் தர்மனென்றும், யோகநிர்வாஹகனாகையால் யோகேச்வரனென்றும், ஹேய குணங்கள் தீண்டப் பெறாதவனாகையால் அமலனென்றும், ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறிய முடியாதவனாகையால் அவ்யக்தனென்றும், மூன்று லோகங்களிலும் உள்ளே புகுந்து நியமித்துத் தரித்துக்கொண்டிருப்பவனாகையால் பரமாத்மாவென்றும், அப்பொழுது பகவானைப் பாடுவார்கள். இப்பகவான் த்ரேதாயுகத்தில் சிவப்பு நிறமும் நான்கு புஜங்களும் உடையவனாகி முப்புரி மேகலை அணிந்து பொன்னிறமுள்ள கேசங்கள் அமைந்து மூன்று வேதங்களைச் சரீரமாகவுடையவனும் வேதங்களால் நிரூபிக்கப்படுகிற யஜ்ஞங்களுக்கு நிர்வாஹகனும் அந்த யஜ்ஞங்களை மூர்த்தியாகவுடையவனும் ஸ்ருக்கு ஸ்ருவம் முதலியவற்றை அடையாளங்களாகவுடையவனுமாயிருப்பான். தார்மிஷ்டர்களும் ப்ரஹ்மவாதிகளுமான அப்பொழுதுள்ள ஜனங்கள் ஸமஸ்த தேவதைகளையும் சரீரமாகவுடையவனாகையால் ஸமஸ்த தேவதா ஸ்வரூபனும் தன்னைப்பற்றினவர்களின் வருத்தங்களைப் போக்குந்தன்மையனுமாகிய அப்பகவானை வேதங்களில் சொல்லப்பட்ட கர்மத்தினால் ஆராதிப்பார்கள். எங்கும் நிறைந்திருப்பவனாகையால் விஷ்ணுவென்றும், யஜ்ஞங்களுக்கு நிர்வாஹகனாகையால் யஜ்ஞனென்றும், ப்ருச்னியின் புதல்வனாக அவதரிக்கையால் ப்ருச்னிகர்ப்பனென்றும், ஸமஸ்த தேவதாஸ்வரூபனாகையால் ஸர்வதேவனென்றும், மூன்றடிகளில் உலகங்களையெல்லாம் அளக்கவல்ல பெரிய அடிகளையுடையவனாகையால்

உருக்ரமனென்றும், விருப்பங்களைப் பெய்கின்றவனும் வருத்தங்களைப் போக்குகின்றவனுமாகையால் வ்ருஷாகபியென்றும், எப்பொழுதும் எல்லாரிலும் மேன்மையுற்று விளங்குந் தன்மையனாகையால் ஜயந்தனென்றும், பெரும்புகழுடையவனாகையாலும் பலவாறு பாடப்படுகின்றவனாகையாலும் உருகாயனென்றும் அப்பொழுது பகவானைத் துதிப்பார்கள். த்வாபரயுகத்தில் பகவான் பீதாம்பரம் உடுத்துத் தனக்கு அஸாதாரணமான ஸுதர்சன சக்ரம் முதலிய ஆயுதங்களைத் தரித்து ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவு முதலிய அடையாளங்களோடும் கௌஸ்துபம் முதலிய மற்றும் பல அடையாளங்களோடுங்கூடி விளக்கமுற்றிருப்பான். மன்னவனே! அப்பொழுதுள்ளவர்கள் சித்து அசித்து ஈச்வரன் என்னும் மூன்று தத்வங்களின் உண்மையை அறிய விரும்பிக் குடை சாமரம் முதலிய மஹாராஜலக்ஷணங்கள் அமைந்த அப்பரமபுருஷனை வேதத்திலும் பாஞ்சராத்ரத்திலும் சொல்லப்பட்ட விதியின்படி ஆராதிப்பார்கள். அந்த த்வாபரயுகத்தில் ஜனங்கள் 'எங்கும் நிறைந்திருப்பவனும் எல்லாவற்றையும் தன்னிடத்தில் ஏற்றுக்கொண்டிருப்பவனும் அவற்றின் விகாரங்கள் எவையும் தீண்டப்பெறாமல் விளங்குந் தன்மையனுமாகையால் வாஸுதேவனென்றும் பெயர் பூண்ட உனக்கு நமஸ்காரம். ஸம்ஸாரத்தினின்று ஆத்மாக்களை இழுத்துக் கரையேற்றுகையால் ஸங்கர்ஷணனென்றும்பெயர் பூண்ட உனக்கு நமஸ்காரம். ப்ரத்யும்னனென்றும் அநிருத்தனென்றும் அவதாரங்கள் செய்த மஹானுபாவனும் ஷாட்குண்யபூர்ணனாகையால் பகவானென்னும் பெயர்பெற்றவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஸமஸ்த வஸ்துக்களுக்கும் தான் ஆதாரமாயிருப்பவனும் ஸம

ஸ்த வஸ்துக்களையும் தனக்கு ஆதாரமாகக் கொண்ட வனுமாகையால் நாராயணனென்னும் நாமமுடைய உனக்கு நமஸ்காரம். இந்த்ரியங்களுக்கு எட்டாத விஷயங்களை அறியுந்தன்மையனாகையால் ரிஷியென்றும், தன்னைப்பற்றினவர்களுக்கு அமிதமாகக் கொடுப்பவனாகையால் புருஷனென்றும், தன்னைப்பற்றினவர்களோடு புரையறக் கலந்து அவர்களை நித்யஸூரிகளுக்கும் பிராட்டிக்கும் மேலாக நினைத்துப் பரிமாறுந்தன்மையனாகையால் மஹாத்மனென்றும், ஸமஸ்த ப்ரபஞ்சங்களுக்கும் நியாமகனாகையால் விஸ்வேஸ்வரனென்றும், அந்த ப்ரபஞ்சங்களையெல்லாம் சரீரமாகக்கொண்டு அவையெல்லாம் தானேயென்னும்படி யிருக்கின்றமையால் விஸ்வனென்றும் ஸமஸ்தபூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருக்கையால் ஸர்வபூதாத்மனென்றும் கூறப்படுகிற உனக்கு நமஸ்காரம். மன்னவனே! இங்ஙனம், வாஸுதேவன் ஸங்கர்ஷணன் ப்ரத்யும்னன் அநிருத்தன் பகவான் நாராயணன் ரிஷி புருஷன் மஹாத்மன் விஸ்வேஸ்வரன் விஸ்வன் ஸர்வபூதாத்மன் என்னும் நாமங்களைச் சொல்லி த்வாபரயுகத்தில் ஜனங்கள் ஜகதீஸ்வரனை ஆராதிப்பார்கள். கலியுகத்திலும் பலவகைத் தந்த்ரங்களில் சொல்லியவிதியின்படி ஜனங்கள் பகவானை ஆராதிக்கிறார்கள். அதைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. விவேகமுடைய ஜனங்கள் கறுப்புநிறமுடையவனும் இந்த்ர நீலமணிபோல் மிகுந்த ஒளியுடன் திகழ்கின்ற அங்கங்களோடும் உபாங்கங்களோடும் ஸுதர்சனாதி அஸ்த்ரங்களோடும் ஸுநந்த நந்தாதி பரிவாரங்களோடும் கூடி விளக்கமுற்றவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவானை நாமஸங்கீர்த்தனங்கள் நிறைந்த அர்ச்சனரூப யஜ்ஞங்களால் ஆராதிக்கிறார்கள். 'தன்னை வணங்கினவர்

களைப் பாதுகாப்பவனே! மஹாபுருஷனே! எப்பொழுதும் த்யானஞ் செய்யத்தக்கதும் குடும்பம் இந்த்ரியம் இவை முதலியவற்றால் வரும் பரிபவங்களை அடியோடு போக்குவதும் விரும்பின விருப்பங்களைக் கறப்பதும் கங்காதி புண்யதீர்த்தங்களுக்கு இடமாகையால் மிக்க பரிசுத்தமும் ருத்ரன் ப்ரஹ்மதேவன் இவர்களால் துதிக்கப்படுவதும் சரணமடைந்தவர்களைக் காக்க வல்லதும் பக்தர்களின் அனிஷ்டங்களைத் தடுப்பதும் ஸமஸ்த துக்கங்களுக்கும் காரணமான ஸம்ஸார ஸாகரத்தைக் கடப்பதற்கு ஓடம்போன்றதுமாகிய உன்பாதாரவிந்தத்தைப் பணிகின்றேன். தர்மிஷ்டனே! தந்தையாகிய தசரதனுடைய வசனத்தினால் வருந்தியும் துறக்கமுடியாததும் தேவர்களும் விரும்பத் தகுந்ததுமாகிய ராஜ்யலக்ஷ்மியைத் துறந்து அரண்யம் சென்று உனது அன்பு நாயகியாகிய ஜானகி விரும்பின மாயாம்ருகத்தைத் தொடர்ந்தோடினதுமாகிய உன் பாதாரவிந்தத்தைப் பணிகிறேன்' என்று கலியுகத்தில் ஜனங்கள் பரமபுருஷனுடைய பாதாரவிந்தங்களைத் துதிக்கின்றார்கள். இங்ஙனம் அந்தந்த யுகங்களிலுள்ள ஜனங்கள் அந்தந்த யுகங்களுக்குத் தகுந்த நாமரூபங்கள் அமைந்தவனும் நன்மைகளை அளிப்பவனும் அனிஷ்டங்களை அழிப்பவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பகவானை ஆராதிக்கிறார்கள். தோஷங்கள் இருப்பினும் குணங்களையே எடுத்துக்கொள்பவர்களும் ஸாரக்ராஹிகளுமான (ஸாராம்சத்தை க்ரஹிக்குந்தன்மையர்களுமான) பெரியோர்கள் கலியுகத்தைக் கொண்டாடுகிறார்கள். ஏனென்றால், இந்தக் கலியுகத்தில் பரமபுருஷனைக் கீர்த்தனஞ்செய்தமாத்ரத்தினால் ஜனங்கள் அவரவர் விரும்பும் விருப்பங்களையெல்லாம் பெறுகின்றார்கள்.

இந்த ஸம்ஸாரத்தில் பகவானுடைய நாமஸங்கீர்த்தனத்தைக்காட்டிலும் மேலான உபாயம் மற்றொன்றும் இல்லை. ஏனென்றால், இந்த நாமஸங்கீர்த்தனமாத்ரத்தினாலேயே பசி தாஹம் முதலிய விகாரங்கள் தீண்டப்பெறாமையாகிற மோக்ஷத்தைப் பெறுவான். கர்ப்ப ஜன்ம ஜரா மரணாதி ரூபமான ஸம்ஸாரம் அவனுக்கு அவ்வளவில் நசித்துப்போம். அவன் மீளவும் ஸம்ஸாரத்தை அடையமாட்டான். இங்ஙனம் கலியில் மோக்ஷோபாயம் ஸுகரமாயிருக்கையால் க்ருதம் முதலிய மற்ற மூன்று யுகங்களிலுள்ள ஜனங்கள் கலியுகத்தில் பிறக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். விரும்புவதோடு நிற்காமல் நாராயணபராயணர்களாய்ப் பிறக்கவும் பிறக்கப்போகிறார்கள். (கலியுகத்தில் ஸ்ரீமந்நாராயணனையே உபாயமாகவும் உபேயமாகவும் பற்றி அவனிடத்தில் ஸர்வபாரத்தையும் வைத்து நிச்சிந்தர்களான மஹானுபாவர்கள் ஜகதுஜ்ஜீவனத்திற்காகப் பிறக்கப் போகிறார்களாகையாலும் மோக்ஷோபாயம் ஸுகரமாகையாலும் க்ருதாதியுகங்களிலுள்ள ப்ரஜைகளும் கலியுகத்தில் பிறக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள்.) எங்குப் பிறப்பார்களென்றால், சிற்சில இடங்களில் பிறப்பார்கள். பெரும்பாலும் தமிழ் தேசத்தில் பிறப்பார்கள். அதிலும், தாம்ரபர்ணி பயஸ்வினி மிகவும் புண்யமான காவேரி ப்ரதீசி ஸுவர்த்மகை என்னும் இம்மஹாநதிகள் எங்குப் பெருகி வருகின்றனவோ, அவ்விடத்தில் பகவத்பக்தர்கள் விசேஷமாய்ப் பிறப்பார்கள். மன்னவனே! அந்த மஹாநதிகளின் ஜலத்தை எவர்கள் பானஞ் செய்கிறார்களோ, அவர்கள் பெரும்பாலும் ஷாட்குண்யபூர்ணனான வாஸுதேவனிடத்தில் பக்தி உண்டாகப்பெற்று நிர்மலமான

மனமுடையர்களா யிருப்பார்கள். (எந்த யுகத்தில் நாமஸங்கீர்த்தனஞ் செய்தமாத்ரத்தினால் ப்ராணிகளுக்குப் பரமபுருஷன் மீளவும் பிறவாமையாகிற மோக்ஷத்தைக் கொடுப்பானோ, அப்படிப்பட்ட கலியுகத்தில் தமிழ் தேசத்தில் தாம்ரபர்ணி முதலிய மஹாநதிகளின் தீரங்களில் பகவத்பக்தர்கள் பெரும்பாலும் பிறக்கப் போகிறார்கள்) ராஜனே! எவன் ஸர்வதர்மங்களையும் துறந்து சரணம் அடையத்தகுந்த முகுந்தனை எல்லாவிதத்தினாலும் சரணம் அடைகிறானோ, அவன் தேவதைகள் ரிஷிகள் பூதங்கள் நண்பர்கள் மனுஷ்யர்கள் பித்ருக்கள் ஆகிய இவர்கள் விஷயத்தில் கடன் பட்டவனாக மாட்டான்; அவர்களுக்குக் கிங்கரனுமாக மாட்டான். தன்னைப் பற்றினாருடைய பாபங்களைப் போக்குந்தன்மையனும் ஸர்வஸ்மாத்பரனுமாகிய பரமபுருஷன், தேவதாந்தரம் முதலியவற்றில் ப்ராப்யபுத்தியையும் ப்ராபகபுத்தியையும் துறந்து தன்பாதமூலத்தையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் நினைத்துப் பணிகின்றவனும் தனக்கு அன்பனுமாகிய தன்பக்தன் ஒருகால் ப்ரமாதாதிகளால் சாஸ்த்ரவிருத்தமான கார்யத்தைச் செய்யினும், அதை அவனுடைய ஹ்ருதயத்தில் இருந்து கொண்டு அடியோடு போக்குகிறான்.

நாரதர் சொல்லுகிறார்:—மிதிலாபுரிக்கு ப்ரபுவாகிய அம்மன்னவன் இங்ஙனம் பாகவத தர்மங்களைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்து ஜயந்தியின் புதல்வர்களான அம்முனிவர்களை உபாத்யாயர்களுடன் பூஜித்தான். அனந்தரம் ஸித்தர்களாகிய அந்தக் கவி முதலிய முனிவர்கள் ஸமஸ்தஜனங்களும் பார்த்துக்கொண்

டிருக்கையில் அந்தர்த்தானம் அடைந்தார்கள். நிமி மன்னவன் அவர்கள் உபதேசித்த தர்மங்களை அனுஷ்டித்துப் பரமகதியான மோக்ஷத்தை அடைந்தான். மிகுந்த பாக்யமுடையவனே! வஸுதேவ! ஜாயந்தேயர்களுக்கும் ஜனகமஹாராஜனுக்கும் நடந்த ஸம்வாதரூபமான இந்தப் பாகவத தர்மங்களை யெல்லாம் என்னிடத்தினின்று நீயும் கேட்டனை. நீ இந்தத் தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு வருவாயாயின், ச்ரத்தையுடன்கூடித் தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் மனப்பற்றைத் துறந்து கடைசியில் பரமபதம் பெறுவாய். (சாஸ்த்ரமர்யாதை இருக்கும் விதத்தை மொழிந்தேனன்றி, உங்களுக்கு இதை எதிர்பார்க்கவேண்டிய அவச்யமில்லை.) ஏனென்றால், தம்பதிகளாகிய உங்கள் புகழால் உலகம் முழுவதும் நிறைந்திருக்கின்றது. ஷாட்குண்யபூர்ணனும் தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந்தன்மையனுமாகிய ஸர்வேச்வரன் உங்களுக்குப் பிள்ளையாய் வந்து பிறந்தானல்லவா? ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் புத்ரஸ்னேஹத்தை விசேஷமாக நடத்திக்கொண்டுவருகிற நீங்கள் அவனைக் காண்கை ஆலிங்கனஞ் செய்கை அவனுடன் பேசுகை படுக்கை உட்காருகை புசிக்கை ஆகிய இந்த வியாபாரங்களால் உங்கள் ஆத்மாவைப் புனிதஞ் செய்தீர்கள். (பகவானைப் பெறுதற்குத் தடையான பாபங்களை யெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய தர்சனம் முதலியவற்றால் போக்கிக் கொண்டீர்கள். இனி நீங்கள் அனுஷ்டிக்கவேண்டிய தர்மங்கள் எவை இருக்கின்றன? எவையும் இல்லை.) தேஹானுபந்திகளிடத்தில் செய்யும் ஸ்னேஹம் ஸம்ஸாரபந்தத்தை யன்றோ மேன்மேலும் விளைக்கும்? அப்படியிருக்க ‘நாங்கள் ஸ்ரீ

க்ருஷ்ணனிடத்தில் செய்த புத்ரஸ்னேஹம் எங்களு டைய பாபங்களைப் போக்கினமை எங்ஙனம் பொருந்து மென்றால், சொல்லுகிறேன்; கேளுங்கள். சிசுபாலன் பௌண்ட்ரகன் ஸால்வன் முதலிய மன்னவர்கள் படுத் தல் உட்காருதல் முதலிய ஸமஸ்தகாலங்களிலும் ஸ்ரீக் ருஷ்ணனை த்வேஷத்துடன் த்யானித்துக்கொண்டி ருப்பினும் அவனுடைய நடையழகு புருவநெரிப்பு முத லிய விலாஸங்கள் கண்ணோக்கம் முதலியவற்றையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கையால் புத்தி யில் அவையே படியப்பெற்று அவனோடு ஸாதர்ம்யத்தை அடைந்தார்கள். அவனிடத்தில் அனுராகம் நிறைந்த மனமுடைய உங்களைப்போன்றவர்களுக்கு அவனோடு ஸாதர்ம்யம் உண்டாகுமென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? 'ஸ்ரீக்ருஷ்ணன் லோகவிலக்ஷணனென் பது வாஸ்தவமே. அவன் எங்களுக்குப் பிள்ளையா யிருக்கிறானே' என்றால் சொல்லுகிறேன், கேள். ஸ்ரீக் ருஷ்ணனிடத்தில் கேவலம் பிள்ளையென்னும் புத்தி யைக் கொள்ளாதே. அவன் யோகீச்வரர்களுக்கும் ஈச்வரன்; (ஸர்வாந்தராத்மாவாயிருப்பவன். அவனு டைய அமானுஷசரித்ரங்களை நீயே கண்டிருக்கின் றனை.) அவன் ப்ரக்ருதிபுருஷர்களைக் காட்டிலும் வில க்ஷணன்; அவற்றிற்கு அந்தராத்மாவாயிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாமல் பரிசுத்தனா யிருக்குந் தன்மையன். மற்றும், அவன் ஸ்வரூபத்தினா லும் ஸ்வபாவத்தினாலும் விகாரங்களற்றவன். 'இப்படி யாயின் அவனுடைய அஸாதாரணாகாரம் நமக்கு ஏன் புலப்படவில்லை' யென்றால் அவன் ஸங்கல்பமாகிற மாயையினால் மானிட உருவம் பூண்டு தன்னுடைய அஸாதாரணாகாரத்தை மறைத்துக் கொண்டிருக்கி

ருன். 'அப்படி மாயாமனுஷ்யனாய் அவதரித்ததற்குக் காரணமென்' என்றால், சொல்லுகிறேன். பூமிக்குப் பாரமாயிருப்பவர்களும் அஸுரஸ்வபாவர்களுமான துஷ்டராஜர்களை அழிக்கும் பொருட்டும் ஸாதுக்களைக் காக்கும்பொருட்டும் அவதரித்து இவ்வுலகத்திற்கெல்லாம் ஸுகத்தை விளைக்கும்பொருட்டுத் தன்புகழை எங்கும் நிரம்பும்படி பரப்பிக் கொண்டிருக்கிறான். அத்தகைய பரம புருஷனான ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் நீ கேவலம் புதல்வனென்னும் புத்தியைக் கொள்ளாதே.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— மஹாபாக்யமுடையவனே! வஸுதேவனும் மஹாபாக்யவதியான தேவகியும் இங்ஙனம் நாரதர் மொழிந்ததையெல்லாம் கேட்டு மிகவும் வியப்புற்று ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் தங்கள் புதல்வனென்னும் மோஹத்தைத் துறந்தார்கள். எவன் பரிசுத்தமான இந்த இதிஹாஸத்தை மனவூக்கத்துடன் கேட்டுத் தரித்து அப்படியே அனுஷ்டிக்கிறானோ, அவன் இந்த ஜன்மத்திலேயே பாபங்களெல்லாம் தொலையப்பெற்று ப்ரஹ்மஸாதர்ம்யத்தைப் பெறுவான். ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ரஹ்மாதிதேவதைகள் வந்து பரம பதத்திற்கு எழுந்தருளலாமென்று விண்ணப்பஞ்செய்ய உத்தவன் அவனைப் பிரியமுடியாமல் வருந்தி விண்ணப்பஞ் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு ப்ரஹ்மதேவன் தவப்பெருக்கினால் திகழ்கின்ற மரீசி முதலிய ப்ரஜாதிகளாலும் ஸனகர் ஸனந்தனர் முதலிய புதல்வர்களாலும் சூழப்பட்டு த்வாரகைக்கு வந்தான். பகவானு

டைய அனுக்ரஹத்தினால் பூதபவ்யங்களுக்கு (நடந்தவைகளும் நடக்கப்போகிறவைகளுமான ப்ரஜைகளுக்கு) ப்ரபுவாயிருக்கையாகிற அதிகாரம் பெற்ற ருத்ரனும் பூதகணங்களால் சூழப்பட்டு த்வாரகைக்கு வந்தான். மற்றும், தேவதைகளோடுகூட மஹானுபாவனான தேவேந்த்ரனும் த்வாதசாதித்யர்களும் அஷ்டவஸுக்களும் அஸ்விதேவதைகளும் அங்கிரஸரிஷிகளும் ஏகாதசருத்ரர்களும் விஸ்வதேவர்களும் ஸத்யர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் நாகர்களும் ஸித்தர்களும் சாரணர்களும் குஹ்யகர்களும் ரிஷிகளும் பித்ருக்களும் வித்யாதரர்களும் கின்னரர்களும் ஆகிய அனைவரும் ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்க்கவிரும்பி த்வாரகைக்கு வந்தார்கள். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் எந்த உருவத்துடன்கூடி ஜகத்திற்கெல்லாம் மனோஹரனாகி ஸமஸ்த லோகங்களிலுமுள்ள பாபங்களையெல்லாம் போக்கவல்ல தன்புகழை எங்கும் பரவச்செய்தானோ, அத்தகைய உருவத்துடன் கூடி எல்லா ஸம்ருத்திகளும் நிறைந்து விளங்குகின்ற அந்த த்வாரகையில் அற்புதமான காட்சியுடன் வீற்றிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனை ப்ரஹ்மாதி தேவதைகள் அனைவரும் எவ்வளவு காணினும் போதுமென்னும் த்ருப்தி உண்டாகப்பெறாத கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஸ்வர்க்கத்தின் உத்யானத்தில் உண்டான புஷ்பங்களை அந்த ஸ்ரீக்ருஷ்ணன்மேல் பெய்து அவனை மறைத்து ஆச்சர்யமான பதங்களும் பொருள்களும் அமைந்த உரைகளால் இங்ஙனம் துதித்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள்:—நாதனே! நாங்கள் புத்தி இந்த்ரியங்கள் ப்ராணன்கள் மனம் வாக்கு ஆகிய இவற்றுடன் உன்பாதாரவிந்தத்தை வணங்கு

கிறோம். கர்மமாகிற உறுதியான பாசத்தினின்று விடுபட விரும்புகிறவர்கள் பக்தியுடன் தங்கள் ஹ்ருதயகமலத்தினிடையில் உன்பாதாரவிந்தத்தை த்யானிக்கிறார்களல்லவா? (அத்தகைய உன் பாதாரவிந்தத்தை நாங்கள் இப்பொழுது மாம்ஸக்கண்களால் ஸாக்ஷாத்கரித்து மூன்று கரணங்களாலும் வணங்கினோம். சேரக்கூடாத இது எங்களுக்குச் சேர்ந்தது; எங்கள் பாக்யமே). பிறரால் இத்தகையதென்று சிந்திக்கவும் முடியாத ஸ்தூல சேதனாசேதனரூபமான இந்த ஜகத்தையெல்லாம் நீ ஸத்வாதிகுணமாயையினால் உன்னிடத்தில் படைப்பதும் காப்பதும் அழிப்பதும் செய்கின்றனை. அங்ஙனஞ் செய்யும் பொழுது ஸத்வாதி குணங்களை அதிஷ்டானஞ் செய்துகொண்டு நடத்துகின்றனையன்றி ப்ராக்ருதர்களைப்போல் அக்குணங்களுக்கு உட்பட்டு நடத்துகிறதில்லை. ஒருவராலும் பரிபவிக்க முடியாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடையவனாகையால் அஜிதனென்னும் பெயர் பெற்றவனே! நீ இந்த ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரரூபமான கார்யங்களைச் செய்யினும் அவற்றால் நீ தீண்டப்படுகிறதில்லை. (அச்செயல்கள் உனக்கு லீலாரூபங்களேயன்றிப் புண்ய பாப ரூப கர்மங்களன்றாகையால் கர்மவஸ்யத்வமாவது அதனால் வருகிற துக்கங்களுக்கிடமாயிருக்கையாவது உனக்குக் கிடையாது). ஏனென்றால், நீ உனக்கு அஸாதாரணமாயிருப்பதும் அளவற்றதுமாகிய ஆநந்தத்தில் ஆழ்ந்திருப்பவன்; ஜீவர்களைப்போல விஷய ஸுகங்களில் தாழ்ந்தவனல்லை. சப்தாதி விஷய ஸுகங்களில் கால் தாழ்ந்தவர்கள் அந்த ஸுகத்திற்காகச் செய்யுங் கர்மங்கள் புண்ய பாப ரூபங்களாயிருக்குமாகையால் அவர்கள் அவற்றைப் பற்றின ஸுகதுக்காதிகளுக்கு இடமாகிறார்கள். நீ அத்தகை

யனல்லேயாகையால் உனக்குக் கர்மவஶ்யத்வமாவது அதைப் பற்றின ஸுகதுக்கங்களாவது கிடையாது. உன்னை உபாஸிக்கிறவர்களுக்குங்கூடக் கர்மவஶ்யத்வாதி ஹேயஸம்பந்தம் உண்டாகிறதில்லே. உனக்கு அது எங்ஙனம் உண்டாகும்? (நீ ஹேயங்கள் தீண்டப்பெறுதிருக்கை மாத்ரமேயன்றி உன்னைப் பணிகிறவர்களுக்குங்கூட அத்தன்மையை விளக்கின்றனை). துதிக்கத்தகுந்தவனே! ஸத்வகுணம் நிறைந்த மனமுடையவர்களுக்கு நாயகனே! சப்தாதி விஷயங்களில் தாழ்ந்து அதனுல் துஷ்டமான மனமுடையவர்கள் வேதமோதுதல் அதன்பொருளைக் கேட்டுணர்தல் அதனுல் உண்டான அறிவு உபவாஸம் முதலிய தவம் வர்ணுஶ்ரமகர்மங்களை அனுஷ்டிக்கை ஆகிய இவை அமைந்திருப்பினும், உன்கதைகளைக் கேட்கையால் வளர்ந்திருக்கின்ற உன்புகழிலுண்டான ப்ரீதியினுல் எவ்வளவு சுத்தி உண்டாகுமோ, அவ்வளவு சுத்தி அவர்களுக்கு அவைகளால் உண்டாகிறதில்லே. (உன்கதையைக் கேட்டமாத்ரத்தினுல் பாபிஷ்டர்களுக்குங்கூட மிகுந்த சுத்தி உண்டாகிறதென்றுல், உன்னை உபாஸிக்கிறவர்களுக்குப் பாபங்களெல்லாம் தொலேந்து சுத்தி உண்டாகுமென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?) நாதா! உன்பாதாரவிந்தம் எங்கள் பாபவாஸனைகளுக்குத் தூமகேதுவைப்போன்றதாகி அவற்றை அழிக்குமாக. (தூமகேது ப்ராணிகளுக்கு அசுபத்தை விளக்குமல்லவா? அங்ஙனமே உன்பாதமாகிற தூமகேது எங்கள் பாபவாஸனைகளுக்கு அசுபத்தை விளேத்து அவை அழியும்படி செய்யட்டும்). முனிவர்கள் தங்களுக்கு ஸம்ஸாரபயம் நீங்குகையாகிற க்ஷேமம் உண்டாகும்பொருட்டுப் பக்தியின் வெள்ளத்தினுல் நனேந்த மனத்துடன் அத்த

கைய உன் பாதத்தை த்யானிக்கின்றார்கள். ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை உணர்ந்து பாஞ்ச ராத்ர சாஸ்த்ரங்களில் விதித்த பகவதாராதன க்ர மங்களை அறிந்த பெரியோர்கள் நஸ்வரமான ஸ்வர்க் காதி லோகங்களைக் கடந்து நித்யவிபூதியான பரம பதத்தை அடைந்து அங்கு உன்னோடொத்த ஐஸ்வர் யத்தை அனுபவிக்க விரும்பி வாஸுதேவாதிவ்யூஹோ பாஸனத்தில் இழிந்து மூன்று ஸந்த்யைகளிலும் உன் பாதங்களை ஆராதிக்கின்றார்களல்லவா? (அத்தகைய உன்பாதாரவிந்தம் எங்கள் நமஸ்காரங்களுக்கு விஷய மாகி எங்கள் அசுபங்களைப் போக்குமாக.) மற்றும், ஜகதீசனே! வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை அனுஷ்டிப்பதிலேயே நிலைநின்ற பரிசுத்தமான கைகளை யுடைய வைதிகர்கள் வேதங்களில் சொல்லப்பட்ட விதியின்படி சரு புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸை ஏந்திக் கொண்டு ஆஹவனீயம் முதலிய யாகாக்னியில் எதை த்யானிக்கிறார்களோ; மற்றும், ஆத்மமாயையை அறியவிரும்பின ஸாங்க்யயோகநிஷ்டர்களும் பகவா னிடத்தில் பக்தியுடையவர்களில் சிறந்த பரமைகாந் திகளும் ஆத்மத்யானஸமயங்களில் எதைப் பெற விரும்புகிறார்களோ, அத்தகைய உன்பாதாரவிந்தம் எங்கள் பாபவாஸனையைப் போக்குமாக. ப்ரபூ! ஸ்ரீ மஹாலக்ஷ்மி உன்மார்பில் நித்யவாஸஞ் செய்பவளாயி னும் உன்பாதாரவிந்தங்களில் தொங்குகின்ற வனமாலை யுடன் சக்களத்திப்பொறாமையுடையவளாகி உறைந்து கொண்டு அப்பாதாரவிந்தங்களில் வந்து விழுகின்றாள்; (உன் பாதங்கள் மிகவும் போக்யங்களாயிருக்கின்றமை யால் உன் திருமார்பை விட்டகன்று உன் திருவடிகளைப் பணிகின்றாள்.) மற்றும், இந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி கொண்டு

வந்து ஸமர்ப்பிக்கிற பூஜாத்ரவ்யங்களை எது பெற்றுக் கொள்கின்றதோ, அத்தகைய உன் பாதாரவிந்தம் எப்பொழுதும் எங்கள் பாபவாஸனைகளுக்குத் தூமகேதுவாயிருக்குமாக. உன் பாதங்கள் மூன்று அடிகளால் மூன்று உலகங்களையும் அளந்தன. அம்மூன்றடிகளில் இரண்டாமடி யிடும்பொழுது ஸத்யலோகஞ் சென்ற உன் பாதம் உயரத்தூக்கி நிறுத்தப்பட்ட விஜயத்வஜம் போன்று மூன்று வகையாகப் பிரிந்து விழுகின்ற கங்கையாகிற பதாகையையுடையதாயிருந்தது. (கங்கை ஜகத்தை யெல்லாம் புனிதஞ் செய்யவற்று. அத்தகைய கங்கைக்கும் உத்பத்திஸ்தானமாகிய உன் பாதாரவிந்தத்தின் சுத்தியைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ?) மற்றும், உன் பாதாரவிந்தம் அப்பொழுது அஸுரஸேனைகளுக்குப் பயத்தையும் தேவஸேனைகளுக்கு அபயத்தையும விளைத்தது. மற்றும், அப்பாதாரவிந்தம் ஸாதுக்களுக்கு ஸுகத்தையும் அஸாதுக்களுக்குத் துக்கத்தையும் விளைக்குந் தன்மையது. பகவானே! அத்தகைய உன்பாதாரவிந்தம் பணிகின்ற எங்கள் பாபத்தைப்போக்குமாக. ப்ரஹ்மதேவன் முதலிய ப்ராணிகள் அனைவரும் ஒருவர்க்கொருவர் சிலர் ப்ரபுக்களும் சிலர் அவர்கள் கீழ் அடங்கி நடப்பவர்களுமா யிருப்பினும் மூக்குக் குத்திக் கயிறு கோக்கப்பெற்ற எருதுகள் போல உனக்கு ஸ்வாதீனமாயிருக்கின்றார்கள். நீ, ப்ரஹ்மாதிகளையும் தன் வசமாக்கி நடத்துந்திறமையுள்ள காலத்தையும் சரீரமாகக் கொண்டு அதற்கும் நியாமகனு யிருப்பவன்; ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணன்; ஸர்வேஸ்வரன்; புருஷோத்தமன். இத்தகையனான உன்னுடைய பாதாரவிந்தம் எங்களுக்கு ஸுகத்தை விளைக்குமாக. ஸ்தூலசேதனு

சேதனரூபமான இந்த ப்ரபஞ்சத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு நீயே காரணன். ப்ரக்ருதி, நித்யரென்றும் முக்தரென்றும் பத்தரென்றும் மூன்று வகைப்பட்ட சேதனர்கள், ப்ரக்ருதியின் பரிணாமங்களான மஹத்து முதலிய தத்வங்கள் ஆகிய இவையெல்லாவற்றிலும் நீ சிறந்தவனாகையால் புருஷோத்தம னென்று கூறப்படுகின்றனை. ஒன்றோடொன்று ஸமமாயிருக்கை ஒன்றைவிட ஒன்று குறைந்திருக்கை ஒன்றைவிட ஒன்று அதிகமாயிருக்கை ஆகிய இவ்வகைகளால் மூன்று வகைப்பட்ட அஹோராத்ரங்களையும் மூன்று சாதுர்மாஸ்யங்களையும் நாபியாகவுடையதும் இந்த ஜகத்தை யெல்லாம் பாழ்செய்ய முயன்றிருப்பதும் ஒருவராலும் தடுக்கமுடியாத கம்பீரமான வேகமுடையதும் வார பக்ஷ மாஸ ஸம்வத்ஸராதிரூபமுமான காலத்திற்கும் நீயே நியாமகனாகையால் உன்னைக் காலஸ்வரூபனென்று சொல்லுகிறார்கள். ஸங்கல்பமாத்ரத்தினால் ஜகத்தையெல்லாம் படைக்கையாகிற வீர்யம் தடைபடாதிருக்கப்பெற்ற அநிருத்தனென்னும் புருஷன் வ்யூஹங்களுக்கெல்லாம் மூலபூதனாகிய உன்னிடத்தினின்று ஆவிர்ப்பவித்து இந்த ஜகத்தையெல்லாம் படைக்கும்பொருட்டுப் புருஷன் ஸ்த்ரீயிடத்தில் கர்ப்பத்தை ஆதானஞ் செய்வதுபோல எந்த ப்ரக்ருதியைக் கொண்டு மஹத்தத்வமென்னும் வீர்யத்தை ஆதானஞ் செய்தானோ, அந்தப் புருஷஸ்வரூபமான அம்மஹத்தத்வம் அந்த ப்ரக்ருதியினால் தொடரப்பெற்றுத் (தன் காரணமான ப்ரக்ருதியைப்போல் தானும் ஸத்வாதிகுணங்களோடு கூடியதாகி) ஸ்வர்ணமயமாயிருப்பதும் வெளியில் ஜலம் முதலிய ஏழு ஆவரணங்களோடு கூடியதுமாகிய அண்டகோசத்தைப் படைத்தது. (உன்னுடைய

வ்யூஹாவதாரமான அநிருத்தபுருஷன் தன் சரீரமான ப்ரக்ருதியிடத்தினின்று மஹத்தத்வத்தையும் அதினின்று அஹங்கார தன்மாத்ராதிகளையும் அவற்றினின்று ஏழாவரணங்களோடு கூடிய ப்ரஹ்மாண்டத்தையும் படைத்தான்). இங்ஙனம் ஜகத்தைப் படைத்த அநிருத்தஸ்வரூபனான நீயே ஜங்கம ஸ்தாவர ரூபமான இந்த ஜகத்திற்கெல்லாம் ப்ரபு. (சேதனாசேதனங்களில் புகுந்து நியமித்துக்கொண்டு மனுக்களாகவும் மன்வந்த்ரங்களில் விஷ்ணு முதலிய அவதாரங்களாகவும் தோன்றி ப்ராணிகளின் இஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுத்து அனிஷ்டங்களைப் போக்கி இங்ஙனம் ஸ்திதியை நடத்துகிறவன் நீயே). ஸமஸ்த வஸ்துக்களிலும் உள்ளே புகுந்து நியமித்துக்கொண்டு அந்தர்யாமியாயிருக்கின்ற நீ ஜீவாத்மாக்களின் கர்மங்களை அனுஸரித்த உன் ஸங்கல்பத்தினால் ஏற்பட்டதும் ஸத்வாதி குணங்களின் பரிணாமமுமாகிய இந்த்ரியங்களின் வ்யாபாரத்தினால் நேர்ந்த சப்தாதி விஷயங்களை ஜீவன்மூலமாய் அனுபவித்துக் கொண்டிருப்பினும் அதனால் விளையக்கூடிய புண்ய பாபங்களால் ஸ்பர்சிக்கப்படாதவனாகவே விளங்குகின்றனை. நீ இந்த்ரியங்களுக்கு ப்ரபு; (இந்த்ரியங்களுக்கு உட்படாமல் அவற்றைத் தன் வசமாக்கி நடத்துந் தன்மையன்). உன்னை யொழிந்த மற்ற ஜீவாத்மாக்கள் அனைவரும் யோகிகளாயிருப்பினும் சப்தாதி விஷயங்களைத் துறந்திருப்பினும் அவற்றினின்று பயப்படுகின்றார்கள் (விஷயவாஸனாமாத்ரத்தினால் கட்டுண்டு வருந்துகிறார்கள்.) (நீ இந்த்ரியங்களை அடக்கியாள்பவனேயன்றி அவற்றிற்கு உட்பட்டவனல்லையென்பது இந்த அவதார வ்ருத்தாந்தங்களாலேயே ஸ்பஷ்டமாய் வெளியாகின்றதல்லவா?) காமதந்த்ரங்களில் வல்லவர்க

ளான உன்பத்னிகள் பதினாறாயிரம்பேர்களும் புன்னகையினால் திகழ்கின்ற கடைக்கண்ணோக்கங்களை விடுத்து அவற்றால் தங்கள் மனக்கருத்தை வெளியிட்டு அக்கருத்தினால் அழகாயிருக்கின்ற புருவவட்டங்களால் தூண்டப்பட்ட கலவிப் பேச்சுக்களாகிற மன்மதனுடைய மோஹனமான பாணங்களாலும் மற்றும் பலவகைப்பட்ட காமகலைகளாலும் உன்மனத்தை வசப்படுத்த வல்லவராகவில்லையே. (இதனாலேயே உன்னுடைய ஜிதேந்த்ரியத்வம் வெளியாகவில்லையோ?) அம்ருதம் போன்ற உன் கதைகளாகிற நதிகளும் உன் பாதத்தை அலம்பின ஜலத்தின் ப்ரவாஹரூபமான கங்கை முதலிய நதிகளுமே மூன்று லோகங்களிலுமுள்ள பாபங்களையெல்லாம் போக்க வல்லவைகளாயிருக்கின்றன. ஆகையால் ஆத்மசுத்தியை விரும்பும் புருஷர்கள் வேதங்களால் வெளியிடப்பட்ட உன் கீர்த்தியாகிற புண்ய தீர்த்தத்தை ஶ்ரவணேந்த்ரியங்களாலும் உன் திருவடியினின்று வெளியான கங்கையென்னும் புண்ய தீர்த்தத்தை ஸ்னானாதிகளாலும் பணிகின்றார்கள். (ஆத்ம சுத்தியை விரும்புகிறவர்கள் உன்புகழ்களைக் கேட்பதும் உன் ஸ்ரீபாத தீர்த்தமான கங்கையில் ஸ்னானம் முதலியன செய்வதும் நடத்துகிறார்கள். ஆனபின்பு நீ சப்தாதிவிஷயங்களை அனுபவிக்கினும் அவற்றின் தோஷங்களால் தீண்டப்படுகிறதில்லையென்றும் நீ இந்த்ரியங்களுக்கு உட்பட்டவனல்லையென்றும் நிரூபிக்கவேண்டுமோ?)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ரஹ்மதேவன் தேவதைகளோடு கூட ஆகாயத்தில் நின்றிருந்து இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனை ஸ்தோத்ரஞ்செய்து நமஸ்கரித்து அன்னவனைக் குறித்து மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—ஸகலசேதனு சேதனங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! ப்ரபூ! முன்பு நாங்கள் உன்னிடத்தில் வந்து பூமியின் பாரத்தை நீக்கவேண்டுமென்று விண்ணப்பம் செய்தோம். அதை அப்படியே நீ நடத்தி முடித்தனே. ஸத்யஸந்தர்களான ஸத்புருஷர்களிடத்தில் தர்மத்தையும் ஸ்தாபித்தனே. ஸமஸ்தலோகங்களுடைய பாபங்களையும் போக்கவல்ல உன்புகழை எல்லாத் திசைகளிலும் பரவச் செய்தனே. நீ யதுவின் வம்சத்தில் அவதரித்து மிகவும் சிறந்த உருவத்தை ஏற்றுக்கொண்டு ஜகத்தின் ஹிதத்திற்காக உதாரமான சரித்ரங்கள் அடங்கப்பெற்ற பல செயல்களைச் செய்தனே. ஜகதீசனே! கலியுகத்தில் தங்கள் நன்மையை நிறைவேற்றிக் கொள்ள விரும்பும் புருஷர்கள் எவர் உன்னுடைய சரித்ரங்களைக் கேட்பதும் சொல்லுவதும் செய்கிறார்களோ, அவர்கள் உன் ஸங்கல்பத்தினால் ஏற்பட்ட ப்ரக்ருதிஸம்பந்தத்தை அனாயாஸமாகத் தாண்டுவார்கள். புருஷோத்தமா! ப்ரபூ! யதுவம்சத்தில் அவதரித்த உனக்கு இப்பொழுது நூற்று இருபத்தைந்து ஸம்வத்ஸரங்கள் கடந்தன. ஸகலஜகதாதாரனே! இப்பொழுது தேவகார்யத்தில் செய்யவேண்டிய குறை ஒன்றும் இல்லை. எல்லாம் செய்து முடித்தனே. இந்த யதுகுலமும் ப்ராஹ்மணசாபத்தினால் முடிந்தாற்போலவேயாய்விட்டது. இங்ஙனம் இந்த அவதாரத்தின் ப்ரயோஜனம் முடிந்ததாகையால், உனக்குத் திருவுள்ளமாயின், பரமபதத்திற்கு எழுந்தருளலாம். நாங்கள் உன்னை நியமிக்கவல்லரல்லோம். வைகுண்டனே! உனக்குப் பணிக்காரர்களாகி உலகங்களைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிற எங்களையும் உலகங்களையும் பாதுகாப்

பாயாக. (நாங்கள் உனது கிங்கரர்கள். நீ எங்களை லோகபாலர்களென்று ஏற்படுத்தி யிருக்கின்றனை. நாங்கள் விண்ணப்பஞ் செய்ததை ஏற்றுக்கொண்டு எங்களைப் பெருமைப்படுத்திப் பாதுகாப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! ஜகதீஸ்வரனும் மாயையினால் மானிட உருவம் பூண்டவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் இங்ஙனம் ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகளால் விண்ணப்பஞ் செய்யப்பெற்று அவர்களைப் புகழ்ந்து மறுமொழி கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தேவதைகளுக்கு ப்ரபுவாகிய ப்ரஹ்மதேவனே! நீ யாது மொழிந்தனையோ, அவ்விஷயத்தை நானும் விசாரித்து நிச்சயித்துக்கொண்டிருக்கிறேன். உங்கள் கார்யம் முழுவதும் செய்து முடித்தேன். பூமியின் பாரத்தையும் நீக்கினேன். ஆயினும், இந்த யாதவகுலம் பிறரை அவமதிக்குந்திறமையாகிற வீர்யம் யுத்தபூமியில் தன்வீட்டில் நுழைவதுபோல் நுழைகையாகிற ஸௌர்யம் தனம் முதலிய ஸம்பத்து இவைகளால் கொழுத்து உலகத்தையெல்லாம் நாசஞ் செய்ய முயன்றிருக்கின்றது; ஸமுத்ரம் கரையினால் தடைபட்டிருப்பதுபோல் என்னால் தடைபட்டிருக்கின்றது. மிகவும் கொழுத்திருக்கின்ற இந்த யாதவர்களின் குலம் மிகவும் விஸ்தீர்ணமாயிருக்கின்றது. இதை முடிக்காமல் நான் போவேனாயின் கரையைக் கடந்த ஸமுத்ரத்தினால் உலகமெல்லாம் பாழாவது போல், மர்யாதையைக் கடந்து நடக்கத் துணிந்த இக்குலத்தினால் உலகமெல்லாம் பாழாய்விடும். (ஆகையால் நான் இதை முடித்துவிட்டே போகவேண்டும். ஆனால் எப்பொழுது முடிக்கப் போகிறாயென்றால், சொல்

லுகிறேன்). இப்பொழுதே ப்ராஹ்மண சாபத்தினால் இந்த வம்சத்திற்கு விநாசம் ஆரம்பித்துவிட்டது. இனி நிற்காது; சீக்ரத்திலேயே அழிந்துபோய்விடும். பாபமற்றவனே! ப்ரஹ்மதேவ! இந்தக்குலம் முடிந்தவுடனே நான் வைகுண்டலோகம் போவேன். அப்பொழுது உன் பவனத்திற்கு வருவேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் லோகநாதனுகிய ஸ்ரீக்ருஷ்ணனால் மொழியப் பெற்ற ப்ரஹ்மதேவன் அம்மஹானுபாவனைப் பணிந்து தேவக் கூட்டங்களோடுகூடத் தன்னுலகம் போய்ச் சேர்ந்தான். அனந்தரம் ஸ்ரீக்ருஷ்ணபகவான் த்வாரகையில் மஹத்தான பலஉத்பாதங்கள் உண்டாவதைக் கண்டு தன்னிடம் வந்திருக்கின்ற யதுவ்ருத்தர்களைக் குறித்து மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—இங்கு எல்லாப்புறங்களிலும் பெரிய உத்பாதங்கள் பலவும் இதோ உண்டாகின்றன. நங்குலத்திற்கு ப்ராஹ்மணர்களிடத்தினின்று எவ்விதத்திலும் கடக்கமுடியாத சாபமும் நேரிட்டிருக்கின்றது. (நமக்கு ப்ராஹ்மணசாபம் நேரிட்டபடியால் பற்பல உத்பாதங்கள் புலப்படுகின்றன). பெரியோர்களே! நாம் பிழைக்க வேண்டுமென்று விரும்புவோமாயின் இனி இப்பட்டணத்தில் இருக்கலாகாது. நாம் இப்பொழுதே ப்ரபாஸதீர்த்தத்திற்குப்போவோம். தாமதஞ் செய்யவேண்டாம். அது மிகவும் பரிசுத்தமானது; புண்ய தீர்த்தங்களில் சிறந்தது. சந்த்ரன் தக்ஷருடைய சாபத்தினால் க்ஷயரோகம் உண்டாகப் பெற்று அதனால் வருந்தி இந்த ப்ரபாஸ தீர்த்தத்தில் ஸ்னானஞ் செய்து க்ஷயரோகஹேதுவான பாபத்தினின்று விடுபட்டு உடனே மீளவும் தன்னுடைய கலைகளை

யெல்லாம் பெற்றான். ஆகையால் நாமும் அந்த ப்ரபாஸதீர்த்தத்தில் ஸ்னானஞ்செய்து அறுசுவைகளும் அமைந்த அன்னத்தினால் மேன்மையுள்ள அந்தணர்களைப் புசிப்பித்து நல்ல நிலங்களில் விதைகளை விதைப்பதுபோல், ஸத்பாத்ரங்களாகிய அவ்வந்தணர்களுக்குப் பற்பல தானங்களைச் செய்து ஓடங்களால் ஸமுத்ரத்தைத் தாண்டுவதுபோல, அத்தானங்களால் நம்முடைய பாபங்களைத் தாண்டுவோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருவம்சத்திற்குக் களிப்பை விளைக்குங்குமாரனே! இங்ஙனம் பகவானால் ஆஜ்ஞை செய்யப்பெற்ற யாதவர்கள் ப்ரபாஸ தீர்த்தத்திற்குப் போக மனங்கொண்டு ரதங்களைப் பூட்டினார்கள். ராஜனே! உத்தவன் இங்ஙனம் பகவான் மொழிந்ததைக் கேட்டும் அவர்கள் செய்கிற முயற்சியைக் கண்டும் பயங்கரமான பற்பல உத்பாதங்களைக் கண்டும் ஸர்வகாலமும் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்திருப்பவனாகையால் உலகங்களுக்கு ப்ரபுக்களென்று வழங்கிவருகிற ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் ப்ரபுவான அம்மஹானுபாவனை ஏகாந்தத்தில் கிட்டி அவனுடைய பாதங்களைச் சிரத்தினால் வணங்கிக் கைகளைக் குவித்துக்கொண்டு மொழிந்தான்.

உத்தவன் சொல்லுகிறான்:—தன் தேஜஸ்ஸினால் திகழ்பவனே! தேவதைகளான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் நியாமகனே! யோகத்திற்கு நிர்வாஹகனே! கேட்கிறவர்களுக்கும் சொல்லுகிறவர்களுக்கும் புண்யத்தை விளைக்கவல்ல ஸ்ரவண கீர்த்தனங்களையுடையவனே! நீ இந்தக் குலம் முழுவதும் ஸம்ஹரித்து விட்டு உடனே இவ்வுலகத்தைத் துறக்கப்போகின்றனை. இது நிச்ச

யம். திறமைகளெல்லாம் அமைந்தவனே! ஏனென்றால், நீ ப்ராஹ்மணசாபத்தைத் தடுக்கவல்லவனாயிருந்தும் அதைத் தடுக்காமலேயிருந்தனை யல்லவா? (ஆகையால் ப்ராஹ்மணசாபமென்னும் வியாஜத்தினால் இந்த வம்சத்தையெல்லாம் ஸம்ஹரித்து வைகுண்டலோகம் போக முயன்றனை. இது நிச்சயம்). ஆனால் என்னென்கிறாயோ? கேசவனே! நான் அரைக்ஷணமும் உன் பாதகமலத்தை விட்டுப் பிரிந்திருக்கப்பொறேன். நாதனே! என்னையும் உன் ஸ்தானமாகிய வைகுண்டலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போவாயாக. ஸாதாரண ஜனங்களுங் கூட, காதுகளுக்கு அம்ருதம்போன்றதும் மிகுந்த மங்களங்களை விளைப்பதுமாகிய உன்விளையாடலைக் கேட்டுக் கொண்டிருந்தே தேஹத்திலும் தேஹானுபந்திகளிடத்திலும் சப்தாதி விஷயங்களிலும் விளைகிற விருப்பத்தைத் துறக்கின்றார்கள். (துறந்து உன்னையே பற்றுகிறார்கள்). அப்படியிருக்க, உன்பக்தர்களாகிய நாங்கள் படுத்தல் உட்காருதல் திரிதல் நிற்றல் குளித்தல் புசித்தல் முதலிய எல்லாச் செயல்களிலும் கூடவே யிருப்பவனும் மிகுந்த அன்பனும் அந்தராத்மாவுமாகிய உன்னை எங்ஙனம் விட்டுப்பிரிந்திருப்போம்? நீ உபயோகப் படுத்தித்துறந்த பூமாலை சந்தனம் ஆடை ஆபரணம் இவைகளால் அலங்காரஞ்செய்து கொண்டு நீ புசித்து மிகுந்த அன்னத்தைப் புசிக்குந் தன்மையர்களும் உன்தாஸர்களுமாகிய நாங்கள் உன் மாயையை வெல்லுவோம். இது நிச்சயம். (நாங்கள் உன் மாயையைக் கடப்பதற்காக இனி யத்னஞ் செய்யவேண்டியதில்லை. ஆகையால் உன்னை விட்டுப் பிரிந்திருக்க முடியாமல் வருந்துகிற என்னை உன்னுடன் அழைத்துக்கொண்டு போக வேண்டுமென்று வேண்டுகிறேனன்றி ஸம்ஸாரபயத்தி

ஞல் வேண்டவில்லை.) காற்றையே அரைநாண்மாலை யாக வுடையவர்களும் (அரையில் கௌபீனமாத்ரமே தரித்துத் திகம்பரர்களாயிருப்பவர்களும்) உபவாஸம் முதலிய வ்ரதங்களால் ஶ்ரமப்படுந்தன்மையர்களும் ஊர்த்வரேதஸ்ஸுக்களும் (எக்காலத்திலும் ரேதஸ்ஸு நழுவப் பெருதவர்களும் ராகத்வேஷாதிகளின்றிச் சர்ந்தர்களும் பரிசுத்தர்களும் ஸந்யாஸாஶ்ரமத்தில் இருப்பவர்களுமாகிய ரிஷிகள் ப்ரஹ்மலோகமென்னும் பெயருடைய உனது லோகத்தை அடைகின்ருர்கள். மஹாயோகியே! (ஆச்சர்ய சக்தியுடையவர்களில் சிறந்தவனே!) இந்த ஸம்ஸாரத்தில் புண்யபாப கர்மங்களால் ஸம்பாதிக்கப்பட்ட ஸுகதுக்கங்களில் உழன்றுகொண்டிருக்கிற நாங்களோ வென்ருல் உன் பக்தர்களோடு கூடி உன் கதைகளை அனுஸந்தித்தமாத்ரத்திஞல் பிறர்க்கு வருந்தியும் கடக்கமுடியாத ஸம்ஸாரத்தை அநாயாஸமாகக் கடப்போம். நீ மனுஷ்யலோகத்தை அனுஸரித்துச் செய்த உன்செயல்களையும் பேச்சுக்களையும் நடை புன்னகை நோக்கம் பரிஹாஸம் இவைகளையும் நாங்கள் நினைப்பதும் பிறர்க்கு நினைவு மூட்டுவதும் செய்து உன் மாயையை அநாயாஸமாகத் தாண்டுவோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—ராஜனே! ஷாட்குண்ய பூர்ணனும் தேவகியின் புதல்வனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் உத்தவனுல் விண்ணப்பஞ் செய்யப் பெற்றுத் தன்னை யொழிய மற்றென்றை அறியாமல் தன்னையே பணியுந்தன்மையனும் அன்பனும் ப்ருத்யனுமாகிய அவ்வுத்தவனைக் குறித்து மேல்வருமாறு மொழிந்தான்.

ஆருவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் உத்தவனுக்கு ஆத்மஜ்ஞானம் வித்திப்பதற்காக அவதூதவ்ருத்தாந்தத்தில் சொன்ன குருக்களில் தான் முதலிய எட்டுப்பேர்களைக் கூறுதல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:—மஹாபாகனே! (மிகுந்த பாக்யமுடையவனே!) 'நீ இந்தக் குலத்தை முடித்து விட்டு இவ்வுலகத்தைத் துறக்கப் போகின்றனை' என்று யாது மொழிந்தனையோ, அது நான் செய்ய நினைத்திருப்பதுவே. ப்ரஹ்மதேவனும் ருத்ரனும் மற்றுமுள்ள லோகபாலர்களும் நான் இவ்வுலகத்தைத் துறந்து என்வாஸஸ்தானமான வைகுண்டலோகம் போய்ச் சேர்ந்து அங்கு நித்யவாஸஞ் செய்வதை விரும்புகிருர்கள். நான் ப்ரஹ்மதேவனுல் வேண்டப்பட்டு என்னுடைய அம்சமாகிய பலராமனுடன் இங்கு எதற்காக அவதரித்தேனே, அத்தகைய தேவ கார்யத்தை முழுவதும் செய்து முடித்து விட்டேன். இந்த யாதவகுலம் ப்ராஹ்மண சாபத்தினுலேயே நன்கு தஹிக்கப்பட்டாற் போலவே யாய்விட்டது; மற்றும், இனிச் சீக்ரத்திலேயே ஒன்ருெடொன்று கலஹம் உண்டாகப் பெற்று முழுவதும் அழியப்போகின்றது. இது நிச்சயம். இன்றைக்கு ஏழாவது நாளில் ஸமுத்ரம் இந்தப் பட்டணத்தை முழுக்கிவிடப்போகின்றது. நான் எப்பொழுது இவ்வுலகத்தை விட்டுப் போவேனே, அப்பொழுதே இவ்வுலகம் சீக்ரத்தில் மங்களங்கள் எவையுமின்றியதாய் விடும்; கலியும் வந்து மூடிக்கொள்ளும். மங்களஸ்வபாவனே! ஆகையால் நானில்லாத இவ்வுலகத்தில் நீ வஸிக்கவேண்டாம். இவ்வுலகத்தில் ஜனங்கள் எல்லாரும் நான் போனவுடனே கலியுகம் வருகையில் அதர்மத்தில் ருசியுடையவராய் விடுவார்கள். அதைப் பற்றி நீ இங்கு வஸிக்க வேண்டாம். 'ஆனுல் என்ன

செய்யலாம்? எங்குப் போகலாம்?' என்றால், சொல்லு கிறேன், கேள். ஸமஸ்தமான சப்தாதி விஷயங்களில் விருப்பத்தையும் பந்துக்களிடத்திலுள்ள ஸ்னேஹத் தையும் துறந்து ஸர்வேஶ்வரனாகிய என்னிடத்தில் நிலை நிறுத்தி எல்லாம் ப்ரஹ்மாத்மகமென்று அனுஸந்திக் கையாகிற ஸமத்ருஷ்டியுடையவனாகிப் பூமியைச் சுற் றிக்கொண்டிருப்பாயாக. மனம் வாக்கு கண் காது இவை முதலிய இந்த்ரியங்களால் எதெதை அறிகி றோமோ, அதெல்லாம் நஶ்வரம்; மாயையின் குணங் களுக்கு உட்பட்ட மனத்தினின்று உண்டானதே. ப்ர க்ருதியின் குணமான ஸத்வாதிகளுக்கு உட்பட்ட மனமுடையவர்களுக்கே அந்தச் சப்தாதிவிஷயஸுகம் ரஸிக்குமன்றிப் பரிசுத்தமான மனமுடையவர்களுக்கு அது ரஸிக்காது. ஸர்வாந்தராத்மாவும் ஸர்வசரீர கனுமாகிய என்னிடத்தில் மனத்தைச் செலுத்தாத வனுக்குப் பற்பலவாறான வஸ்துக்களைப் பற்றின அறிவு உண்டாகும். அது ப்ரமமேயன்றி உண்மையான அறி வன்று. (பரமபுருஷன் எல்லாவற்றிலும் உட்புகுந்து எல்லாவற்றையும் சரீரமாகக் கொண்டிருக்கிறானகை யால் எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமேயென்னும் அறிவே உண்மையான அறிவாமன்றி அந்தந்த வஸ்துவை வெவ் வேறாக நினைப்பது உண்மையான அறிவாகாது. அது ப்ராந்தியேயாம். ஸர்வாந்தராத்மாவான என்னிடத் தில் மனத்தைச் செலுத்துகிறவனுக்கு எல்லாம் ப்ரஹ் மாத்மகமென்று ஒருவாறாகவே தோற்றுமன்றி வெவ்வே றாகத் தோற்றாது. அதுவே உண்மையான அறிவு). எவனுக்கு அந்த ப்ரமம் தொடர்ந்துகொண்டிருக்கின்ற தோ, அவன் புண்யபாபங்களின் பலனான ஸுகதுக்கங் களுக்கிடமாவான். எவனுக்குக் கர்மமென்றும் அகர்ம

மென்றும் விகர்மமென்றும் பேதபுத்தி உண்டாகின்றதோ, அவனுடைய புத்திக்கு ஸுகதுக்கங்கள் விஷயமாகின்றன. (கர்மமாவது அவஶ்யம் அனுஷ்டிக்க வேண்டிய நித்ய நைமித்திக ரூபகர்மம். அகர்மமாவது இதைச் செய்யலாகாதென்று சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட கர்மம். விகர்மமாவது பற்பல பலன்களைக் குறித்து விதிக்கப்பட்ட காம்யகர்மம்.) வஸ்துக்கள் ப்ரஹ்மாத்மகங்களாகாமல் ஸ்வதந்த்ரங்களென்றும் தேஹமே ஆத்மாவென்றும் ப்ரமித்த மூடன் விதிநிஷேதாதிரூபமான சாஸ்த்ரத்திற்கு உட்பட்டவனாவான். அவன் அந்தச் சாஸ்த்ரவிதிகளைத் தொடர்ந்து நடப்பானாயின் ஸுகத்தையும், அவற்றைக் கடந்து நடப்பானாயின் துக்கத்தையும் அடைவான். இங்ஙனம் ப்ரமம் ஜீவனுக்குச் சாஸ்த்ர வஶ்யதையை உண்டாக்கி அதன் மூலமாய் ஸுகதுக்கங்களை விளைக்கின்றது. (ஆனால் ப்ரஹ்மஜ்ஞானிகள் சாஸ்த்ரங்களைக் கடந்து நடக்கலாமோவென்று சங்கிக்கவேண்டாம். ப்ரஹ்மஜ்ஞானிகள் வஸ்துக்கள் ஸ்வதந்த்ரங்களென்னும் நினைவு ப்ரமமென்று நிச்சயித்துக்கொண்டவர்களாயினும் சரீரத்தோடிருக்கும்வரையில் ஒருகால் ப்ரமம் தொடரக்கூடுமாகையால் அவர்களும் சாஸ்த்ரவிதிகளைக் கடந்து நடக்கலாகாது. மற்றும், அவர்களுக்கு ப்ரமம் தொடராமற் போயினும் லோகஶிக்ஷைக்காக அவர்களும் சாஸ்த்ரவிதிகளை அநுஸரிக்க வேண்டுமேயன்றி அவற்றைக் கடக்கலாகாது. அவர்கள் அவற்றைக் கடந்தால் தோஷம் இல்லையாயினும் அவர்களுடைய உண்மையை அறியாத உலகத்தவர்கள் நாமும் இப்படியே நடக்கவேண்டுமென்று சாஸ்த்ரவிதிகளைக் கடந்து பாழாய்விடுவார்கள். ஆகையால் அவர்கள் அவற்றைக் கடக்கலாகாது. மற்

றும், அவர்கள் * தேஹபாதம்வரையில் கைங்கர்யபுத்தியுடன் சாஸ்த்ரவிதிகளை அனுஷ்டித்துக்கொண்டு வருவார்களன்றி அவற்றைத் துறக்கமாட்டார்கள்). இங்ஙனம் வஸ்துக்கள் ஸ்வதந்த்ரங்களென்னும் ப்ரமமும் தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமமும் ஸுகதுக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்திற்கு ஹேதுவாகையால், நீ இந்த்ரியங்களை யெல்லாம் அடக்கிக்கொண்டு என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி அசேதனமான ப்ரக்ருதியின் பரிணாமங்களாகிய தேவமனுஷ்யாதி சரீரங்கள் அடங்கிய இந்த ஜகத்தெல்லாம் ஜீவனிடத்தில் இருக்கிறதென்றும் (ஜீவனால் தரிக்கப்பட்டிருக்கிறதென்றும்), அந்த ஜீவாத்மா என்னிடத்தில் வ்யாபித்திருக்கிறானென்றும் (என்னால் தரிக்கப்பட்டிருக்கிறானென்றும்) தெரிந்துகொள்வாயாக. (இப்படி ஸர்வகாலமும் ஆராய்ந்துவருவாயாயின், ஸ்வதந்த்ரவஸ்துப்ரமமும் தேஹாத்ம ப்ரமமும் அவற்றின்மூல்யமாய் விளையும் ஸம்ஸாரமும் நிவர்த்திக்கும்.) (இன்று முதல் நான் அங்ஙனம் ஆராய்ந்துவரப் பார்ப்பேனாயின், அனாதிகாலமாய் இந்த்ரியங்கள் சப்தாதி விஷயங்களில் செல்லப்பெற்ற என்னுடைய அவ்வாராய்ச்சி இடையில் விக்னங்களால் தடைபடுமேயென்பாயாயின், சொல்லுகிறேன்; கேள்.) ஜ்ஞான விஜ்ஞானங்கள் அமையப்பெற்று (ப்ருதிவி முதல் ஆத்மா வரையிலுள்ள தத்வங்களின் ஸாதர்ம்ய . வைதர்ம்யங்களை அறிந்து) ஸமஸ்த ப்ராணிகளையும் தன்னைப்போலவே பார்க்குந்தன்மையனாகி ஆத்மானுபவத்தினால் மனக்களிப்புற்றிருப்பானாயின், அவன் விக்னங்களால் தடுக்கப்படுகிறதில்லை. (அளவற்றதாகிய ஆனந்த ஸாக

* தேஹம் விழும்வரையில்; அதாவது- தேஹவியோகம் வரையில்.

ரத்தில் முழுகினவன் சப்தாதிவிஷயானுபவத்தினால் விளைகிற அற்பஸுகத்திற்காகச் செய்யவேண்டிய கர்மங்களாகிற விக்னங்களால் தடுக்கப்படமாட்டான். அவனுக்கு அவற்றில் ருசியே உண்டாகாது.) அவனுக்கு விக்னங்கள் உண்டாகாவாயின், அவன் ஏன் சாஸ்த்ர விதி நிஷேதங்களை அனுஸரிக்கவேண்டுமென்றால், சொல்லுகிறேன் கேள். ஆத்மானுபவத்தினால் ஸந்தோஷமுற்றவன் சப்தாதிவிஷய ஸுகதுக்கங்களைக் கடந்தவனாயினும் சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்டவை ஆத்ம ப்ராப்திக்கு விருத்தங்களென்னும் புத்தியினால் சாஸ்த்ர நிஷேதத்தைக் கடக்கமாட்டான். (சாஸ்த்ரங்களில் செய்யலாகாதென்று நிஷேதிக்கப்பட்டவைகளைச் செய்யமாட்டான்; மற்றும், ஸ்வர்க்காதி ஸுகங்களுக்கு இடமாமென்னும் புத்தியினால் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட காம்ய கர்மங்களையும் செய்யமாட்டான். நிஷித்தாசாரம் தோஷத்தை உண்டாக்கி ஆத்மானுபவத்தினின்று நழுவச்செய்வதுபோல், குண புத்தியால் செய்கிற காம்யகர்மமும் தனக்கு ஏற்பட்ட பலனை விளைத்து அதன்மூலமாய் ஆத்மானுபவத்தினின்று நழுவச் செய்யும்.) இங்ஙனம் நிஷித்தங்களையும் காம்யங்களையும் செய்யாமல் நித்யகர்மங்களைமாத்ரம் செய்துகொண்டு ஆத்மானுபவத்தினால் ஸந்தோஷமுற்றிருப்பினும், குழந்தை தன்ஸ்வபாவத்தை வெளிக்காட்டாதிருப்பதுபோலத் தன் மஹிமையை வெளிக்காட்டாமல் வெறுமனே யிருப்பான். ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பனாகிச் சோகமோஹாதிகளின்றி வைராக்யமுடையவனாகி ஜ்ஞானவிஜ்ஞானங்களில் நிச்சயம் உண்டாகப்பெற்று ஜகத்தெல்லாம் எனக்குச் சரீரமாகி என்னால் வ்யாபித்து நியமிக்கப்பட்டிருக்கையால் என்னைக்காட்

டிலும் வேறுபட்டதென்று நினையாமல் எல்லாம் என் ஸ்வரூபமென்றே நினைப்பானாயின், அவன் மீளவும் ஸம்ஸாரத்தில் உழல்கையாகிற ஆபத்தை அடையமாட்டான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! பகவத்பக்தர்களில் சிறந்த உத்தவன் இங்ஙனம் பகவானால் நியமிக்கப்பெற்று உபாஸ்யவஸ்து உபாஸகன் உபாஸனம் இவற்றின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிய விரும்பி நமஸ்கரித்து தன் பக்தர்களைக் கைவிடாமல் காக்குந் தன்மையனான அப்பகவானைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

உத்தவன் சொல்லுகிறான்:—யோகநிர்வாஹகனே! யோகத்தை உபதேசிப்பவனே! யோகாதாரனே! யோகத்தால் பெறக்கூடிய பலனாயிருப்பவனே! யோக சாஸ்த்ரத்தை உற்பத்தி செய்தவனே! மோக்ஷத்தின்பொருட்டு எல்லாவற்றையும் துறக்கும்படி மொழிந்தனை. மீளவும் மனப்பற்றில்லாதபடியல்லவோ துறக்கவேண்டும். (காலபுருஷதானம் வாங்கினவன் தன் ப்ராணன்களைக் காக்கும்பொருட்டுத் தன் ஸொத்தையெல்லாம் துறந்து மீளவும் த்ரவ்யார்ஜனஞ் செய்து ஜீவிக்கப் பார்க்கிறான். இது அப்படியன்றல்லவா? அடியோடு துறந்து மீளவும் அவற்றை நெஞ்சிலும் நினைக்கலாகாதல்லவா?) ஆனாலென்னென்கிறாயோ? மஹானுபாவனே! சப்தாதி விஷயங்களில் நிலைநின்ற மனமுடையவர் சப்தாதி விஷயங்களை அடியோடு துறப்பதென்பது வருந்தியும் செய்ய முடியாத கார்யம். ஸர்வாந்தராத்மாவான உன்னிடத்தில் பக்தியில்லாதவர்களுக்கோவென்றால் இது முதலே முடியாது. (அவர்கள் இதை நெஞ்சிலும் நினைக்கவல்லவரல்லர்.) என்று என்னுடைய

அபிப்ராயம். பக்தியோகம் கைகூடினவர்கள் மஹாநந்தஸ்வரூபனான உன்னை அனுபவிப்பதில் நிலைநின்றிருப்பவராகையால் சப்தாதி விஷயங்களை ஒருகால் துறந்தாலும் துறக்கக்கூடுமன்றி மற்றவர்களுக்கு அது முடியவே முடியாது. சப்தாதி விஷயங்களைத் துறக்க வேண்டுமென்று நீ எவனுக்கு உபதேசித்தனையோ, அத்தகைய நான் உன்மாயையினால் ஏற்பட்டிருக்கின்ற தேஹத்திலும் தேஹானுபந்திகளான புத்ர களத்ராதிகளிடத்திலும் நானென்றும் என்னுடையதென்றும் அஹங்கார மமகாரங்களால் மதிமயங்கி ஸம்ஸாரஸாகரத்தில் முழுகிக் கிடக்கின்றேன். அத்தன்மையுள்ள நான் நீ மொழிந்ததையெல்லாம் எங்ஙனம் அனாயாஸமாக நிறைவேற்றிக்கொள்வேனோ, அங்ஙனம் உன்ப்ருத்யனாகிய எனக்கு நீ சொன்னதையெல்லாம் மீளவும் விவரித்துச் சொல்வாயாக. 'நான் சுருக்கமாகச் சொன்னேன். உனக்கு விரிவாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் விருப்பமுள்ளதாயின், மற்றொருவரிடம் கேட்டுத் தெரிந்துகொள்வாயாக' வென்று கைவிடலாகாது. ஏனென்றால் (முகுந்தனே! நீ ஜ்ஞானநந்தமயனாயிருக்கையால் ஸ்வபாவம் என்றும் மாறாதிருக்கப் பெற்றவன்; தன்னிலைமையை என்றும் ஸாக்ஷாத்கரித்துக் கொண்டிருப்பவன்; ஜீவாத்மாவுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன். இத்தகைய உன்னைக்காட்டிலும் உபதேசஞ் செய்யவல்ல மற்றொருவன் தேவதைகளிலுங்கூட எனக்குப் புலப்படவில்லை. ப்ரஹ்மதேவன் முதலிய ஸமஸ்ததேவதைகளும் உன்னுடைய மாயையினால் மதிமயங்கிக் கர்மாதீனமான தேஹங்களையுடையவர்கள்; ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மாவென்னும் புத்தியுடையவர்கள். எத்தகை

யர்களேனும் உன்பாதாரவிந்தங்களின் குணுனுபவத்தில் ரஸமறிந்த பாகவதர்களோடு சேராதிருப்பார்களாயின் உபதேச மில்லாமல் கேவலயுக்திகளால் எவ்வளவு வெல்லப் பார்க்கினும் உன்மாயை அவர்களை விடுகிறதில்லை. ப்ரஹ்மாதிகளுங்கூட அத்தகைய உன்மாயையினுல் மதிமயங்கப்பெற்றவர்களே. ஆனல் ஸத்துக்களோடு ஸஹவாஸஞ் செய்யலாமேயென்றால், ஆணும் பெண்ணுமாய்க் கலந்து ஸுகிக்குந்தன்மையுடைய க்ருஹஸ்தர்களுக்குள் எவர்கள் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களால் மனவருத்த முற்றுச் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கவேண்டுமென்னும் விருப்பம் அடங்கப்பெற்றிருக்கின்றார்களோ, அத்தகையர்களுக்கே ஸத்புருஷர்களோடு ஸஹவாஸம் உண்டாமன்றிச் சப்தாதிவிஷயங்களை அனுபவிக்கவேண்டுமென்னும் பேராவலுற்றவர்களுக்கு அது உண்டாகாது. உன்னைக் காட்டிலும் வேறு உபதேசஞ் செய்பவன் தேவதைகளினுங்கூட அகப்படாமையால் ஸம்ஸாரதுக்கங்களால் பரிதபித்து மனவெறுப்புற்றிருக்கின்ற நான் உன்னையே சரணம் அடைகின்றேன். நீ மோஹம் முதலிய தோஷங்கள் தீண்டப் பெருதவன்; அளவிட்டறிய முடியாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடையவன்; ஸமஸ்த வஸ்துக்களையும் ஸாக்ஷாத்கரித்தவன்; ஸர்வநியாமகன்; எவ்விதக் கெடுதியுமில்லாத வைகுண்டமென்னும் ஸ்தானத்தையுடையவன்; நரர்களுக்கு ப்ராப்யனும் ப்ராபகனும் ஆதாரனுமாகையால் நாராயணனென்னும் பெயருடையவன்; நரனுக்கு நண்பன். (ஆகையால் உன்னிடத்தில் ஆசார்யனயிருக்கைக்கு வேண்டிய குணங்களெல்லாம் அமைந்திருக்கின்றன. ஒன்றையொன்ருக நினைக்குந்தன்மையாகிற ப்ரமமும் தெரிந்ததை மறக்

குந்தன்மையாகிற ப்ரமாதமும் மற்றுமுள்ள தோஷங்களும் உனக்குக் கிடையா. உன்னுடைய அறிவு அளவற்றது. உனக்குத் தெரியாதது எதுவுமே இல்லை. உன்னறிவு கர்மாதீனமாய் விளைந்த தன்று; இயற்கையாகவே ஏற்பட்டிருப்பது. அவ்வறிவு என்றும் மாறாதது. நீ ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் தத்வோபதேசஞ் செய்யும்பொருட்டு நாராயணாவதாரஞ் செய்தனை. அர்ஜுனாதிகளை முன்னிட்டுத் தத்வோபதேசஞ் செய்தனை. ஆகையால் இத்தகையனான உன்னையே நான் சரணம் அடைகின்றேன்).

ஸ்ரீபகவான் சொல்லுகிறான் :— உலகத்திலுள்ள வஸ்துக்களுக்கு இயற்கையில் ஏற்பட்ட குணங்களை ஆராய்ந்தறியுந்திறமையுடைய பெரியோர்கள் தங்கள் மனத்தை அடக்கிக்கொண்டு அம்மனத்தினாலேயே தம்மைச் சப்தாதிவிஷயவாஸனையினின்று கரையேற்றுகிறார்கள். ஆகையால் புருஷனுக்கு ஹிதத்தை நடத்துங் குரு நன்கு சிக்ஷிக்கப்பட்ட மனமே. (மனுஷ்யஜன்மத்தில் மனத்தை அடக்கியாள்கையும் விவேகமும் நன்மையும் ஸுகமாய்க் கிடைக்கக்கூடியவை). மனுஷ்யனாகப் பிறந்தவன் ஶ்ருதி ஸ்ம்ருதிகளால் ஆராய்ந்து நன்மையைப் பெறக்கூடுமல்லவா? மற்ற ஜந்துக்கள் அறியமாட்டாமற்போயினும் மனுஷ்யனாகப் பிறந்தவன் ப்ரத்யக்ஷத்தில் சப்தாதி விஷய ஸுகங்கள் நஶ்வரங்களென்பதை ஆராய்ந்து இங்ஙனமே ஸ்வர்க்காதி ஸுகங்களுமென்று ஊஹித்து வைராக்யத்தினால் நன்மையைப் பெறலாமல்லவா? மனுஷ்யஜன்மத்திலேயே சித்து அசித்து ஈஶ்வரன் என்னும் தத்வங்களை ஆராய்ந்தறிகையாகிற ஸாங்க்யம் பரமாத்மோபாஸனமாகிற யோகம் இவற்றில் நிபுணர்களான

பெரியோர்கள் இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு ப்ரக்ருதிபுருஷர்களிடத்தில் நோக்கக்கூடாத ஸர்வஜ்ஞத்வம் ஸத்யஸங்கல்பத்வம் முதலிய ஸமஸ்த சக்திகளும் நிறைந்த என்னை ஸ்பஷ்டமாக அறிகின்றார்கள். ஒற்றைக்காலுடையவைகளும் இரண்டு கால்களுடையவைகளும் மூன்று கால்களுடையவைகளும் நான்கு கால்களுடையவைகளும் பல கால்களுடையவைகளும் காலில்லாதவைகளுமான பல சரீரங்கள் முன்பு படைக்கப்பட்டன. அவற்றில் இரண்டு பாதங்களையுடைய மனுஷ்ய சரீரமே எனக்கு ப்ரியமானது. (மனுஷ்ய ஜன்மத்திலன்றோ என்னை அறிந்து மோக்ஷமாகிற பெருநன்மையைப் பெறலாம். ஆனதுபற்றி மனுஷ்யஜன்மமே எனக்கு ப்ரியமாயிருக்கும்.) (ஆனால் மனுஷ்ய ஜன்மத்தில் பிறந்தவர்கள் எல்லோரும் உன்னை அறிகின்றார்களா? என்றால், சொல்லுகிறேன்.) எல்லோரும் அறிகின்றதில்லை. பின்னையோவென்றால், சிலர் மாத்ரமே ஸர்வேச்வரனான என்னை ஆராய்ந்து அறிகின்றார்கள். ப்ரத்யக்ஷத்தினால் அறியப்படுகிற ரூபாதி குணங்களாகிற அடையாளங்களால் என்னை அறியமுடியாது. ப்ரத்யக்ஷமூலமான அனுமானத்தினாலும் அறிய முடியாது. இப்பொழுது நான் சொன்ன இவ்விஷயத்தில் அவதூதனுக்கும் மஹாதேஜஸ்வியான யதுவுக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழைய இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். அவ்விதிஹாஸத்தை இதோ சொல்லுகிறேன், கேள். தர்மங்களை உணர்ந்த யதுவென்பவன் எண்ணெய்தேய்த்து முழுகுதல் முதலிய தேஹஸம்ஸ்காரங்களைத் துறந்திருப்பவனும் குளிர் காற்று வெயில் முதலிய எதிலும் பயமின்றித் திரிகின்றவனும் யௌவன வயதுடையவனும் வித்வானுமாகிய (அறிஞனுமாகிய) ஒரு ப்ராஹ்மணனைக் குறித்து மேல்வருமாறு வினவினான்.

யது சொல்லுகிறான்:—அந்தணரே! நீர் இந்த்ரியங்களின் ப்ரீதிக்காகச் செய்ய வேண்டிய கார்யங்களெவற்றையும் செய்யாமல் வெறுமனே இருக்கின்றீர். உம்முடைய புத்தியோவென்றால் மிகவும் திறமை அமைந்து, ஸர்வலோகவிலக்ஷணமாயிருக்கின்றது. நீர் இந்த புத்தியைப் பற்றி வித்வானாயிருந்தும் ஒன்றும் தெரியாத இளைஞன்போல் திரிகின்றீர். இத்தகைய புத்தி உமக்கு எந்தக்காரணத்தினால் உண்டாயிற்று? உலகத்தில் மனுஷ்யர்கள் பெரும்பாலும் தர்ம அர்த்த காமங்களைப் பெறுதற்கும் அவற்றிற்கு வேண்டிய ஸாதனங்களை அறிவதற்கும் ஆயுள் புகழ் பொருள் இவற்றிற்காகவும் விருப்பத்துடன் முயற்சி செய்கின்றார்கள். நீரோவென்றால், நல்ல ஸாமர்த்ய முடையவர்; எல்லாம் அறிந்தவர்; எல்லாத்திறமைகளும் அமைந்தவர்; கண்ணுக்கினிய காட்சியுடையவர்; அம்ருதம்போல் இனிதாகவும் ஹிதமாகவும் மிதமாகவும் பேசுந்தன்மையர். ஆகையால் உமக்கு அசக்தியாவது அறிவின்மையாவது திறமையில்லாமையாவது கண்ணுக்கு வழுங்காமையாவது துர்ப்பாஷித்வமாவது கிடையாது. நீர் நினைத்த கார்யங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொள்ள வல்லவர். ஆயினும் ஒன்றுமறியாத மூடன்போலவும் பித்தம்பிடித்தவன்போலவும் பிசாசம்போலவும் ஒன்றும் செய்யாதிருக்கின்றீர்; விரும்புவதுங்கூட இல்லை. உலகத்திலுள்ள ஜனங்கள் அனைவரும் காமம் லோபம் இவையாகிற காட்டுத்தீயினால் தபிக்கப்பட்டு வருந்திக்கொண்டிருக்கையில், காட்டுத்தீயினின்று விடுபட்டுக் கங்கா ப்ரவாஹத்தினிடையிலிருக்கும் யானைபோல் அவ்வருத்தமின்றி ஸுகமாயிருக்கின்றீர். ப்ராஹ்மணரே! சப்தாதி விஷயங்களின தீண்

டுதலின்றித் தேஹானுபந்திகளும் எவையுமின்றித் தனியராயிருக்கின்ற நீர் மனத்தில் மிகவும் ஆநந்த முற்றிருப்பதற்குக் காரணம் எதுவோ, அதை வினவுகின்ற எமக்குச் சொல்வீராக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மிகுந்த பாக்யமுடையவரும் சிறந்த மதியமைந்தவருமாகிய அவ்வந்தணர் ப்ராஹ்மணகுலத்திற்கு வேண்டிய உபகாரங்களைச் செய்யுந்தன்மையனும மிகுந்த புத்தியுடையவனுமாகிய யதுவினால் வினவி வெகுமதி செய்யப்பெற்று மிகுந்த பணிவினால் வணக்க முற்றிருக்கின்ற அந்த யதுவைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—எனக்கு என்புத்தியினால் அங்கீகரிக்கப்பட்ட பல குருக்கள் உண்டு. இந்தக் குருக்களிடத்தினின்று அப்யஸித்த புத்தியை நிலை நிறுத்திக் கொண்டு ஸம்ஸாரிகளுக்கு ஸஹஜமாய் ஏற்படுகின்ற ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களினின்று விடுபட்டு நான் ஸுகமாய்த் திரிந்துகொண்டிருக்கின்றேன். நான் என்புத்தியினால் அங்கீகரித்த அந்தக் குருக்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. பூமி காற்று ஆகாசம் ஜலம் அக்னி சந்த்ரன் ஸூர்யன் புறு மலைப்பாம்பு ஸமுத்ரம் விட்டில் வண்டு யானை தேன்கூடுகளைப் பறிக்கும் வேடன் மான் மீன் பிங்களை யென்னும் பெண்மணி அழுகுரல்பக்ஷி சிறுவன் கன்னிகழியாத பெண் இருப்புவேலை செய்யுங் கருமான் பாம்பு நூல்பூச்சி குளவி ஆகிய இவ்விருபத்து நான்கு பேர்களையும் நான் என்புத்தியினால் குருக்களாக ஏற்றுக்கொண்டிருக்கின்றேன். ராஜனே! இவற்றின் செயல்களைப் பார்த்து நான் என் மனத்தைச் சிக்ஷித்துக் கொண்டேன். கஹுஷகுமாரனே! புருஷஶ்ரேஷ்டனே! இவற்றுள்

எதினிடத்தினின்று எவ்விதத்தை எப்படி சிக்ஷித்துக் கொண்டேனோ, அதை யெல்லாம் அப்படியே சொல்லுகிறேன்; கேட்டுத் தெரிந்து கொள்வாயாக. புருஷன் தெய்வத்தினால் தூண்டப்பட்ட பூதங்களால் பீடிக்கப்படினும் அந்த வருத்தங்களையெல்லாம் பொறுத்துக் கொண்டு பூதங்கள் தன்னைப் பீடிப்பதற்குக் காரணம் தன்னுடைய கர்மமேயன்றி அவற்றின்மேல் தோஷமில்லையென்று நினைத்துத் தான் நடக்கவேண்டிய மார்க்கத்தினின்று நழுவலாகாது. இந்த வ்ரதத்தை நான் பூமியினிடத்தினின்று கற்றுக்கொண்டேன். ஸாதுவாயிருப்பவன் தன் செயல்களெல்லாம் எப்பொழுதும் பிறர்க்கு உபகாரமாகவேயிருக்கப் பெற்றுப் பிறர்க்கே உபயோகமான பிறவியுடையவனுமா யிருக்கவேண்டுமென்னும் இன்னிலைமையைப் பிறர்க்கே உபயோகமான அருவி முதலியவற்றையுடைய பர்வதத்தினிடத்தினின்றும், வ்ருக்ஷங்களுக்குச் சிஷ்யனாகிப் பராதீனமாயிருக்கையையும் அப்யஸிக்க வேண்டும். (வ்ருக்ஷங்கள் வெட்டினாலும் வேரோடு பிடுங்கினாலும் தடையாவது அனுமதியாவது ஒன்றும் செய்யாதிருப்பதுபோலப் பிறர் தன்னை எது செய்யினும் அதற்கெல்லாம் தடையாவது அனுமதியாவது எதுவும் செய்யாதிருக்க வேண்டும்). ப்ராணவாயு ஆஹாராதி மாத்ரத்தினால் நிலை நின்றிருக்கிறது; சப்தாதி விஷயங்களை அபேக்ஷிக்கிறதில்லை. அங்ஙனமே முனியாயிருப்பவன் ப்ராணதாரணமாத்ரத்திற்கு வேண்டிய ஜீவனத்தோடு நிலை நின்றிருக்கவேண்டும்; இந்த்ரியங்களுக்கு ப்ரீதியை விளைக்கின்ற சப்தாதி விஷயங்களை விரும்பலாகாது. ப்ராணதாரணத்திற்கு வேண்டிய ஆஹாரமுங்கூட இல்லாது போமாயின் மனம் தளர்ந்து ஜ்ஞானம் நசித்துப்போம். ஆகையால்

ஜ்ஞானம் நசியாதிருப்பதற்காகவும் மனம் தளராதிருப்பதற்காகவும் அவ்வளவுக்குப் போதுமான ஜீவனத்தை அபேக்ஷிக்க வேண்டியது அவஶ்யமே. இஷ்டங்களும் அனிஷ்டங்களும் இருவகைப் பட்டவைகளும் இரண்டு வகையிலும் அடங்காமல் மத்யஸ்தமாயிருப்பவைகளுமான விஷயங்களை இந்த்ரியங்களால் அனுபவித்துக்கொண்டிருப்பினும் ப்ரீதியும் த்வேஷமுமாகிற குணதோஷங்களினின்று விடுபட்ட மனமுடையவனாகி எல்லா விஷயங்களிலும் வாயுவைப் போல் பற்றற்றிருக்க வேண்டும். ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்த யோகி ப்ருதிவி முதலிய தத்வங்களின் பரிணாமமான தேஹங்களில் ப்ரவேசித்து தேவத்வம் மனுஷ்யத்வம் ஸ்தூலத்வம் க்ருசத்வம் முதலிய தேஹதர்மங்களோடு கூடினவன்போலத் தோற்றினும் 'நான் தேவன், நான் மனுஷ்யன்' என்றும் 'நான் பருத்திருக்கிறேன்' 'நான் இளைத்திருக்கிறேன்' என்றும் தேஹதர்மங்களை ஆத்மாவினிடத்தில் நினைக்கமாட்டான். காற்று நல்ல மணமுடையவைகளும் கெட்ட மணமுடையவைகளுமாகிய வஸ்துக்களில் பட்டுக்கொண்டு வரினும் அவ்வஸ்துக்களின் குணங்கள் தீண்டப் பெறாதிருப்பதுபோல, ஆத்மா தேஹத்தின் குணங்கள் தீண்டப் பெறாதவன். ஆத்மாவுக்குள்ள இந்நிலைமையைக் காற்றினிடத்தினின்று அப்யஸிக்கவேண்டும். பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை உணர்ந்து மனனஞ்செய்பவன் வேதாந்தவாக்யங்களின் நிரூபணத்தினால் ஸமஸ்தவஸ்துக்களும் பரப்ரஹ்மஸ்வரூபங்களேயென்று ஏற்பட்டிருக்கையால் ஜங்கமஸ்தாவர ரூபமான ஸமஸ்த பூதங்களிலும் இடைவெளியின்றி நிறைந்திருக்கின்ற பரமாத்மா உள்ளும்புறமும் வ்யாபித்திருப்பதை ஆராய்ந்து அவன் ஆகாசத்தைப்போல எங்கும் தடை

யின்றி ப்ரவேசிக்குந்தன்மையனென்று பாவிக்கவேண்டும்: தேஜஸ்ஸு ஜலம் பூமி ஆகிய இவற்றின் பரிணாமங்களான மேகங்களென்னும் பதார்த்தங்கள் காற்றினால் தூண்டப்பட்டு ஆகாயத்தில்நிறைந்திருப்பினும் அவ்வாகாசம் அம்மேகங்களால் தீண்டப்படாதிருப்பதுபோலப் பரமாத்மா காலத்தை நிமித்தகாரணமாகக் கொண்டு தான் படைத்தவைகளும் ஸத்வாதிகுணங்களின் பரிணாமங்களுமான ஜங்கமஸ்தாவரங்களுக்கு ஆதாரமாயிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறுகிறதில்லை. (பரமாத்மா ஸமஸ்த ஜங்கமஸ்தாவரங்களுக்கு ஆதாரமாயிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாமல் பரிசுத்தனாயிருப்பானென்பதை மேகங்களால் தீண்டப்பெறாத ஆகாசத்தினின்று அறியவேண்டும்.) பரப்ரஹ்மத்தை த்யானஞ்செய்யும் முனிவன் நிர்மலனும் இயற்கையில் ஸ்னேஹமுடையவனும் மதுரமாயிருப்பவனும் சாஸ்த்ரங்களை உணர்ந்து ப்ராணிகளுக்கு இனியத்துறையுமாகி ஜலத்தைப்போன்று தர்சனம் ஸ்பர்சனம் கீர்த்தனம் இவைகளால் புனிதஞ் செய்கின்றான். மிகுந்த அறிவுடையவனும் தவத்தினால் மிகுதியும் விளக்கமுற்றவனும் பிறர்க்கு அணுகமுடியாதவனும் உதரத்தையே பாத்ரமாகவுடையவனுமாகிய முனிவன் அக்னியைப்போல் ஸமஸ்தவிதமான ஆஹாரங்களைப் பக்ஷிப்பினும் அவற்றால் தோஷங்களுக் கிடமாகிறதில்லை. அக்னி ஒருகால் நீறுபூத்து மறைந்திருப்பதுபோல ஒருகால் தன்மஹிமையை வெளியிடாமல் மறைந்தும், அவ்வக்னி ஒருகால் நெய் முதலியவற்றால் ஹோமஞ் செய்யப்பெற்று ஸ்பஷ்டமாய் எரிவதுபோல், ஒருகால் யோகாப்யாஸாதிகளால் ஸ்பஷ்டனாயும் ஸ்வர்க்க மோக்ஷாதிரூபமான நன்

மையை விரும்புமவர்களுக்கு அக்னியைப்போல உபா ஸிக்கத்தகுந்தவனுமாகி, அக்னி ஹோமஞ் செய்கிற வர்களின் இஷ்டப்படி ஹவிஸ்ஸை அங்கீகரிப்பதுபோல வும் அவர்களுடைய பாபங்களைப் போக்குவது போல வும், அன்னம் முதலியன கொடுக்கிறவர்களின் போஜ பிழைகளையும் புகும்பிழைகளையும் போக்கிக்கொண்டு அவர்கள் கொடுக்கிற அன்னாதிகளைப் புசிப்பான் (அக்னி பிறர் கொடுக்கும்பொழுது ஹவிஸ்ஸைப் பெறுவது போல் முனிவனும் ஆஹாரம் கிடைக்கும்பொழுது புசிப் பான்.) அக்னி காஷ்டங்களில் பற்றி அக்காஷ்டங் களின் உருவமுடையதாய்த் தோற்றுவதுபோலப் பரம புருஷன் தன்மாயையினால் படைத்த சேதனா சேதனரூப மான ஜகத்தில் ப்ரவேசித்து அந்த தேவமனுஷ்யாதி ரூபனாய்த் தோற்றுகிறான். (அக்கினிக்கு ஆதாரமான காஷ்டங்களின் குணம் அவ்வக்னிக்கு இயற்கையில் ஏற் பட்டதல்லாததுபோலச் சரீரங்களைச் சேர்ந்த தேவத்வ மனுஷ்யத்வாதிதர்மங்கள் அந்தராத்மாவான பரமாத் மாவைச் சேர்ந்தவைகளல்ல. வளர்தலும் குறைதலும் சந்த்ரனுடைய கலைகளுக்கே யன்றிச் சந்த்ரனுக்கு அவை இல்லாததுபோல, நிஷேகம் முதல் மரணம் வரையிலுள்ள விகாரங்களெல்லாம் அறியமுடியாத கதி யையுடைய காலத்தினால் தேஹத்திற்கு ஏற்பட்டவைக ளேயன்றி ஆத்மாவுக்கு அவை கிடையா. (அக்னி யையும் த்ருஷ்டாந்தமாகக் கொண்டு இவ்விஷயத்தை ஆராய்ந்தறியலாம்). அக்னி இருப்பினும் அதன் ஜ்வா லைகளுக்கே தோற்றமும் மறைதலும் உண்டாகின்றன. அங்ஙனமே பிறத்தல் சாதல் இவை ப்ரவாஹம்போல் நித்யங்களாயினும் பஞ்சபூதங்களின் பரிணாமங்களான தேஹங்களுக்கேயன்றி ஆத்மாவுக்கு அவை கிடையா.

அவையும் ப்ரவாஹத்தின் வேகம்போன்ற வேகமுடைய காலத்தினால் உண்டாகின்றன. ஸூர்யன் தன்கிரணங்களால் ஜலத்தை இழுப்பதும் விடுவதும் செய்வது போல, ஜீவன் தகுந்த காலத்தில் விஷயங்களை நிறைத்து வைத்துக்கொள்ள வேண்டும். ஸமயம் நேரும்பொழுது விரும்புகிறவர்களுக்கு அவற்றைக் கொடுக்க வேண்டும், ஸம்பாதித்த வஸ்துக்களைத் தான் உபயோகப்படுத்தலாகாது. போக்யவஸ்துக்களைப் பிறர்க்கே உபயோகப்படுத்தவேண்டும். கண்ணுக்குப் புலப்படுகின்ற தேவ மனுஷ்யாதி தேஹங்களையே ஆத்மாவாக ப்ரமிக்கும் மூடர்கள் தேவமனுஷ்யாதி தேஹங்களில் அமைந்திருக்கின்ற ஆத்மாக்களிடத்தில் தேவமனுஷ்யாதிபேதம் இல்லாதிருப்பினும் அவர்களிடத்தில் அந்தப்பேதம் இருப்பதாக நினைக்கின்றார்கள்; தங்களையும் 'நான் தேவன், நான் மனுஷ்யன்' என்றும், 'நான் இளைத்திருக்கிறேன். நான் பருத்திருக்கிறேன்' என்றும் பார்க்கின்றார்கள். (தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவை அறிந்தவர்களோவென்றால் தேவத்வ மனுஷ்யத்வாதி பேதங்களையும் இளைத்தல் பருத்தல் முதலிய தேஹதர்மங்களையும் ஆத்மாவினிடத்தில் இருப்பதாக நினைக்கமாட்டார்கள். ஆகாயத்தில் இருக்கின்ற ஸூர்யன் கண்ணாடி ஜலம் முதலியவற்றில் ப்ரதிபலிப்பினும் அவற்றின் ஸ்வபாவங்கள் தன்மேல் தீண்டப்பெறாதிருப்பதுபோல ஆத்மாவும் தேவமனுஷ்யாதி தேஹங்களில் அமைந்திருப்பினும் அவற்றின் ஸ்வபாவங்கள் தன்மேல் தீண்டப்பெறாமலே இருக்கின்றான். ஆனால் ஸூர்யன் கண்ணாடி முதலியவற்றில் இல்லாமற்போயினும் இருப்பதுபோல் தோற்றுகிறான். ஆத்மாவோவென்றால் தேவமனுஷ்யாதி தேஹங்

களில் அமைந்திருப்பினும் அவற்றின் ஸ்வபாவங்கள் தன்மேல் தீண்டப் பெறுகிறதில்லை. எவனும் எதினிடத்திலும் ஸ்னேஹத்தை அதிகமாகச் செய்யலாகாது. அப்படி செய்வானாயின், கபோதம்போல் மதிகலங்கி வருத்தமுறுவான். அரண்யத்தில் ஒருகபோதம் மரத்தில் கூடு கட்டிக்கொண்டு பேடையுடன் சில வர்ஷங்களாக வஸித்துக் கொண்டிருந்தது. ஆணும் பெண்ணுமாகிய அந்தக் கபோதப்பறவைகள் ஸ்னேஹபாசத்தினால் ஒன்றுக்கொன்று மனம் கட்டுண்டு மைதுனஸுகத்தை அனுபவித்துக்கொண்டு ஒன்றோடொன்று கண்ணைக் கண்ணோடும் அங்கத்தை அங்கத்தோடும் புத்தியைப் புத்தியோடும் கலக்கச்செய்தன. ராஜனே! அவ்விரண்டில் பெண்கபோதம் கருத்தறித்து ஆண்பறவையால் தயை செய்யப்பெற்று மனதை விரும்பிற்றோ, அதையெல்லாம் அவ்வாண்கபோதப்பறவை வருந்தியும் கொண்டுவந்து கொடுத்தது. ஏனென்றால், அவ்வாண்பறவை காமக்கலவியில் ஆழ்ந்து இந்த்ரியங்களை வெல்லமுடியாமல் அவ்வாறு ஸ்னேஹம் உண்டாகப்பெற்றிருந்தது. அவ்விரண்டு பறவைகளும் ஒன்றோடொன்று மிகுந்த விஶ்வாஸம் உண்டாகப் பெற்றுப் படுத்தல் இருத்தல் திரிதல் நிற்றல் பேசுதல் விளையாடுதல் புசித்தல் முதலிய செயல்களையெல்லாம் காட்டுவழிகைகளில் ஆணும் பெண்ணுமாய்க் கலந்தே நடத்திக்கொண்டிருந்தன. பெண்கபோதப் பறவை முதலில் கர்ப்பந்தரித்து ப்ரஸவகாலம் வரப்பெற்றுக் கூடில தன்கணவனுடைய அருகாமையிலேயே முட்டைகளை இட்டது. சிலநாள் செல்லுகையில் அந்த முட்டைகளில் சிந்திக்க முடியாத மஹிமை அமைந்த பகவானுடைய சக்தியாகிய காலத்தினால் அவயவங்கள் ஏற்படப்பெற்றவைகளும் மெதுவான மயிர்

களுடையவைகளுமாகிய பறவைக்குட்டிகள் உண்டாயின. குட்டிகளிடத்தில் ப்ரீதியுடைய ஆணும் பெண்ணுமாகிய அந்தக் கபோதப் பறவைகள் இரண்டும் தங்கள் குட்டிகளை ப்ரீதியுடன் வளர்த்துக்கொண்டு வந்தன. மற்றும், அவை அக்குட்டிகளின் குரலைக் கேட்டுச் செவிக்கினியவைகளான அந்த சப்தங்களால் ஸந்தோஷம் அடைந்தன. மற்றும், மெதுவான ஸ்பர்சமுடைய அக்குட்டிகளின் சிறைகளாலும் இனிமையான குரல்களாலும் அழகிய சேஷ்டைகளாலும் அவைகள் நன்றாகப் பருத்து வளர்ந்து மேல்கிளம்பிப் பறப்பதனாலும் தாயுந் தந்தையுமாகிய அந்தக் கபோதப்பறவைகள் ஸந்தோஷம் அடைந்தன. ஒன்றுக்கொன்று ஸ்னேஹம் நிறைந்த மனமுடைய அப்பறவைகள் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மாயையினால் மதிமயங்கி மன இரக்கத்துடன் குட்டிகளைப் போஷித்துக்கொண்டு வந்தன. குடும்பத்தையுடைய அப்பறவைகள் ஒருகால் குட்டிகளின் ஆஹாரத்திற்காக வெளியில் சென்று அதைப் பெறவிரும்பிக் காடுமுழுவதும் நெடுநேரம் திரிந்தன. காட்டில் திரிந்துகொண்டிருந்த ஒரு வேடன் கூண்டின் அருகாமையில் உலாவிக்கொண்டிருந்த அந்தப் புறக்குட்டிகளைக் கண்டு வலையைப் பரப்பிப் பிடித்துக் கொண்டான். எப்பொழுதும் குட்டிகளைப் போஷிப்பதில் பேராவலுற்ற ஆணும் பெண்ணுமாகிய அக்கபோதப் பறவைகள் குட்டிகளுக்கு வேண்டிய ஆஹாரத்தை எடுத்துக்கொண்டு கூண்டிற்கு வந்தன. பெண்கபோதப் பறவை ஒன்றுமறியாத இளம்பருவமுடைய தன் குட்டிகள் வலையில் அகப்பட்டு மிகவும் வருந்தி முறையிடுவதைக் கண்டு தானும் வருந்தி முறையிட்டுக்கொண்டு அவைகளை எதிர்த்தோடிற்று. அப்பெண்பறவை எப்பொழுதும் ஸ்னேஹபாசத்தினால்

கட்டுண்ட மனமுடையதாகையால் தன்குட்டிகள் வலையில் கட்டுண்டிருப்பதைக் கண்டு பொறுக்கமுடியாமல் அவைகள் கட்டுண்டிருப்பதைக் கண்டும் பகவானுடைய மாயையினால் நினைவு மாறப்பெற்று (வலையில் நாமும் அகப்பட்டுக் கொள்வோமென்கிற தெளிவு நேரப்பெறாமல்) தானும் வலையில் விழுந்து கட்டுண்டது. அப்பால் ஆண்கபோதப்பறவையும் அவ்விடம் வந்து தன்னைக்காட்டிலும் அன்பிற்கிடமான தன்குட்டிகளும் தன்னோடொத்ததும் தனக்கு அனுரூபமுமாகிய தன் பார்யையும் வலையில் அகப்பட்டு வருந்துவதைக் கண்டு மிகவும் மனவருத்த முற்றுப் புலம்பிற்று.

கபோதம் சொல்லுகிறது:—ஆ! எனக்கு நேரிட்டிருக்கும் அபாயத்தைக் காண்பீர்களாக. நான் சப்தாதி விஷயங்களில் ஆழ்ந்த கெடுமதி யுடையவன். இத்தனை நாள் அவற்றை அனுபவித்தும் த்ருப்தி உண்டாகப் பெறாதிருக்கின்றேன். ஆனது பற்றியே நான் நினைத்தபடி ப்ரயோஜனம் கைகூடப் பெறாதிருக்கின்றேன. அதற்குக் காரணமென்ன வென்றால், நான் சிறிதும் புண்யஞ் செய்யவில்லை. (என்னுடைய பாபமே அதற்குக் காரணமாயிற்று). ஆனால் உனக்கு நேரிட்டிருக்கும் அபாயம் யாதெனில் சொல்லுகிறேன். தர்மம் அர்த்தம் காமம் என்கிற த்ரிவர்க்கத்திற்குக் காரணமாகிய எனது இல்லறவாழ்க்கை பாழாய் விட்டது. எனக்கு உரியளும் அனுகூலையும் கணவனையே தேவதையாக வுடையவளுமாகிய என் பார்யை சூன்யமாயிருக்கின்ற க்ருஹத்தில் என்னைத் துறந்து நல்லியற்கையுடைய தன் புதல்வர்களுடன் ஸ்வர்க்கலோகம் போகின்றாள். பார்யையும் ப்ரஜைகளும் மாளப்பெற்றேன். இனி என் பிழைப்பெல்லாம் துக்கமேயொழிய வேறில்லை. பார்யை

யும் ப்ரஜைகளுமில்லாமல் சூன்யமாயிருக்கின்ற க்ருஹத்தில் நான் தனியனாகி மனவருத்தத்துடன் எப்படி இருப்பேன்? இங்ஙனம் இல்லறவாழ்க்கையை அடியோடு இழந்த நான் ஏதுக்காகப் பிழைத்திருக்கவேண்டும். அந்த ஆசையுங்கூட எனக்கு ஏதுக்காக?

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—அவ்வாண் கபோதம் தன் குட்டிகள் வலையில் அகப்பட்டு ம்ருத்யுவின் வாயில் விழுந்து மூர்ச்சித்துத் துடிப்பதைக் கண்டும் அறிவின்மையால் வருந்தித் தானும் அந்த வலையில் விழுந்தது. கொடுந்தன்மையுள்ள வேடன் குடும்பத்தில் விருப்பத்தினால் வலையில் நுழைந்த அவ்வாண்கபோதப் பறவையையும் அதன் குட்டிகளையும் அதன் பார்யையாகிய பெண்கபோதப் பறவையையும் பிடித்துக்கொண்டு தன்ப்ரயோஜனம் நிறைவேறப்பெற்று வீட்டிற்குப் போனான். இங்ஙனம் இந்த்ரியங்களை வெல்லமுடியாமல் ஸுகதுக்கங்களில் அகப்பட்டு அதனால் பொழுதுபோக்குந்தன்மையனாகிக் குடும்பத்தைப் போஷித்துக்கொண்டிருப்பானாயின் மன இரக்கத்திற்கிடமாகிப் பிள்ளை பெண்டிர் முதலிய அனுபந்தங்களோடு கபோதப் பறவைபோல் வருந்துவான். தடையின்றி மோக்ஷத்திற்கு வழி காட்டுவதாகிய மனுஷ்ய சரீரத்தைப் பெற்றும் எவன் கபோதப் பறவைபோல் இல்லற வாழ்க்கையில் ஆழ்ந்திருக்கிறானோ, அவன் ஸன்மார்க்கத்தின்படியில் ஏறி விழுந்தவனென்று சொல்லுகிறார்கள். விவேகத்திற்கிடமல்லாத திர்யக் ஜந்துக்களுக்கு இத்தகைய நடத்தை யுக்தமே. ஸமஸ்த புருஷார்த்தங்களையும் ஸாதித்துக் கொடுக்கவல்ல மனுஷ்ய ஜன்மம் பெற்றவர்கள் இங்ஙனம் நடப்பது மிகவும் துரத்ருஷ்டமாகும்.

ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ராஹ்மணன் அஜகரம் முதலிய ஒன்பது வஸ்துக்களினிடத்தினின்று தெரிந்து கொண்ட விஷயங்களை யதுவுக்குக் கூறுதல்.

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—ராஜனே! இந்த்ரிய ஸுகங்கள் ப்ராணிகளுக்கு ஸ்வர்க்கத்திலும் நரகத்திலும் ப்ராரப்தகர்மத்தின்படி தானே உண்டாகின்றன. (நரகத்தில் ஸுகம் உண்டோவென்றால், அங்கும் அன்னபானாதிகளால் விளையும் ஸுகம் சிறிது உள்ளதே. ஸ்வர்க்கத்தில் விளையும் ஸுகமும் அதைப் போன்றதேயன்றி வேறன்று. பூர்வ கர்மத்தின் பலனாக எப்படி துக்கம் உண்டாகின்றதோ அப்படியே ஸுகமும் தானே உண்டாகின்றது). ஆகையால் ஸுகதுக்கங்களிரண்டும் ப்ராரப்தகர்மமூலமென்பதை அறிந்தவன் ஸுகத்திற்காக ப்ரயத்னஞ் செய்யலாகாது. (நாம் விரும்பாதிருப்பினும் துக்கங்கள் தானே உண்டாகின்றனவல்லவா? அங்ஙனமே ஸுகமும் தானே உண்டாகக்கூடும். ஆகையால் துக்கத்தைப்போல ஸுகத்தையும் விரும்பலாகாது). * அஜகரத்தின் செயல் போன்ற செயலுடையவனாகி ஆஹாரம் நல்ல ரஸமுடையதாயினும் விரஸமாயினும் நிறைவாயினும் குறைவாயினும் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைப் புசிக்க வேண்டுமென்றி அதற்காக ப்ரயத்னஞ் செய்யலாகாது.) ஆஹாரம் தெய்வாதீனமாய்க் கிடைக்காதுபோமாயின், அப்பொழுது அஜகரம்போல் ஆஹாரம் கிடைப்பதற்குத் தடையான பாபத்தை அனுபவித்துக்கொண்டு ஆஹாரமில்லாமலே அதற்காக ஒரு முயற்சியும் செய்யாமலே பல நாளாயினும் பேசாமல் படுத்திருக்கவேண்டும். இந்த்ரியபலம் மனோபலம் தேஹபலம் இவை அமைந்த தேஹமுடையவனாயினும் இஹலோகபோகங்

* அஜகரம் – மலைப்பாம்பு.

களைப்பற்றின முயற்சி யெதுவுஞ் செய்யாமல் பேசாம லே படுத்திருக்கவேண்டும். வேலை செய்வதற்குரிய இந்த்ரியங்கள் அமைந்தவனாயினும் நித்ரையின்றித் தத்வங்களின் ஆராய்ச்சியில் மனவூக்கமுற்றுத் தேஹஸௌகத்தை மனத்திலும் விரும்பலாகாது. இனி அதற்காக யத்னிக்கலாகாதென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?) முனியாயிருப்பவன் அசையாமல் நிலைநின்ற ஜலமுடைய ஸமுத்ரம்போல் வெளியில் தெளிந்தும் உள்ளே கம்பீரனும் இத்தகையனென்று நிச்சயித்துச் சொல்லவும் இவனென்ன ஒரு மனுஷ்யனென்று அலக்ஷ்யஞ் செய்யவும் கலக்கவும் முடியாமல் கரையற்றிருக்கவேண்டும். ஸமுத்ரம் வர்ஷாகாலத்தில் நதிகள் வந்து விழுகையால் வெள்ளம் நிறைந்திருப்பினும் கரையைக் கடந்துபோகிறதில்லை; வெயிற்காலத்தில் அந்த வெள்ளமில்லாமற்போயினும் உலர்ந்துபோவதுமில்லை. அங்ஙனமே ஸ்ரீமந்நாராயணனையே எல்லாவிதத்திலும் முக்யமாகப்பற்றின முனிவன் காமங்கள் நிறைந்திருப்பின் ஸந்தோஷம் அடைவதும் அவை இல்லாதிருப்பின் வருத்தமுறுவதும் செய்யலாகாது. விட்டில்பூச்சி விளக்கொளியின் வர்ணத்தைப் பார்த்துத் தின்பண்டமென்று மயங்கி அதில் விழுந்து மாண்டுபோவதுபோல், இந்த்ரியங்களை அடக்கியாளமாட்டாத புருஷன் பகவானுடைய மாயையைப்போல் மதிமயங்கச் செய்யுந்தன்மையுள்ள மடந்தையைக் கண்டு அவளுடைய விலாஸங்களால் மனம்பறியுண்டு நரகத்தில் விழுகிறான். பகவானுடைய மாயையினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட மடந்தையிடத்திலும் அவளுடைய ஸ்வர்ணமயமான ஆபரணங்களிலும் ஆடைகளிலும் மற்றுமுள்ள பூமாலை சந்தனம் முதலிய வஸ்துக்களிலும் போக்ய புத்தியினால் மனம் கலங்கி மதி

கெட்டு விவேகமற்று விட்டில்போல் நாசம் அடைகின்றான். (மடந்தையர் பணம் ஆபரணம் ஆடை முதலியவஸ்துக்களை ஈஸ்வரன் தன் மாயையினால் படைத்து வைத்திருக்கிறான் விவேகமில்லாத மூடர்கள் அவைகளைப் போக்யமென்று ப்ரமித்து, விட்டில் விளக்கொளியைக் கண்டு அதைத் தின்பண்டமென்று ப்ரமித்து அதில் விழுந்து நசிப்பதுபோல் அவைகளில் அகப்பட்டு நசித்துப்போகிறார்கள். விவேகமுடையவர் விட்டிலின் தசையைக் கண்டு மடந்தையர் முதலியவற்றில் போக்ய புத்தி கொள்ளலாகாது). முனிவன் தன்தேஹம் எவ்வளவு ஆஹாரம் உட்கொண்டால் தரித்திருக்குமோ அவ்வளவு ஆஹாரத்தையே அபேக்ஷிக்கவேண்டும். அதிலும், மதுகரம் புஷ்பங்களைக் கசக்காமல் அவற்றினின்று கொஞ்சங்கொஞ்சமாகத் தேன்களை எடுத்துக் கொள்வதுபோலப் பிறரை வருந்தச்செய்யாமல் பலரிடத்திலும் கொஞ்சங்கொஞ்சமாகவே ஆஹாரத்தை அபேக்ஷிக்கவேண்டும். (இல்லையாயின் ஒரே தாமரை மலரில் தேன்பருகவேண்டுமென்னுமாசையால் பற்றின மதுகரம் அது மூடிக்கொள்கையில் அதினின்று வெளிவரமுடியாமல் கட்டுண்டு வருந்துவதுபோல், முனிவன் குணங்களில் மனம் தாழ்ந்து ஒரே க்ருஹத்தில் நெடுநாள் ஆஹாரம் உட்கொள்வானாயின், அங்கு மனப்பற்று நேரப்பெற்று வருந்துவான்). மற்றும், மதுகரம் சிறிதென்றும் பெரிதென்றும் பாராமல் எல்லாப் புஷ்பங்களினின்றும் ஸாரமான தேனை எடுப்பதுபோல், திறமையுள்ள மனிதன் அற்பமென்றும் மஹத்தென்றும் பேதம் பாராமல் ஸமஸ்த சாஸ்த்ரங்களினின்றும் ஸாரமான பொருளை ஆராய்ந்தறிய வேண்டும். அங்ஙனமே பெரியோர்களென்றும் சிறியோர்களென்றும் பாராமல்

எல்லோரிடத்தினின்றும் நற்குணங்களை எடுத்துக் கொள்ள வேண்டும். குவித்த கைகளையே அன்னம் புசிக்கும் இலையாகவும் வயிற்றையே அன்னம் வைக்கும் பாத்ரமாகவும் கொண்டு பிச்சையெடுத்த அன்னத்தை அவ்வப்பொழுது புசிக்கவேண்டுமன்றி ஸாயங்கால ஆஹாரத்திற்கென்றாவது நாளை யாஹாரத்திற்கென்றாவது தேனீயைப்போல் சேர்த்து வைத்துக் கொள்ளலாகாது. பிச்சையெடுத்துப் புசிப்பவன் ஸாயங்காலத்திற்கு வேண்டுமென்றாவது நாளைக்கு வேண்டுமென்றாவது அன்னாதிகளைப் பிச்சை யெடுத்துச் சேர்த்து வைத்துக் கொள்வானாயின், தேன்களைச் சேர்த்து வைத்துக்கொள்ளுந் தேனீ அந்தத் தேன்களுடன் நசிப்பது போல், அவ்வன்னாதிகளுடன் நசித்துப் போவான். மரத்தினால் செய்த பெண்பொம்மையாயினும் அதைப் பாதத்தினாலுங்கூட ஸ்பர்சிக்கலாகாது. ஸ்பர்சிப்பானாயின், பள்ளம் வெட்டி அதை மண் புல் கட்டை முதலியவற்றால் மறைத்து அதன்மேல் வைத்த மரப்பெண் யானையைக் கண்ட யானை அதன் அங்கத்தைத் தொட முயன்றோடி அப்பள்ளத்தில் விழுந்து கட்டுண்பது போல், அவ்வளவுமாத்ரத்தினால் மதிமயங்கி ஸம்ஸாரமாகிற பள்ளத்தில் விழுந்து கட்டுண்பான். விவேகமுள்ளவன் தனக்கு ம்ருத்யுவைப்போன்ற மடந்தையை அணுகலாகாது. அப்படி அணுகுவானாயின் பெண் யானையை அணுகின யானை தன்னைக்காட்டிலும் மிகுந்த பலமுள்ள வேறு யானைகளால் அடியுண்டு மாள்வதுபோல, மிகுந்த பலமுடைய வேறு புருஷர்களால் அடியுண்டு மாள்வான். தேன்கூடுகளைப் பறிப்பவன் தேனீக்கள் சேர்த்து வைத்த தேனை அந்த ஈக்களைக் கொன்று பறித்துக்கொண்டுபோய் புசிப்பதுபோல்,

லோபமுடையவர்கள் தாங்களும் அனுபவிக்காமல் பிறர்க்கும் கொடாமல் வருந்திச் சேர்த்து வைத்த பண த்தை உபாயமறிந்த மற்றொருவன் கொண்டுபோய் அனுபவிக்கிறான். அவனும் அதைப் பிறர்க்கும் கொடா மல் தானும் அனுபவிக்காமல் சேர்த்து வைப்பானா யின், அவனைக்காட்டிலும் பலிஷ்டனாகிய மற்றொருவன் அதைப் பறித்துக் கொண்டுபோய் புசிப்பான். (ஆகை யால் தேனீக்களைப் போல் சேர்த்துவைக்கலாகாது.) தேனீக்கள் மிகவும் வருந்திச்சேர்த்துவைத்த தேனைத் தேன் பறிப்பவன் கொண்டுபோய்ப் புசிப்பதுபோல், மிக வும் வருந்திப் பணங்களைச் சேர்த்துவைத்து இல்லறவா ழ்க்கையில் விளையும் அன்னபானுதி ஸுகங்களை அனு பவிக்க விரும்பும் க்ருஹஸ்தர்களுக்கு முன்பு ஸன்னியா ஸி அவ்வன்ன பானுதிஸுகத்தை அனுபவிக்கின்றான். (ஆகையால் தேன்பறிப்பவன் தான் ஒரு முயற்சியும் செய்யாமல் தேனைப் புசிப்பதுபோல், ஸன்னியாஸி தான் ஒரு முயற்சியுமின்றியே போஜனத்தைப் பெறுவான்.) ஸன்னியாஸி, பகவத்விஷயத்தில் இழியாத அவிவே கிகள் ஆதரிக்கிற க்ஷுத்ரமான கானங்களைக் கேட்க லாகாது. இந்நிலைமையை வேடனுடைய கானத்தைக் கேட்டு மதிமயங்கி அகப்படுகிற மிருகத்தினிடத்தி னின்று அப்யஸிக்கவேண்டும். (மான் வேடனுடைய கானத்தைக் கேட்டு மயங்கி அவனால் பிடியுண்டு நசிப் பதுபோல, ஸன்னியாஸியும் க்ராம்ய கீதங்களைக் கேட்பா னாயின் மதிமயங்கி அந்தக்ராம்யர்களுடன் கலந்து நசிப் பான். ஆகையால் அதைக் கேட்கலாகாது. க்ராம்ய கானங்களைக் கேட்கலாகாதேயன்றிப், பகவத் விஷய மான கானங்களை அவஸ்யம் கேட்கவேண்டும்.) பெண் மானுடைய பிள்ளையாகிய ருஸ்யஸ்ருங்கர் பெண்டிர்கள்

நடத்தின கராமயமான கூத்து வாத்யம் பாட்டு இவை களைக் கேட்டு அவற்றில் ருசியுற்று அப்பெண்டிர்களுக் கு விளையாட்டுக் கருவிபோல் வசப்பட்டார். (ஆகையால் அவற்றைச் சிறிதும் பொருள் செய்யலாகாது). மிகவும் வசப்படுத்தி வருந்தச்செய்கிற நாக்கினால் ரஸங்களில் இழுக்கப்பட்டு மயங்கி மதிகெட்டு, மத்ஸ்யம் மாம்ஸம் தொடுத்த தூண்டுமுள்ளைக் கண்டு மாம்ஸத்தைப் புசிக்க முயன்று அதில் பிடியுண்டு நசிப்பதுபோல் ம்ருத்யுவைப் பெறுவான் (மேன்மேலும் ஸம்ஸாரபந்தத்தைப் பெறுவான்). இந்த்ரியங்களை ஜயிக்க விரும்பின விவேகிகள் ஆஹாரங்களைத் துறக்கையாகிற உபாயத்தினால் ரஸனேந்த்ரியம் தவிர மற்ற இந்த்ரியங்களை யெல்லாம் சீக்ரத்தில் ஜயிப்பார்கள். ரஸனேந்த்ரியத்தைமாத்ரம் ஜயிக்கமுடியாது. ஜயிக்க முடியாமை மாத்ரமேயல்லாமல், ஆஹாரங்களைத் துறந்திருப்பவனுக்கு ரஸனேந்த்ரியம் மேன்மேலும் வளர்ந்து வரும். மற்ற இந்த்ரியங்களை ஜயிக்கினும் ரஸனேந்த்ரியத்தை ஜயிக்காத வரையில் ஜிதேந்த்ரியனாகமாட்டான். ரஸனேந்த்ரியத்தை ஜயிப்பானாயின், இந்த்ரியங்களையெல்லாம் ஜயித்தாற்போலவே. முன்பு விதேஹநகரத்தில் பிங்களையென்னும் வேஸ்யை இருந்தாள். ராஜகுமாரனே! அவளிடத்தினின்று நான் கற்றுக்கொண்டது சிறிதுண்டு. அதைச் சொல்லுகிறேன். கேட்டுணர்வாயாக. அவள் ஒரு நாளைக்கு இவ்வளவு பணம் கொடுக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்துகொண்டு பரபுருஷர்களோடு புணருந்தன்மையள். அவள் ஒருகால் ஸங்கேதத்தின்படி பரபுருஷனுடன் புணரவிரும்பிச் சிறந்த ஆடையாபரணங்களால் நன்கு அலங்கரித்துக்கொண்டு தகுந்த ஸமயத்தில் வீட்டு வாசலில் நின்றிருந்தாள். புருஷஶ்ரேஷ்டனே!

மார்க்கத்தில் வரும் புருஷர்களைக் கண்டு, அவர்கள் பணமுடையவர்களாயினும் தன்னோடு ஸம்போகிப்பதற்குப் பணங் கொடுப்பதாக ஒப்புக்கொள்ளினும் அவர்கள் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட பணத்தைக் காட்டிலும் அதிகமான பணத்தைப் பெறவிரும்பி அவர்களை ஒப்புக்கொள்ளவில்லை. இங்ஙனம் வந்த புருஷர்களெல்லோரும் புறப்பட்டுப் போகையில் பரபுருஷர்களோடு புணர்ந்து பணம் வாங்கி ஜீவிக்குந் தன்மையுடைய அப்பிங்களை தன்னுடைய ஏற்பாட்டின்படி நிறையப்பணங் கொடுக்கத் தகுந்த பணக்காரனாகிய மற்றொருவன் எவனேனும் வரக்கூடுமென்னும் கெட்ட எண்ணத்தினால் உறக்கமின்றி வாசலில் நின்றுகொண்டு இடையிடையில் உள்ளே போவதும் வெளிவருவதுமா யிருக்கையில் அர்த்தராத்ரம் ஆய்விட்டது. பணத்தாசையினால் முகம் உலர்ந்து மனம் வாடிநிற்கிற அப்பிங்களைக்குப் பெரிய மனவெறுப்பு உண்டாயிற்று. ஆனால் அது அவளுக்கு ஸுகத்தை விளைப்பதும் மேல் விவரிக்கப்படுஞ் சிந்தைக்கு ஹேதுவுமாயிருந்தது. அப்பொழுது மனவெறுப்புற்ற அப்பிங்களை மொழிந்ததை உள்ளபடி சொல்லுகிறேன், கேட்பாயாக. (வெறுப்புற்றவள் சொன்ன வார்த்தையைக் கேட்பதனால் என்ன ப்ரயோஜனமென்று நினைக்க வேண்டாம்.) மனவெறுப்பென்பது புருஷனுடைய ஆசாபாசங்களுக்குக் கத்தியாயிருக்கும். (கத்தி பாசங்களை அறுப்பதற்குக் கருவியாயிருப்பது போல், புருஷனுடைய ஆசைகளைப் போக்குவதற்கு மனவெறுப்பே முதன்மையான ஸாதனம்.) ஓ யதுமன்னவனே! மனவெறுப்பு உண்டாகப் பெறாதவன் தேஹத்திலும் தேஹானுபந்திகளிடத்திலும் ஆசாபந்தத்தைத் துறக்க மாட்டான். ஆகையால் அதை அவஶ்யம் கேட்கவேண்டும்.)

பிங்களை சொல்லுகிறாள்:—மனத்தை வெல்ல முடியாதிருக்கின்ற எனக்கு மேன்மேலென அபாரமாய் விளைந்திருக்கும் மோஹத்தைக் காண்பீர்களாக. அம் மோஹத்தினாலன்றோ நான் துச்சனாகிய காதலனிடத்தினின்று என் விருப்பம் ஈடேறவேண்டுமென்று விரும்புகிறேன். ஆகையால் நான் விவேகமற்றவள். ஸர்வேஶ்வரன் ஸர்வகாலமும் ஹ்ருதயத்தில் அமைந்திருக்கிறானாகையால் அவன் எப்பொழுதும் ஸமீபத்திலேயே இருக்கின்றான் அவன் எல்லாவற்றிலும் மேலான அன்பிற்கிடமாயிருப்பவன். 'அவனிடத்தில் அன்பு உண்டானாலன்றோ அவன் அன்பிற்கிடமாவான். அதுவே இல்லாதிருக்க அவன் எப்படி அன்பிற்கிடமாவான்' என்றால், தன் விஷயமான ப்ரீதியைத் தானே விளைக்குந்தன்மையன். 'அர்த்த காமாதிகளை விரும்புகிறவனுக்கு அவனிடத்தில் ப்ரீதியினால் ஆகவேண்டியது என்ன? எனில், அப்படியன்று. அவன் தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களையும் வேண்டினவர்களுக்குக் கொடுக்குந் திறமையுடையவன். ஆகையால் அர்த்த காமங்களை ஏன் கொடுக்கமாட்டான்? இத்தன்மைகளுடன் என்றும் அவன் அழியாதிருப்பவன். இத்தகையனாகிய அந்தப் பகவானை விட்டு அவனுக்கு நேர்விபரீதமாகத் துக்கமாயிருக்கின்ற நரனைப் பணியப் பார்க்கிறேனே. இந்த நரன் தர்ம காமாதிகளைக் கொடுக்க வல்லவனல்லன்; பின்னையோ வென்றால் துக்கம் பயம் மனவியாதி சோகம் மோஹம் இவைகளைக் கொடுப்பவன். இத்தகையனை நரனைப் பணிகின்ற நான் ஒன்றுமறியாத மதிகேடியன்றோ? நான் 'இத்தனை பணம் கொடுத்தால் ஸம்போகிப்பேன்' என்னும் ஏற்பாடு செய்துகொண்டு அத-

ளுல் ஜீவித்து வந்தமை மிகவும் நிந்தைக்கிடமான செய லன்ளுே? இங்ஙனம் நிந்தைக்கிடமான கார்யத்தைச் செய்து நான் என்மனத்தை வீணுகப் பரிதபிக்கும்படி செய்துகொண்டேன். ஆ! இதென்ன வருத்தம். நான் இத்தனை நாள், ஸ்த்ரீலோலனும் பணத்தாசையுடைய வனும் 'இப்படியும் ஒருவன் உண்டோ?' என்று பெரி யோர்களால் சோகிக்கத்தகுந்தவனுமாகிய ஒரு நர னுக்கு என் தேஹத்தை விலைக்குக் கொடுத்து அவனி டத்தினின்று ஸம்போகத்தையும் பணத்தையும் விரும் பிக்கொண்டிருந்தேனல்லவா? தேஹமென்பது எலும்பு களால் ஏற்படுத்தப்பட்ட நெடுமோட்டுச்சரம் சரப் பட்டை தூலம் கைத்துண்டு வலிச்சல் இவைகளையுடை யதும் தோல் மயிர்கள் நகங்கள் இவைகளாகிற மேல் கூரைகளால் மூடப்பட்டதும் பெருக்குடன்கூடிய நவத் வாரங்களுடையதுமாகிய ஒருக்ருஹமாயிருக்கின்றது. அதற்குள் மல மூத்ரங்களே நிறைந்திருக்கின்றன. இத் தகைய மனுஷ்ய சரீரத்தை என்னைத் தவிர மற்ற எவள்தான் போக்ய புத்தியுடன் பணிவாள்? விதேஹ மன்னவர்களுடையதாகிய இந்நகரத்தில் நானொருத்தியே ஒன்றுமறியாத மூடை. ஏனென்ருல், நான், விரும்பின வர்களுக்குத் தன்னையுங் கொடுக்க வல்லவனுகிய அச் சுதனைத் துறந்து வேருெரு காதலனை விரும்புகிறேனல் லவா? ஆகையால் நான் துர்ப்புத்தியுடையவள். இந்த அச்சுதன் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவா யிருப்பவன்; ஆகையால் மிகவும் அன்பிற்கிடமானவன்; ஹிதத்தை விரும்பும் நண்பனும் நாதனுமாயிருப்ப வன். அத்தகைய பரமாத்மாவை ஆத்மஸமர்ப்பணத் திளுல் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு ஸ்ரீமஹாலக்ஷ்மி யைப்போல் அவனுடன் விளையாடலுற்றிருக்கவேண்

டும். உற்பத்தி விநாசங்களையுடைய சப்தாதிவிஷயங்களும் அந்த விஷய ஸுகங்களைக் கொடுக்கிற புருஷர்களும் தேவதைகளும் காலத்தினால் துரத்தப்பட்டவர்கள். அவர்கள் தம்மைப் பணிகின்ற பார்யைக்கு என்ன ப்ரியஞ்செய்தார்கள்? ஒன்றும் செய்யவில்லை. ஆகையால் (இஹத்திலாவது பரத்திலாவது அச்சுதனைத் தவிர மற்ற எவனும் பணியத் தகுந்தவனல்லன்). ஷாட்குண்ய பூர்ணனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணு ஏதோ ஒரு அஜ்ஞாத ஸுக்ருதத்தினால் என்விஷயத்தில் அன்புற்றிருக்கின்றான். நிச்சயம். ஏனென்றால், துராசையுடைய எனக்கு ஸுகத்தை விளைக்கவல்ல இத்தகைய மனவெறுப்பு உண்டாயிற்றல்லவா? அவனுடைய அனுக்ரஹமில்லாத பக்ஷத்தில் எனக்கு இந்த மனவெறுப்பு எப்படி உண்டாகும்? பகவான் இங்ஙனம் என்விஷயத்தில் ப்ரீதியுற்றிரானாயின், மனவெறுப்புக்கு ஹேதுக்களான வருத்தங்கள் மந்தபாக்யையாகிய எனக்கு நேரிடமாட்டா. 'மனவெறுப்புமாத்ரத்தினால் என்ன உபயோகம்?' என்றால், அப்படியன்று. புருஷன் மனவெறுப்பினால் தேஹத்தில் நானென்னும் அபிமானத்தையும் (அஹங்காரத்தையும்) தேஹானுபந்திகளிடத்தில் என்னுடையதென்னும் அபிமானத்தையும் (மமகாரத்தையும்) பாசங்களை அறுப்பதுபோல் அறுத்து மனத்தெளிவை அடைகின்றான். ஆகையால் அத்தகைய பகவான் செய்த உபகாரமான மனவெறுப்பைச் சிரஸாவஹித்து விவேகமற்ற மூடர்களோடு ஸங்கதிகளையும் துச்சமான சப்தாதி விஷயங்களில் விளைகிற துராசைகளையும் துறந்து ஈஶ்வரர்களுக்கும் மேற்பட்ட ஈஶ்வரனாகிய அந்தப் பகவானையே சரணம் அடைகின்றேன். பகவானைப் பணிகையாகிற கார்யத்தில் மன

துக்கமுற்றுப் பணம் முதலியன கிடைக்காமற்போயினும் அதனால் ஸந்தோஷமின்றி வருந்துந் தன்மையைத் துறந்து தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஜீவிப்பவளாகி அந்தராத்மாவும் அளவற்ற அன்பிற்கிடமுமாகிய இந்தப் பகவானோடு கூடவே நான் விளையாடலுற்றிருக்கின்றேன். இது நிச்சயம். 'தேவதைகள் பலரும் கிடக்க இவனோடு கூடவே விளையாடலுற்றிருக்கிறேனென்று ஏன் நிச்சயிக்கவேண்டும்?' என்றால், சொல்லுகிறேன். ஸம்ஸாரமாகிற கிணற்றில் விழுந்து சப்தாதி விஷயங்களால் விவேகம் பறியுண்டு காலமாகிற ஸர்ப்பத்தினால் கடியுண்டவனுமாகிய ஆத்மாவைக் காப்பதற்குப் பரமபுருஷனைத் தவிர மற்ற எவனும் ஸமர்த்தனாகமாட்டான். எப்பொழுது எல்லா விஷயத்தினின்று மனவெறுப்புற்று ஊக்கந்தவறுதலின்றி இந்த ஜகத்தெல்லாம் காலமாகிற ஸர்ப்பத்தினால் பிடியுண்டிருப்பதென்று நிச்சயித்துத் தெரிந்து கொள்கிறானோ, அப்பொழுது அங்ஙனம் தெரிந்து கொண்ட புருஷனுக்கு ரக்ஷகன் பரமாத்மாவேயன்றி மற்றெவனுமல்லன்.

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—அவ்வேஸ்யை இங்ஙனம் திடமாகப் புத்தியில் நிச்சயித்துக் காதலன் விஷயமான அபிலாஷத்தினாலுண்டான துராசையைத் துறந்து மனத்தெளிவை ஏற்றுக்கொண்டு படுக்கையில் படுத்துறங்கினாள். ஆகையால் ஆசையென்பது மிகவும் துக்கம்; ஆசையற்றிருக்கை மிகவும் ஸுகம். இதற்கு த்ருஷ்டாந்தம் இப்பொழுது சொன்ன பிங்களையே. காதலன்விஷயத்திலாசையால் துக்கமுற்றிருந்த பிங்களை அவ்வாசையைத் துறந்து உடனே ஸுகமாகத் தூங்கினாள். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ராஹ்மணன் அழுகுரல் பக்ஷி முதலிய மற்றவைகளிடத்தினின்று தெரிந்து கொண்ட விஷயங்களை யதுவுக்குச் சொல்லுதல்,

ப்ராஹ்மணன் சொல்லுகிறான்:—மனுஷ்யர்களுக்கு எந்தெந்த வஸ்து மிகவும் ப்ரியமாயிருக்குமோ, அந்த வஸ்துக்களைப் பரிக்ரஹிப்பது மிகவும் துக்கத்திற் கிடமாகும். எவன் அவை துக்கத்திற்கிடமாமென் பதை அறிந்து எதையும் பரிக்ரஹிக்காதிருக்கிறானோ, அவன் அளவற்ற ஸுகம் பெறுவான். வாயில் மாம்ஸ கண்டத்தைக் கவ்விக் கொண்டிருந்த அழுகுரல்பக்ஷி யை அதைக்காட்டிலும் பலிஷ்டங்களும் மாம்ஸமுற் வைகளுமாகிய பருந்து கழு முதலிய பக்ஷிகள் அடிக்க வந்தன. அவ்வழுகுரல்பக்ஷி அந்த மாம்ஸகண்டத் தைத் துறந்து ஸுகத்தை அடைந்தது. (அவ்வழுகு ரல்பக்ஷி அந்த மாம்ஸகண்டத்தில் ஆசையுற்று அதை விடாதிருக்குமாயின் பலிஷ்டங்களாகிய பருந்து முதலிய பக்ஷிகளால் அடியுண்டு மாண்டுபோகும். அதைத் துறந்தபடியால் அப்பக்ஷிகளால் அடியுண்டு மாளுகையாகிற ஆபத்தினின்று மீண்டது. ஆகையால் பரிக்ரஹங்களை விடுவானாயின் ஸம்ஸாரமாகிற ஆபத்தி னின்று விடுபடலாம்). எனக்கு மானாவமானங்கள் கிடையா. வீடு வாசல் பிள்ளை பெண்டிர் முதலிய பரிக் ரஹங்களை யுடையவர்களுக்குள்ள சிந்தையும் எனக்குக் கிடையாது. பின்னையோவென்றால், பரமாத்மாவோடுகூட வே விளையாடலுற்று அவனிடத்திலேயே ப்ரீதியுடை யவனாகி ஒன்றுமறியாத பாலன்போல் இவ்வுலகில் திரிகின் றேன். (பாலனுக்கு மானமாவது அவமானமாவது சிந்தை யாவது கிடையாதல்லவா? பாலனிடத்தினின்றே இந்நிலை மையை அப்யஸித்தேன்). மானாவமானங்களை அறியாத

வனும் தேஹாதிபோஷண சிந்தையும் அதற்கு வேண்டியமுயற்சியுமின்றி ஜடனுமாயிருக்கின்ற பாலனும் ஸத்வ ரஜஸ்தமோ குணங்களைக் கடந்த பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்த யோகியும் ஆகிய இவ்விருவருமே சிந்தையினால் விடுபட்டு மஹாநந்தத்தில் ஆழ்ந்திருப்பவர்கள். ஒருகால் ஓரிடத்தில் ஒருபெண்பிள்ளை தாய்தந்தைமுதலிய பந்துக்கள் அனைவரும் வெளியில் போயிருக்கையில் தன்னை வரிக்கும்பொருட்டுத் தன்வீட்டிற்குச் சிலர் வந்திருக்கக் கண்டு தானே அவர்களைப் பூஜித்தாள். மன்னவனே! அப்பெண்மணி அங்ஙனம் வந்தவர்களின் போஜனத்திற்காகச் சாலியென்னும் தான்யத்தை ஏகாந்தத்தில் குத்திக்கொண்டிருக்கையில் அவள் கையிலிருந்த சங்குவளைகள் பேரொலி செய்தன. அப்பொழுது ஆழ்ந்தமதியுடைய அப்பெண்மணி அங்ஙனம் நெல்லுகுத்துவது கீழ்மையென்றும், 'இது வந்தவர்களுக்குத் தெரியுமாயின் 'ஓ! இவளென்ன தானே நெல்லுகுத்துகிறாளே! இவளுக்குப் பந்துக்கள் இல்லையோ? இவள் ஏழை' என்று நினைப்பார்களென்றும் ஆகையால் அச்செயல் தனக்குத் தகாதென்றும் நினைத்து வெட்கமுற்றுக் கைகளிலுள்ள வளைகளை ஒவ்வொன்றாக உடைத்துக் கொண்டுவந்து இரண்டிரண்டு வளைகளை வைத்துக் கொண்டாள். அப்பால் மறுபடியும் அவள் நெல்லு குத்துகையில் அவ்விரண்டு வளைகளிலும் கோஷம் உண்டாயிற்று. பிறகு அவ்விரண்டிரண்டுவளைகளிலும் ஒவ்வொன்றை உடைத்துப் பொகட்டாள். பிறகு ஒவ்வொரு வளையே மிகுந்தது. அதினின்று சப்தம் உண்டாகவில்லை. சத்ருக்களை அழிப்பவனே! லோகதத்வங்களை அறியவேண்டுமென்னும் அபிப்ராயத்துடன் உலகங்களிலுள்ள அவ்வவ்விடங்களில் சுற்றிக்கொண்டிருக்கையில் நான் அக்கன்

ன்னிகையிடத்தினின்று இந்த உபதேசத்தைக் கற்றுக் கொண்டேன். இதில் என்ன உபதேசமென்றால், சொல் லுகிறேன்; கேள். ஓரிடத்தில் பலர் சேருவார்களாயின், கலஹம் உண்டாகும். இருவர் சேரினும் ஒருவர்க்கொரு ருவர் பேச்சு நேரிடும். ஆகையால் கலஹமும் பேச்சும் நேராதிருக்கும்பொருட்டுக் கன்னிகையின் கைவளை போல் தனியனாகவே திரியவேண்டும். கன்னிகையின் கைவளையிடத்தினின்று நான் இவ்விஷயத்தைத் தெரிந் துகொண்டேன். எத்தனைநேரம் உட்கார்ந்திருப்பினும் ஸ்ரமம் தட்டாதிருக்கும்படி அப்யாஸஞ் செய்து ஆஸ னத்தை ஜயித்து ப்ராணாயாமத்தினால் ஸ்வாஸத்தையும் வென்று சுபாஸ்ரயமான ஒருவஸ்துவில் மனத்தை நிலை ப்படுத்தவேண்டும். மனத்தை எப்படி நிலைப்படுத்த முடியுமென்றால், வைராக்யபலத்தினாலும் அப்யாஸ பலத் தினாலும் மனத்தை நிலைப்படுத்திச் சோம்பலின்றிப் பர மாத்மாவினிடத்தில் நிறுத்தவேண்டும். சுபாஸ்ரயமான பகவானிடத்தில் மனம் நுழையுமாயின் கர்மவாஸனைக ளைத் துறக்கும். அதனால் ரஜஸ்தமோகுணங்களை உதறி ஸத்வகுணம் வளர்ந்து வேறு விஷயங்களில் பற்றற்று த்யானிக்கவேண்டிய வஸ்துவாகிய பகவானுடைய ஸ்வரூபரூபாதிகளில் நிலையுற்றிருக்கையாகிற நிர்வா ணத்தை அடையும். இங்ஙனம் மனத்தைப் பரமபுருஷ னிடத்தில் நிலைநிற்கும்படி செய்வானாயின், அப்பொழுது வெளிவிஷயங்களையாவது உள்விஷயத்தையாவது நினை க்கமாட்டான். பாணவேலைக்காரன் பாணத்தைநிருமிக் கும்பொழுது அதில் மனஆக்கமுற்று அருகாமையில் போகின்ற அரசனையுங்கூட அறியாதிருப்பதுபோல, வேறுவிஷயங்களெவற்றையும் நினையாமல் பரமபுருஷ னையே த்யானிப்பான். யோகிகளுடைய கூட்டத்திலும்

கூடச் சேரலாகாது. சேர்ந்தால், கன்னிகையின் கை வளைகள் பலவாயிருக்கும்பொழுது கோஷமிட்டாற் போல் ஏதேனும் கலஹம் உண்டாகும். ஸர்ப்பம் போல் பலஜனங்கள் இருக்குமிடத்தில் போகலாகாது. ஸர்ப்பம், ஜனங்கள் தன்னைப் பார்ப்பார்களாயின் வதிப் பார்களென்று சங்கித்து ஜனஸங்கத்தில் போகாமல் தனியே ஸஞ்சரிக்கும்; ஸர்வகாலத்திலும் ஒரே இடத் தில் நியதமாக வாஸஞ்செய்யாது; மிக்க ஊக்கத்துட னிருக்கும்; ஏகாந்தமான இடத்தில் வாஸஞ்செய்யும்; தன்நடை ஒருவர்க்கும் தெரியாதபடி செல்லும். அங் ஙனமே முனிவனும் தனியே ஸஞ்சரிக்கவேண்டும். ஜனக் கூட்டத்தில் சேருவானாயின் அவர்களோடு ஸஹவா ஸத்தினால் சப்தாதிவிஷயங்களில் ருசி உண்டாகி யோ கத்தினின்று ப்ரஷ்டனாவான்; எவரோடு கலந்தால் என்னவருமோவென்னும் பயத்துடன் சேராமல் தனியே இருக்கவேண்டும்; ஓரிடத்தில் நியதமாக வாஸஞ் செய் யலாகாது; மனவூக்கத்துடனிருக்க வேண்டும்; ஏகாந்த மான இடத்தில் வாஸஞ் செய்யவேண்டும்; தன்னுடைய நடைகள் (ஆசாரங்கள்) இத்தகையனவென்று பிறர்க் குத் தெரியாதபடி நடக்கவேண்டும்; மற்றும் மிதமாகப் பேசவேண்டுமன்றி அதிகமாகப் பேசலாகாது. வாஸஞ் செய்வதற்காக ஒருக்ருஹத்தை ஏற்படுத்திக்கொள்ள யத்னஞ்செய்வானாயின், அது அநித்யமாகிய தேஹத் திற்கு மிகவும் வருத்தத்திற்கே இடமாகும். (க்ரு ஹத்தை நிருமிக்கும்பொழுது ஆயாஸப்படாமல் முடி யுமா?) தான் அபேக்ஷித்தவளவு யோகங்கள் கிடைக்க மாட்டாவாகையால் அந்த முயற்சியும் நிஷ்ப்பலமே. ஸர்ப் பம் பிறர் நிருமித்த புற்று முதலிய இடங்களில் ப்ரவே சித்து ஸுகமாயிருப்பதுபோல் எங்கேனும் க்ருஹஸ்

தர்களுடைய க்ருஹங்களில் தங்கி ஸுகமாயிருக்க வேண்டுமென்றித் தான் அதற்காக முயற்சி செய்யலாகாது. கர்மபந்தங்களின்றி விளங்குந்தன்மையுள்ளவனும் ஸர்வேஸ்வரனுமாகிய நாராயணன் முன்பு தன் ஸங்கல்பத்தினால் விளையாட்டிற்காகப் படைத்த இந்த ஜகத்தையெல்லாம் கல்பத்தின் முடிவில் தன்னைப் பிரியாத தான காலத்தினால் தானொருவனே ஸம்ஹரித்து, நாமரூபங்களுக்கிடமாகாத ஸூக்ஷ்மசேதநாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டு தானொருவனேயாகி மேல்படைக்கப்போகிற ஜகத்திற்குத் தானே உபாதானகாரணமாகித் தன்னைக்காட்டிலும் வேறொரு நிமித்த காரணமுமின்றி அதுவும் தானேயாயிருந்தான். அப்பொழுது அந்நாராயணன் நாம ரூபவிபாகத்திற்கிடமல்லாத ஸூக்ஷ்ம சேதநாசேதனங்கள் அத்தகைய காலம் ஆகிய அனைத்திற்கும் ஆதாரமாயிருந்தான். அவன் தனக்குத் தானே ஆதாரமன்றி அவனுக்கு மற்றொரு ஆதாரம் கிடையாது. ஸ்ருஷ்டிதசையில் ஏற்றக் குறைவுகளை அடைந்திருந்த ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களும் ப்ரளயதசையில் பரமபுருஷனுடைய சக்தியாகிய காலத்தினால் ஏற்றக்குறைவுகளின்றி ஸாம்யதசையை அடைந்து அவனிடத்தில் மறைந்திருந்தன. ப்ரதானமென்கிற அசித்துக்கும் புருஷனென்கிற ஆத்மாவுக்கும் நியாமகனும் ஸகலஜகத்திற்கும் காரணனுமாகிய பரமபுருஷன் கார்யங்களென்றும் காரணங்களென்றும் வழங்கிவருகிற சேதநாசேதனங்களுக்கு எல்லையாகி நாமரூபங்களுக்கிடமாகாமல் கைவல்யமென்னும் பெயர் பெற்றிருக்கின்றான். (தனியனாயிருக்கிறான்.) கேவலஜ்ஞானாநந்த * ஸந்தோஹ

* ஸந்தோஹம் — ஸமூஹம்

ஸ்வரூபனும் கர்மாதிரூபமான உபாதியற்றவனுமாகிய அப்பரமபுருஷன் தன்னுடைய ஸங்கல்பமாத்ரத்தினால் ஸூக்ஷ்மதசையை அடைந்து தனக்குச் சரீரமாயிருக்கின்ற ப்ரக்ருதியைச் சிறிது ஸ்தூல தசையை அடையச் செய்து அதைக்கொண்டு முதலில் மஹத்தத்வத்தைப் படைக்கின்றான். ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களையே வடிவாகவுடைய ப்ரக்ருதியின் கார்யமாகிய அம்மஹத்தத்வம் அஹங்காரம் முதல் ப்ருதிவி வரையிலுமுள்ள தத்வங்களைப் படைக்கிறதென்றும், ஆனதுபற்றியே கார்யவஸ்துக்களில் முக்யமானதென்றும் சொல்லுகிறார்கள். இந்த ப்ரபஞ்சம் முழுவதும் இந்த மஹத்தத்வத்தில் கோக்கப்பட்டது போலிருக்கின்றது. இந்த மஹத்தத்வமே புத்தி இந்த்ரியம் மனம் ப்ராணன் இவற்றின் ஸமுதாயரூபமான ஸூக்ஷ்மசரீரத்தை உண்டாக்குகின்றது. ஜீவன் அந்த ஸூக்ஷ்மசரீரத்துடன் கூடித் தேவமனுஷ்யாதி ஸ்தூல சரீரங்களைப் பெறுகையாகிற ஜன்மமும் அந்த ஸ்தூல சரீரத்தை விடுகையாகிற மரணமுமாகிய ஸம்ஸாரத்தை அடைந்து அதனால் ஜ்ஞானஸங்கோசத்தையும் ஜ்ஞானவிகாஸத்தையும் அடைகின்றான். (ஜீவனுக்கு ஸம்ஸாரமாவது ப்ரக்ருதியின் பரிணாமமான தேஹஸம்பந்தம் தேஹவியோகம் இவைகளால் ஏற்படுகின்ற ஜ்ஞான ஸங்கோச விகாஸங்களாகிற அவஸ்தைகளுக்கிடமாயிருக்கையே. பரமாத்மாவுக்குச் சரீரங்களாகிய சேதனாசேதனங்களுக்குள் சேதனனான ஜீவனுக்கு ஸ்வபாவ ஸங்கோச ஸ்வபாவவிகாஸங்களாகிற அவஸ்தையே உள்ளது. அஹங்காரம் முதல் ப்ருதிவி வரையிலுள்ள ஸமஷ்டிபரம்பரையாகவும் தேவமனுஷ்யாதி வ்யஷ்டிப்ரபஞ்சமாகவும் பரிணமிக்கையாகிற ஸ்வரூபான்யதா

பாவரூபமான (ஸ்வரூபம் மாறப்பெறுகையாகிற) அவஸ்தை அசேதனமான ப்ரக்ருதியைச் சேர்ந்தது. இந்தகைய சேதனுசேதனங்களைச் சரீரமாகவுடைய பரமபுருஷன் ஜகத்திற்கு உபாதானகாரணம். நேரே அவஸ்தைகளுக்கிடமாயிருக்கை ப்ரக்ருதி புருஷர்களுக்கே உள்ளது. அந்த ப்ரக்ருதிபுருஷர்கள்மூலமாய் பரமாத்மாவுக்கும் அவஸ்தையின் ஸம்பந்தம் வருகின்றது. கேவலனான பரமாத்மாவே ஜகத்திற்கு நிமித்தகாரணன்.) நூல்பூச்சி தன்சரீரத்தின் ஏகதேசமாகிய ஹ்ருதயத்தினின்று நூலுக்குக் காரணமான ஊர்ணை யென்னும் த்ரவ்யத்தை வாய்வழியாய் வெளிக்கொண்டுவந்து பரப்பி மீளவும் அதை உள்ளே இழுத்துக்கொள்வதுபோல, ஸர்வேச்வரனும் சேதனுசேதன ரூபமான தன்சரீரத்தை ப்ரபஞ்சமாக விரித்து லீலாரஸத்தை அனுபவித்து மீளவும் அதைத் தன்னிடத்திலேயே மறைத்துக் கொள்கின்றான். (சேதனுசேதனங்களைச் சரீரமாகவுடைய ஸர்வேச்வரன் தானே ப்ரபஞ்சமாக விரிந்து விளையாடி மீளவும் சுருங்கித் தனியனாயிருக்கின்றான். நூல்பூச்சியின் செயலைக்கொண்டு ஸர்வேச்வரன் ஜகத்தைப் படைத்துத் தன்னிடத்திலேயே மறைத்துக் கொள்ளும் விதத்தை ஆராய்ந்தறியவேண்டும்.) புருஷன் எந்தெந்த வஸ்துவில் தன்மனத்தைத் திடமான அத்யவஸாயத்துடன் ஸ்னேஹம் த்வேஷம் பயம் முதலிய ஏதேனும் ஒருபாவத்தினால் மாறாது வைக்கிறானோ, அவன் அந்தந்த வஸ்துவோடு ஸாரூப்யத்தை அடைகின்றான். குளவி புழுவைக் கொண்டுவந்து தன்கூட்டில் அடைத்து ஹிம்ஸிக்கையில், அந்தப்புழு பயத்தினால் அந்தக் குளவியையே நினைத்துக்கொண்டிருந்து முன்னுருவத்தை விடாமலே அந்தக் குளவியோடொத்த உருவத்

-தை அடைகின்றது. (அந்த உருவத்தோடிருக்கும் பொழுதே மற்றொரு வஸ்துவின் ஸாரூப்யம் உண்டானால் அவ்வுருவத்தை விட்டபின்பு முன்பு இவன் எந்த வஸ்துவை த்யானித்துக்கொண்டிருந்தானோ அந்த வஸ்துவோடு ஸாரூப்யத்தை அடைவானென்பதில் ஸந்தேஹம் உண்டோ? ஆகையால் ஏதேனுமொருபர்வத்தினால் அத்தகைய பரமபுருஷனை மாறாமல் த்யானித்துக்கொண்டு வருவானாயின், அவனோடு ஸாரூப்யத்தை அடைவானென்பதைக் குளவியிடத்தினின்று நிச்சயித்தேன்). இங்ஙனம் நான் இத்தனைகுருக்களிடத்தினின்று இந்த மதியைக் கற்றேன். ப்ரபூ! மற்றும், நான் என்னுடைய தேஹத்தினின்று கற்றபுத்தியைச் சொல்லுகிறேன்; கேள். இது ஹேயமென்றும் இது உபாதேயமென்றும் விவேகித்துத் தெரிந்துகொள்கையாகிற விவேகத்தையும் ஹேயங்களில் விருப்பின்மையாகிற வைராக்யத்தையும் விளைக்கின்றமையால் தேஹம் எனக்கு ஒரு குருவாயிருக்கின்றது. (அஜ்ஞானத்தைப் போக்கி ஜ்ஞானோபதேசஞ் செய்பவனன்றோ குரு. அதைத் தேஹம் செய்கின்றமையால் அது குருவெனக் கூடும்). அது எப்படியெனில், தேஹம் ஜன்மமரணங்களை அடைவதும் ஸர்வகாலமும் துக்கத்தையே பலனாகவுடையதுமாயிருக்கையால் 'அப்ப! இந்தச் சரீரம் எப்பொழுது தொலையுமோ! சீ! நமக்கு இனி இத்தகைய சரீரஸம்பந்தமே கூடாது' என்னும் வெறுப்பை விளைத்துத் தன்னிடத்திலும் தொடர்ந்தவைகளிடத்திலும் தன் போஷணத்திலும் அதற்கு வேண்டிய விஷயங்களிலும் வைராக்யத்தையும் விளைக்கின்றது. மற்றும், நான் இந்தத் தேஹத்தினால் தத்வங்களை உள்ளபடி ஆராய்ந்தறிகின்றேன். (இவை ஹேயங்களென்றும் இவை உபா-

தேயங்களென்றும் விவேகித்துத் தெரிந்துகொள்கி றேன்; சரீரமன்றோ முதன்மையான ஸாதனம். இந் தச் சரீரத்தினால் ஆங்காங்குச் சென்று திரிந்து ப்ரா க்ருததத்வங்களின் இயற்கையை ஆராய்ந்தறிந்து விவே கத்தைப் பெறுகின்றேன். ஆகையால் இதுவே எனக்கு விவேகத்தையும் வைராக்யத்தையும் விளைக்கின்றது). ஆயினும் இது நமக்கு இவ்வளவு உபகாரஞ் செய் ததே யென்று அதனிடத்தில் அபிமானம் வைக்கிற தில்லை; பின்னையோ வென்றால், நாய் நரி முதலியவை பக்ஷிக்க வேண்டிய வஸ்துவாகையால் இது பரகிய மென்று நிச்சயித்து அதனிடத்தில் அபிமானமின்றித் திரிகின்றேன். (ஸர்வ காலமும் தேஹம் துக்கத்தையே விளைக்கு மென்பதை விவரித்துச் சொல்லுகிறேன்; கேள்.) தேஹத்திற்கு ப்ரியஞ் செய்ய விரும்பிப் பெண் டிர் பிள்ளை பணம் பசு ப்ருத்யன் வீடு நண்பன் இவை களை யெல்லாம் வகைவகையாக வேண்டியவளவு ஸம் பாதித்து அவற்றால் அந்தத் தேஹத்தைப் போஷித் துக் கொண்டு வருகின்றான். இங்ஙனம் பணம் முதலிய வற்றை மிகவும் வருந்தி ஸம்பாதித்தவன் தன்னுடைய ஆயுஸ்ஸின் முடிவில், வ்ருக்ஷம் தான் முடியும்பொழுது வேறொரு வ்ருக்ஷம் முளைப்பதற்கு ஹேதுவான விதை யை விளைத்துவிட்டுப் போவதுபோல், மற்றொரு தேஹத்திற்கு ஹேதுவான கர்மத்தை விளைத்து விட் டுப் போகின்றான். மற்றும், இந்த ப்ராணியை நாக்கு ஓரிடத்திலும், பிபாஸை (தண்ணீர் குடிக்க வேண்டு மென்னும் விருப்பம்) ஓரிடத்திலும், ஶிஶ்னம் ஓரிடத்தி லும், த்வக்கு ஓரிடத்தும், வயிறு ஓரிடத்திலும், காது ஓரிடத்திலும், மூக்கு ஓரிடத்திலும், மிகவும் சபலமு டைய கண்ணு ஓரிடத்திலும், வாக்கு முதலிய கர்மேந்

த்ரியங்களின் சக்தி அவவவற்றிற்கு விஷயமான நடை முதலிய ஒவ்வோரிடத்திலும் பிடித்திழுக்கின்றன. ஒரு க்ருஹஸ்தனைப் பல பத்னிகள் தத்தமிடம் வரும்படி இழுப்பதுபோல இந்த்ரியங்கள் பலவும் தத்தம் விஷயங்களுக்கு வரும்படி ப்ராணியைப் பிடித்திழுக்கின்றன. (இங்ஙனம் பற்பல துக்கங்களுக்கிடமாகையால் தேஹம் விரக்தியை அநாயாஸமாக விளைக்குமென்பதில் ஸந்தேஹமில்லை). ப்ரஹ்மதேவனைச் சரீரமாகவுடைய பரமபுருஷன் தன் சக்தியாகிய ப்ரக்ருதியினால் வ்ருக்ஷம் ஸர்ப்பம் பசு பக்ஷி ஈ மத்ஸ்யம் முதலிய பற்பல சரீரங்களைப் படைத்தும் அவ்வவைகளால் மனத்தில் த்ருப்தி உண்டாகப் பெறுமல் பரப்ரஹ்மஸாக்ஷாத்காரஜ்ஞானம்போன்ற அந்த ப்ரஹ்மோபாஸனரூபமான ஜ்ஞானத்திற்கு உரிய மனுஷ்யனைப் படைத்து ஸந்தோஷம் அடைந்தான். (மனுஷ்யதேஹம் பரப்ரஹ்மத்தை உபாஸித்து அதை ஸாக்ஷாத்கரிக்கிறதற்கு ஸாதனமாகையால் மிகவும் புகழத்தகுந்தது. அப்பரம புருஷன் ஸமஸ்த சேதனர்களையும் உஜ்ஜீவிப்பிக்க வேண்டுமென்னும் எண்ணத்துடன் முயன்றவனாகையால் வ்ருக்ஷாதிகள் மோக்ஷ ஸாதனானுஷ்டானத்திற்கு உரியவையன்றாகையால் அவற்றைப் படைத்தும் த்ருப்தி அடையாமல் தர்மானுஷ்டானத்திற்கு ஹேதுவான மனுஷ்ய தேஹத்தைப் படைத்த பின்பு ஸந்தோஷம் அடைந்தான்.) ஆகையால் பல ஜன்மங்கள் நடந்தபின்பு கடைசியில் மற்ற தேஹங்களைப்போல் அநித்யமாயினும் மேன்மையான புருஷார்த்தத்தைக் கைகூடுவிப்பதும் மிகவும் கிடைக்க அரிதுமாகிய மனுஷ்ய ஜன்மத்தைப் பெற்று ஸுகதுக்கங்களிரண்டையும் துல்யமாக நினைக்கவல்ல மனவுறுதியுடன் ம்ருத்யு

கூடவே தொடர்ந்திருக்கப் பெற்ற இத்தேஹம் அழிவ தற்கு முன்னமே சீக்ரத்தில் மோக்ஷத்தையடையும் பொருட்டு யத்னஞ் செய்யவேண்டும். நாய் நரி பன்றி முதலிய ஜன்மங்களிலுங்கூட விஷயங்கள் அனாயாஸமாகக் கிடைக்கக் கூடியவைகளேயாகையால் மனுஷ்யஜன்மம் பெற்றவன் அத்தகைய சப்தாதி விஷயங்களில் மன விருப்பமுற்றுப் பொழுது போக்கலாகாது. இங்ஙனம் புத்தியைக் கற்று வைராக்யம் உண்டாகப் பெற்று ஆத்ம விஷயத்தில் விசுத்தஜ்ஞானமாகிற வெளிச்சத்தையுடையவனாகி அதனால் அவ்வாத்மாவின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிந்து தேஹாத்மாபிமானமின்றித் தேஹானுபந்திகளிடத்திலும் மனப்பற்றைத் துறந்து இப்பூமியில் சுற்றிக்கொண்டிருக்கிறேன். 'ஒரு குருவினிடத்தினின்று இந்த அர்த்தங்களையெல்லாம் ஏன் கற்கலாகாது?' என்றால், சொல்லுகிறேன்; கேள். பரப்ரஹ்மவிஷயத்தில் நிலைநின்ற பரிபூர்ணஜ்ஞானம் விளையவேண்டுமென்றால், ஒரு குருவினிடத்தினின்று உண்டாகாது; பலகுருக்களிடத்தினின்றுமே உண்டாகவேண்டும். 'ஆனால் ஓரிடத்திலும் நம்பிக்கை உண்டாகாதாகையால் ஜ்ஞானம் நிலைநிற்காதே?' என்றால், சொல்லுகிறேன். இந்த ப்ரஹ்மஜ்ஞானம் இணையெதிரற்றது. இதைப்போன்ற ஜ்ஞானமாவது இதற்கு மேற்பட்ட ஜ்ஞானமாவது மற்றொன்று கிடையாது. ரிஷிகள் இந்த ஜ்ஞானத்தை ப்ருதிவி வாயு முதலிய பல த்ருஷ்டாந்தங்கள் மூலமாய்க் கற்கின்றார்கள். ஆகையால் கற்பிக்குங் குருக்கள் ப்ருதிவி முதலியவைகளே; ப்ரஹ்மவித்யோபதேசஞ் செய்பவர்களன்று. ஆகையால் அவை பலவாயினும் அதனால் தோஷமில்லை. மற்றும், இந்தக் குருக்கள் அனைவரும் இணையெதிரற்ற பரப்ரஹ்மமே. பரம புருஷனே ப்ரு

திவி முதலிய பற்பல குருக்களாயிருந்து ஜ்ஞானத்தை விளக்குகிறனாகையால் அவனே குரு. அவன் பல உரு வங்களை ஏற்றுக்கொண்டிருப்பினும் இயற்கையில் ஒரு வனேயாகையால் தோஷமில்லை; பகவானே ஆசார்ய னாயிருந்து ஜ்ஞானோபதேசஞ் செய்து ப்ராணிகளை உஜ் ஜீவிப்பிக்கிறனென்று சாஸ்த்ரங்கள் முறையிடுகின்றன வல்லவா?

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஆழ்ந்த மதியுடைய அந்த ப்ராஹ்மணன் இங்ஙனம் யதுவைக் குறித்து மொழிந்து அவனிடம் போய் வருகிறேனென்று விடை பெற்றுக்கொண்டு அம்மன்னவன் வந்தனஞ் செய்து நன்கு பூஜிக்கப் பெற்று ஸந்தோஷம் அடைந்து வந்த வழியே திரும்பிப்போனான். எங்கள் முன்னோர்க்கும் முன் னவனாகிய அந்த யதுமன்னவன் வைராக்ய முடையவர் களில் சிறந்தவனாகிய அந்த ப்ராஹ்மணன் மொழிந்த வச னத்தைக் கேட்டுத் தேஹம் தேஹானுபந்திகள் ஆகிய எல்லாவற்றிலும் மனப்பற்றைத் துறந்து சீதம் உஷ்ணம் ஸுகம் துக்கம் முதலிய எல்லாவற்றிலும் ஒருவாறான மனமுடையவனும் எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமே யென்று பாவித்து எல்லாவற்றையுந் துல்யமாகப் பார்க் குந் தன்மையுடையவனுமாகி மோக்ஷத்தை அடைந் தான். ஒன்பதாவது அத்யாயம்

---

ஸ்ரீக்ருஷ்ணன் ஆத்மாவுக்குத் தேஹஸம் பந்தாதி ரூபமான ஸம்ஸாரம் இயற்கையில் ஏற்பட்ட தன்றென்று உத்தவனுக்கு உபதேசித்தல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—புருஷன், ஸர்வஜ்ஞ னும் காருணிகனுமாகிய நான் பஞ்சராத்ரம் பகவத்

கீதை முதலியவை மூலமாய் உபதேசித்த அர்ச்சனம் வந்தனம் முதலிய ஸ்வரூபானுரூபமான தர்மங்களை மனவூக்கத்துடன் அனுஷ்டித்துக்கொண்டு தன்னுடைய ஸத்தை ஸ்திதி ப்ரவ்ருத்தி இவையெல்லாம் ஸர்வாந்தராத்மாவான என்னுடைய அதீனங்களாகவே நடக்கின்றனவென்னும் நிச்சயஜ்ஞானமுடையவனுகித் தான் அனுஷ்டிக்கும் தர்மங்களில் பலாபிஸந்தியின்றித் தேஹம் இருக்கும் வரையில் வர்ணாஸ்ரம தர்மங்களையும் குலக்ரமாகதமான ஆசாரங்களையும் அனுஷ்டித்து வரவேண்டும். ‘பலன்களில் அபிஸந்தியை எப்படி மாற்றிக்கொள்ள முடியும்?’ என்றால், சொல்லுகிறேன். கீழ்ச்சொன்ன தர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு வருவானாயின் மனம் தெளியும். அத்தகைய மனத்தினால் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை ஆராய்வதுடன் விஷய ப்ரவணமான மனமுடைய ப்ராணிகள் விரும்புகிறவைகளும் ஸத்வாதி குணபரிணாமங்களுமான சப்தாதி விஷயங்களுக்காகச் செய்யும் முயற்சிகளெல்லாம் பலத்தில் விபரீதமாய் முடிவதையும் ஆராய்வானாயின் பலன்களில் அபிஸந்தி தானே நீங்கிப்போம். (ஸுகத்திற்காகச் செய்யும் முயற்சியெல்லாம் கடைசியில் துக்கத்தையே பலனாக விளைப்பதை ஆராய்ந்தால் தர்மங்களில் பலாபிஸந்தியை அனாயாஸமாக மாற்றிக் கொள்ளலாம்). ஸ்வப்னம் காண்கிறவன் ப்ரியமாயும் அப்ரியமாயுமுள்ள விஷயங்களை அனுபவிப்பதும், நெஞ்சில் அந்தந்த வஸ்துக்களை அனுபவிக்கிறாப்போல் நினைக்கிற மனோரதமும் நிஷ்பலமே யல்லவா? (ஸ்வப்னத்தில் அர்த்தம் காமம் முதலிய புருஷார்த்தங்களை அனுபவிப்பானாயின், அவன் விழித்துக்கொண்ட பின்பு அதனால் தன் ப்ரயோஜனம் கைகூடினதாக நினைப்பானோ?

பெரிய தோட்டத்தில் பெரிய உப்பரிகையின்மேல் மெத்தென்ன பஞ்சசயனத்தில் மனத்திற்கினிய காதலி களுடன் படுத்திருப்பதாகவும், தான் மஹாராஜனு யிருந்து ஏகச்சத்ராதிபத்யஞ் செய்வதாகவும் மனத் தில் நினைப்பானுயின், அவ்வளவில் அவன் ப்ரயோஜ னம் கைகூடப்பெற்றவனுவானு? அந்த அனுபவங்க ளெல்லாம் நிஷ்ப்பலங்களே யல்லவா?) மற்றும், ப்ரியங் களும் அப்ரியங்களும் கலந்து நானுரூபமாயிருக்கையால் அவை நிஷ்ப்பலங்களே. அங்ஙனமே ஸத்வாதி குணங் களால் ஆத்மாக்களிடத்தில் தேவமனுஷ்யாதிபே தங்களை நினைக்கையும் நிஷ்ப்பலமே. ஆத்மா தேவ மனுஷ்யாதி தேஹங்களில் அமைந்திருக்கிறுனன்றி அத் தேஹங்களே ஆத்மாவன்று. அவன் அவற்றைக்காட் டிலும் வேறுபட்டவன். ஆகையால் அவ்வாத்மாக்களிட த்தில் தேவமனுஷ்யாதி பேதங்களை ஏறிடுகை ப்ரமமே யன்றி உண்மையன்று. அங்ஙனமே துக்கரூபங்களான சப்தாதி விஷயங்களை ஸுகரூபங்களாக நினைக்கை யும் அநித்யங்களான அவற்றை நித்யங்களாக நினைக் கையும் நிஷ்ப்பலமே (ப்ரமமே). ஆகையால் என்னை யே சிறந்த புருஷார்த்தமாகப் பற்றிக் கர்மங்களைப் பலாபிஸந்தியில்லாமல் அனுஷ்டிக்கவேண்டும்; காம்ய கர்மங்களையெல்லாம் துறக்கவேண்டும். 'சாஸ்த்ரங் கள் பலன்களையும் சொல்லி இவற்றை அனுஷ்டிக்க வேண்டுமென்று விதிக்கின்றனவே. அவற்றை எங் ஙனம் துறக்கலாம்?' என்றுல், ஆத்ம பரமாத்மாக் களின் உண்மையை ஆராய முயன்றவன் அல்பங்களும் அஸ்திரங்களுமான பலன்களைப் பற்றினவையாகையால் காம்ய கர்மங்களின் விதியை ஆதரிக்கலாகாது; சங் கையின்றித் துறக்க வேண்டியதே முக்யம். அவற்

றைத் துறந்தமையால் சாஸ்த்ரங்களை உல்லங்கனஞ்செய் தவனுகமாட்டான். பின்னையோவென்றால், சாஸ்த்ரங்களை அனுஸரித்தவனேயாவான். எப்படியென்றால், சாஸ்த்ரங்கள் காம்யகர்மங்களை விதிப்பது ப்ராணிகளுக்குத் தம்மிடத்தில் நம்பிக்கையை உண்டாக்கி வசீகரிப்பதற்காகவே. அவற்றிற்கு அவைகளில் அபிஸந்தி இல்லை. இந்தக கருத்தை அறிந்து அக்கர்மங்களை விடுவது யுக்தமே; வெளியிந்த்ரியங்களையும் உள்ளிந்த்ரியமான மனத்தையும் அடக்குவதற்கு உபாயங்களான யமங்களை அடிக்கடி ஆதரவுடன் அப்யஸிக்கவேண்டும். சௌசம் முதலிய நியமங்களையோ வென்றால் தன் சக்தியை அனுஸரித்து வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமல் அனுஷ்டிக்க வேண்டும். ஸர்வேஶ்வரனுகிய என்னை உள்ளபடி அறிந்தவனும் தன்னை என்னைக்காட்டிலும் வேறுபடாதவனுகப் பாவிக்குந்தெளிவுடையவனும் ஜிதேந்த்ரியனுமாகிய குருவை உபாஸிக்கவேண்டும். மற்றும், குருவை உபாஸிக்கும்பொழுது கபடத்தையும் அந்தக் குருவிடத்திலும் அவரைச் சேர்ந்தவர்களிடத்திலும் அர்த்த காமங்களைப்பற்றின மாத்ஸர்யத்தையும் (த்வேஷத்தையும்) பாராட்டலாகாது. பெரியோர்களைப் பணியும் விஷயத்தில் உத்ஸாஹ முற்றிருக்கவேண்டும். தேஹானுபந்திகளிடத்தில் என்னுடையவர்களென்னும் அபிமானங் கொள்ளலாகாது. (அங்ஙனம் அபிமானம் கொள்வானுயின், அவர்களை அனுஸரிக்க வேண்டிவரும். அது குருபாஸனத்திற்கு விரோதியாம். ஆகையால் அது சிறிதும் கூடாது.) குருவினிடத்தில் திடமான ஸ்னேஹம் உண்டாகப்பெற்றிருக்கவேண்டும். குருசுஶ்ருஷையில் மனவூக்கமின்றி வேறு விஷ

யங்களில் மனஞ் செல்லப்பெற்று அந்த விஷயத்தில் ஊக்கத்தினால் இந்தக் குருசுஶ்ரூஷையில் அஶ்ரத்தை யாயிருக்கலாகாது. இவை ஹேயங்களென்றும் இவை உபாதேயங்களென்றும் வஸ்துக்களின் ஸ்வரூபத்தை ஆராய்ந்தறிகையில் விருப்பமுற்றிருக்கவேண்டும். பிறர் தோஷங்களை வெளியிடுகை பெருந்தோஷம். அது சிறிதும் கூடாது. வீண்பேச்சு பேசலாகாது. தேஹானுபந்திகளிடத்தில் என்னுடையவையென்னும் அபிமானத்தை எங்ஙனம் துறக்கமுடியுமென்றால், பெண்டிர் பிள்ளை வீடு கழனி பந்துக்கள் பணம் முதலியவைகளில் ஆஸக்தியின்றி உதாஸீனமாயிருப்பானாயின், அவற்றில் என்னுடையவையென்னும் அபிமானம் நீங்கிப்போம். அவற்றில் ஔதாஸீன்யம் எப்படி உண்டாகுமென்றால், பெண்டிர் பிள்ளை வீடு வாசல் முதலியவற்றை யெல்லாம் என்னுடையவை யென்று பாவிக்கலாகாது. தன்னுடையதென்று தான் அபிமானித்திருக்கும் பணத்தைப் பிள்ளை பெண்டிர் முதலியவர்களும் அனுபவிக்கையால் அது எல்லார்க்கும் பொதுவாயிருப்பதுபோல் பிள்ளை பெண்டிர் முதலியவற்றையும் பொதுவாக நினைக்கவேண்டும். அப்படி நினைப்பானாயின் அவற்றில் ஔதாஸீன்யம் உண்டாகி அபிமானமும் நீங்கும். ஜீவன் ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமுள்ள தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணன். (பூதஸூக்ஷ்மங்கள் புத்தி இந்த்ரியங்கள் மனம் ப்ராணன் ஆகிய இவற்றின் ஸமுதாயரூபமான தேஹம் ஸூக்ஷ்மதேஹம். அவற்றின் பரிணாமமான தேஹம் ஸ்தூலதேஹம்.) ஜீவன் தேஹத்தை அறியுந்தன்மையுடையவன்; தேஹம் பிறரால் அறியப்படும் வஸ்துவே யன்றி அறியும் வஸ்துவன்று. மற்றும், ஜீவாத்மா தன்னைத் தானே அறி

யுந் தன்மையுடையவன். தேஹம் பிறர்க்குத் தோற்று மேயன்றித் தன்னைத் தான் அறியமாட்டாது. கொளுத்தப் படுவதும் ப்ரகாசிப்பிக்கப்படுவதுமாகிய காஷ்டத்தைக்காட்டிலும் கொளுத்துவதும் ப்ரகாசிக்கச் செய்வதுமாகிய அக்னி வேறுபட்டிருப்பதுபோல அறியத்தக்கதும் தரிக்கத்தக்கதுமாகிய தேஹத்தைக் காட்டிலும் அதையறிபவனும் தரிப்பவனுமாகிய ஜீவன் வேறுபட்டவனே. தேஹத்தைக்காட்டிலும் ஜீவன் விலக்ஷணனாயிருப்பானாயின், 'அடிக்கப்பட்டான்; பிறந்தான்; செத்தான்; இளைத்திருக்கிறான்; பருத்திருக்கிறான்' என்னும் இவை முதலிய தேஹதர்மங்களுக்கிடமாக ஏன் தோற்றுகிறானென்றால், சொல்லுகிறேன்; கேள். தன்னால் கொளுத்தப்படுகிற கட்டையில் பற்றின அக்னி விநாசம் உத்பத்தி சிறுமை பெருமை முதலிய கட்டைகளின் தர்மங்களுக்கிடமாகிப் பலவாறு தோற்றுவதுபோல், தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஜீவன் தேஹத்தில் ப்ரவேசித்துத் தேஹகுணங்களுக்கிடமாய்த் தோற்றுகிறானன்றி உண்மையில் அவை தேஹதர்மங்களேயன்றி ஜீவதர்மங்களன்று. (அனாதியான அஜ்ஞானத்தினால் ஜீவன் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து அந்தத் தேஹதர்மங்களுக்கிடமாய்த் தோற்றுகிறான். ஜீவனுக்குத் தேவமனுஷ்யாதிரூபமான தேஹம் ப்ரக்ருதியின் பரிணாமங்களான ப்ருதிவி முதலிய தத்வங்களால் ஏற்பட்டது. இவ்விஷயத்தில் ஒருவர்க்கும் விவாதம் இல்லை. ஜீவனுக்கு ஜன்மஜராமரணாதி ரூபமான இந்த ஸம்ஸாரம் முழுவதும் அந்தத்தேஹஸம்பந்தத்தினால் உண்டானதே. அந்த ஸம்ஸாரத்தை வேரறுக்கும் உபாயம் பரமாத்மோபாஸனமே. ஆகையால் வேதாந்தார்த்தங்களை ஆராய்ந்து ஜீவாத்மா

வுக்கு அந்தராத்மாவாயிருப்பவனும் தோஷங்கள் தீண்டப்பெறுதவனுமாகிய பரமபுருஷனை உள்ளபடி அறிந்து இந்தத் தேஹத்திலும் தேஹானுபந்திகளிடத்திலும் உபாதேயமென்னும் புத்தியை க்ரமமாகத் துறக்க வேண்டும். (நெடுநாளாகப் பழகின துர்ப்புத்தியைத் திடீரென்று துறக்க முடியாதாகையால் ஔதாஸீன்யம் முதலிய கீழ்ச்சொன்ன உபாயங்களால் க்ரமமாகத் துறக்க முயற்சி செய்ய வேண்டும்). ஆசார்யன கீழரணி. சிஷ்யன் மேலரணி. அவ்விரண்டிற்கும் இடையிலிருந்து கடையுங் காஷ்டம் உபதேசம். அங்ஙனம் கடைவதனுலுண்டாகும் அக்னி பரப்ரஹ்மஜ்ஞானம். (அரணிக்கட்டையைக் கடைந்து அதினின்று அக்னியைப் பெறுவதுபோல், சிஷ்யன் ஆசார்யனிடத்தினின்று உபதேசம்பெற்று அவ்வுபதேசத்தினுல் ப்ரஹ்மஜ்ஞானத்தைப் பெறவேண்டும்.) ஸம்சயம் விபர்யயம் முதலிய தோஷங்களுக்கு இடமாகாமல் விளங்குகின்ற அவ்வாசார்யோபதேசத்தினுல விளையும் ஜ்ஞானம் பரிசுத்தமாகி ஸத்வரஜஸ்தமோகுணங்களை வடிவாகவுடைய ப்ரக்ருதியினின்று உண்டான விசித்ரமான ஸம்ஸாரத்தைப் போக்கும். மற்றும், இவ்வுபாஸனஜ்ஞானம், இத்தேஹம் தேஹானுபந்திகள் இவை முதலியவையெல்லாம் எந்த ஸத்வாதிகுணங்களின் பரிணுமங்களோ, அத்தகைய குணங்களையும் அக்குணங்களின் மூலமாய் விளையும் புண்யபாப கர்மங்களையும் அடியோடு பஸ்மஞ்செய்து தானும் முடிகின்றது. ஸம்ஸாரத்தினின்று மீளுவதற்கு உபாயமான உபாஸனஜ்ஞானம் முக்தியில் தொடர்ந்து வருகிறதில்லை. கிடைத்த கட்டைகளை எரித்து மேல் எரிக்க வேண்டிய கட்டை நேரப்பெறுத அக்னி அவ்வளவோடு அணை

வதுபோல் உபாயமான த்யானரூபஜ்ஞானம் முக்தி வரையில் அனுவர்த்தித்து அவ்வளவோடு முடிகின்றது. தேவ மனுஷ்யாதி தேஹங்களும் அந்தத் தேஹங்களால் அனுபவிக்கிற சப்தாதி விஷயங்களும் அநித்யங்களாகையால் அவ்விஷயத்தில் முயற்சி நிஷ்ப்பலமேயென்று சொல்ல முடியாது. ஏனென்றால், காம்யகர்மங்களை அனுஷ்டிப்பதற்கும் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்கும் ஸாதனங்களான தேவ மனுஷ்யாதி தேஹங்களும் ஸுகதுக்கானுபவத்திற்கும் கர்மானுஷ்டானத்திற்கும் ஆதாரமானதேசமும் அவற்றிற்குரிய காலமும் பலன்களையும் அவற்றின் உபாயங்களையும் அறிவிக்கிற வேதமும் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிற ஆத்மாவும் வெவ்வேறென்பதில் விவாதமில்லை. ஆயினும் அவை நித்யங்களேயன்றி அநித்யங்களன்று. ஸமஸ்தபதார்த்தங்களுக்கும் உத்பத்தியைப் பற்றியே விநாசம் உண்டாகிறதன்றி, உத்பத்தியில்லாத பதார்த்தங்களுக்கு விநாசம் உண்டாகிறதில்லை. தேசகாலாதிகளுக்கு உத்பத்தியில்லாமையால் அவைகளுக்கு விநாசமும் இல்லை. ஆத்மாக்கள் ஸத்வாதி குணங்கள் அமைந்த தேவ மனுஷ்யாதி ஆகாரபேதத்தினால் பிறக்கிறார்களன்றி உண்மையில் அவர்களுக்குப் பிறவி கிடையாது. அவர்கள் ஸத்வாதி குணங்களுக்குரியபடி அந்தந்த பலன்களையும் அவற்றின் ஸாதனங்களையும் அவற்றால் ஆராதிக்கத்தகுந்த தேவதைகளையும் பற்றுகிறார்களாகையால் அவர்களுடைய புத்தி வெவ்வேறாயிருக்கின்றது. 'வெவ்வேறாகையாலும் கார்யவஸ்துக்களாகையாலும் அநித்யங்களாகையாலும் தேவ மனுஷ்யாதி ஆகாரங்களும் அவற்றால் அனுபவிக்கத்தகுந்த சப்தாதிவிஷயங்களும் புருஷார்த்தங்களாக மாட்டாவாகை

யால் ப்ரவ்ருத்திகர்மத்தைத் துறந்து அவற்றை விதிக்கிற ஸாஸ்த்ரங்களிலும் ஆதர மற்றிருக்கவேண்டும்' என்று கீழ் கூறப்பட்டது. அது யுக்தமன்று. ஏனென்றால், தேவ மனுஷ்யாதி ஆகாரங்கள் அநித்யங்களாயினும் அந்த ஆகாரங்களை அடைகிற ஆத்மாக்கள் நித்யர்களாகையாலும், ஆகாரபரம்பரைகளும் அவற்றிற்கு உபபோக்யங்களான விஷயபரம்பரைகளும் ப்ரவாஹம்போல் நித்யங்களாகையாலும் சப்தாதிவிஷயங்களை அனுபவிப்பதற்குரிய தேசகாலங்களும் அவற்றின் ஸாதனங்களும் அவற்றை அறிவிக்கிற வேதங்களும் அங்ஙனமே நித்யங்களாகையாலும் ஸர்வகாலத்திலும் சப்தாதிவிஷயங்களை விரும்பி அவற்றிற்குரிய ஸாதனங்களை அனுஷ்டித்து அவற்றின் பலனை அனுபவிக்குந் தன்மை யுள்ளவர்களுக்கு ப்ரவ்ருத்திகர்மம் அவர்கள் விரும்பும் புருஷார்த்தங்களை நிறைவேற்றிக்கொடுக்க வல்லதேயாகையால் அதைத் துறப்பது யுக்தமன்று. துக்கஸாதனமோவென்றால் ப்ரதிகூலமாகையால் தானே துறக்கப்படுகின்றது. பித்தம்பிடித்தவன் தவிர மற்ற எவனும் தனக்குத் தானே துக்கத்தை விளைத்துக் கொள்ளமுயற்சி செய்யமாட்டான். உத்தவனே! இங்ஙனம் சிலர் பரவ்ருத்திகர்மம் புருஷார்த்தஸாதனமென்று நிரூபிக்கிறார்கள். ஆயினும்ஸமஸ்தப்ராணிகளுக்கும் தேஹஸம்பந்தம் உண்டாகையால் கலை காஷ்டை முஹூர்த்தம் முதல் ஸம்வத்ஸரம் வரையிலுள்ள காலாவயவங்கள் சக்ரம்போல் சுழன்று கொண்டிருப்பதுபற்றி அடிக்கடி ஜன்மஜராமரணாதிகள் உண்டாய்க் கொண்டேயிருக்கின்றன. ஆதலால் துக்கம் தவறாமல் விளைந்துகொண்டே யிருக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. ப்ரவ்ருத்திகர்மம் புருஷார்த்தஸாதகமென்று ஒப்புக்கொள்

ஸீனும் ரஜஸ்தமோகுணங்களில் ஏதேனுமொன்றை அனுஸரிக்கின்றவனும் ப்ரவ்ருத்திகர்மங்களைச் செய்து அவற்றின் பலனான ஸுகதுக்கங்களை அனுபவிப்பவனு மாகியஜீவன் கர்மங்களைச் செய்தும் அவற்றின் பலனான ஸுகதுக்கங்களை அனுபவிக்காமல் ஸ்வதந்த்ரனாயிருக்க முடியாது; செய்த கர்மங்களின் பலனை அனுபவித்தே தீரவேண்டும். இவ்விஷயம் அனுபவஸித்தமாகையால் புதிதாக ஸாதிக்கவேண்டிய அவஶ்யமில்லை. இல்லையாயின் ஒருவனும் துக்கத்தை அனுபவிக்க மாட்டான். ஆகையால் எவன்தான் ஸ்வாதந்த்ரியமின்றிப் பரவசனாயிருந்து கொண்டு சப்தாதி விஷயங்களை அனுபவிக்க விரும்புவான்? 'ஆயினும் கர்மங்களை நன்றாகச் செய்து முடிக்கத் தெரியாதவர்கள் துக்கத்தை அனுபவிக்கிறார்களன்றி அவற்றை நன்றாகச் செய்து முடிக்கத் தெரிந்தவர்கள் ஸுகத்தை அனுபவிக்கின்றார்கள். ஆகையால் சப்தாதி விஷயங்களை விரும்புவதும் அவற்றிற்காக ப்ரவ்ருத்தி கர்மங்களைச் செய்வதும் யுக்தமே' என்றால், சொல்லுகிறேன்; கேள். கர்மங்களை நன்றாகச் செய்து முடிக்கத் தெரிந்த வித்வான்களுக்கும் சிலவிஷயங்களில் ஸுகம் உண்டாகிறதில்லை. அவர்களும் தேஹஸம்பந்தமுடையவர்களேயாகையால் ஸர்வகாலமும் ஸுகம் கிடைப்பது அரிதே. மற்றும், ஸாதனங்களை அனுஷ்டிக்கும்பொழுது அவை துக்கத்தையே விளைக்கும். அவற்றின் பலன்களை அனுபவிக்கும் பொழுதும் இந்த அனுபவத்தினின்று நாம் சீக்ரத்தில் நழுவவேண்டுமேயென்னும் பயத்தினால் அவையும் துக்கத்திற்கிடமாகவேயிருக்குமன்றிக் கேவலஸுகத்திற்கிடமாயிருக்க மாட்டா. ஆகையால் 'கர்மங்களை நன்றாகச் செய்து முடிக்கத் தெரியாத மூடர்களுக்கே துக்

கம் விளையுமன்றிச் செய்து முடிக்கத் தெரிந்தவர்களுக்குத் துக்கம் உண்டாகாது' என்று நினைப்பது வீணஹங்காரமே யன்றி வேறொன்றும் இல்லை, தெரிந்தவர்களுக்கும் துக்கம் உண்டாகுமேயன்றி உண்டாகாமற் போகாது. (இவ்விஷயம் இப்பொழுதே நிரூபித்துச் சொன்னேனல்லவா?) மற்றும், எல்லாவற்றையும் உணர்ந்த ப்ரஹ்மாதி தேவதைகளுக்குங்கூட ஸுகம் உண்டாகிறதில்லை. அவர்களுடைய ஐஶ்வர்யமும் த்விபரார்த்தம் முதலிய அவரவர்களுக்கு ஏற்பட்ட காலத்தின்முடிவில் நழுவுந்தன்மையதாகையால் அவர்களுடைய ஸுகமும் 'ஐயோ! நம்முடைய அதிகாரம் நழுவப்போகிறதே' என்னும் சங்கையை உட்கொண்டிருப்பதாகையால் [1] துக்கமிஶ்ரமாகவேயிருக்குமன்றிக் கேவல ஸுகமாயிராது. ஆகையால் துக்கஸம்பந்தமில்லாத ஸுகம் எவர்களுக்கும் உண்டாகாது. இப்படியிருப்பினும் மூடர்களான அந்த ப்ரஹ்மாதிகள் அஹங்காரப் படுவதுவீணே. வித்வான்கள் ஸுகம் பெறுதற்கும் துக்கத்தைப் போக்குவதற்கும் வேண்டிய உபாயத்தையும் அறிகிறார்கள். ஆயினும் எதனால் ம்ருத்யுவென்று கூறப்படுகிற ஸம்ஸாரம் உண்டாகாதோ, அத்தகைய உபாயத்தை அவர்கள் அறியார்கள். (கர்மவஶ்யர்கள் ஸ்வதந்த்ரர்களன்றாகையால் அவர்களுக்கு ஸுகதுக்கங்கள் சுபாசுபகர்மமூலமாக உண்டாகின்றனவென்று அவர்கள் அறிவார்களேயன்றி மோக்ஷோபாயத்தை அறிய மாட்டார்கள்). இங்ஙனம் ஜீவிக்கின்ற புருஷனுக்கு அர்த்தமென்கிற பணமாவது காமமென்கிற சப்தாதி விஷயமாவது எதுதான் ஸுகத்தை விளைக்கும்? எதுவும் ஸுகத்தை விளைக்காது. ஏனென்றால், தேஹத்தோடு கூடவே பிறந்த ம்ருத்யு கூடவே இருக்கின்றதாகை.

1. துக்கமிஶ்ரம்-துக்கம் கலந்தது.

யால் அந்த அர்த்த காமங்களால் விளையும் ஸுகத்தை ஸுகமாகத் தோற்றவொட்டாது. கொலைக்களத்திற்குக் கொண்டுபோகப் பெறுகிற வத்யபுருஷனுக்குக் கொடுக்கிற பாற்சோறு ஆடையாபரணம் முதலியவை ஸந்தோஷத்தை விளைக்குமா? அடுத்த க்ஷணத்தில் வதத்தை அனுபவிக்கப்போகிறானாகையால் அவை அவனுக்கு ஸுகத்தை விளைக்கமாட்டாவல்லவா? அங்ஙனமே ம்ருத்யுவினால் தொடரப்பெற்ற புருஷனுக்கு அர்த்தமாவது காமமாவது ஸுகத்தை விளைக்கமாட்டாது. 'பசுக்களை விரும்புகிறவன் சித்ரா யாகம் செய்யவேண்டும்' என்றும், 'மழையை விரும்புகிறவன் காரீரியாகஞ்செய்ய வேண்டும்' என்றும் வேதங்களில் சொல்லுகிற சித்ராதியாகங்களும் அவற்றின் பலனான பசு மழை முதலிய ஐஹலௌகிக போகங்களும், 'ஸ்வர்க்கத்தை விரும்புகிறவன் தர்சபூர்ணமாஸயாகங்கள் செய்யவேண்டும்' என்று இது முதலாக வேதங்களில் சொல்லுகிற தர்சபூர்ணமாஸாதி யாகங்களும் அவற்றின் பலனான ஸ்வர்க்கம் முதலிய பாரலௌகிக போகங்களும் க்ருஷியைப்போல் ஸ்பர்த்தை அஸூயை நாசம் வ்யயம் முதலிய பற்பல விக்னங்கள் நிறைந்தவையாகையால் நிஷ்ப்பலமே (புருஷார்த்தமாக மாட்டா). (பசு மழை முதலிய இஹலோக போகங்களுக்காகவும் ஸ்வர்க்கம் முதலிய பரலோகபோகங்களுக்காகவும் செய்கிற ப்ரவ்ருத்தி கர்மங்களெல்லாம் க்ருஷியைப்போல் பல விக்னங்கள் அவஸ்யமாய் நேரக்கூடியவையாகையால் நிஷ்ப்பலங்களேயாம்). ஒருவன் விக்னங்களால் தடைபடாமல் தர்மத்தை நன்றாக அனுஷ்டிப்பானாயினும், அங்ஙனம் அனுஷ்டித்த தர்மத்தினால் அவன் எத்தகைய லோகத்தைப் பெறுகிறானோ, அங்கு

னவ்வித ஸுகங்களை அனுபவிக்கிருனே, அதையெல்லாம் விவரித்துச் சொல்லுகிறேன், கேள். யஜ்ஞானுஷ்டானத்தினுல் பெருமை பெற்ற புருஷன் இவ்வுலகத்தில் இந்த்ராதிதேவதைகளை யஜ்ஞங்களால் ஆராதித்து ஸ்வர்க்கலோகத்திற்குப் போகின்ருன். அங்குத் தான் யஜ்ஞாதிகர்மங்களால் ஸம்பாதித்த திவ்யபோகங்களைத் தேவேந்த்ரன்போல அனுபவிப்பான். மிகவும் இனியவைகளான ஆடை ஆபரணம் முதலிய அலங்காரங்களைத் தரித்துத் தன் புண்யத்தினுல் ஸம்பாதித்த சுப்ரமான விமானத்தில் ஏறிக்கொண்டு தேவதாஸ்த்ரீகளினிடையில் விளையாடலுற்றுக் கந்தர்வர்களால் பாடப் பெறுவான். நினைத்தபடி போகுந்தன்மையதும் சிறு சதங்கைகள் வரிசை வரிசையாகக் கட்டப் பெற்றதுமாகிய விமானத்தில் ஏறித் தேவதைகளின் உத்யானங்களில் தேவ ஸ்த்ரீகளோடு விளையாடிக்கொண்டிருப்பான். அங்ஙனம் மஹாநந்தத்தில் ஆழ்ந்து, புண்யம் க்ஷயித்தவுடனே தான் கீழே விழப்போகிற ஸங்கதியை அறியமாட்டான். எதுவரையில் புண்யம் தொடர்ந்து வருமோ அதுவரையில் ஸ்வர்க்கலோகத்தில் விளையாடலுற்று ஸந்தோஷத்தை அனுபவிப்பான். புண்யம் க்ஷீணிக்கையில் தான் ஸம்மதப்படாதிருப்பினும் பலிஷ்டமாகிய காலத்தினுல் தள்ளுண்டு கீழே விழுவான். இங்ஙனமே இங்கும் அங்கும் சுழன்றுகொண்டிருப்பான். (புண்யஞ் செய்தவனுடைய கதி இது). அஸத்துக்களின் ஸஹவாஸத்தினுல் அதர்மத்தில் விருப்பமுற்று இந்த்ரியங்களை வெல்லமுடியாமல் சப்தாதி விஷயங்களில் மனஞ் செல்லப்பெற்று வருத்தங்களுக்கிடமாகி லோபம் தலையெடுத்து ஸ்த்ரீலோலனுமாகி அதற்காக ப்ராணிஹிம்ஸையில் முயன்று

துஷ்ட ஜனங்களால் வஞ்சிக்கப்பட்டுப் பணம் முதலிய வற்றிற்காகப் பசுக்களை விதிக்குட்படாமல் வதித்து ப்ரேத கணங்களையும் பூத கணங்களையும் ஆராதித்துத் தன்னுடைய பாபகர்மங்களுக்குட்பட்டு க்ரமத்தில் நரகத்தை அடைந்து தமோகுண ப்ரசுரமான ஸ்தாவர ஜன்மத்தைப் பெறுவான். தேஹத்தினால் துக்கத்தை விளைப்பவைகளான புண்யபாப கர்மங்களைச் செய்து அந்தந்த தேஹத்தின முடிவில் அந்தந்த கர்மங்களால் அவ்வவற்றின் பலன்களை அனுபவிப்பதற்குரிய தேஹத்தை மீளவும் பெறுகின்றான். இப்படியிருக்கையில் மரணத்தையே இயற்கையாகவுடைய ஜீவனுக்கு இந்த ஸம்ஸாரத்தில் என்ன ஸுகம் இருக்கின்றது? கல்பம் வரையில ஜீவித்திருக்கிற லோகங்களுக்கும் லோகபாலர்களுக்கும் கல்பத்தின்முடிவில் என்னிடத்தினின்று பயம் உண்டாகின்றது. பலபடச் சொல்லியென்? இரண்டு பரார்த்தங்களை ஆயுளாகவுடைய ப்ரஹ்மதேவனுக்குங் கூடக் கால ஸ்வரூபனான என்னிடத்தினின்று பயம் உண்டாகின்றது. எல்லாம் காலத்திற்குட்பட்டதாகையால் எதற்கும் துக்கம் கலக்காத கேவல ஸுகம் கிடையாது. ஆத்மா தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனென்றும் ஜ்ஞான ஸ்வரூபனென்றும் செயல்களற்றவனென்றும் கீழ் நிரூபிக்கப்பட்டது. இப்படியிருக்க அத்தகைய ஆத்மாவுக்குக் கர்மங்களைச் செய்கையும் அவற்றின் பலனான ஸுகதுக்கங்களை அனுபவிக்கையும் எங்ஙனம் சேருமென்றால், சொல்லுகிறேன்; கேள். ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற ப்ராக்ருதகுணங்கள் கர்மங்களைச் செய்யும்படி ஆத்மாவைத் தூண்டுகின்றன. (ஸத்வாதி குணங்கள் தங்களுக்கு உரிய கர்மவாஸனையால் தேஹாரம்பத்தையும் கர்மங்களைச் செய்ய

வேண்டுமென்னும் விருப்பத்தையும் அதற்குரிய ப்ர யத்னம் ஜ்ஞானம் இவைகளையும் விளைத்து ஜீவனைக் கர் மங்களில் மூட்டுகின்றன.) ஸத்வாதி குணங்களின் பரிணா மமான தேஹம் இந்த்ரியங்களுடன்கூடி ஸத்வாதி குணங்களை அனுஸரித்துக் கர்மங்களைச் செய்யும்படி ஜீவனைத் தூண்டுகின்றது. இங்ஙனம் ப்ராக்ருத குண ஸம்பந்தமுடைய ஜீவன் தான் செய்த புண்யபாப கர்மங் களின் பலனான ஸுகதுக்கங்களை அனுபவிக்கின்றான். ப்ராக்ருத குணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களின் ஏற்றக்குறைவாகிற வைஷம்யம் எதுவரையில் மாறாதிருக் குமோ, அதுவரையில் ஆத்மா ஜ்ஞானத்தையே வடி வாகவுடையவனாயினும் அவனுக்குத் தேவமனுஷ்யாதி தேஹஸம்பந்தத்தினால் ஏற்பட்ட பேதம் மாறாது. (அது வரையில் பலவாறான தேஹ ஸம்பந்தம் மாறாது.) எது வரையில் தேஹ ஸம்பந்தம் மாறாதோ, அதுவரையில் கர்ம வச்யத்வம் மாறாது. எதுவரையில் கர்ம வச்யத் வம் மாறாதோ, அதுவரையில் ஸர்வேச்வரனான என் னிடத்தினின்று பயம் விளைந்துகொண்டேயிருக்கும். துக்கங்கள் நிறைந்த ஸம்ஸாரபயத்தைக் காம பரதந்த் ரர்களுக்கு நான் விளைத்துக்கொண்டே யிருப்பேன். எவர்கள் இந்தச் சரீரத்தையே ஆத்மாவாக அபிமா னித்து இந்தச் சரீர ஸுகத்திற்காக ப்ரயத்னஞ் செய் கிறார்களோ, அவர்கள் சோக ஸாகரத்தில் அழுந்தி அதினின்று கரையேறுமுபாயத்தை அறியாமல் மயங் குவார்கள். 'ப்ரதிகூலமான தேசம் காலம் ஸ்வபாவம் இவை முதலியவையன்றோ பயத்தை விளைவிக்கின்றன. அதில் உனக்கு என்ன ஸம்பந்தம்?' என்றால் சொல்லு கிறேன். ஸ்ருஷ்டிதசையில் காலம் தேஹம் புண்ய பாபங்களை அனுஷ்டிக்கும் ஆத்மா உபாயம் விதிநிஷே

தங்களை அறிவிக்கும் சாஸ்த்ரம் ஸ்வபாவம் ஆகிய இவையெல்லாம் நானே. அங்ஙனமே பண்டிதர்கள் நிரூபித்துச் சொல்லுகிறார்கள். (இங்ஙனம் கால ஸ்வபாவாதிகளெல்லாம் என்னதீனமேயாகையால் பயாபங்களை விளைக்கிறவன் நானே).

உத்தவர் சொல்லுகிறார்:—ப்ரபூ! ஜீவன் தேவமனுஷ்யாதி தேஹங்களில் இருந்துகொண்டு ஸத்வாதி குணங்களுக்கு உட்பட்டுக் கர்மங்களைச் செய்வதும் சப்தாதி விஷயங்களை அனுபவிப்பதுமாயிருக்கின்றான். அத்தகைய ஜீவன் ஸத்வாதி குணங்களால் எங்ஙனம் மறைக்கப்படாதிருப்பான்? (ஜீவனுக்கு ஸம்ஸாரம் அனாதியாக ஏற்பட்டிருக்கின்றது. அவன் கர்மத்தினால் ஸ்வபாவம் மறையபபெற்றிருக்கின்றான். அவன் எங்ஙனம் குணங்களைக் கடக்க முடியும்?) கர்மமூலமான ஸுக துக்காதிகளை எங்ஙனம் அனுபவியாதிருக்க முடியும்? (இயற்கையில் ஜீவன் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனாயினும் அஜ்ஞானாவரணம் வந்தேறியாயினும் அது அனாதியாகையாலும் ஜீவன் நித்யனாகையாலும் அவனுக்குக் கர்மவஸ்யத்வமும் அதைப் பற்றின ஸுகதுக்கங்களும் நேராதுபோக மாட்டா. நித்யவஸ்துவுக்கு முடிவுகிடையாதல்லவா? கர்மவஸ்யத்வம் முதலியது அனாதியேயாயினும் அதற்கு முடிவும் உள்ளதேயென்று சொல்லவும் முடியாது. ஈஸ்வரனைப்போலஜீவன் ஸ்வயம்ப்ரகாசனும் ஜ்ஞாதாவுமாகையால் அவனுக்கு அஜ்ஞானாவரணமும் அதைப்பற்றி விளைகிற ஸம்ஸாரபந்தமும் எப்படி நேரும்; மற்றும், பரமாத்ம ஜ்ஞானமுடைய அறிஞனுடைய நடத்தை எத்தகையதாயிருக்கும்? அவனுடைய பொழுதுபோக்கு எத்தகையதாயிருக்கும்? இவன் அறிஞனென்று எந்த அடையாளங்

களால் அறியலாம்? அவன் போஜனஞ் செய்வானு? அல்லது போஜனத்தைத் துறந்திருப்பானு? அவன் படுத்தேயிருப்பானு? அல்லது உட்கார்ந்திருப்பானு? அல்லது அவன் திரிந்துகொண்டே யிருப்பானு? அவன் செய்யும் போஜனம் முதலிய செயல்கள் எத்தகையனவாயிருக்குமோ அதை யெல்லாம் எனக்கு விவரித்துச் சொல்வாயாக. அச்சுதனே! நீ உன்னுடையவர்களைக் கைவிடாது காக்குந் தன்மையனல்லவா? ஆகையால், கேள்விகளுக்குத் தகுந்த மறுமொழிகள் கூறவல்லவர்களில் சிறந்தவனே! என்னுடைய கேள்விக்கு மறுமொழி கூறி என்ஸந்தேஹங்களைத் தீர்த்து என்னையும் காத்தருள்வாயாக. நித்யபத்தனான ஜீவன் வேறென்றும் நித்யமுக்தனான ஜீவன் வேறென்றும் என்னுடைய ப்ரமம். நித்யபத்தனுக்கு ஒருகாலும் முக்தி உண்டாகாதென்றும் நித்யமுக்தனுக்கு ஒருகாலும் ஸம்ஸாரபந்தம் உண்டாகாதென்றும் நான் ப்ரமித்துக் கொண்டிருக்கிறேன். (நித்யமுக்தனான ஈஶ்வரனே தன்னுடைய அவித்யையினால் நித்யபத்தனயிருக்கிறானென்றும் எனக்கு ப்ரமம் உண்டாகின்றது. ஜீவனும் ஈஶ்வரனும் ஒன்றேயென்பதற்கு உரிய ப்ரமாணமில்லாமையால் அதையும் எனக்கு நிச்சயிக்க முடியவில்லை. ஆகையால் இவ்விஷயத்தை நன்றாக எனக்கு உபதேசிப்பாயாக) பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

பத்தர் மூத்தர் ஸாதுக்கள் இவர்களின் லக்ஷணத்தையும் பக்தியின் ஸ்வரூபத்தையும் பகவான் உத்தவனுக்குக் கூறுதல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஸத்வாதிகுணங்கள் அவற்றின் மூலமாய் விளையும் புண்யபாபகர்மங்கள் ஆகிய இவைகளால் கட்டுண்டவனென்றும் அவற்றினின்று விடுபட்டவனென்றும் வழங்கிவருதல் எனக்கு வாஸ்தவமாகவே கிடையாது. புண்ய பாபகர்மங்கள் ப்ரக்ருதியின் மூலமாய் விளைபவையாகையாலும் அந்த ப்ரக்ருதி எனக்கு உட்பட்டதாகையாலும் அதற்கு நியாமகனான எனக்குக் குணமூலமான கர்மபந்தமும் அதினின்று விடுபடுகையாகிற மோக்ஷமும் கிடையாது. குணகர்ம வச்யனான ஜீவனுக்கே அவை உள்ளவை. எனக்கு உட்பட்டிருப்பதாகிய மாயையினால் ஜீவனுக்குச் சோகம் மோஹம் ஸுகம் துக்கம் தேஹஸம்பந்தம் ஆகிய இவை உண்டாகின்றன. ஜீவனுக்கு ஸ்வப்னத்தில் சரீரஸம்பந்தமும் அதைப்பற்றி வருகிற ஸுக துக்காதிகளும் அநித்யமாயிருப்பதுபோல் அவனுக்குள்ள ஸம்ஸாரபந்தமும் அநித்யமேயன்றி நித்யமன்று. (ஆத்மஸ்வரூபம் நித்யமாயினும் அதைத் தொடர்ந்த ஸம்ஸாரமும் நித்யமென்று ப்ரமிக்கலாகாது. நித்யனான இவ்வாத்மாவுக்கே ஸ்வப்னத்தில் விளைகிற தேஹஸம்பந்தமும் அதைப்பற்றி வருகிற ஸுகதுக்காதிகளும் அநித்யமென்பது வெளிச்சமேயல்லவா? அங்ஙனமே ஸம்ஸார பந்தமும் அநித்யமேயன்றி நித்யமன்று. ஸம்ஸாரம் அநாதியென்றும் அது அநித்யமென்றும் சொல்லுவது எங்ஙனம் பொருந்துமென்றால், ஆதியந்தமில்லாத வஸ்துவே நித்யமாமன்றி ஆதியில்லாமல்

அந்தமுடைய வஸ்து நித்யமாகாது. ஆதியில்லாமை மாத்ரமே நித்யமாயிருக்கைக்கு ஹேதுவாகாது. 'ஸ்வப்னத்தில் விளைகிற தேஹஸம்பந்தமும் அதைப்பற்றி வருகிற ஸுகதுக்காதிகளும் பொய்யல்லவா? அங்ஙனமே ஸம்ஸாரமும் பொய்யே' யென்று ப்ரமிக்கலாகாது. ஸ்வப்னத்தில் விளைகிற தேஹஸம்பந்தாதிகள் பொய்யன்று. அவையும் ஜீவனுடைய புண்ய பாபகர்மங்களுக்குத் தகுந்தபடி ஈஸ்வரனால் படைக்கப்பட்டவைகளே. அங்ஙனமே ஸம்ஸாரமும் உண்மையேயன்றிப் பொய்யன்று. 'ஆத்மாவுக்கு அது இயற்கையில் ஏற்பட்டதன்று; வந்தேறி' யென்பதைப்பற்றி அதை உண்மையன்றென்று சொல்லுவது மாத்ரமே யொழிய அது பொய்யன்று. அநித்யமென்பதற்கே ஸ்வப்னத்தை நிதர்சனமாகக் காட்டினோமன்றிப் பொய்யென்பதற்கு நிதர்சனமாகக் காட்டவில்லை. ஸ்வப்னனுபவமும் உண்மையேயென்று நிரூபித்தோமாகையால் அதைப்போல் இதுவும் பொய்யென்பதற்கு இடமேயில்லை). 'ஆனால் அந்த ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமென்? அது நிவர்த்திப்பதற்குக் காரணமென்?' என்றால், சொல்லுகிறேன்; கேள். உத்தவனே! ப்ராணிகள் ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து பரமாத்மாவான என்னை உபாஸிக்கையாகிற வித்யையும் ஆத்மபரமாத்மாக்களின் உண்மையை அறியாமையாகிற அவித்யையும் ஆகிய இவ்விரண்டும் என்னுடைய சரீரம்போல் என்னதீனமாயிருப்பவை. வித்யை அவித்யை ஆகிய அவ்விரண்டும் ஸம்ஸார மோக்ஷபந்தங்களை விளைப்பவை. (வித்யையினால் ஸம்ஸாரமோக்ஷமும், அவித்யையினால் ஸம்ஸாரபந்தமும் உண்டாகின்றன. மற்றும், அவை என்னுடைய ஸங்கல்பத்தினால் ஏற்பட்

டவை. ஆழ்ந்த மதியுடையவனே! தேவமனுஷ்யாதி சரீரங்களைப் பெற்று அவற்றை நியமித்துக்கொண்டு அவற்றில் முக்யனாயிருப்பவனும் எனக்குச் சரீரமாகி என்னுடைய அம்சமாயிருப்பவனுமாகிய ஜீவனுக்கே ஸம்ஸாரபந்தமோக்ஷங்கள் உள்ளவை. அவற்றில் ஸம்ஸாரபந்தம் அவித்யையினால் உண்டாகின்றது. அது அனாதி. (இன்று முதல் அது ஜீவனுக்கு உண்டாயிற்றென்று நிரூபித்துச் சொல்லமுடியாது. அது அனாதியாயினும் அதற்கு வித்யையினால் முடிவு உண்டாகின்றது). ஸம்ஸாரபந்தத்தில் அகப்பட்ட ஜீவனுக்கும் நித்ய நிர்த்தோஷனான பரமாத்மாவுக்கும் உள்ள பேதத்தைச் சொல்லுகிறேன்; கேள். அப்பனே! அவ்விருவரும் ஒரே சரீரத்தில் இருப்பவர்; ஆயினும் ஒரே காலத்தில் கர்மபலன்களான ஸுகதுக்காதிகளை அனுபவிக்கையும் அவற்றை அனுபவிக்காமையும் அறிவும் அறிவின்மையும் ஆகிய இவை முதலிய பலவகையான விருத்ததர்மங்களுக் கிடமாயிருப்பவர்கள். (ஜீவன் தேவ மனுஷ்யாதி சரீரங்களில் இருந்துகொண்டு தான் செய்த புண்ய பாப கர்மங்களின் பலனான ஸுக துக்கங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறான். இயற்கையில் ஜ்ஞானஸ்வரூபனாகையால் எல்லாவற்றையும் அறியவல்லனாயினும் கர்மபந்தத்தினால் மலர்வதும் குவிவதுமான அறிவுடையவனாகி எல்லாவற்றையும் அறியுந்திறமையற்றிருப்பான். ஜீவன் கண்ணால் கண்டதையும் காதால் கேட்டதையும் மூக்கால் மோந்ததையும் நாக்கால் நக்கினதையும் உடலால் ஊர்ந்ததையும் அறிவானன்றி மற்றதை அறியமாட்டான். கண்ணால் கண்டது முதலியவற்றிலும் நேற்றுக் கண்டது கேட்டது முதலியவற்றை இன்று மறந்து நினைக்க முடியா.

திருப்பது முண்டு. கண் முதலிய இந்த்ரியங்களின் திறமை குறையுமாயின் அவற்றாலும் அறியவல்லனாக மாட்டான். ஈஸ்வரனோவென்றால் எக்காலத்திலும் எவ்விடத்திலும் எதையும் எதிர் பாராமல் எல்லாவற்றையும் அறியுந்திறமையுடையவன். ஜீவனோடு கூட ஓரே சரீரத்தில் இருந்தும் அவனைப்போல் கர்மபலனான ஸுகதுக்கங்களை அனுபவிக்குந்தன்மையனல்லன். அவை அவனைத் தீண்டவும் வல்லவையாகமாட்டா). ஜீவாத்ம பரமாத்மாக்களாகிய இவ்விருவரும் இரண்டு பக்ஷிகள்போன்றவர்; அழகிய சிறைகள் அமைந்தவர்கள். (ஜீவாத்மாவுக்குத் தர்ம அதர்மங்கள் இரண்டுமே இரண்டு சிறைகள். பரமாத்மாவுக்குத் தோஷங்கள் என்றும் தீண்டப்பெறுமையாகிற அபஹதபாப்மத்வமும் ஸமஸ்த கல்யாணகுணங்களும் நிறைந்திருக்கையாகிற கல்யாண குணாகரத்வமுமாகிற இவையிரண்டுமே சிறைகள். இவ்விரண்டு பக்ஷிகளும் ஒன்றோடொன்று ஒத்திருப்பவை (ப்ரயத்னம் முதலிய அழகிய குணங்களால் ஒத்திருப்பவை). ஒன்று உபகாரஞ் செய்வதும் மற்றொன்று உபகாரம் பெறுவதுமாகி ஸ்னேஹமுடையவைகளாயிருக்கும்; சரீரமாகிற ஒரு வ்ருக்ஷத்தில் ஹ்ருதயகமலமாகிற கூண்டை வாஸஸ்தானமாகவுடையவை. அங்ஙனம் அவ்விரண்டு பக்ஷிகளும் ஓரிடத்தில் சேர்ந்திருப்பதற்கு உலகத்தில் புலப்படுங்காரணங்கள் எவையுமின்றிக் கேவலம் தற்செயலாயிருக்கும். அவ்விரண்டில் ஜீவாத்மாவாகிற ஒரு பக்ஷி ப்ரக்ருதியின் பரிணாமங்களான சப்தாதி விஷயங்களாகிற ஆஹாரத்தைப் புசித்துக் கொண்டிருக்கும். பரமாத்மாவாகிற மற்றொரு பக்ஷியோவென்றால் அத்தகைய ஆஹாரம் எதுவுமின்றி ஸர்

வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் முதலிய தன்பலத்தில் சிறி தும் குறையாமைமாத்ரமே யல்லாமல் அப்பலம் மேன்மேலும் வளரப்பெற்று மிகவும் விளக்கமுற் றிருக்கும். ஸர்வஜ்ஞனும் கர்மபலனான ஸுகதுக்கங்கள் தீண்டப் பெறுதவனுமாகிய பரமாத்மா தன்னையும் தன் னைக்காட்டிலும் வேறுபட்ட ப்ரக்ருதி புருஷர்களையும் உள்ளபடி ஸாக்ஷாத்கரிக்கின்றான். கர்மபலன்களை அனு பவிக்கின்ற ஜீவனோவென்றால் தன்னையாவது தன்னைக் காட்டிலும் விலக்ஷணனும் தன்னை என்றும் பிரியாமல் தனக்கு நண்பனுமாயிருக்கின்ற பரமாத்மாவையாவது அறிகிறதில்லை. பின்னையோவென்றால் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்துத் திரிகின்றான். ஆத்ம பரமாத் மாக்களின் உண்மையை அறியாத ஜீவனை நித்ய பத்த னென்றும், இயற்கையாகவே என்றும் மாறுமல் ஜ்ஞா னஸ்வரூபனுயிருக்கின்ற பரமாத்மாவை நித்ய முக்த னென்றும் அறிவாயாக. ஆத்ம பரமாத்மாக்களின் உண் மையை அறிந்த ஜீவன் தேவமனுஷ்யாதி தேஹங்க ளில் இருப்பினும் அவற்றில் ஆத்மாபிமானம் கொள்ளா மல் அத்தேஹங்களில் இராதவன்போலவே யிருப்பான். தேஹாத்மாபிமானமுடைய ஜீவனோவென்றால் கர்ப்ப வாஸம் மஹாப்ரளயம் முதலிய ஸமயங்களில் தேஹம் நிறைவேறு திருக்கும்பொழுது தேஹத்தில் இராதிருப் பினும் தேஹங்களில் இருப்பதுபோலவே பத்தனுயிருப் பான். ஸ்வப்னங் காண்கிறவன் ஸ்வப்னத்தில் அனுப விக்கிற தேஹங்களில் ஆத்மாபிமானங்கொண்டு அவற் றில் அமைந்திருப்பதுபோலத் தேஹாத்மாபிமான முள் ள ஜீவன் தேஹத்தில் இல்லாத சில ஸமயங்களிலும் தேஹத்தில் இருப்பதுபோலவே பத்தனுயிருப்பான். தேஹத்தையும் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷண

ணை ஆத்மாவையும் அவ்வாத்மாவைக்காட்டிலும் வில க்ஷணனை பரமாத்மாவையும் எவன் உள்ளபடி அறி வானே, அவன் ப்ரக்ருதியின் பரிணமங்களான இந்த்ரி யங்களால் அனுகூலங்களும் ப்ரதிகூலங்களுமாகி ப்ரக்ரு தியின் பரிணமங்களுமான சப்தாதிவிஷயங்களை அனுப விக்கினும் 'நான் செய்கிறேன். நான் அனுபவிக்கிறேன்' என்னும் அஹங்காரத்தை ஏற்றுக்கொள்ளமாட்டான். பூர்வஜன்மத்தில் செய்த புண்யபாப கர்மத்தின்படி ஏற்படுகின்ற தேவமனுஷ்யாதி சரீரங்களில் ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற ப்ராக்ருதகுணங்களுக்கு உட் பட்ட இந்த்ரியங்களால் ஸம்பவிக்கின்ற அத்தகையபுண்ய பாபகர்மத்தில் பலனை அனுபவிக்கும்பொருட்டு இருப்பி னும் அந்தத் தேஹம் பூர்வஜன்மகர்மத்தினுல் ஏற்பட்ட தென்பதையும் தான் அதில் இருப்பதையும் அறியா மல் (தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனை ஆத்மா வை அறியாமல், தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து நான் செய்கிறேனென்றும் நான் அனுபவிக்கிறேனென் றும் தன்னைக் கர்த்தாவாகவும் போக்த்ராவாகவும் நினை த்து மேன்மேலும் தேஹஸம்பந்தத்தைப்பெறுகின்றுன்; (ஆனதுபற்றியே அவன் நித்யபத்தனென்று கூறப்படுகி ன்றுன்.) இங்ஙனம் தேஹாத்மாபிமானமுள்ள ஜீவனு னுடைய நடத்தையையும் அதனுல் அவன் அனுபவிக் கும் பலனையும் ஆராய்ந்து தேஹத்திலும் தேஹானு பந்திகளிடத்திலும் விரக்தி உண்டாகப்பெற்று, படுத் தல் இருத்தல் வியாபித்தல் தரித்தல் ஸ்னனஞ் செய் தல் பார்த்தல் தொடுதல் மோருதல் புசித்தல் கேட் டல் முதலிய எல்லாச் செயல்களையும் உரியபடி நடத்திக் கொண்டிருந்த போதிலும் ஸத்வாதி குணங்களின் பரி ணமங்களான இந்த்ரியங்களால் சப்தம் முதலிய அக்

தந்த விஷயங்களை அனுபவித்துக்கொண்டு வருகிற (இந்த்ரியங்கள் ஈஸ்வராயத்தமான ஸத்தையையும் ப்ரவ்ருத்தியையும் உடையவை. செயலும் போகமும் அவைகளைச் சேர்ந்தவைகளேயென்னும் நினைவுடைய வனாகிய) அறிஞன் அங்ஙனம் ஸம்ஸாரபந்தத்தை அடையமாட்டான். எங்கும் வியாபித்திருக்கிற ஆகாயமும் தன் கிரணங்களால் எங்கும் வியாபிக்கிற ஸூர்யனும் எங்கும் வீசுகிற காற்றும் ஆங்காங்குள்ள தோஷங்கள் தீண்டப்பெறுதிருப்பதுபோல், ஜீவன் தேவ மனுஷ்யாதி தேஹங்களில் இருப்பினும் அந்த தேஹங்களைப்பற்றி வரும் ஸுகதுக்காதிகளால் மனக்கலக்கமுறுதிருப்பானாயின், அந்த தேஹங்களில் இல்லாதவன் போலவே யாவான். (அவனுக்கு மேன்மேலும் ஸம்ஸாரபந்தம் உண்டாகாது.) மற்றும், இவ்வறிஞன் தேஹாதிகளில் பற்றில்லாமையால் கூருற்றிருக்கிற நிபுண புத்தியினால் ஸம்சயங்களையெல்லாம் அறுத்து (ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனா? அன்று? ஆத்மா ஸ்வதந்த்ரனா? அல்லது ஈஸ்வரனுக்குப் பரதந்த்ரனா? ஜீவனே ஈஸ்வரனா? அல்லது வேறுபட்டவனா? என்னும் இவைமுதலிய ஸம்சயங்களையெல்லாம் விவேகபுத்தியினால் அறுத்து) ஸ்வப்னத்தினின்று எழுந்தவன் ஸ்வப்னத்தில் அனுபவித்த வஸ்துகளின் அறிவுகளைத் துறப்பதுபோல 'நான் தேவன். நான் மனுஷ்யன்' என்னும் இவை முதலிய பேத புத்திகளைத் துறக்கின்றான். எவன் ப்ராணாதிகளின் வ்யாபாரங்களில் 'இதைப் புசிக்கவேண்டும். இதைப் பார்க்கவேண்டும். இதைச் சம்பாதிக்கவேண்டும். இதைத் துறக்க வேண்டும்' என்னும் இவை முதலிய ஸங்கல்பங்களற்றிருக்கிறானோ, அவன் தேஹத்தில் இருப்பினும்

அத்தேஹகுணங்களால் விடுபட்டவனென்று தெரிந்து கொள்ளலாம். கொடுந்தன்மையுடைய துஷ்டர்கள் தேஹத்தைப் பீடிக்கினும், எவனேனுமொருவன் ஒரு கால் ப்ரீதியோடு ஸத்காரஞ் செய்யினும், எவன் அவற்ருல் அதிகமாய் மனங் கலங்காதிருக்கிருனே, அவனே அறிஞனென்று தெரிந்துகொள்ளலாம். ஒருவன் நல்லது செய்யினும் நல்லது சொல்லினும் அவனைப் புகழாமலும், ஒருவன் கெட்டது செய்யினும் கெட்டது சொல்லினும் அவனைப் பழிக்காமலும், மானவமானங்களின்றி அவ்விரண்டையும் துல்யமாகப் பார்க்குந்தன்மையன் முனிவனுவான். மற்றும், ஆத்மானுபவத்தினுல் ஸந்தோஷமுற்று நல்லதும் கெட்டதுமான லௌகிகவியாபாரத்தைச் செய்வதும் நல்லதும் கெட்டதுமான லௌகிக வார்த்தைகளைப் பேசுவதும் அவற்றை நெஞ்சில் நினைப்பதும் செய்யமாட்டான். பின்னையோவென்ருல், பரமபுருஷனை த்யானித்துக்கொண்டு இந்த நிலைமையுடன் (தேஹத்திலிருப்பினும் தேஹத்தில் இல்லாதவன்போலவே இருக்கை முதலிய கீழ்ச்சொன்ன நிலைமையுடன்) மூடன்போல் திரிந்துகொண்டிருப்பான். (ப்ரக்ருதிபரிணமமான தேஹத்தில் இருப்பினும் அந்த தேஹத்திலிருப்பைக் கடந்திருக்கையாவது - படுத்தல் இருத்தல் புசித்தல் முதலிய வியாபாரங்களற்றிருக்கையோவென்ருல், அதுவன்று. பின்னையோவென்ருல், அஹங்காரம் ராகம் த்வேஷம் முதலியன அற்றிருக்கையும் உபகாரம் அபகாரம் முதயியவற்றில் துல்யமாயிருக்கையும் பொன்கட்டி மண்கட்டி முதலியவற்றில் 'இது இஷ்டம். இது அனிஷ்டம்' என்னும் புத்தியற்றிருக்கையும் ஆகிய இவையேயாமென்று இவ்வளவால் நிரூபிக்கப்பட்டது). வேதங்களையோதுவது ஓது

விப்பது முதலியன செய்து அவற்றின் கரையை அறிந்தவனாயினும் பரப்ரஹ்மவிஷயமான ஸமாதிவரையிலுமுள்ள ஜ்ஞானத்தில் நிலைபெறுனாயின், அவனுடைய ஶ்ரமமெல்லாம் நிஷ்ப்பலமேயாம். கன்று போட்டு வெகு நாளானமையால் கறக்காத பசுவைப் பாதுகாப்பவனுடைய ஶ்ரமம் எப்படி நிஷ்ப்பலமோ, அப்படியே ப்ரஹ்மோபாஸனஜ்ஞானமில்லாமல் கேவலசாஸ்த்ரஜ்ஞானமுடையவன் பட்ட பரிஶ்ரமங்களெல்லாம் நிஷ்ப்பலமேயாம். ஓ உத்தவனே! மற்றும், பால் கறந்து மரத்த பசுவையும் காமமில்லாத பார்யையையும் காமம் இருப்பினும் பரபுருஷனைப் புணரும் துர்ப்புத்தியுடைய பார்யையையும் கர்மாதீனமாய் க்ஷணந்தோறும் துக்கத்திற்கிடமான தேஹத்தையும் இஹத்திலாவது பரத்திலாவது ஒரு ப்ரயோஜனமுமில்லாமல் கேவலம் துர்ப்புத்தியனான புதல்வனையும் ஸத்பாத்ரங்களில் தானஞ்செய்யாத பணத்தையும் என்னை எடுத்துரைக்காத வாக்கையும் எவன் பாதுகாத்துக் கொண்டிருக்கிறனோ அவன் மேன்மேலும் துக்கத்தை அனுபவிப்பானன்றி ஒருகாலும் ஸுகத்தை அனுபவிக்கமாட்டான். உத்தவனே! இந்த ஜகத்தைப் படைப்பதும் பாதுகாப்பதும் அழிப்பதுமாகிய பரிசுத்தமான என் சரித்ரத்தை எந்த வாக்கு உரையாதோ, மற்றும், என்னுடைய லீலாவதாரங்களில் ஜகத்திற்கு மிகவும் ப்ரியமான ராம க்ருஷ்ணுதி அவதாரங்களின் ஜன்மாதி சரித்ரங்களை எந்த வாக்கு உட்கொள்ளாதிருக்குமோ, மற்றும் ராமக்ருஷ்ணுதி லீலாவதாரங்களில் என்னால் ஆதரிக்கப்பட்டவர்களும் எனக்கு மிகவும் அன்பர்களுமாகிய என்பக்தர்களின் ஜன்மகர்மங்களை எந்த வாக்கு நிரூபித்துச் சொல்லாதோ, அத்தகைய நிஷ்ப்பலமான வாக்கை மதி

யுடையவன் தரித்துக்கொண்டிருக்கலாகாது. இங்ஙனம் ஆராய்ந்து ஜீவாத்மாவினிடத்தில் தேவமனுஷ்யாதி பேதங்கள் உண்டென்னும் ப்ரமத்தைத் துறந்து (ஜீவாத்மா தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனென்று தெரிந்துகொண்டு) ரஜஸ்தமோகுணங்களற்று ஸாத்விகமான ஆஹாரம் முதலியவற்றால் ஸத்வகுணம் தலையெடுக்கப்பெற்ற மனத்தை ஸமஸ்தசேதனுசேதனங்களுக்கும் அந்தராத்மாவாகிய என்னிடத்தில் நிலைநிறுத்தி லௌகிக வியாபாரங்களினின்று மீளவேண்டும். பரப்ரஹ்மமென்று கூறப்படுகிற என்னிடத்தில் நிலைநிறுத்த முடியாது போமாயின், அப்பொழுது வர்ணுஸ்ரமங்களுக்கு ஏற்பட்ட கர்மங்களை யெல்லாம் ஸர்வாந்தராத்மாவான பரமாத்மாவினுல் தூண்டப்பட்ட தேஹமும் இந்த்ரியங்களும் நடத்துகின்றனவன்றி இதில் எனக்கு ஸம்பந்தமில்லையென்னும் புத்தியுடன் அவற்றின் பலன்களை விரும்பாமல் நடத்திக்கொண்டு வரவேண்டும். மற்றும், ஜகத்திற்கெல்லாம் மிகுந்த மங்களத்தை விளைப்பவைகளும் கேட்பவர்களுக்கும் சொல்லுபவர்களுக்கும் சுத்தியை விளைப்பவைகளுமாகிய என் கதைகளை ச்ரத்தையுடன் கேட்பதும் பாடுவதும் என்னுடைய ராம க்ருஷ்ணுதி லீலாவதாரங்களை நினைப்பதும் அவ்வவதாரங்களில் நான் செய்த செயல்களை அனுகரிப்பதும் தர்மம் காமம் அர்த்தம் ஆகிய இவைகளை எனக்காகவே அனுஸரிப்பதும் செய்துகொண்டு என்னையே ப்ராப்யனும் ப்ராபகனுமாக நினைத்திருப்பானுயின், உத்தவனே! அவன் ஸர்வகாரணனுன என்னிடத்தில் நிலைநின்ற பக்தியைப் பெறுவான். (தர்மத்தைப் பரமபுருஷனுக்காகவே அனுஷ்டிக்கையாவது அவனுடைய முகமலர்த்தியின்மூலமாய் மோக்ஷத்

தில் போய் முடிய வேண்டுமென்னும் எண்ணத்துடன் அனுஷ்டிக்கையே. காமத்தைப் பரமபுருஷனுக்காக வே அனுஷ்டிக்கையாவது - அவன் சூடிக் களைந்த பூ மாலை பூசிமிகுந்த சந்தனம் உடுத்துக்களைந்த பீதக வாடை அணிந்து களைந்த ஆபரணம் அமுது செய்த ப்ரஸாதம் முதலியவற்றை உபயோகிக்கையே. அர்த் தத்தைப் பரமபுருஷனுக்காகவே அனுஷ்டிக்கையாவது அவனுடைய ஆராதனத்திற்காகவே உபயோகிக்கை.) ஸத்புருஷர்களோடு ஸஹவாஸம் செய்வானாயின், கீழ்ச் சொன்ன வழிகளெல்லாம் தானே குதிரும். அவ்வழி யால் என்னிடத்தில் பக்தியைப் பெறுவான். அத்த கைய பக்தியுடன் என்னையே பணிந்து வருவானாயின், என்னுடைய ஸ்தானத்தை அனுயாஸமாகப் பெறுவான். இங்ஙனம் பெரியோர்கள் நிச்சயித்திருக்கிறார்கள்.

உத்தவன் சொல்லுகிறான்:—உத்தமஶ்லோகனே! ப்ரபூ! ஸாது எத்தகையனென்று நீ அபிப்ராயப்பட் டிருக்கின்றனை? ஸத்புருஷர்கள் ப்ரீதியுடன் அனுஷ் டிக்கிற பக்தி எத்தகையதாயின் உன்னிடத்தில் உப யோகப்படும்? (உலகத்தில் அவரவர் அபிப்ராயத்தின் படி ஸாதுக்கள் பலவாறாக ஏற்பட்டிருக்கிறார்கள். ஆகையால் ஸாது எப்படிப்பட்டவனென்று உன்னுடைய அபிப்ராயம். அங்ஙனமே பக்தியும் பலவாறாயிருக்கின் றது. ஆகையால் பக்தி எத்தகையதென்று உன்னு டைய அபிப்ராயம். நான் உன்னையே சரணம் அடைந் திருக்கின்றேன். உன்னை வணங்கி வேண்டுகிறேன். நான் உன்னிடத்தில் மிகுந்த அனுராகமுடையவன். நீ ப்ரக்ருதி புருஷர்களுக்கு நியாமகன். ஆகையால் ஜ்ஞா னமாவது கர்மமாவது ஏதேது உளதோ, அதெல்லாம் உன்னதீனமே. ஜ்ஞானமார்க்கம் கர்மமார்க்கம் ஆகிய

இவ்விரண்டு மார்க்கங்களும் உனக்கே தெரியுமன்றி உன்னை யொழிய மற்றெவனும் அவற்றை உபதேசிக்க வல்லனல்லன். நீ உலகங்களுக்கெல்லாம் நியாமகன். அவற்றைப் பாதுகாப்பவனும் நீயே. ஆகையால் என்னை அனுக்ரஹித்து இதை எனக்குச் சொல்லுவாயாக. நீ ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவற்ற மஹிமையுடையவன்; சேதனாசேதனங்களில் வியாபித்திருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாமல் ஆகாயம்போல் மிகவும் நிர்மலனாயிருப்பவன். நீ அளவில்லாமல் கொடுக்குந் தன்மையனாகையாலும் சரீரத்தில் ஆத்மாவுடன் அமைந்திருக்கையாலும் இந்த ப்ரபஞ்சம் உண்டாவதற்கு முன்னமே ஸித்தனாயிருக்கையாலும் உன்னை யொழிந்த மற்றதெல்லாம் பெண்டிர்களென்னலாம்படி பரதந்த்ரமாய் நீ யொருவனே ஆண் பிள்ளையாயிருக்கின்றனையாகையாலும் புருஷனென்று கூறப்படுகின்றனை. நீ சேதனாசேதனங்களென்கிற இருவகைப்பட்ட ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டு அதைக்காட்டிலும் மேலாயிருப்பவன். ஷாட்குண்ய பூர்ணனே! நீ ஸாதுக்களைப் பாதுகாக்கும் பொருட்டுக் கேவலம் உன்னுடைய இச்சையினால் பலவிதமான ராம க்ருஷ்ணாதி உருவங்களையும் ப்ரத்யும்ன அநிருத்தாதி உருவங்களையும் ஏற்றுக்கொண்டு அவதரித்திருக்கின்றனை. ஆகையால் நீ இதைச் சொல்லுவது யுக்தமே.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— தன்னுடைய ப்ரயோஜனத்தை எதிர் பாராமல் பிறனுடைய துக்கத்தைப் பொறுதிருக்கை, அதைப் போக்க வேண்டுமென்னும் விருப்பம், எந்த ப்ராணிக்கும் த்ரோஹஞ் செய்யாமை, சீத உஷ்ண ஸுக துக்காதிகளைப் பொறுக்குந் தன்மை,

ஸத்யந்தவறுமை, த்வேஷம் அஸூயை முதலிய தோஷங்கள் தீண்டப்பெறுத மனமுடையனுயிருக்கை, ஸர்வர்க்கும் உபகாரஞ் செய்கை, காமங்களால் மனங் கலங்காமை, இந்த்ரியங்களின் அடக்கம், சித்தம் மெது வாயிருக்கை, உள்ளும் புறமும் பரிசுத்தனுயிருக்கை, வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமை, லௌகிக வியாபாரங்களெவவற்றையும் செய்யாமை, த்ருஷ்ட அத்ருஷ்டபலங்களில் விருப்பமில்லாமை, மிதமாகப் புசிக்கை, மன அடக்கம், சித்தம் நிலைநின்றிருக்கை, என்னையே ரக்ஷகனுகவும் உபாயமாகவும் பற்றியிருக்கை, சுபாஸ்ரயமென்று கூறப்படுகிற என் திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானஞ்செய்கை, மனவூக்கமற்றிராமை, தன்னுடைய அபிப்ராயம் பிறர்க்குத் தெரியாதபடி கம்பீரனுயிருக்கை, ஆபத்காலங்களில் தைர்யஞ் சோராதிருக்கை, பசி தாஹம் சோகம் மோஹம் ஜரை ம்ருத்யு என்னும் ஆறு விகாரங்களையும் வென்றிருக்கை, தன் தேஹத்தினுடைய ஸத்காரத்தை ஆசைப்படாமை, பிறர்க்கு ஸத்காரஞ் செய்கை, பிறர்க்கு ஹிதோபதேசஞ் செய்யுந்திறமை, வஞ்சனை செய்யாமை, எப்பொழுதும் தன் ப்ரயோஜனத்தை எதிர் பாராமல் மன இரக்கத்துடனே நடக்குந்தன்மை, சேதன அசேதன ஈஸ்வரர்களென்கிற மூன்று தத்வங்களின் உண்மையை உணர்கை ஆகிய இக்குணங்களெல்லாம் அமைந்து வேதங்களின் மூலமாய் நான் உபதேசித்த இத்தகைய குணங்களையும் இவற்றிற்கு நேரே விருத்தங்களான தோஷங்களையும் நன்ருக ஆராய்ந்தறிந்து தன் வர்ணுஸ்ரமங்களுக்கு ஏற்பட்டிருக்கிற தர்மங்களை யெல்லாம் துறந்து எவன் என்னையே உபாயமாகவும் உபேயமாகவும் உறுதியாக நினைத்துப் பணிகிறுனோ, அவன் ஸாதுக்களில் சிறந்

தவனுவான். மற்றும், நான் எத்தகைய ஸ்வரூபமுடையவனே, எத்தகைய ஸ்வபாவமுடையவனே, எத்தகைய விபூதியுடையவனே அதையெல்லாம் அடிக்கடி விசாரித்து நன்ருகத் தெரிந்துகொண்டு ப்ரயோஜனாந்தரம் உபாயாந்தரம் தேவதாந்தரம் இவை முதலியவற்றில் விருப்பமின்றி எவர்கள் என்னையேபணிகின்ருர்களோ, அவர்கள் என் பக்தர்களில் சிறந்தவர்களென்று என்னால் கொண்டாடப்பட்டவர்கள். (இங்ஙனம் ஸத்புருஷர்களின் லக்ஷணத்தை மொழிந்தேன். இனி அந்த ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸத்தினுல் அப்யஸிக்க வேண்டிய சில குணங்களைச் சொல்லுகிறேன்; கேள். அவை பக்தியோகத்தை மேன்மேலும் வளர்ப்பவை.) என்னுடைய அர்ச்சாவிக்ரஹங்களையும் என் பக்தர்களையும் காண்கை ஸ்பர்சிக்கை ஆராதிக்கை கால் பிடித்தல் முதலிய சுஶ்ரூஷை செய்கை, ஸ்தோத்ரஞ் செய்கை, நமஸ்கரிக்கை, அர்ச்சாரூபியான என்னுடைய குணங்களையும் என் செயல்களையும் என் பக்தர் குணங்களையும் அவரது செயல்களையும் கீர்த்தனஞ் செய்கை, என் கதைகளைக் கேட்பதிலும் என்னை த்யானஞ் செய்வதிலும் ஶ்ரத்தையுற்றிருக்கை, தான் ஸம்பாதித்ததையெல்லாம் எனக்கும் என்பக்தர்களுக்கும் உபயோகப்படுத்துகை, ஸ்வபாவஸித்தமான தாஸ்யத்தை அநுஸந்தித்து ஆத்மஸமர்ப்பணஞ் செய்கை, கேட்கிறவர்களுக்கு என்னுடைய அவதார சரித்ரங்களைக் கூறுதல், ஸ்ரீஜயந்தி முதலிய என்னுடைய அவதாரதினங்களில் உத்ஸவஞ் செய்து அவற்றைக் கொண்டாடுகை, பாட்டு கூத்து வாத்யம் கோஷ்டி இவைகளுடன் எனது ஆலயங்களில் உத்ஸவஞ் செய்கை, திவ்ய தேசங்களுக்குப் போகை, வர்ஷாகாலமாகிய நான்கு மாதங்களைச்

சேர்ந்த ஏகாதசி முதலிய தினங்களில் விசேஷமாகப் பூஜை செய்கை, பஞ்சராத்ர சாஸ்தரங்களில் விதிக்கப்பட்ட சிறப்புடைய பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெறுகை, ஏகாதச்யுபவாஸம் முதலிய எனக்கிஷ்டமான வ்ரதங்களை அனுஷ்டிக்கை என்னுடைய அர்ச்சாவிக்ரஹங்களை ஸ்தாபிப்பதில் ப்ரீதி, சக்தி உளதாயின் தானே என்னுடைய அர்ச்சாவிக்ரஹங்களை ஸ்தாபித்தல், தனக்குச் சக்தியில்லாத பக்ஷத்தில் பிறருடன் கலந்தாவது ஸ்தாபிக்க முயற்சி செய்தல், தேவாலயங்களில் உள்ளடங்கிய உத்யானங்களையும் அவற்றிற்கு ஸமீபங்களில் இருக்கவேண்டிய உத்யானங்களையும் பூப்பறிக்கை முதலிய விளையாடல்களுக்குரிய ஆக்ரீடங்களென்கிற பூந்தோட்டங்களையும் தேவாலயங்களைச் சுற்றியிருக்கவேண்டிய புரங்களையும் அவற்றில் இருக்க வேண்டிய வீடுகளையும் நிர்மாணஞ் செய்வதில் முயற்சி செய்தல், தூசி போக விளக்குதல், கோமயம் முதலியவற்றால் மெழுகுதல், ஜலந்தெளித்தல், பலவாறாகக் கோலமிடுதல், இங்ஙனம் தாஸன்போல் கபடமில்லாமல் என்னுடைய ஆலயங்களுக்கு அலங்காரஞ் செய்தல், அஹங்காரமில்லாமை, வஞ்சனை செய்யாமை, தான் செய்த தர்மத்தைச் சொல்லாமை, தானாவது பிறராவது எனக்காக ஏற்றின திருவிளக்கைத் தன்கார்யத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்ளாமை ஆகிய இவை யெல்லாம் ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸத்தினால் விளையவேண்டிய குணங்கள். இவை மேன்மேலும் பக்தியை வளர்க்கும். உலகத்தில் ஏதேது அழகிய வஸ்துவோ, ஏதேது தனக்கு மிகவும் ப்ரியமான வஸ்துவோ, அவற்றை யெல்லாம் எனக்கு நிவேதனஞ் செய்யவேண்டும். இப்படி செய்வானாயின் அது அழிவில்லாத பலனை விளைப்பதாம்.

மங்களஸ்வபாவமுடையவனே! ஸூர்யன் அக்னி ப்ராஹ்மணன் பசுக்கள் வைஷ்ணவன் ஆகாயம் காற்று ஜலம் பூமி ஆத்மா ஸமஸ்த பூதங்கள் ஆகிய இந்தப் பதினொன்றும் என்னைப் பூஜிப்பதற்குரிய இடங்களாம். ஸூர்யமண்டலத்தில் வேதமந்த்ரங்களாலும், அக்னியில் சரு புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸாலும், ப்ராஹ்மணச்ரேஷ்டனிடத்தில் அதிதிஸத்காரத்தினாலும், பசுக்களிடத்தில் புல்முதலியனகொடுப்பதனாலும், வைஷ்ணவனிடத்தில் பந்துவுக்குச் செய்யும் ஸத்காரங்களைச் செய்வதனாலும், ஹ்ருதயாகாசத்தில் நிலைநின்ற த்யானத்தினாலும், வாயுவிடத்தில் முக்யப்ராணனென்னும் புத்தியினாலும், ஜலத்தில் ஜலம் கந்தம் புஷ்பம் முதலிய த்ரவ்யங்களாலும், சக்ரம் பத்மம் முதலிய ரேகைகள் இடப்பெற்ற பூமியில் மூலமந்த்ரத்தினால் அங்கந்யாஸஞ் செய்வதனாலும், ஆத்மாவினிடத்தில் அந்தராத்மாவான என்னைச் சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்படாத காமபோகங்களாலும், ஸமஸ்த பூதங்களிலும் ஜீவாத்மாவைச் சரீரமாகவுடைய என்னை ராகத்வேஷாதிகளில்லாமையாகிற ஸாம்யபுத்தியினாலும் ஆராதிக்க வேண்டும். ஸூர்யன் முதலிய இந்தப் பதினொரு ஸ்தானங்களிலும் சங்கம் சக்ரம் கதை தாமரைமலர் இவற்றோடு கூடியதும் நான்கு புஜங்களுடையதும் ராகத்வேஷாதி தோஷங்கள் எவையுமின்றிச் சாந்தமாயிருப்பதுமாகிய என்னுருவத்தை த்யானித்துக்கொண்டே மனவூக்கத்துடன் என்னை ஆராதிக்கவேண்டும். வேதங்களில் விதிக்கப்பட்ட யாகாதி கர்மத்தினாலும் ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட பூர்த்தாதி கர்மத்தினாலும் எவன் மனவூக்கத்துடன் என்னையே ஆராதிக்கின்றானோ, அவன் கீழ்ச்சொன்ன உபாயங்களை அனுஷ்டிக்

கிறவன்போல் என்னிடத்தில் நிலைநின்ற பக்தியைப் பெறுவான். என்னிடத்தில் நிலைநின்ற பக்தி உண்டாக வேண்டுமென்றால் ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸத்தினால்தான் உண்டாகுமேயன்றி மற்ற எதனாலும் உண்டாகாது. உத்தவனே! இங்ஙனம் ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸத்தினால் விளையக்கூடியதாகிய பக்தியோகந்தவிரப் பெரும்பாலும் என்னைப் பெறுவதற்குரிய நல்ல உபாயம் மற்றொன்றுமில்லை. ஸத்புருஷர்களுக்கு நான் ப்ராப்யனும் ப்ராபகனுமாயிருப்பவன். அவர்கள் என்னையே ப்ராப்யனாகவும் ப்ராபகனாகவும் பற்றுகிறார்களாகையால் நான் அவர்களிட்ட வழக்காயிருப்பவன். ஆகையால் அவர்களுடைய ஸஹவாஸத்தினால் என்னை வசப்படுத்த வேண்டுமன்றி வேறு வழி கிடையாது. யதுகுலத்தைக் களிக்கச் செய்யுந்தன்மையனே! உத்தவா! இங்ஙனம் நிரூபிக்கப்பட்ட பக்தியோகம் பல அங்கங்களோடு கூடியதாகையால் இதை அநுஷ்டிக்க முடியாதென்று வருந்துவாயாயின், இதைக் காட்டிலும் மேலாயிருப்பதும் பரமரஹஸ்யமுமாகிய மற்றொரு உபாயஞ் சொல்லுகிறேன்; கேட்பாயாக. அது ஒருவர்க்கும் வெளியிடாமல் மிகவும் மறைத்துப் பாதுகாக்கத்தக்கது. ஆயினும் அதை உனக்குச் சொல்லுகிறேன்; ஏனென்றால், நீ எனக்கு ப்ருத்யனும் நண்பனும் ஸகாவுமாயிருப்பவனல்லவா? பதினொன்றுவது அத்யாயம் முற்றிற்று.

---

## ந்யாஸமென்னும் ப்ரபத்தி வித்யையை உபதேசித்தல்

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—உத்தவனே! கர்ம யோகம் ஜ்ஞானயோகம் அஹிம்ஸை முதலிய தர்மம் வேதமோதுதல் உபவாஸம் முதலிய தவம் யாகம் முதலிய வைதிககர்மம் பூர்த்தம் முதலிய ஸ்மார்த்தகர்மம் தானம் யாகாதிகளில் அவற்றின் மேன்மைக்காகக் கொடுக்குந் தக்ஷிணை ஏகாதச்யுபவாஸம் முதலிய வ்ரதங்கள் பஞ்சமஹாயஜ்ஞங்கள் ரஹஸ்ய மந்த்ரங்கள் கங்கை முதலிய புண்யதீர்த்தங்கள் சௌசம் ஆசமனம் முதலிய நியமங்கள் உள்ளிந்த்ரியம் வெளியிந்த்ரியங்கள் ஆகிய இவற்றை அடக்குவதற்கு உரிய உபாயங்களான யமங்கள் ஆகிய இவற்றுள் எதுவும் ஸத்புருஷர்களுடைய ஸஹவாஸம்போல் என்னை வசப்படுத்தவல்லதாக மாட்டாது. ஏனென்றால், அந்த ஸத்புருஷஸஹவாஸம் என்னை யொழிந்த மற்ற எல்லாவற்றிலுமுள்ள மனப்பற்றுக்களையெல்லாம் அடியோடு போக்கிவிடும். ஆகையால் அது என்னை வசப்படுத்துவதுபோல் மற்ற எதுவும் வசப்படுத்தமுடியாது. (கர்மயோக ஜ்ஞான யோகாதிகள் மனத்தை நிர்மலமாக்கி ஊக்கத்தை உண்டாக்கிப் பக்தியோகத்தை விளைவித்து அவ்வழியால் பகவானை வசப்படுத்துவதற்குக் காரணமாயிருப்பதுபோல, ஸத்ஸஹவாஸமும் ஆசார்ய ஸமாச்ரயணம் முதலியவற்றை உண்டாக்கி அவ்வழியால்தான் ஈச்வரனை வசப்படுத்துமன்றி நேரே வசப்படுத்த முடியாது. ஆகையால் அந்தக் கர்மயோகாதிகளைக்காட்டிலும் இதைச் சிறந்ததென்று எங்ஙனம் புகழலாமென்று நினைக்கலாகாது. ஸத்புருஷர்கள் தங்களுடைய ஸம்பந்தமாத்ரத்தினால் ப்ராணிகளை ஸம்ஸாரத்தினின்று

விடுவிக்கவல்லவர்களாகையால் ஸத்ஸஹவாஸத்திற்கு அவை ஒருகாலும் ஈடாகமாட்டா). அஸுரர்கள் ராக்ஷஸர்கள் பக்ஷிகள் ம்ருகங்கள் கந்தர்வர் அப்ஸரஸ்த்ரீகள் யானைகள் ஸித்தர் சாரணர் குஹ்யகர் வித்யாதரர் இவர்களும் மனுஷ்யர்களில் வைச்யர் சூத்ரர் ஸ்த்ரீகள் அந்திமஜாதியில் பிறந்தவர் ரஜஸ்தமோகுணங்களே தலையெடுத்து மோக்ஷோபாயத்தில் சிறிதும் ஸம்பந்தமில்லாத இவர்கள் பலரும் அந்தந்தயுகத்தில் என்னுடைய ஸ்தானத்தை அடைந்தார்கள். வ்ருத்ராஸுரன் ப்ரஹ்லாதன் வ்ருஷபர்வன் பலி பாணன் மயன் இவர் முதலியவர்களும், விபீஷணனும், ஸுக்ரீவன் ஹனுமான் ருக்ஷன் கஜேந்த்ரன் இவர்களும், ஜடாயுவும், துலாதாரனென்கிற வணிக்பதனும் தர்மவ்யாதனும், கூனி கோகுலத்துக்கோபிகைகள் ப்ராஹ்மணபத்னிகள் இவர்களும் மற்றும் பலரும் என் ஸ்தானத்தை அடைந்தார்கள். அவர்கள் பற்பல சாகைகளாகப் பிரிந்த வேதஸமூஹங்களை அத்யயனஞ் செய்தவர்களல்லர். மிகவும் பெருமையுள்ள ஸத்புருஷர்களை உபாஸித்தவர்களுமல்லர்; வ்ரதங்களை அனுஷ்டித்தவர்களுமல்லர்; தவஞ்செய்தவர்களுமல்லர்; பின்னையோ வென்றால், கேவலம் ஸத்ஸங்கத்தினால் என்னை அடைந்தார்கள். 'உன்னுடைய உண்மையை உணர்ந்தவர்களும் அவர்களோடு ஸம்பந்தமுடையவர்களும் முக்தி அடைவார்களென்பது யுக்தமே. காமம் முதலிய ஸாதாரண பாவத்தினால் உன்னை அனுஸரித்த கோபிகைகள் முதலியவர்க்கும் முக்தி உண்டாயிற்றென்பது யுக்தமன்று; அவர்களுக்கே முக்தி நேராதென்ற பின்பு அவர்களோடு ஸம்பந்தமுடையவர்களுக்கு முக்தியென்பது எங்ஙனம் ஸம்பவிக்கும்?' என்று சங்கிக்க வேண்டாம். காமம் பயம்

த்வேஷம் முதலிய ஏதேனுமொரு மனோபாவம் தலையெடுத்து அதனால் என்னை இடைவிடாமல் சிந்தித்துக் கொண்டிருப்பார்களாயின், அவர்களும் முக்தி அடைவார்கள். கோபிகைகள் என்னிடத்தில் காமமென்னும் மனோபாவம் உண்டாகப்பெற்று அதனால் ஸர்வ காலமும் என்னையே சிந்தித்துக்கொண்டிருந்து என்னை அடைந்தார்கள். பசுக்கள் வ்ருக்ஷங்கள் செடி கொடி முதலியவை ம்ருகங்கள் இவைகளும் கேவலத மோகுணமே தலையெடுக்கப் பெற்று மதிமயங்கின காளியன் முதலியவர்களும் என்னுடைய தர்சனம் ஸ்பர்சனம் முதலியவற்றால் என்னிடத்தில் மனோபாவம் உண்டாகப் பெற்று மோக்ஷவிரோதியான பாபங்களெல்லாம் தொலைந்து மோக்ஷத்திற்கு உரியவர்களாகி என்னை அனாயாஸமாக அடைந்தார்கள். யோக்யதையில்லாத செடி கொடி மரம் முதலியவைகளும் ஏதேனும் ஒரு பாவத்தினால் முக்தி அடையுமாயின் கோபிகைகளும் அவரைச் சேர்ந்தவர்களும் முக்தி அடைந்தார்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? (செடி கொடி முதலியவற்றிற்கு எங்ஙனம் முக்தி உண்டாகுமென்றால், ராமவிரஹத்தில் வ்ருக்ஷங்களுங்கூட வாடினவென்றாற்போல் அவற்றிற்குங்கூட உள்நினைவு உண்டாகையால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸந்நிதானத்தில் செழித்திருக்கையும் அவனுடைய அஸந்நிதானத்தில் வாடுகையும் உண்டாகையால் அவற்றிற்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மிகுந்த பாவபந்தம் உண்டென்பது ஸித்தமே. அதனால் அவையும் முக்தி அடையத் தடையில்லை). ஒருவன் கர்மயோகம் ஜ்ஞானயோகம் தானம் ஏகாதச்யுபவாஸம் முதலிய வ்ரதங்கள் சாந்த்ராயணம் முதலிய தவங்கள் யாகங்கள் சாஸ்த்ரங்களை உணர்தல் வேதங்களை ஓதுதல் ஸந்யா

ஸாஶ்ரமத்தை அனுஷ்டித்தல் ஆகிய இவைகளால் எவ்வளவு ப்ரயத்னஞ் செய்யினும் எவனை அடையமாட்டாரோ, அத்தகையனான என்னைக் கோபிகைகளும் பசுக்களும் செடி கொடி முதலியவைகளும் அடைந்தன. அக்ரூரன் பலராமனோடு கூட என்னை மதுரைக்கு அழைத்துக்கொண்டு போகும்பொழுது கோபிகைகள் என்னிடத்தில் மிகுந்த அன்புடன் நிலைநின்ற மனமுடையவர்களாகையால் என்னைப் பிரிந்திருக்க முடியாமல் மிகவும் மனவருத்தமுற்று மற்ற எதைக் காண்கிலும் ஸுகத்தை அடையாதிருந்தார்கள். ஓ உத்தவனே! நான் ப்ருந்தாவனத்திலிருக்கும் பொழுது கோபிகைகள் மிகவும் அன்பனாகிய என்னுடன் எந்தெந்த ராத்ரிகளை அரைக்ஷணம்போல் அனுபவித்தார்களோ, அத்தகைய ராத்ரிகள் என்னைப் பிரிந்த பின்பு அவர்களுக்குக் கல்பங்கள் போன்றிருந்தன. மற்றும், என்னிடத்தில் மிகுந்த அனுராகத்தினால் கட்டுண்ட மனமுடைய அக்கோபிகைகள் தங்களையாவது தங்கள் தேஹத்தையாவது தூரத்திலுள்ளதையாவது ஸமீபத்திலுள்ளதையாவது எதையும் அறியவில்லை. பரமாத்மத்யானத்தில் ஆழ்ந்த முனிவர்கள்போலவும், ஸமுத்ரத்தில் போய் விழுந்த நதிகள்போலவும் நாம ரூபங்களையும் அறியாதிருந்தார்கள். பின்னையோவென்றால், ஒன்றும் தெரியாதவர்களான அந்தக் கோபிகைகள் என் ஸ்வரூபத்தை அறிந்தவர்களல்லர். ஆயினும் என்னிடத்திலேயே காமமுடைய அம்மடந்தையர்மணிகள் மேலுக்குக் கள்ளவன்பனாய்த் தோற்றுகின்றவனும் உண்மையில் பரப்ரஹ்மஸ்வரூபனுமாகிய என்னை அடைந்தார்கள். இங்ஙனம் ஸத்ஸங்கத்தினால் பலவாயிரம் பேர்கள் என்னை அடைந்தார்கள்.

(இங்ஙனம் சரணாகதியென்னும் பெயருடைய ந்யாஸ யோகத்தின் ப்ரபாவத்தை வெளியிடுவதற்காக அந்த ந்யாஸயோக நிஷ்டர்களான பெரியோர்களின் ஸம்பந்த மாத்ரத்தினால் மற்ற எந்த உபாயங்களாலும் ஸாதிக்க முடியாத பரமபுருஷார்த்தம் கைகூடுமென்பதை மொழிந்து இப்பொழுது அந்த ந்யாஸயோகத்தை உபதேசிக்கிறான்).

ஓ உத்தவனே! விதி நிஷேத சாஸ்த்ரங்களையும் அந்தச் சாஸ்த்ரங்களால் ஏற்படுகிற ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் கேட்கவேண்டியதையும் கேட்டதையும் துறந்து ஜ்ஞான சக்த்யாதிகுணங்களும் வாத்ஸல்ய ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்களும் அமைந்து ஸர்வப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாகிய என்னையே ஸர்வப்ரகாரத்தாலும் சரணம் அடைவாயாக. இப்படியாயின் உனக்கு எவ்விதத்திலும் பயம் உண்டாகாது. நீ ஸர்வபாபங்களினின்றும் விடுபட்டு முக்தர்களுக்கு போக்யனாகிய என்னைப் பெறுவாய்.

உத்தவன் சொல்லுகிறான்:—யோகேஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனே! உன் வார்த்தையைக் கேட்கிற எனக்கு உபாய விஷயத்தில் ஸம்சயம் தீர்ந்தது. ஆத்மவிஷயத்திலேயோவென்றால், ஸம்சயம் தீரவில்லை. அந்த ஸம்சயத்தினால் என் மனம் ப்ரமிக்கின்றது. (ஸமஸ்த இந்த்ரியங்களையும் ப்ராணன்களையும் நியமிப்பது முதலியன ஜீவனுடைய கார்யமா? அல்லது உன்னுடைய கார்யமா? உன்னுடைய கார்யமாயின், தேவமனுஷ்யாதி சரீரங்களைப் பெறுகையாகிற ஸம்ஸாரம் யாருக்கு உண்டாகிறது? இந்த்ரியாதிகளுக்கு ஆதாரமாயிருப்பவன் யாவன்? ஜீவனா? அல்லது சரீரமா? அல்லது நீயா? ஸுகதுக்கங்களுக்குக் காரணமான புண்யபாப கர்மங்களைச்

செய்யத் தொடங்குகிறவன் எவன்? ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறவன் எவன்? ஆகிய இவை முதலிய ஆத்மாவைப்பற்றின ஸம்சயங்கள் பலவும் என் மனத்தை ப்ரமிக்கச் செய்கின்றன. ஆகையால் அவற்றைப் போக்கியருள்வாயாக.)

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—அங்ஙனம் உன்னுடைய ஸந்தேஹங்களுக்கிடமாகிய இந்த ஜீவன் ப்ராணனோடும் ப்ராணகோஷத்தோடும் ஹ்ருதய குஹையில் ப்ரவேசித்து அதன் விவரத்தில் ப்ரகாசித்துக்கொண்டிருப்பவன். (ப்ராணகோஷமாவது காதுகளைக் கைகளால் மூடிக்கொண்டால் அவரவர்களுக்குக் கேட்கும் கோஷம் இதை ஆத்மகோஷமென்றும் சொல்லுவார்கள். ஆத்மாவின் உத்க்ரமணம் ஸமீபித்திருக்கும் பொழுது அந்த கோஷம் செவிப்படாதென்றும் சொல்லுகிறார்கள்.) அந்த ப்ராணகோஷம் கேவலம் அவரவர் மனத்தினால் அறியத் தகுந்ததும் பக்கத்திலிருப்பவர்களுக்குத் தெரியாததுமாகிய ஸூக்ஷ்மரூபத்தை அடைந்திருக்கும். பிறகு உச்சாரண வேளையில் மார்பு கண்டம் சிரஸ்ஸு என்னும் ஸ்தானங்கள் ப்ரயத்னங்கள் இவற்றின் ஸம்பந்தவசத்தினால் ஹ்ரஸ்வம் தீர்க்கம் ப்லுதம் என்னும் மாத்ரைகள் ககரம் முதலிய வர்ணங்கள் உதாத்தம் அனுதாத்தம் முதலிய ஸ்வரங்கள் ஆகிய ஸ்தூலரூபங்களை அடைகின்றது. அக்னி காஷ்டத்தினுள்ளிருக்கும் பொழுது ஸூக்ஷ்மமாயிருக்கின்றது. கடைந்தெடுக்க ஆரம்பிக்கும்பொழுது சூடுகையாயிருக்கின்றது. பிறகு கட்டையில் உறுத்திக் கடைகையில் ஆகாயத்தில் காற்றின் ஸஹாயத்தைப் பெற்றுச் சிறிய பொரியாய்க் கிளம்புகிறது. பிறகு துணுக்கையாய் உண்டாகின்றது. பிறகு க்ரமமாக வளர்ந்து

ஹவிஸ்ஸினால் எரிகின்றது. அங்ஙனமே வாகிந்த்ரியத்தின் வியாபாரமாகிய இந்த வாணி முதலில் ப்ராண கோஷரூபமாய் ஸூக்ஷ்மமாயிருந்து பிறகு ஸ்தானப்ரயத்ன பேதத்தினால் பலவாறு விரிந்து வெளியாகின்றது. இதுவும் என்னுடைய சரீரமே. (சரீரம்போல் எனக்கு அதீனமாயிருப்பது). இங்ஙனமே பாதேந்த்ரியத்தின் வியாபாரமான நடையும், பாணீந்த்ரியத்தின் வியாபாரமாகிய செயலும், உபஸ்தேந்த்ரியத்தின் வியாபாரமாகிய ரதியும் (ஸம்போகமும்), பாயுவிந்த்ரியத்தின் வியாபாரமாகிய மலமூத்ர விஸர்க்கமும், க்ராணேந்த்ரியத்தின் வியாபாரமாகிய க்ராணமும் (கந்தத்தை மோருதலும்), ரஸனேந்த்ரியத்தின் வியாபாரமாகிய ரஸமும் (ருசியறிதலும்), சக்ஷுரிந்த்ரியத்தின் வியாபாரமாகிய காட்சியும், த்வகிந்த்ரியத்தின் வியாபாரமாகிய ஸ்பர்சமும், ஶ்ரோத்ரேந்த்ரியத்தின் வியாபாரமாகிய ஶ்ரவணமும் (சப்தத்தைக் கேட்கையும்), மனஇந்த்ரியத்தின் வியாபாரமாகிய ஸங்கல்பஜ்ஞானமும், அஹங்காரத்தின் வியாபாரமாகிய அபிமானமும் (ஆத்மாவல்லாததை ஆத்மாவாக ப்ரமிக்கையும்), மஹத்தத்வத்தின் வியாபாரமாகிய அத்யவஸாயமும், ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் பரிணாமமாகிய தேஹம் இந்த்ரியங்கள் இவைகளும் என்னுடைய சரீரமே. (இவையெல்லாம் சரீரம்போல் எனக்கு அதீனங்களாயிருப்பவை). (ஆனால் தேவமனுஷ்யாதி சரீரங்களைப் பெறுகையாகிற ஸம்ஸாரம் யாருக்கென்றால் சொல்லுகிறேன்; கேள்.) இந்த ஜீவாத்மா ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு உட்பட்டிருப்பவன்; அதனால் இந்த ப்ரஹ்மாண்டத்தினிடையில் பிறப்பதும் சாவதுமாயிருப்பவன்; இயற்கையில் வளர்தல் குறைதல் முதலிய விகாரங்களின்றி என்றும் ஒருவாறாயிருப்பவன்;

அணுஸ்வரூபன்; நித்யன்; காலத்தினால் தேஹத்திலும் தேஹானுபந்திகளிடத்திலும் அஹங்கார மமகாரரூபமாகச் சிதறின சைதன்ய சக்தியுடையவன், இத்தகைய ஜீவன், விதைகள் க்ஷேத்ரத்தில் விதைக்கப்பட்டு அந்தந்த க்ஷேத்ரத்தின் ஸாரத்திற்குத் தகுந்தபடி பலவாறு தோற்றுவது போல் தேவ மனுஷ்யாதி தேஹங்களைப் பெற்றுப் பலவாறு தோற்றுகிறான். வஸ்த்ரத்தில் நூல்கள் குறுக்கும் நெடுக்குமாய்க் கோக்கப்பட்டிருப்பதுபோல், இந்த்ரியங்கள் ப்ராணன்கள் ஆகிய இவையெல்லாம் எதில் குறுக்கும் நெடுக்கும் கோக்கப்பட்டவை போன்றிருக்கின்றனவோ, அத்தகைய ஸம்ஸாரமாகிய வ்ருக்ஷம் ப்ரவாஹம்போல் அனாதியாயிருப்பது; ப்ரவ்ருத்தியையே இயற்கையாகவுடையது. இந்த ஸம்ஸாரவ்ருக்ஷம் புண்ய பாப கர்மங்களாகிற புஷ்பங்களையும் ஸுகதுக்கங்களாகிற பலன்களையும் விளைக்கின்றது. இந்த ஸம்ஸார வ்ருக்ஷத்திற்குப் புண்ய பாப ரூபங்களான இரண்டு கர்மங்களே இரண்டு விதைகள். ராகம் த்வேஷம் பயம் முதலிய பல வேர்கள் உண்டு. இந்தவ்ருக்ஷம் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களாகிற மூன்று நாளங்களும் ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசம் என்கிற ஐந்து ஸ்கந்தங்களும் உடையது; சப்தாதி விஷயங்களாகிற ஐந்து ரஸங்களுக்கு விளைநிலமாயிருக்கும்; பதினொரு இந்த்ரியங்களாகிற பதினொரு கிளையுடையது. ஆத்மபரமாத்மாக்களாகிற இரண்டு பக்ஷிகள் சேர்ந்து வாஸஞ்செய்யும்படியான ஹ்ருதய கமலமாகிற ஒரு கூண்டுடையது. வாத பித்த ஶ்லேஷ்மங்களென்கிற மூன்று தாதுக்களாகிற மூன்று பட்டைகளுடையது; போக மோக்ஷங்களாகிற இரண்டு பலன்களையுடையது; ஆத்யாத்மிகம் முதலிய

தாபத்ரயமாகிற பாத்தியில் நிலைநின்றிருப்பது. சப்தாதி விஷயங்களை விரும்பும் க்ராம்ய ஜனங்களாகிற க்ராமங்களில் திரியுங் கழுகுகள் இந்த வ்ருக்ஷத்தின் இரண்டு பலன்களில் ஒன்றாகிய ஸுகதுக்கங்களாகிற ஒரு பலனைப் புசிக்கின்றன. மோக்ஷமாகிற மற்றொரு பலனை அரண்யத்தில் வஸிக்கும் முனிவர்களாகிய ஹம்ஸங்கள் புசிக்கின்றன. ப்ரக்ருதியின் பரிணாமமும் தேவத்வம் மனுஷ்யத்வம் முதலிய பல உருவங்களையுடையதுமாகிய இந்த ஸம்ஸார வ்ருக்ஷத்தை எவன் குருக்கள் மூலமாய் உள்ளபடி அறிகிறானோ, அவனே வேதங்களை உணர்ந்தவனாவான். அத்தகையதான இந்த ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்தை இங்ஙனம் அறிந்து நிலைநின்றபக்தியுடைய குருபாஸனையால் ஜ்ஞானமாகிற கூருள்ள கோடாலியைப் பெற்று தைர்யத்துடன் ஜீவாத்மாவைத் தொடர்ந்திருக்கின்ற இந்த ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்தை அடியோடு அறுத்து மனவூக்கம் தவறுதலின்றிப் பரமாத்மாவாகிய என்னைப் பெற்று அதன் பிறகு அந்த ஜ்ஞானமாகிற கோடாலியைத் துறப்பாயாக. (என்னைப் பெறும் வரையில் அந்த ஜ்ஞானமாகிற ஆயுதத்தைக் கைவிடலாகாது.) பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸத்வகுணம் தலையெடுக்கில் ஜ்ஞானம் உண்டாகுமென்பதையும், ஸத்வாதிகுணங்கள் கழியும் விதத்தையும் கூறுதல்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் இவை ப்ரக்ருதியின் பரிணாமமான மனத்தின் குணங்களேயன்றி ஜீவாத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்ட குணங்களல்ல. (ப்ராக்ருதமான மனத்தின் ஸம்பந்தத்தினால் ஏற்பட்டவையாகையால் ஸத்வா

திகுணங்கள் ஔபாதிகங்கள். ஆகையால் அவற்றை ஸுகமாக வெல்லமுடியும்). முதலில் ஸத்வகுணத்தை வளரச்செய்துகொண்டு அதனால் ரஜஸ்தமோகுணங்களைப் போக்கவேண்டும். அந்த ஸத்வகுணத்தினாலேயே அதைப் போக்கவேண்டும். (ஸத்வகுணத்தினால் ஜ்ஞானம் உண்டாகச் செய்துகொண்டு அந்த ஜ்ஞானத்தினால் ஸத்வாதி குணங்கள் தீண்டப் பெறுமையாகிற மோக்ஷத்தைப் பெறுகையில் ஸத்வகுணமும் தானே கழிந்துபோம்). ஸத்வகுணத்தை வளர்த்திக்கொண்டால், அதனால் என்னிடத்தில் ப்ரீதியாகிற பக்தியென்னும் தர்மம் வளர்ந்து வரும். ஸாத்விகமான ஆஹாரங்களைப் புசித்துக்கொண்டு வருவானாயின் ஸத்வகுணம் வளரும். அதனால் என்னிடத்தில் ப்ரீதியாகிற பக்தியென்னும் தர்மம் தினந்தோறும் அப்யாஸஞ் செய்ய இடங்கொடுக்கும். (ஸத்வகுணம் தலையெடுத்தாலும் அது நேரே ரஜஸ்தமோகுணங்களைப் போக்கமாட்டாது. பின்னையோ வென்றால்) ஸத்வகுணம் என்னிடத்தில் பக்தி வளரச் செய்ய அந்த பக்தியென்னும் தர்மம் ரஜஸ் தமோ குணங்களைப் போக்கும் இங்ஙனம் பக்தியை வளர்க்கும் படியான ஸத்வகுணத்தைக் காட்டிலும் மோக்ஷத்தை விளைப்பதற்குரிய மேலான உபாயம் மற்றொன்றும் இல்லை. ரஜஸ்தமோகுணங்கள் போயினும் அவற்றிற்கு மூலகாரணமான அனாதி புண்யபாபங்கள் அப்படியே இருந்துகொண்டு மோக்ஷத்திற்குத் தடை செய்யுமாகையால் ஸத்வகுணத்தை மோக்ஷத்திற்கு மேலான உபாயமென்று எங்ஙனம் சொல்ல முடியுமென்றால், சொல்லுகிறேன். ரஜஸ்தமோ குணங்கள் போகையில் அவற்றிற்கு மூலகாரணமான புண்ய பாபரூபமான அதர்மமும் உடனே தொ

லேந்து போம். ஆகையால் ஸத்வகுணம் தடையின்றி மோக்ஷத்தை விளைக்குமென்பதில் ஸந்தேஹம் இல்லை. (பாபம்போல் புண்யமும் பலனை விளைத்து மோக்ஷத்திற்குத் தடைசெய்யுமாகையால் புண்யபாபங்களிரண்டையும் அதர்மமென்று சொல்லத்தட்டில்லை.) (ஸத்வகுணத்தை வளர்ப்பதற்கு ஸாத்விகாஹாரங்கள்மாத்ரமே காரணமென்பதில்லை. பின்னையோவென்றால்) வேதங்கள் பஞ்சராத்ரம் பகவானுடைய வைபவத்தை அறிவிக்கிற புராணம் இதிஹாஸம் முதலிய ஆகமம், ஸாது ஜனங்கள், கங்கை முதலிய புண்ய தீர்த்தங்கள், ஏகாந்தமான ப்ரதேசம், ப்ராஹ்ம முஹூர்த்தம் முதலிய காலம், பலாபிஸந்தியில்லாமல் செய்யும் கர்மம், சௌக்லம் ஸாவித்ரம் யாஜ்ஞிகம் என்று மூன்றுவகைப்பட்ட ஜன்மம் (அல்லது ஜ்ஞானஜன்மம்), பகவானை த்யானிக்கை, பகவானுடைய மந்த்ரம், தாபம் புண்ட்ரம் முதலிய பஞ்ச ஸம்ஸ்காரங்கள், ஆகிய இவை பத்தும் ஸத்வகுணத்தை வளர்ப்பதற்குக் காரணங்களாம். (ஸாத்விகமான ஆகமங்களையே அப்யஸிக்கவேண்டுமன்றி ராஜஸங்களும் தாமஸங்களும் ராஜஸதாமஸங்களுமான ஆகமங்களை அப்யஸிக்கலாகாது. ஆத்மாக்களுக்கு ஸத்வகுணம் விளைவது பகவானுடைய கடாக்ஷாதீனமாகையாலும் அப்பகவான் அப்ராக்ருதமான சுத்தஸத்வத்திற்கிடமாகையாலும் அவனை அறிவிக்கும் புராணாதிகள் ஸாத்விகங்கள். மற்றவை ராஜஸங்களும் தாமஸங்களும் ராஜஸதாமஸங்களுமென்றறிக. ஆகையால் ஸாத்விக புராணாதிகளை அப்யஸித்தால் ஸத்வகுணம் தலையெடுக்கும். ராஜஸதாமஸாதி புராணங்களை அப்யஸித்தால் ரஜஸ்தமோகுணங்களே தலையெடுத்து அழிந்து போவானாகையால் அவற்றை

ஆதரிக்கலாகாது. ஸத்புருஷர்களோடு ஸஹவாஸஞ் செய்யவேண்டும். சப்தாதி விஷயங்களில் மனஞ்செ ன்ற மூடர்களோடு இணங்கலாகாது. கங்கை முதலிய புண்யதீர்த்தங்களைப் பணியவேண்டுமன்றிக் கந்தோத கம் ஸ்ரோதகம் முதலியவற்றை அணுகலாகாது. ஏகாந்தமான ப்ரதேசத்தில் வாஸஞ் செய்யவேண்டு மன்றி மத்யபானம் ஸ்த்ரீஸம்போகம் சூதாட்டம் முத லியவை நடையாடும்படியான ப்ரதேசங்களில் வஸிக்க லாகாது. ப்ராஹ்மமுஹூர்த்தம் முதலிய காலங் களே ஸத்வகுணத்தை வளர்ப்பவைகளன்றி அர்த்த ராத்தம் முதலிய காலங்கள் அன்று. ஒரு பலனையும் உத்தேசிக்காமல் கேவலம் பகவானுடைய முகமலர்த்தி யையே எதிர்பார்த்துச் செய்யும் கர்மங்களே ஸத்வ குணத்தை வளர்க்குமன்றிப் பலன்களை விரும்பிச் செய் யுங் கர்மங்கள் அத்தகையவையாகமாட்டா. சௌக்ல ஸாவித்ராதி ஜன்மமே ஸத்வகுணத்தின் அபிவ்ருத்தி க்கு ஹேதுவாமன்றிச் சைவதீக்ஷை முதலிய ஜன்மம் அத்தகையதாகாது. ஷாட்குண்யபூர்ணனை ஸ்ரீமஹா விஷ்ணுவின் த்யானமே ஸத்வகுணம் தலையெடுப்பதற் குக் காரணமாமன்றித் தேவதாந்தரங்களின் த்யானம் அத்தகையதாகாது. ஸ்ரீமஹாவிஷ்ணுவை நினைவூட் டும் மந்த்ரமே ஸத்வகுணம் விளைவதற்கு ஹேதுவாமன் றித் தேவதாந்தரங்களை நினைவூட்டும் மந்த்ரம் அத ற்கு ஹேதுவாகாது. தாபம் புண்ட்ரம் முதலிய பஞ்ச ஸம்ஸ்காரமே ஸத்வ குணத்திற்கு ஹேதுவாமன்றிச் சைவாகமங்களில் ப்ரஸித்தமான முத்ரிகாஷ்டகம் ருத் ராக்ஷகங்கணம் முதலியவற்றைத் தரிக்கையாகிற ஸம் ஸ்காரம் அதற்கு ஹேதுவாகாது. இங்குச் சொன்ன ஆகமம் முதலியவை தவிர மற்றவை யெல்லாம் ரஜஸ்த

மோகுணங்களை வளர்க்குமேயன்றி ஸத்வகுணத்தைச் சிறிதும் விளக்கமாட்டா. ஆகையால் அவற்றை ஆதரிக்கலாகாது. பகவானுடைய பக்தியோகத்தில் நிலைநின்ற பெரியோர்கள் எதைப் புகழ்ந்து சொல்லுகிறார்களோ, அதுவெல்லாம் ஸாத்விகமென்றுணர்க. அவர்கள் எதைப் பழித்துச் சொல்லுகிறார்களோ, அதுவெல்லாம் தாமஸமென்றுணர்க. அவர்கள் எதைப் புகழாமலும் பழிக்காமலும் உபேக்ஷித்திருக்கிறார்களோ, அதுவெல்லாம் ராஜஸமென்றுணர்க. புருஷன் ஸத்வகுணம் தலையெடுப்பதற்காக ஸாத்விகமான ஆஹாரம் முதலியவற்றையே அப்யஸித்துக்கொண்டு வரவேண்டும். அங்ஙனம் ஸத்வகுணம் வளர்ந்து வருமாயின், அதனால் பகவத்பக்திரூபமான தர்மமும், அதனால் பகவானுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களின் உண்மையைப் பற்றின அறிவும், அவனைப் பற்றின நிலைநின்ற நினைவும, சப்தாதிவிஷயங்களைப் பற்றின நினைவுகள் நீங்கப் பெறுகையும் உண்டாம். மூங்கிற் புதரில் மூங்கில்கள் ஒன்றோடொன்று உறைவதனாலுண்டான அக்னிதான் எதினின்று உண்டாயிற்றோ அந்த மூங்கிற்புதரையே தன்ஜ்வாலைகளால் தஹித்துத் தானும் அணைந்து போகின்றது. இங்ஙனமே ஸத்வாதி குணங்களின் ஏற்றக்குறைவினால் உண்டான தேஹமும் அந்த மூங்கிற் புதரில் உண்டான அக்னியின் செயலைப்போன்ற செயலுடையதாகித் தனக்கு ஹேதுவான ஸத்வ ரஜஸ் தமோ குணங்களைப் போக்கித் தன்னைப்போன்ற மற்றொரு தேஹம் விளைவதற்கு ஹேதுவான செயல்களவையு மின்றித் தானும் முடிந்து போகின்றது.

உத்தவர் சொல்லுகிறார்:—மனுஷ்யர்கள் பெரும்பாலும் சப்தாதிவிஷயங்களே ஆபத்துக்களுக்குக்

காரணமென்பதை அறிகின்றார்கள். ஸ்ரீக்ருஷ்ணனே! ஆயினும் நாய் கழுதை ஆடு இவைகளைப் போல் அந்த சப்தாதி விஷயங்களையே மீளவும் ஏன் அனுபவிக்கின்றார்கள்? (பள்ளத்தில் விழுவது அனர்த்தத்திற்கு ஹேதுவென்று தெரிந்தவன் எவனேனும் அப்பள்ளத்தில் விழுவானோ?) ஆண்நாய்கள் விரட்டப் பெறினும் பெண்நாய்களைத் தொடர்கின்றன. ஆண்கழுதைகள் பெண் கழுதைகள் கால்களால் உதைக்கினும் அவற்றைத் தொடர்கின்றன. ஆடுகள் கொலையிடத்திற்குக் கொண்டுபோகும் பொழுதும் பெண்ணாட்டைப் பார்த்து அதைத் தொடர்ந்தோடுகின்றன. அங்ஙனமே ப்ராணிகள் அனர்த்தத்தை அறிந்தும் சப்தாதி விஷயங்களையே மேன்மேலும் அனுபவிக்கின்றார்களே. இதற்குக் காரணம் என்னவோ அதை எனக்குச் சொல்லுவாயாக).

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை உணர்வதில் ஊக்கமற்றவனுக்கு ஹ்ருதயத்தில் தேஹத்தை நானென்று நினைக்கும்படியான (ஆத்மாவென்று ப்ரமிக்கும்படியான) அன்யதாஜ்ஞானம் உண்டாகிறது. (ஜலத்திற்கு அக்னிஸம்பந்தத்தினால் சுடுகை உண்டாவதுபோல் தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும் ஸம்பந்தத்தினால் 'நான் இளைத்திருக்கிறேன். நான் பருத்திருக்கிறேன்' என்னும் அஹங்காரம் தேஹத்தில் உண்டாகிறது). அந்த அன்யதாஜ்ஞானத்தினால் ஸாத்விகாஹங்கார கார்யமான மனம் கோரமாயிருப்பதும் ரஜோகுணத்தின் கார்யமுமாகிய காமத்தை ஏற்றுக்கொள்கின்றது. (அந்தக் காமத்திற்கு விரோதம் நேரிடில் விரோதஞ் செய்கிறவர்களிடத்தில் கோபத்தையும் ஏற்றுக் கொள்கின்றது.) ரஜோ

குணம் அலையச் செய்யுந் தன்மையதாகையால் அதன் ஸம்பந்தமுடைய மனத்திற்கு ஸங்கல்ப விகல்பங்களென்கிற வியாபாரங்கள் உண்டாகின்றன. (ரஜோ குணம் செயல்களில் மூட்டிவிடுந்தன்மையது. தமோகுணம் அச்செயல்களிலுள்ள தோஷங்களைத் தெரியவொட்டாமல் மறைக்குந்தன்மையது. ஸங்கல்பமாவது 'நான் மனுஷ்யன். நான் பசு' என்னும் ஆத்மாபிமானத்திற்கு அனுகுணங்களான அன்னம் பால் முதலிய ஹேயவஸ்துக்களில் போக்யமென்னும் புத்தி. விகல்பமாவது பூமாலை சந்தனம் தாம்பூலம் பெண்டிர் முதலியவற்றின் உருவங்களிலுள்ள வேறுபாட்டை ஆராய்கை.) போக்யமென்னும் புத்தியாகிற அந்த ஸங்கல்பத்தினால் போகங்களில் விருப்பமாகிற காமம் உண்டாகிறது. தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து போக்யவஸ்துக்களிலுள்ள ஸௌந்தர்ய மாதுர்யாதி குணங்களை த்யானித்துக்கொண்டிருக்கும் மூடனுக்கு அந்த த்யானத்தினால் அந்தக் காமம் பொறுக்கமுடியாததாயிருக்கும். (அது 'இதை அனுபவித்தே தீரவேண்டு'மென்னும்படியான தசையை விளைக்கும். அங்ஙனம் பொறுக்கமுடியாத காமத்திற்கு வசப்பட்ட ஜீவன் 'நாம் போக்ய வஸ்துக்களைப் பெறவேண்டு மென்று முயற்சி செய்யினும் அது மேன்மேலும் துக்கத்தையே விளைக்கும்' என்று தெரிந்தும் இந்த்ரியங்களை அடக்கியாள முடியாமல் ரஜோகுணவேகத்தினால் மதிமயங்கி போக்ய வஸ்துக்களைப் பெறவேண்டுமென்று புண்யபாப கர்மங்களைச் செய்கின்றான்.) (அனர்த்த ஹேதுவென்று தெரிந்தும் சப்தாதி விஷயங்களை அனுபவிக்க வேண்டுமென்று மேன்மேலும் முயற்சி செய்வதற்குக் காரணம் ரஜோ குண வேகத்தினால் மதிமயங்கி இந்த்ரியங்களை அடக்கி

யாள முடியாமையே). (இப்படியாயின் விஷயங்கள் அனர்த்த ஹேதுவென்று தெரிந்தும் அவற்றில் வெறுப் புற்று மோக்ஷோபாயங்களை அனுஷ்டிப்பதற்கு எவ னுக்கும் அதிகாரம் உண்டாகாதே யென்றால், சொல்லு கிறேன்; கேள்). ஜீவன் ரஜஸ்தமோகுணங்களால் மனம் கலங்கி மதிமயங்குகிறானென்பது வாஸ்தவமே. ஆயி னும் விவேகமுடையவன் ஸங்கல்பவிகல்பங்களுக்கு உட் படாதபடி மனத்தைத் தடுத்துச் சப்தாதி விஷயங்கள் அனர்த்தஹேதுக்களென்பதை எப்பொழுதும் ஆரா ய்ந்தன்மையனாகிச் சோம்பலின்றிச் சப்தாதி விஷயங் களில் கால்தாழலாகாதென்கிற ஊக்கத்துடன் இருப் பானாயின், அவன் அவ்விஷயங்களில் அழுந்தமாட் டான். (இங்ஙனம் ரஜஸ்தமோகுணங்களுக்கு உட் பட்டு விஷயங்களில் கால்தாழுந்தன்மையனாயிருக்கச் செய்தேயும் அவற்றிற்கு உட்படாமையாகிற அதிகார த்தை ப்ரயத்னப்பட்டு ஸம்பாதிக்க வேண்டும்) (தனக்கு அனுகுணமான விஷயங்களில் இவை போக்யங்களென் னும் புத்தியே ஸங்கல்பம். அந்த ஸங்கல்பத்தினால் அவ் விஷயங்களில் இவற்றை அனுபவித்தே தீரவேண்டு மென்னும் விருப்பமாகிற காமம் உண்டாகிறது. விஷ யங்களின் ஸௌந்தர்ய மாதுர்யாதி குணங்களைச் சிந் திக்கையால் இவை போக்யங்களென்னும் புத்தி உண் கிறது. அவ்விஷயங்களின் தோஷங்களை ஆராய்ந்தால் அந்த போக்யதாபுத்தி தானே நிவர்த்திக்கும். பால் மதுரமாயினும் விஷங்கலந்திருக்கிறதென்று தெரியு மாயின் அதில் போக்யதா புத்தி மாறிப் போய்விடுமல் லவா? அங்ஙனமே சப்தாதி விஷயங்கள் அனர்த்த ஹேதுவென்பதை நன்குணர்வானாயின் அவை போக்யங் களென்னும் புத்தி மாறிப்போம்.) இங்ஙனம் தோஷ

தர்சனத்தினால் சப்தாதிவிஷய போகத்தில் விருப்பமற்ற வன் மனவூக்கந் தவறுதலின்றிக் காலை மாலை முதலிய காலங்களைக் கடவாமல் நெடுநேரம் உட்கார்ந்திருக்கினும் ச்ரமம் உண்டாகாதிருக்குமாறு அப்யாஸஞ் செய்து ஆஸனத்தை வென்று ரேசகம் பூரகம் கும்பகம் முதலிய உபாயங்களால் ப்ராணவாயுவையும் வசப்படுத்திக்கொண்டு சோம்பலில்லாமல் சுபாஸ்ரயமாகிய என்னிடத்தில் மனத்தை மெல்லமெல்ல நிலை நிறுத்தி த்யானிக்கவேண்டும். இடையில் விக்னங்கள் வரினும் அதற்காக வருந்தலாகாது. என்சிஷ்யர்களான ஸனகாதிகள் என்னிடத்தினின்று உபதேசம் பெற்று ஸமஸ்த விஷயங்களினின்றும் மனத்தை இழுத்து என்னிடத்திலேயே நன்றாக நிலை பெறும்படி செய்கையாகிற இவ்வளவே யோகமாமென்று பிறர்க்கும் உபதேசித்தார்கள்.

உத்தவர் சொல்லுகிறார்:—கேசவனே! (ப்ரஹ்ம ருத்ரர்களுக்கும் நிர்வாஹகனே!.) நீ ஸனகாதிகளுக்கு யோகத்தை எப்படி உபதேசித்தனையோ, அந்த ப்ரகாரத்தையும், எந்த உருவத்துடன் உபதேசித்தனையோ அந்த உருவத்தையும் அறிய விரும்புகிறேன். இதையெல்லாம் எனக்குச் சொல்லுவாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ப்ரஹ்மாவின் மனத்தினின்றும் உண்டான அவன் பிள்ளைகளாகிய ஸனகாதிகள் தங்கள் தந்தையாகிய ப்ரஹ்மதேவனைப் பார்த்து ஒருவராலும் உள்ளபடி அறிய முடியாததும் அஸாதாரணமுமாகிய யோகமார்க்கத்தைக் குறித்து வினவினார்கள்.

ஸனகாதிகள் சொல்லுகிறார்கள் :—ப்ரபூ! மனம் சப்தாதி விஷயங்களில் போக்யங்களென்னும் புத்

தியினால் அழுந்துகிறது. அவ்விஷயங்களும் நினைவுக்கு விஷயங்களாகி மனத்தில் நிலை நின்றிருக்கின்றன. மோக்ஷத்தை விரும்புகிறவனுக்கு மனமும் சப்தாதிவிஷயங்களுமாகிற இவை ஒன்றையொன்று பிரிந்திருக்கும் நிலை எப்படி நேரும்? இவ்விஷயத்தில் ஸம்சயமாயிருக்கிறது. இதை விவரித்துச் சொல்வீராக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—பூதங்களைப் படைப்பவனும் ருத்ராதி தேவதைகளுக்கும் மேற்பட்ட தேவனுமாகிய ப்ரஹ்மதேவன் ஸனகாதிகளால் இங்ஙனம் வினவப்பெற்று அதற்கு உத்தரஞ்சொல்ல ஆலோசித்தும் கர்மத்தினால் குறுகின அறிவுடையவனாகையால் அதை அறிய முடியாதிருந்தான். அந்த ப்ரஹ்மதேவன் அந்தக்கேள்விக்கு உத்தரஞ்சொல்லி அதினின்று கரையேறவிரும்பி என்னை த்யானித்தான். அப்பொழுது நான் ஹம்ஸத்தின் உருவங்கொண்டு அந்த ப்ரஹ்மாவின் அருகிற் சென்றேன். (ஹம்ஸம் ஜலத்தையும் பாலையும் தனியே பிரிக்கவல்லதாயிருப்பதுபோல், நானும் தகுந்த உபாயங்களை உபதேசித்துச் சப்தாதி விஷயங்களையும் மனத்தையும் தனியே பிரிக்க ஹம்ஸரூபியாய் அவ்விடம் சென்றேன்.) அப்பொழுது அந்த ஸனகாதிகள் ப்ரஹ்மதேவனை முன்னிட்டுக்கொண்டு என்னிடம் வந்து என்பாதங்களில் விழுந்து வணங்கி நீ யாரென்று வினவினார்கள். அப்பொழுது என்னுடைய உண்மையை அறிய விரும்புகிற அம்முனிவர்களால் இங்ஙனம் வினவப் பெற்ற நான் அவர்களுக்கு யாது மொழிந்தேனோ அதைச் சொல்லுகிறேன். உத்தவனே! ஊக்கத்துடன் கேட்டுணர்வாயாக. சேதனசேதன ரூபமான ஸமஸ்த வஸ்துக்களும் என்னால் படைக்கப்பட்டு என்னையே அந்தராத்மாவாக வுடையவையாகித் தங்கள் ஸத்தாஸ்தி

திப்ரவ்ருத்திகளெல்லாம் என்னதீனமாயிருக்கப் பெற்ற வையாகையால் நானேயன்றி என்னைக்காட்டிலும் வேறு பட்டவையன்று. இது உங்களுக்குத் தெரியுமாயின் அப்பொழுது நீங்கள் என்னைக் குறித்து நீ யாரென்று வினவினது, அந்தணர்களே! எங்ஙனம் பொருந்தும்? (ஜகத்திலுள்ள சேதனசேதன ரூபமான வஸ்துக்களில் எதுவாயினும் என்னைக்காட்டிலும் வேறுபட்டிருக்குமாயின், அப்பொழுது நீங்கள் கேட்ட கேள்வி பொருந்தும். கேட்கிற நீங்களுங்கூட என்னைக்காட்டிலும் வேறுபட்டவர்களன்று. நான் எல்லாவற்றையும் சரீரமாகவுடையவனல்லவா? உங்களைச் சரீரமாக வுடைய நானே வினவினவன். கேவலசரீரத்திற்குப் பேசுந்திறமை உண்டோ? மறுமொழி கூறுபவனாக அபிமானிக்கப்பட்ட நானே சொல்லவேண்டிய விஷயமாயிருக்கின்றேன். ஆகையால் வினவினவன் விடை கொடுப்பவன் விடைக்கு விஷயம் ஆகிய இவை யெல்லாம் ஒன்றேயாகையால் வினவிடைகள் சேரமாட்டா.) அப்படி யன்றிக் கேவலம் அசேதனமான சரீரமாத்ரத்தையே அறிந்தவர்களாயின், அப்பொழுதும் இங்ஙனம் வின்வுவது சரியன்று. ஏனென்றால், நான் ஹம்ஸமென்பது உங்களுக்கு ப்ரத்யக்ஷமாய்த் தெரிகின்றது. ஆகையால் ஜாதியைப் பற்றிக் கேட்கவேண்டியதில்லை என்ஜாதியில் பிறந்த ஸமஸ்த பூதங்களும் பஞ்சபூதங்களால் ஏற்பட்டவைகளே யன்றி வேறன்று. அவையெல்லாம் அவ்விஷயத்தில் ஸமானங்களே. ஆகையால் காரணத்தைப் பற்றியும் கேட்க இடமில்லை. மறுமொழி பெறுதற்காக வந்த உங்கள் கேள்விக்கு எவ்விதத்திலும் மறுமொழி கூறவேண்டிய அவஶ்யமில்லாமையால் அது வீண் கேள்வியே. யோகபரிசுத்தமான மனத்தினால் தேவ

மனுஷ்யாதிதேஹங்களைக் காட்டிலும விலக்ஷணமெ ன்று அறியக்கூடிய ஆத்மவஸ்துவும் அபரிசுத்தமான மனத்தினாலும் வாக்கு கண் இவைகளாலும் மற்று முள்ள இந்த்ரியங்களாலும் அறியக்கூடிய அசேதன வஸ்துவும் ஆகிய இவையெல்லாம் எனக்குச் சரீரமாகை யால் நானேயன்றி என்னைக்காட்டிலும் வேறுபட்டு ஸ்வதந்த்ரமாயிருப்பதன்று. ஆகையால் ஸர்வாந்தராத் மாவான நானே ஸமஸ்த சப்தங்களுக்கும் அந்த சப்தங் களால் உண்டாகும் அறிவுகளுக்கும் விஷயமாயிருப்பவ னென்று நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள். பிள்ளை களே! என்னை அந்தராத்மாவாகவுடைய ஜீவனுக்கு தேஹஸம்பந்தம் இருக்கும்பொழுது மனம் ஸத்வாதி குணங்களின் பரிணாமமான சப்தாதி விஷயங்களில் நுழைகின்றது. அந்தச் சப்தாதி விஷயங்களும் அம் மனத்தில் நுழைந்திருக்கின்றன. ஆகையால் சப்தாதி விஷயங்களும் மனமும் ஆகிய இவ்விரண்டும் ஒன்றை யொன்று விட்டுப் பிரிந்திருக்கமாட்டா. தேஹஸம்பந் தம் இருக்கும்பொழுது அடிக்கடி சப்தாதி விஷயங் களை அனுபவித்துக் கொண்டிருக்கையால் மனம் அவற் றில் நுழைகின்றது. அவ்விஷயங்களும் மனத்தை விடா மல் அதில் நுழைகின்றன. பூர்வஜன்ம ஸம்ஸ்கார வசத் தினால் அவ்விஷயங்கள் தானே மனத்தில் ஸ்பஷ்டமா கத் தோற்றுகின்றன. அந்தஸம்ஸ்காரத்தைப் பற்றியே மனமும் அவற்றை மறவாமல் நினைத்துக் கொண்டே யிருக்கின்றது. என்னுடைய உருவத்தை த்யானித்துக் கொண்டுவருவானாயின் ஒன்றையொன்று விட்டு நீங்கிப் போம். (மனமும் சப்தாதி விஷயங்களை விடும். சப்தாதி விஷயங்களும் மனத்தை விடும்.) (ஜீவன் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனென்பதை ஆராய்கையும் மனம்

சப்தாதி விஷயங்களை விட்டுப் பிரிகைக்குக் காரணமாம். ஆகையால் ஜீவனுடைய உண்மையை ஆராய்ந்தறிய வேண்டும். அந்த ஜீவஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன்; கேட்பீர்களாக.) ஜாகரம் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்னும் இம்மூன்று அவஸ்தைகளும் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற ப்ரக்ருதியின் குணங்களால் விளையும் மனோவியாபாரங்கள். ஜீவன் அந்த அவஸ்தைகளைக்காட்டிலும் விலக்ஷணனாகி அவைகளுக்கு ஸாக்ஷியாயிருப்பவன். இங்ஙனம் பெரியோர்கள் ஜீவஸ்வரூபத்தை நிச்சயித்துச் சொல்லுகிறார்கள். தேஹ ஸம்பந்தம் மனத்திற்கும் சப்தாதிவிஷயங்களுக்கும் அறுக்க முடியாத தொடர்ச்சியை விளைத்து மனத்திற்கு ஸங்கல்பவிகல்பங்களை விளைக்குமாகையால் ஜாகராதியான மூன்று அவஸ்தைகளையும் இயற்கையில் கடந்திருக்கும் ஜீவனைச் சரீரமாகவுடைய என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துவானாயின், அம்மனம் சப்தாதி விஷயங்களில் போக்யதாபுத்தியைத் துறக்கும். சப்தாதி விஷயங்கள் போக்யங்களென்னும் புத்தி நீங்கினவுடனே மனத்திற்கும் சப்தாதி விஷயங்களுக்கும் உண்டான தொடர்ச்சியும் நீங்கி மனம் பரிசுத்தமாம். ஜ்ஞானத்தையே வடிவாகவுடைய ஆத்மாவினிடத்தில் தேவமனுஷ்யாதிபேதங்கள் இருப்பதாக நினைக்கையும் ஈஶ்வரனுக்குப் பரதந்த்ரமான ஆத்மாக்களை ஸ்வதந்த்ரமென்று நினைக்கையுமாகிற அஹங்காரம் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தைத் தடுக்கும்படியான தேஹபந்தத்தை விளைக்கின்றது. ஜீவன் இதை அறிந்து ஸம்ஸார பந்தத்தினின்று வெறுப்புற்று ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திகளென்கிற மூன்று அவஸ்தைகளைக் கடந்து ப்ரக்ருதிவிலக்ஷணமும் பரமாத்மஸ்வரூபமுமாகிய

ஆத்ம ஸ்வரூபத்தை ஆராய்வானாயின் 'ஸம்ஸாரபந்தத்தினின்று நான் எப்படி விடுபடுவேன்' என்னுஞ் சிந்தையைத் துறப்பான். தேஹத்தைக்காட்டிலும் ஆத்மா வேறுபட்டவனென்பதை வெளியிட வல்ல யுத்திகளால் தேவ மனுஷ்யாதி பேதங்கள் ஆத்மாவினிடத்தில் உண்டென்கிற நினைவாகிற தேஹாத்மாபிமானம் எதுவரையில் நீங்காதிருக்குமோ, அதுவரையில் ஜீவன் விழித்துக் கொண்டிருப்பானாயினும் உண்மையை அறியாமையால் அவன் தூங்குகிறானென்றே சொல்லவேண்டும். ஸ்வப்னங் காண்கிறவன் அது ஸ்வப்னமென்று அறிய மாட்டான். ஜாகராவஸ்தையென்றே நினைப்பான். அங்ஙனமே அஜ்ஞானத்தினால் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமிக்கிறவன் அந்நினைவு ப்ரமமென்று தெரிந்து கொள்ளமாட்டான்; யதார்த்தமென்றே நினைப்பான். ஆகையால் தேஹ விலக்ஷணனான ஆத்மாவை எதுவரையில் உள்ளபடி அறிய மாட்டானோ, அதுவரையில் அவன் நிபுணனாயினும் அறியாத மூடனே யாவான். ஆகையால் தேஹாத்மாபிமானம் அனர்த்தங்களுக்கெல்லாம் இடமாயிருக்கும். எப்பொழுதும் ஜ்ஞானத்தையே வடிவாகவுடைய ஆத்மாவுக்கு தேவமனுஷ்யாதி தேஹ ஸம்பந்தம் ஸ்வபாவஸித்தமாகாமல் வந்தேறியாகையாலே நித்யமாயிருப்பதன்று. அப்படி நித்யமாயிருக்குமாயின் முக்தாத்மாக்களுக்கும் அந்த தேவ மனுஷ்யாதி தேஹ ஸம்பந்தம் இருக்க வேண்டும். அவர்களுக்கோ அது கிடையாது. ஆகையால் அந்த தேவ மனுஷ்யாதி தேஹங்களை பற்றி வருகிற பால்யம் யௌவனம மனுஷ்யத்வம் ப்ராஹ்மணத்வம் முதலிய பேதங்களும் அவற்றைப் பற்றின அறிவுகளும் அவற்றிற்கு ஹேதுவான மற்ற தோஷங்களும் பொய்யே. (ஒருவன் முத்துச்

சிப்பியைப் பார்த்து வெள்ளியென்று ப்ரமிப்பானாயின், அது சிப்பியென்று அறிந்தபின்பு வெள்ளி யென்னும் ப்ரமம் நீங்கிப்போய் விடுமல்லவா. அங்ஙனமே தேஹத்தை ஆத்மா வென்று ப்ரமிக்கையாகிற அஹங்காரத்தினாலுண்டான தேவமனுஷ்யாதி ஆகார பேதமும் அவற்றைப் பற்றின அறிவுகளும் அவற்றிற்கு ஹேதுவான தோஷங்களும் அனாதியாயினும் தேஹாத்ம ப்ரமம் நீங்கி ஆத்ம ஸ்வரூபம் தெளிவாக ஏற்படுமாயின் தானே நீங்கிப்போம். ஆகையால் ஆத்மஸ்வரூபத்தை ஆராய்ந்தமாத்ரத்தில் அனாதியான அஹங்காராதிகள் எங்ஙனம் நீங்குமென்று சங்கிக்கலாகாது. மற்றும், தேவமனுஷ்யாதி ஆகாரங்கள் ஆத்மாக்களிடத்தில் கிடையா. அவை ப்ரக்ருதியின் பரிணாமங்கள். அவற்றைப் பற்றிய பேதங்கள் ஆத்மாக்களிடத்தில் இருப்பதாகத் தோற்றுவது பொய்யே. ஆத்மாவிடத்தில் இருப்பனவாகத் தோற்றுகிற அவை அங்ஙனம் தோற்றுவதற்குக் காரணமான அஹங்காரம் முதலிய தோஷங்கள் நீங்குமாயின் தானே நீங்கும். பித்தத்தினால் கண் கலங்கினவனுக்கு வெண்மையான சங்கு பொன்னிற முள்ளதாகத் தோற்றினும், அவன் நல்ல சிகித்ஸை செய்து பித்தம் தெளியப் பெறுவானாயின் அவனுக்குச் சங்கத்தில் இருப்பதாகத் தோற்றின பொன்னிறம் நீங்குமல்லவா? அங்ஙனமே ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திகளென்கிற மூன்று அவஸ்தைகளையும் கடந்த ஆத்மாவின் ஸ்வரூபத்தை ஆராய்ந்துணர்கையாகிற நல்ல உபாயத்தினால் நிச்சேஷமாக அஹங்காரம் நிவ்ருத்திக்கையில் அதைப்பற்றி வருகிற தேவாதி ஆகாரங்களும் அவற்றைப்பற்றின பேதபுத்திகளும் நிவர்த்திக்கும். எந்த ஜீவன் ஜாகராவஸ்தையில் (விழித்

துக்கொண்டிருக்கும் பொழுது) ஸமஸ்த இந்த்ரியங்களாலும் க்ஷணந்தோறும் மாறுந்தன்மையுடைய சப்தாதி விஷயங்களை வெளியில் அனுபவிக்கிறானோ, அந்த ஜீவனே ஸ்வப்னத்தில் ஜாகராவஸ்தையில் அனுபவித்த விஷயங்களைப் போன்ற சப்தாதிவிஷயங்களை அனுபவிக்கிறான். எந்த ஜீவன் ஸுஷுப்தியில் சப்தாதிவிஷயங்களைப்பற்றின அனுபவம் சிறிதுமின்றி வெறுமனே இருக்கிறானோ, அங்ஙனம் ஜாகரம் முதலிய மூன்று அவஸ்தைகளையுடைய அந்த ஜீவன் ஜ்ஞானத்தையே வடிவாகவுடையனாகையால் எல்லா அவஸ்தைகளிலும் ஒருவாறாகவேயிருப்பவன். அவன் ஜ்ஞானத்தையே ஸ்வரூபமும் ஸ்வபாவமுமாக வுடையவன். 'படுத்துறங்கின ஜீவனே எழுந்திருக்கிறானா? அல்லது வேறொரு ஜீவனா?" என்று ஸம்சயித்துப் 'படுத்துக்கொண்டுறங்கினவன் சப்தாதி விஷயங்களும் மற்ற எல்லா உபாதிகளும் விடுபட்டு ப்ரஹ்மத்தினிடத்தில் சேர்ந்து விடுகிறானாகையால் அவனுக்கும் முக்தனுக்கும் பேதமில்லை. அவனுக்கு முன்சரீர இந்த்ரியாதி ஸம்பந்தமும் கிடையாது. ஆகையால் வேறொரு ஜீவனே எழுந்திருக்கிறான்' என்று சிலர் ஸ்தாபிப்பது சரியன்று. எவன் படுத்துறங்கினானோ அவனே மீளவும் எழுந்திருக்கிறானென்றே கொள்ளவேண்டும். வேறொருவனென்று கொள்கையில் எழுந்திருக்கிறவனுக்கு முன் நினைவுகள் எங்ஙனம் கூடும். தூங்கியெழுந்திருக்கிறவன் 'நான் அப்பொழுது படுத்தேன். இப்பொழுது எழுந்தேன். நான் நேற்று இது செய்தேன். இது புசித்தேன். இப்படி இருந்தேன்' என்று நினைக்கிறானல்லவா. உறங்கினவனைக்காட்டிலும் எழுந்திருக்கிறவன் வேறொருவனாயிருப்பானாயின், அவனுக்கு அந்நினைவுகள் எங்ஙனம் ஸம்பவிக்கும்?

மற்றும், படுத்துக்கொண்டுறங்கினவனை எந்தப் பெயரினால் அழைத்தார்களோ, அந்தப் பெயரைச் சொல்லியே தூங்கியெழுந்தவனையும் அழைக்கின்றான். அவனும் அந்தப் பெயரைத் தன்னுடையதென்று முன்போலவே ஏற்றுக் கொள்ளுகிறான். படுத்துறங்குகிறவன் அவ்வளவில் மோக்ஷம் பெறுவானாயின் சாஸ்த்ரங்களில் மோக்ஷத்திற்காக ஏற்பட்ட விதிகளெல்லாம் வீணாய்விடும். ஆகையால் எவன் படுத்துறங்குகிறானோ, அவனே எழுந்திருக்கிறானென்பது ஸித்தமாகின்றது. அந்த ஜீவன் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் கார்யமான ஜாக்ரத் ஸ்வப்பன ஸுஷுப்திகளென்கிற மூன்று அவஸ்தைகளுக்கும் ஸாக்ஷியாயிருப்பவன்; கர்மநிமித்தமாக ப்ராக்ருதமான இந்த்ரியங்களைத் தூண்டுந்தன்மையன். 'இங்ஙனம் மனத்திற்கு உண்டாகிற ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திகளென்கிற மூன்று அவஸ்தைகளும் அவரவர் கர்மானுகுணமான என்னுடைய ஸங்கல்பரூபஜ்ஞானத்தினால் சேதனுசேதன ரூபமான ஸமஸ்த ப்ரபஞ்சத்திற்கும் உபாதானகாரணமாகிய என்னிடத்தில் உண்டாகின்றன. ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களென்கிற மனோகுணங்களே அவற்றிற்கு நிமித்தம்' என்று நன்றாக ஆராய்ந்து ஸமஸ்த அனர்த்தங்களையும் போக்குவதும் என்னைப் பெறுதற்கு ஸாதனமும் ஸமஸ்த ப்ரயோஜனங்களிலும் சிறந்ததுமாகிய என்னுடைய உபாஸனமாகிற புருஷார்த்தத்தை நிச்சயித்துக்கொண்டு 'ஆத்மா, தேஹமா? அல்லது அதைக்காட்டிலும் விலக்ஷணமா? ஆத்மா ஸ்வதந்த்ரனா? அல்லது பரதந்த்ரனா?' என்னும் இவை முதலாக மனத்தில் உதிக்கும் ஸம்சயங்களையெல்லாம் அனுமானம் பெரியோர்களின் உரை இவைகளால் விளைந்த கூரிய அறிவாகிற கத்தியி

ணுல் அறுத்து என்னைப் பணியவேண்டும். (தேஹங்கள் இந்த்ரியங்கள் சப்தாதி விஷயங்கள் இவை முதலில் ஸுகரூபமாகத் தோன்றிலும் கடைசியில் துக்கத்தையே விளைப்பவைகளும் அநித்யங்களும் ஹேயங்களுமாயிருப்பவையென்னும் நியதியை ஆராய்ந்து சாரீரகஸூத்ரம் முதலிய பெரியோர்களின் உரைகளால் வேதாந்தங்களின் பொருளை உள்ளபடி அறிந்து தேஹாதிகளில் வைராக்யம் உண்டாகப் பெற்று அந்த வேதாந்த விசாரத்தாலும் வைராக்யத்தாலும் உண்டான அறிவினுல் மனத்தில் உண்டாகிற ஸம்சயங்களையெல்லாம் அறுத்து 'ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணன்; ஈஶ்வரனுக்குப் பரதந்த்ரனேயன்றி ஸ்வதந்த்ரனன்று. அவனுடைய திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமே இவனுக்குப் புருஷார்த்தம். அதைப் பெறுதற்கு அவனே உபாயம்' என்று நன்றாக உணர்ந்து அவனைப் பணியவேண்டும்.) ஆத்மாவென்னும் ப்ரமத்திற்கும் போக்யமென்னும் ப்ரமத்திற்கும் மனத்தின் வியாபாரங்களான ஸங்கல்ப விகல்பங்களுக்கும் இடமான தேவ மனுஷ்யாதி தேஹங்கள் அவற்றிற்கு போக்யங்களான சப்தாதிவிஷயங்கள் இவை முதலியவையெல்லாம் அலாதசக்ரம்போல் மிகவும் நிலையற்றவை; ஸ்வப்னத்தில் காண்கிற வஸ்துக்கள்போல் நஶ்வரமாயிருப்பவை. இங்ஙனமே நமக்குப் புலப்படுகிறதாகையால் இதற்கு நாம் வேறொரு ப்ரமாணம் தேடவேண்டியதில்லை. அதைக் கொண்டு ப்ரபஞ்சமெல்லாம் இத்தகையதேயென்று நிச்சயிக்கலாம். ஜீவாத்மாவின் ஸ்வரூபம் கேவலம் ஜ்ஞானமயமாயிருப்பது. (ஜீவாத்மா ஜ்ஞானத்தையே ஸ்வரூபமாகவுடையவன். அவனுடைய ஸ்வபாவமும் ஜ்ஞானமே.) அவன் அந்த ஸ்வரூப

ஸ்வபாவங்கள் என்றும் மாருமல் ஒருவாருகவே யிருக்கப்பெற்றவன். அத்தகையதான அந்த ஜீவாத்மஸ்வரூபம் தேவ மனுஷ்யாதி ரூபமாய்ப் பலவாருகத் தோற்றுகிறதேயன்றி ஜீவாத்மஸ்வரூபத்தில் தேவ மனுஷ்யாதிபேதம் கிடையாது. அந்த பேதம் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்று மூன்றுவகைப்பட்ட ப்ரக்ருதியின் குணங்களுடைய பரிணாமத்தினுல் ஏற்பட்டது; ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தியுமாகிய என்னுடைய ஸங்கல்ப ரூபஜ்ஞானத்தினுல் ஏற்படுகிற ஸ்வப்னம்போன்றது. ஸங்கல்பவிகல்பங்களுக் கிடமான மனமுடையவன் உறங்கும்பொழுது அந்த ஸங்கல்பவிகல்பங்களுக்குத் தகுந்தபடி ஸ்வப்னங் காண்கிருன். விழித்துக் கொண்ட பின்பு அது மறைகின்றது. அங்ஙனமே ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை உணர்ந்தவனுக்கு ஆத்மாவினிடத்தில் தோற்றுகிற தேவ மனுஷ்யாதிபேதம் மறையும். 'ஸ்வப்னங் காண்கிறவனுக்கு விழித்துக் கொண்டவுடனே அது மறைகின்றது. ஜீவன் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை உணரினும் தேவமனுஷ்யாதிபேதம் மறையக் காணேமே' யென்றுல், அது மோக்ஷம் வரையில் தொடர்ந்து வருகின்ற பரமாத்மோபாஸனத்தினுல் மறையும். உண்மையை உணர்ந்தவனுக்கு அந்த பேதம் ஆத்மாவினிடத்தில் இருப்பதாகத் தோற்ருது. பரமாத்ம ஸங்கல்பத்தினுல் ஏற்பட்ட காலம் வரும்பொழுது அது அடியோடு மறைந்துபோம். ஆகையால் சப்தாதிவிஷயங்களினின்று கண்ணைத் திருப்பி அவற்றில் விருப்பத்தையும் தொலைத்து எவ்வித வ்யாபாரமுமின்றி த்யானயோகத்தில் இழிந்து நித்யாநந்த ஸ்வரூபனுன பரமாத்மாவை அனுபவித்துக்கொண்டு தேஹத்தைப்பற்றின சிந்தையேயின்றி வெறுமனே

இருக்கவேண்டும். இத்தகைய புருஷனுக்கு முன்பு இது ஆத்மாவன்றென்னும் புத்தியுடன் துறக்கப்பட்ட தேஹம் முதலியது த்யானயோக ஸமயம் தவிரப் படுத்தல் இருத்தல் புசித்தல் முதலிய சில ஸமயங்களில் அனுஸந்தானத்திற்கு விஷயமாயினும், அந்த அனுஸந்தானம் த்யானயோகத்தினின்று சலிப்பிக்கவும் மீளவும் தேஹஸம்பந்தத்திற்கு ஹேதுவான தேஹாத்மாபிமானம் முதலிய ப்ரமத்தை விளைவிக்கவும் வல்லதாகாது. சிலர் கேவல வேதாந்த வாக்யார்த்த ஜ்ஞானத்தினால் மோக்ஷமென்று சொல்லுகிறார்களே; அது பொருளன்றோ வென்றால், அது பொருளன்று. கேவலமான வாக்யார்த்தஜ்ஞானத்தினால் மோக்ஷம் உண்டாகாது. த்யானமென்றும் உபாஸனமென்றும் சொல்லப்படுகிற விலக்ஷணஜ்ஞானத்தினால்தான் மோக்ஷம் உண்டாகும். அந்த ஜ்ஞானமும் இரண்டு மூன்றுதரம் ஆவ்ருத்தியானால் போதாது. சரீரமுள்ளவரையில் அந்த ஜ்ஞானம் ஆவ்ருத்தியாகவேண்டும். (சரீரம் நீங்கும் வரையில் பகவானை த்யானித்துக்கொண்டிருக்க வேண்டும். இல்லையாயின் மனம் கலங்கி த்யானயோகமே நிறைவேறாமல் கெட்டுப்போம்.) த்யானயோகம் கை கூடினவன் தேஹம் உட்கார்ந்திருப்பினும் எழுந்திருப்பினும் நஸ்வரமாகையால் ஹேயமென்று நினைத்து அதை அனுஸந்திக்கவே மாட்டான். அவன் ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தவனாகையால் தேஹத்தைப்பற்றி நினைக்க இடமில்லை. மத்யபானஞ் செய்து அந்த மதத்தினால் விவேகமற்றவன் அரையில் உடுத்தின ஆடை தெய்வாதீனமாய் அவிழ்ந்து நழுவாதிருப்பினும் தெய்வவசத்தினால் அவிழ்ந்து நழுவிப்போயினும் அதை நினையாதிருப்பதுபோல், த்யானயோகத்தில்

ஆழ்ந்தவன் தேஹம் உட்கார்ந்திருப்பதையாவது நின்றிருப்பதையாவது நினைக்க மாட்டான். 'த்யானயோகம் எப்பொழுது நிறைவேறுமோ, அப்பொழுது செய்யவேண்டிய கார்யம் மற்றொன்றும் இல்லாமையால் சரீரம் அப்பொழுதே நசித்துப் போகின்றதா? அலலது, சில காலம் தொடர்ந்து வருமா?" என்று ஸம்சயம் உண்டாகக்கூடும். அதைப்பற்றிச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. அந்தராத்மாவான என்னுடைய ஸங்கல்பத்தின்படி நடக்கிற ஸத்தா ஸ்திதி ப்ரவ்ருத்திகளையுடைய தேஹம் தனக்கு ஹேதுவான ப்ராப்த கர்மம் எதுவரையில் இருக்குமோ, அதுவரையில் ப்ராணனோடிருக்கும். 'ஜ்ஞானிக்கும் மற்றவனுக்கும் சரீரம் கர்மாவஸானத்தில் கழியும்' என்பது துல்யமேயல்லவா? ஆயின் ஜ்ஞானிக்கு என்ன விசேஷம்? என்றால், சொல்லுகிறேன்; கேள். த்யானயோகம் கைகூடப்பெற்று ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி ஸாக்ஷாத்கரித்தவன் அந்த தேஹம் கழிந்தபின்பு ஸ்வப்னத்தில் காண்கிற வஸ்துக்களைப்போல் நஸ்வரமும் அனுபந்திகளோடு கூடியதுமாகிய தேஹத்தை மீளவும் பெறமாட்டான். மற்றவனோவென்றால் மீளவும் தேஹத்தைப் பெறுவான். அந்தணர்களே! ஆத்மோபாஸனம் பரமாத்மோபாஸனம் இவற்றின் ரஹஸ்யத்தை உங்களுக்கு மொழிந்தேன். ஆயினும் இந்த ஆத்ம பரமாத்மோபாஸனங்கள் அனுஷ்டிக்க முடியாதவைகளாயிருக்கின்றனவே யென்று நினைக்கக்கூடும். ஆயினும் அப்படி நினைக்கவேண்டாம். என்னைச் சரணம் அடைவானாயின், அவனுக்கு என்னுடைய அனுக்ரஹத்தினால் இவை ஸுகமாகவே அனுஷ்டிக்கக் கூடியவைகளாயிருக்கும். நான் யஜ்ஞங்களுக்கு நிர்வாஹகனான ஸ்ரீ மஹாவிஷ்ணுவே. அத்தகைய

நான் மோக்ஷதர்மத்தை உங்களுக்கு உபதேசிக்கும் பொருட்டு வந்தேனென்று தெரிந்துகொள்வீர்களாக. ப்ராஹ்மண ஸ்ரேஷ்டர்களே! ஆத்மோபாஸனம் பரமாத்மோபாஸனம் ப்ராணிகளுக்கு ஹிதஞ்செய்கையாகிற ஸத்யம் புண்ய கர்மம் வெளியிந்த்ரியங்களை அடக்கியாளுந் திறமை வைராக்யம் முதலிய ஸம்பத்து புகழ் உள்ளிந்த்ரியத்தை அடக்குகை ஆகிய இவற்றிற்கெல்லாம் நானே நிர்வாஹகன். ஹேயகுணங்கள் தீண்டப்பெறுதவனும் என்ப்ரயோஜனத்தை எதிர்பாராமல் பிறர் துக்கத்தைப் போக்குந்தன்மையனும் அந்தராத்மாவும் அன்பனும் ஹிதத்தையே செய்பவனுமாகிய என்னை வைஷம்யமில்லாமையாகிற ஸாம்யம் ஆநந்தம் முதலிய ஸமஸ்த கல்யாண குணங்களும் அடைகின்றன. இங்ஙனம் ஹம்ஸரூபியான என்னுடைய உபதேசத்தினல் ஸனகாதி முனிவர்கள் ஸந்தேஹமெல்லாம் தீர்ந்து மிகுந்த பக்தியுடன் என்னை ஆராதித்து ஸ்தோத்ரங்களால் துதித்தார்கள். அந்தமஹார்ஷிகளால் நன்கு பூஜித்து நன்கு துதிக்கவும் பெற்ற நான் ப்ரஹ்மதேவன் பார்த்துக் கொண்டிருக்கையில் என் ஸ்தானத்திற்கு வந்து சேர்ந்தேன். பதின்மூன்றுவது அத்யாயம் முற்றிற்று.

---

{பக்தியோகத்தின் சிர்மையையும், த்யானத்தின் ஸ்வரூபத்தையும், அதன் ஸாதனங்களையும் கூறுதல்.}

உத்தவன் சொல்லுகிருன்:—ஸ்ரீக்ருஷ்ணு! வேதங்களை ஓதியுணர்ந்து பிறர்க்கு உபதேசிக்குந்தன்மையரான பெரியோர்கள் தர்மம் அர்த்தம் காமம் முதலிய புருஷார்த்தங்கள் பலவும் அவற்றிற்கு ஸாதனங்கள்

பலவும் உளவென்று சொல்லுகிறார்கள். (நீயோ வென்றால், மோக்ஷம் ஒன்றே புருஷார்த்தமென்றும், பலன்களை அபேக்ஷியாமல் செய்கிற பக்தியோகமே அதற்கு ஸாதன மென்றும் மொழிந்தனை. நீ சொன்னமோக்ஷமென்னும் புருஷார்த்தம் மற்றவர் சொல்லுகிற தர்மாதி புருஷார்த்தங்களில் அடங்கி யிருக்குமாயின் அவர்கள் சொல்லுகிற ஸாதனங்களோடு நீ சொல்லுகிற பக்தியோகமென்னும் ஸாதனத்திற்கு விகல்பமாம். (அதாவது அவர்கள் சொல்லுகிற ஸாதனங்களையாவது நீ சொல்லுகிற ஸாதனத்தையாவது ஏதேனுமொன்றை அனுஷ்டிக்கலாமென்று கருத்தாகும்.) தர்மாதி புருஷார்த்தங்களைக் காட்டிலும் மோக்ஷ புருஷார்த்தம் விஜாதீயமாயிருக்குமாயின், அவையெல்லாவற்றிற்கும் ஸமப்ராதான்யமாம். அதாவது அந்தந்த புருஷார்த்தத்திற்கு அந்தந்த ஸாதனம் உபாயமாம். அல்லது இவற்றில் ஏதேனுமொன்றே சிறந்ததாயின், அதுவே முக்யமாம். ஆகையால் எல்லா ஸாதனங்களுக்கும் பலன் ஒன்றேயாகையால் ஏதேனுமொரு ஸாதனத்தை அனுஷ்டிக்கலா மென்று திருவுள்ளமா? பலன் வெவ்வேறாகையால் அந்தந்த பலனை விரும்பினவன் அந்தந்த ஸாதனத்தை அனுஷ்டிக்கலாமென்று திருவுள்ளமா? இவற்றில் ஒன்றே சிறந்த பலனாகையால் அதன் ஸாதனத்தையே முக்யமாக அனுஷ்டிக்க வேண்டுமென்று திருவுள்ளமா? இதை விவரித்துச் சொல்ல வேண்டும். பக்தியோகம் செய்வானாயின், எல்லா விஷயங்களிலும் பற்றற்று மனம் உன்னிடத்திலேயே நிலைநிற்குமென்று நீ சொன்ன பக்தியோகத்தின் மேன்மையை ஆராய்ந்தால் பக்தியோகம் தர்மாதிகளைக் காட்டிலும் விலக்ஷணமான புருஷார்த்தத்தை ஸாதித்

துக்கொடுக்கும் உபாயமென்று தெரிகிறது. ஆகையால் ஸந்தேஹிக்க இடமில்லாமல் அதுவே முக்யமென்று நிச்சயிக்கலாம். ஆயினும், பக்தியோகத்தினுல் ஸாதிக்கப்படுகிற மோக்ஷம் தர்மாதிகளில் அடங்கினதா? அல்லது அவற்றைக் காட்டிலும் வேறு? வேறுயிருக்குமாயின், அவற்ருெடொத்ததா; அன்று? தாரதம்யம் உண்டாயினும் ஒன்றுக்கொன்று உதவியாயிருக்குமா? இராதா? இவை முதலிய ஸந்தேஹங்கள் பலவும் உண்டாகின்றனவாகையால் விவரித்துச் சொல்லி அந்த ஸந்தேஹங்களையெல்லாம் தீர்ப்பாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:—ப்ராக்ருத ப்ரளயத்தில் வேதமென்னும் பெயருடைய இந்த வாக்கு அத்யயனஞ் செய்பவரில்லாமையால் நஷ்டமாயிற்று. ஸர்வஜ்ஞனும் ஜகத்தைப் படைக்க விரும்புகின்றவனுமாகிய நான் கல்பாதியில் அந்த வாக்கையே ப்ரஹ்மதேவனுக்கு முன்பு எப்படி இருந்ததோ அப்படியே உபதேசித்தேன். அந்த வேதம் முழுவதும் தர்ம ஸ்வரூபனுகிய என்னையே நிரூபித்துச் சொல்லுகின்றது. அந்த ப்ரஹ்மதேவன் அவ்வேதத்தைத் தனது முதற் பிள்ளையாகிய ஸ்வாயம்புவ மனுவுக்கு உபதேசித்தான். அந்த ஸ்வாயம்புவமன்வந்தரத்தில் ப்ருகு முதலிய மஹர்ஷிகள் அவ்வேதத்தை ப்ரஹ்மாவினிடத்தினின்று அத்யயனஞ் செய்தார்கள். அந்த ரிஷிகளின் புதல்வர்களான தேவர் தானவர் குஹ்யகர் மனுஷ்யர் ஸித்தர் கந்தர்வர் வித்யாதரர் சாரணர் கிந்தேவர் கின்னரர் நாகர் ராக்ஷஸர் கிம்புருஷர் முதலியவர்கள் தம் தந்தைகளான அம்மஹர்ஷிகளிடத்தினின்று வேதத்தை அத்யயனஞ் செய்தார்கள். ப்ரஹ்மதேவன் முதல் கிம்புருஷாதிகள் வரையிலுள்ள அவர்களுடைய ப்ரக்ருதிகள் ரஜஸ்ஸ-

ஸத்வம் தமஸ்ஸு என்னும் குணங்களினின்று உண்டா னவை. அந்த ப்ரக்ருதிகளைப்பற்றியே ப்ராணிகள் ஜாதி முதலிய பல பேதங்களை அடைகின்றன. அவற்றைப் பற்றியே அந்த ப்ராணிகளின் புத்திகளும் மாறுகின் றன. ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அவ்வவற்றின் ப்ரக்ரு திகளுக்குத் தகுந்தபடி வாக்குகள் விசித்ரமாகப் புறப் டுகின்றன. இங்ஙனம் ப்ராணிகளின் ப்ரக்ருதிகள் பலவாறுயிருக்கையால் அவற்றின் புத்திகளும் பலவாறு யிருக்கின்றன. தமோகுணத்தினின்றுண்டான ப்ரக்ரு தியுடைய சிலர் ஆதியந்த மில்லாத வேதத்தையுங்கூ டப் புருஷனால் இயற்றப்பட்டதென்றும், அதைப்பற்றி யே அந்த வேதத்தில் ப்ரமம் வஞ்சனை முதலியன இருக் கக் கூடுமாகையால் அது ப்ரமாணமன்றென்றும் நினைத் துத் தங்கள் ப்ரக்ருதியைத் தொடர்ந்த தம் புத்தியால் வேதார்த்தங்களுக்கு விருத்தமான சில பொருள்களை ஊஹித்து அவற்றை ப்ரபந்தமாக்கி வெளியிட, இப்பொ ழுதுங்கூடச் சில புருஷர்கள் அந்தப் பரம்பரையில் சேர்ந்து வேதவிருத்தமான அப்பொருள்களையே உண்மையென்று நினைத்துப் பாஷண்டிகளாய்த் திரி கின்றார்களல்லவா? புருஷஸ்ரேஷ்டனே! புருஷர் கள் என்னுடைய மாயையினால் மதிமயங்கித் தங் கள் கர்மத்திற்கும் ருசிக்கும் தகுந்தபடி புருஷார்த் தங்களைப் பலவாறு கூறுகிறார்கள். சிலர் ஸ்வர்க்காதி ஸுகங்களை அனுபவிக்கையே புருஷார்த்தமென்றும், யாகதானஹோமாதிரூபமான தர்மமே அதற்கு உபா யமென்றும் சொல்லுகிறார்கள். வேறு சிலர் ஸ்வர்க் காதி ஸுகத்தையே புருஷார்த்தமாக ஒப்புக்கொண்டு காவ்யநாடகாலங்காரங்களை இயற்றுவதாலுண்டான புகழே அதற்கு ஸாதனமென்று சொல்லுகிறார்கள்.

காமசாஸ்த்ரங்களை இயற்றினவர்கள் காமமே புருஷார்த்தமென்றும் அதற்குப் பல உபாயங்கள் உண்டென்றும் சொல்லுகிறார்கள். சிலர் ஆத்மஸ்வரூபத்தை அநுபவிக்கையாகிற கைவல்யமே புருஷார்த்தமென்றும், அதற்கு ஸத்யம் தமம் சமம் இவை உபாயமென்றும் சொல்லுகிறார்கள். நீதிசாஸ்த்ரமறிந்தவர்கள் ஐஸ்வர்யமே புருஷார்த்தமென்றும், ஸாம தானாதிகள் அதற்கு உபாயமென்றும் சொல்லுகிறார்கள். சிலர் விபவத்துடன் புஜிக்கையே புருஷார்த்தமென்றும் அதற்குப் பணமே உபாயமென்றும் சொல்லுகிறார்கள். சிலர் யஜ்ஞம் தவம் தானம் ஏகாதச்யுபவாஸம் முதலிய வ்ரதங்கள், சௌசம் ஆசமனம் முதலிய நியமங்கள், இந்த்ரிய நிக்ரஹம் முதலிய யமங்கள் ஆகிய இவை புருஷார்த்தஸாதனமென்று சொல்லுகிறார்கள். இந்த தர்மம் முதலிய உபாயங்களால் ஸாதிக்கப்படும் பலன்கள் கர்மத்தினால் ஸம்பாதிக்கப்படுமவையாகையால் அநித்யங்கள்; துக்கத்தை மேல்வரும் பலனாகவுடையவை; அஜ்ஞானத்தையே முடிவாகவுடையவை; அற்பமான ஆநந்தத்திற்கிடமாயிருப்பவை; அந்த ஆநந்தானுபவதசையிலும் துக்கத்துடன் கலந்திருப்பவை க்ருஷி முதலிய கர்மங்களால் ஸம்பாதிக்கப்படும் பலன்கள் அநித்யங்களா யிருப்பதுபோல் தர்மாதி கர்மங்களால் ஸாதிக்கப்படுகிற ஸ்வர்க்காதி பலன்களும் அநித்யங்களே; மோக்ஷஸுகம்போல் நிலைநின்றிருப்பவையன்று. தர்மாதி உபாயங்கள் க்ஷீணிக்கையில் ஸ்வர்க்காதிபலன்களை இழந்து வரவேண்டுமாகையால் கடைசியில் துக்கத்திற்கே இடமாயிருக்கும். அநுபவிக்குந்தசையிலும் 'நம்முடைய புண்யகர்மம் க்ஷீணிக்கையில் நாம் இதினின்று விழவேண்டுமல்லவா?'' என்பதை நினை

த்து பயப்பட்டுக்கொண்டே யிருக்கவேண்டுமாகையால் துக்கம் கலந்தேயிருக்கும். ஸபைக்குத் தகுந்தவனே! அளவற்ற நித்யாநந்தஸ்வரூபனாகிய என்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவனும் அற்பமான விஷய ஸுகங்களெல்லாவற்றிலும் விருப்பமற்றவனுமாகிய புருஷனுக்கு என்னை அநுபவிப்பதாலுண்டாகும் ஸுகம் அற்பமான விஷயஸுகங்களை விரும்புகிறவர்களுக்கு எங்கிருந்து உண்டாகும்? (மோக்ஷமாகிற புருஷார்த்தமும் அதற்கு ஸாதனமான பக்தியோகமும் மிகவும் ஸுகரூபமாயிருக்குமாகையால் தர்மாதி உபாயங்கள் அவற்றின் பலன்கள் ஆகிய அவற்றைக் காட்டிலும் மிகவும் சிறந்தவை. இவற்றிற்குள்ள தாரதம்யம் அளவற்றது. ஸாதனமான பக்தியோகமே மஹாநந்தமயமாயிருக்குமாயின் அதன் பலனான மோக்ஷம் மஹாநந்தமாயிருக்குமென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ?) நிரதிசயாநந்தஸ்வரூபனான என்னுடைய த்யானத்தினால் ஸந்தோஷமுற்ற மனமுடையவனும் எல்லாவற்றிலும் என்னுடைய பாவனை நடையாடப் பெறுகையால் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்ப்பவனும் என்னைத் தவிர ஆசைப்படத்தகுந்த வஸ்து மற்றொன்று மில்லாதவனும் வெளியிந்த்ரியங்களை வெல்லுகையாகிற தமம் உள்ளிந்த்ரியத்தை வெல்லுகையாகிற சமம் இவையுடையவனுமாகிய புருஷனுக்கு எல்லாத் திசைகளும் எல்லாக் காலங்களும் ஸுகமயமாயிருக்கும். என்னிடத்தில் மனம் செல்லப்பெற்றவன் என்னைத் தவிர மற்ற ப்ரஹ்மாதிபத்யத்தையாவது இந்த்ரபதவியையாவது பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாயிருக்கையாகிற ஸார்வபௌமபதத்தையாவது பாதாளைஸ்வர்யத்தையாவது அணிமாதியோகஸித்திகளையாவது,

ஆயிரஞ் சொல்லியென்? மோக்ஷத்தையாவது விரும்ப மாட்டான். (அவனுக்கு நான் ப்ரியனுயிருக்கிறேனென்பது மாத்ரமே அன்று; அவனும் எனக்கு மிகவும் அன்பனுயிருப்பான்.) உன்னைப் போன்ற ஞானிகள் எனக்கு அன்பிற்கிடமாயிருப்பதுபோல், ப்ரஹ்மதேவனுவது ருத்ரனுவது ஸங்கர்ஷணனுவது ஸ்ரீமஹாலக்ஷ்மியாவது என்னுடைய திவ்யமங்கள விக்ரஹமாவது எனக்கு அன்பிற்கிடமன்று. என்னையொழிந்த மற்ற விஷயங்களில் அபேக்ஷயற்றவனும் பரிசுத்தனும் இந்த்ரியங்களை அடக்கியாள்பவனும் எதிலும் வைரமில்லாதவனும் என்னுடைய பாவனையால் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையனுமாகிய என்பக்தனை நான் அவ்னுடைய பாததூளிகளால் புனிதனுகவேண்டுமென்னும் எண்ணத்துடன் எப்பொழுதும் தொடர்ந்து கொண்டே யிருப்பேன். என்னைத் தவிர ஆசைப்படத் தகுந்த வஸ்து மற்றொன்றில்லாதவர்களும் என்னிடத்திலேயே அனுராக முற்ற மனமுடையவர்களும் அந்தக்கரணத்தை அடக்கியாள்கையாகிற சாந்தியுடையவர்களும் ஸமஸ்த ஜீவாத்மாக்களிடத்திலும் என்னுடைய பாவனையால் வாத்ஸல்யமுடையவர்களுமாகிய பெரியோர்கள் காமங்களால் தீண்டப்படாத மதியுடையவர்களாகி என்னை அனுபவிக்கையாலுண்டான ஸுகத்தை அனுபவிக்கின்றூர்கள். நிஷ்காமர்களுக்கு (எதிலும் விருப்பமில்லாத மஹாயோகிகளுக்கு) நேரக்கூடிய மோக்ஷஸுகத்தையுங் கூட அவர்கள் அந்த ஸுகத்திற்கு ஈடாக நினைக்க மாட்டார்கள். என்னிடத்தில் பக்தியோகஞ் செய்யத் தொடங்கினவன், இந்த்ரியங்களெல்லாம் சப்தாதி விஷயங்களால் பாதிக்கப்படினும் தினந்தோறும் என்னிடத்தில் வளர்ந்துவரு

கின்ற பக்தியால் க்ரமத்தில் அவ்விஷயங்களை மறப்பானாகையால் அவற்றால் பரிபவிக்கப்பட மாட்டான். பக்தி வளர்ந்து வருமாயின் சப்தாதி விஷயங்களைப்பற்றின நினைவு தலையெடுக்க வொட்டாதபடி அதை அடக்கி விடும். இந்த பக்தியோகம் வளர்ந்து வருவதற்குத் தடையான பாபம் இருக்குமாயின் அது எப்படி வளர்ந்து வருமென்றால், சொல்லுகிறேன்; கேள். உத்தவனே! அக்னி சிறிதாயினும் கட்டைகளில் பற்றவிடப் பெற்று க்ரமமாக வளர்ந்து ஜ்வாலைகளுடன் கூடிக் கட்டைகளை எரித்து பஸ்மம் செய்வதுபோல், என்னிடத்தில் விளையும் பக்தியும் தான் வளர்வதற்குத் தடையான பாபங்களை யெல்லாம் போக்கி நாள்தோறும் வளர்ந்து வரும். உத்தவனே! வளர்ந்த பக்தியோகம் என்னை வசீகரிப்பதுபோல் தர்மம் ஜ்ஞானயோகம் கர்மயோகம் வேதாத்யயனம் தவம் தானம் ஆகிய இவற்றில் எதுவும் என்னை வசீகரிக்க வல்லதன்று. (அன்றியே இவையெல்லாம் ஒன்று சேர்ந்தாலும் பக்தியோகம்போல் என்னை வசீகரிக்கவல்லவையாகமட்டா. ஸர்வாந்தராத்மாவும் ஸத்புருஷர்களுக்கு அன்பிற்கிடமுமான நான் ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் இடைவிடாமல் ஒருவாறாகச் செய்கிற பக்தியோகத்தினால் உள்ளபடி அறியத்தகுந்தவனாவேன். (பக்தியோகம் என்னை வசப்படுத்துவதுந் தவிர என் ஸ்வரூபவஸ்வபாவங்களை உள்ளபடி அறிவதற்கும் காரணமாம்). என்னிடத்தில் விளையும் பக்தி சண்டாளர்களையும் ஜாதிதோஷத்தினின்று புனிதமாக்கும். தர்மம் ஸத்யம் தயை வித்யை தவம் இவை அமைந்திருப்பினும் என்னிடத்தில் பக்தி யற்றிருப்பானாயின், அவன் தன்னை நன்றாகப் புனிதஞ் செய்துகொள்ளவல்லனாகமாட்டான். பகவா

னுடைய திவ்யமங்கலவிக்ரஹத்யானத்தினால் மயிர்க்கூச்சம் மனஉருக்கம் கண்களில் ஆநந்தநீர் இவை உண்டாகமாட்டாவாயின், பக்தியோகம் எங்ஙனம் கைகூடினதாம்? பக்தியோகம் கைகூடாதாயின், அந்தக்கரணம் எப்படி சுத்தமாம்? வாக்கு தழுதழுக்கை, மனம் உருகுகை, ஒருகால் ரோதனஞ் செய்கை, அடிக்கடி சிரிக்கை, ஒருகால் வெட்கமின்றி உரக்கப் பாடுகை, ஒருகால் கூத்தாடுகை ஆகிய இவை எவனிடத்தில் இருக்கின்றனவோ, அவனே என்னிடத்தில் பக்தியுடையவனாவான். அவன் தன்னுடைய காட்சி முதலியவைகளால் ஜகத்தையெல்லாம் புனிதஞ் செய்கின்றான். நெருப்பில் காய்ச்சின பொன் அழுக்கைத் துறந்து நிர்மலமாயிருக்கையாகிற தன்னுருவத்தைப் பெறுவதுபோல், ஜீவாத்மாவும் என்னிடத்தில் பக்தியோகத்தினால் ஜ்ஞானத்தை மறைப்பதாகிய அனுசயகர்மத்தைத் துறந்து அப்பால் என்னை அடைந்து தன்ஸ்வரூபத்தையும் பெறுகின்றான். இந்த ஜீவன், என்னுடைய புண்யகதைகளை உட்கொண்ட பாட்டுக்களைக் கேட்கக்கேட்கவும் அவற்றைப் பாடப்பாடவும் கர்மங்களை உதறிப் பரிசுத்தனாவான். அங்ஙனம் பரிசுத்தனாகவாக, ரோகாதிகளால் தோஷமுற்ற கண் மெய்யிடுவதனால் தோஷம் நீங்கி உருவங்களை அறியவல்லதாவதுபோல் ப்ரக்ருதியைக்காட்டிலும் ஸூக்ஷ்மனான ஜீவாத்மாவைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான பரமாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவான். சப்தாதிவிஷயங்களையே நினைத்துக் கொண்டிருப்பானாயின், மனம் அவற்றிலேயே மழுங்கிப் போவதுபோல், என்னுடைய குணங்களைக் கேட்பது அவற்றைப் பாடுவது முதலியவற்றால் என்னையே நினைத்துக் கொண்டிருப்பானாயின், மனம் என்னிடத்திலேயே

நிலைபெறும். ஆகையால் ஸ்வப்னம்போலும் மனோரதம்போலும் நிலையற்றதான சப்தாதிவிஷயங்களின் நினைவைத் துறந்து என்னையே பாவித்துக்கொண்டு மனத்தை என்னிடத்திலேயே நன்கு நிலைபெறச் செய்வாயாக. மெல்லமெல்ல இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு ஸ்த்ரீகளின் ஸஹவாஸத்தையும் அவர்களோடு ஸஹவாஸமுடையவர்களுடைய ஸஹவாஸத்தையும் வெகுதூரத்தில் துறந்து ஜனஸஞ்சாரமின்றி நிர்ப்பயமுமான இடத்தில் உட்கார்ந்து சோம்பலில்லாமல் என்னைச் சிந்திக்கவேண்டும். புருஷனுக்கு ஸ்த்ரீகளிடத்தில் பற்று செய்வதனாலும் அவர்களிடத்தில் பற்றுடையவர்களோடு ஸஹவாஸத்தினாலும் எவ்வளவு பந்தமும் வருத்தமும் உண்டாகுமோ, அவ்வளவு பந்தமும் அவ்வளவு வருத்தமும் மற்ற விஷயங்களில் பற்று செய்வதனால் உண்டாகாது. ஆகையால் அவற்றை அவஶ்யமாய்த் துறக்கவேண்டும்.

உத்தவர் சொல்லுகிறார்:—தாமரைக்கண்ணனே! உன்னுடைய த்யானத்தின் அங்கங்கள் எவையோ, மோக்ஷத்தில் இச்சையுடையவன் உன்னை எத்தகைய திவ்யமங்கள விக்ரஹத்துடன் த்யானிக்கவேண்டுமோ, உன்னுடைய திவ்யாத்மஸ்வரூபம் எத்தகையதோ, இவையெல்லாவற்றோடுங்கூடிய த்யானத்தை எனக்கு விசதமாய்ச் சொல்லவேண்டும்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மேடுபள்ளமில்லாத ஸமமான இடத்தில் பரப்பின ஆஸனத்தில் ஸுகமாக உட்கார்ந்து சரீரத்தை நேராக நிறுத்திக் கைகளை மடியில் வைத்துக் கண்களை மூக்கு நுனியில் நிறுத்திப் பூரகம் ரேசகம் கும்பகம் என்னும் க்ரமத்திலாவது

ரேசகம் பூரகம் கும்பகம் என்னும் க்ரமத்திலாவது ப்ராணவாயுவின் ஸஞ்சாரமார்க்கமாகிய இடை பிங்களை யென்னும் நாடிகளின் த்வாரங்களைச் சுத்தி செய்ய வேண்டும். இந்த்ரியங்களை வேறு விஷயங்களில் போக வொட்டாமல் அடக்கிக்கொண்டு மெல்லமெல்ல ப்ராணாயாமங்களை அப்யஸிக்கவேண்டும். ஓங்காரம் ஹ்ருதயத்தில் தாமரைத்தண்டின் நூல்போல் ஸூக்ஷ்மமான ஓயாத நாதத்துடன் இருப்பதாகவும், அந்த ஓங்காரம் ப்ராணவாயுவினால் மேல் கிளம்பினதாகவும், மீளவும் அது ஹ்ருதயத்தில் அடங்கினதாகவும் த்யானிக்கவேண்டும். இங்ஙனம் ப்ரணவானுஸந்தானத்துடன் மூன்று ஸந்த்யைகளிலும் பத்துத்தடவைகள் ப்ராணாயாமங்களை அப்யஸிப்பானாயின், ஒருமாதத்திற்குள் ப்ராணவாயுவை வென்றவனாவான். சரீரத்திற்குள் ஹ்ருதயகமலம் காம்பு மேலாக அதோமுகமாய் மூடிக்கொண்டு தொங்குகின்றது. அது மலர்ந்து எட்டு இதழ்களோடும் காயோடும் காம்பு கீழாய் முகம் மேலானதாகவும், அதில் காயின்மேல் ஸூர்யமண்டலம் சந்த்ரமண்டலம் அக்னிமண்டலம் இவைகள் ஒன்றின்மேல் ஒன்றாயிருப்பதாகவும் த்யானிக்க வேண்டும். அந்த அக்னிமண்டலத்தினிடையில் த்யானத்திற்கு அனுகூலமான மேல் சொல்லுகிற என்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானிக்கவேண்டும். என்னுடைய திவ்யமங்களவிக்ரஹம் கறுப்பு நிறமுடையது. அனுக்ரஹம் வடிவில் தோற்றும். ஆகையால் ப்ரஸன்னமாயிருக்கும். மற்றும், அழகிய முகமும் நீண்டழகிய நான்கு புஜங்களும் மிகவும் அழகியவற்றிலும் அழகிய கழுத்தும் அழகிய கபோலங்களும் அழகிய வெண்முறுவலும் அமைந்து ஒன்றோடொன்று ஒத்திருப்பவைகளான கர்

ணபாசங்களில் திகழ்கின்ற மகரகுண்டலங்கள் இடம் பெற்றுப் பீதாம்பரம் உடுத்து மேகம்போல் கறுத்து ஸ்ரீவத்ஸம் ஸ்ரீமஹாலக்ஷ்மி இவைகளுக்கு இருப்பிடமாகிச் சங்கம் சக்ரம் கதை பத்மம் வனமாலை இவைகளால் அலங்காரமுற்றுச் சிலம்பு தண்டைகளால் திகழ்கின்ற பாதங்களையுடையதும் கௌஸ்துப மணியின் ஒளியோடு கூடியதும் பேரொளியுடன் விளங்குகின்ற கிரீடம் கைவளை அரைநாண்மாலை தோள்வளை இவைகள் அணிந்திருப்பதுமாகி ஸர்வாங்கஸுந்தரமும் ஹ்ருதயத்திற்கு இனியதுமாயிருக்கும். மற்றும், திருமுகமும் திருக்கண்களும் அருள் வெள்ளமிட்டிருக்கையால் மிகவும் அழகாயிருக்கும்; மற்றும், அதிஸுகுமாரமாயிருக்கும் இத்தகையதான அந்த திவ்யமங்களவிக்ரஹத்தைப் பாதம் முதல் சிரஸ்ஸுவரையில் ஸமஸ்த அங்கங்களிலும் மனத்தை ஊன்ற வைத்துக்கொண்டு த்யானஞ் செய்யவேண்டும். இந்த்ரியங்களைச் சப்தாதி விஷயங்களினின்றும் மனத்தினால் இழுத்து ஸாரதியைப் போன்ற புத்தியினால் அந்த மனமாகிற குதிரையையும் ஸங்கல்பவிகல்பங்களாகிற கெட்டவழிகளில் போகவொட்டாமல் தடுத்து தைர்யத்துடன் எப்பொழுதும் என்னிடத்தில் நிலைபெறச் செய்யவேண்டும். திருப்பாதம் முதல் திருமுடிவரையிலுள்ள எல்லா அங்கங்களிலும் நிறைந்திருக்கிற அந்த மனத்தை இழுத்து ஓரே அங்கத்தில் நிலைபெறச் செய்யவேண்டும். மற்ற அங்கங்களைச் சிந்திக்கலாகாது. அழகிய புன்னகை அமைந்த திருமுகமண்டலத்தையே த்யானிக்கவேண்டும். வேறு விஷயங்களில் போகவொட்டாமல் தடுக்கப்பெற்று அந்தத் திருமுகமண்டலத்தில் நிலைநின்றிருக்கிற மனத்தை அதினின்றும் இழுத்து ஆகாயம்போல் நிர்மலமாயிரும்

யதும் அளவற்றதும் தோஷங்கள் தீண்டப் பெறுத தும் கல்யாண குணங்களெல்லாம் நிறைந்திருப்பதும் மாகிய திவ்யாத்மஸ்வரூபத்தில் நிறுத்தவேண்டும். என்னுடைய ஸ்வரூபரூபங்களை அனுஸந்திப்பதில் நிலை நின்று த்யானஞ் செய்கிற தன்னையாவது த்யானத் தையாவது மற்ற எதையும் சிந்திக்கலாகாது. முதலில் என்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்தை த்யானிக்கும் பொழுது ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் அந்தராத்மா வான என்னிடத்தில் ஜீவாத்மஸ்வரூபத்தையும், ஸூர் யாதிகளின் ஒளி தீபம் முதலியவற்றின் ஒளியில் கலந் திருப்பதுபோல், ஜீவாத்மாவினிடத்தில் கலந்திருக்கிற என்னையும் த்யானிக்கவேண்டும். இங்ஙனம் த்யானிப் பானுயின் என்னிடத்தில் மனம் நிலைபெறப் பெறுவான். இங்ஙனம் இடையூறுகளால் தடைபடப் பெறுமல் தீவ ரமாய் வளர்ந்து வருகின்ற த்யானத்தினுல் என்னிடத் தில் மனத்தை நிலைப்படுத்துகிற யோகிக்கு தேஹாத்ம ப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ரமம் இவை விரைவில் அழிந்து போம். பதினுன்காவது அத்யாயம் முற்றிற்று.

---

பக்தியோகஞ்செய்யும் யோகிக்கு பகவத் ப்ராப்திவிரோதிகளான அணிமாதிஸித்தி கள் ஸித்திக்கும் விதத்தைக் கூறுதல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறுன்:— ப்ராணவாயுவை வென்று இந்த்ரியங்களை அடக்கி நிலைநின்ற மனமுடை யவனுகி என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துகின்ற யோகிக்கு அணிமாதி ஸித்திகள் உண்டாகின்றன. (ஆயினும் அவற்றில் மனப்பற்று செய்யலாகாது. அவை பகவத் ப்ராப்திக்கு விக்னங்களாம்.)

உத்தவர் சொல்லுகிறார்:—அச்சுதனே! எத்தகைய தாரணையினால் ஸித்திகள் உண்டாகின்றன? அந்த ஸித்திகள் யாவை? அவை உண்டாகும் விதம் யாது? நீ யோகிகளுக்கு ஸித்திகளைக் கொடுப்பவனாகையால் அவற்றின் ஸ்வரூபம் எத்தகையதோ அதெல்லாம் உனக்கு நன்றாகத் தெரியுமல்லவா? ஆகையால் அதையெல்லாம் எனக்கு விசதமாகச் சொல்லவேண்டும்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துகையாகிற தாரணையென்னும் யோகத்தின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்த பெரியோர்கள் ஸித்திகள் பதினெட்டென்று சொல்லுகிறார்கள். அவற்றில் எட்டு ஸித்திகள் என்னையே முக்யப்ரயோஜனமாகவுடையவை. மற்ற பத்து ஸித்திகளும் சப்தாதி விஷயங்களின் அனுபவத்தையே முக்யப்ரயோஜனமாகவுடையவை யாகையால் மீளவும் ஸம்ஸாரத்தில் மூட்டிவிடும். சரீரம் அணுவாயிருக்கப் பெறுகை அணிமையென்னும் ஸித்தி; ஸூக்ஷ்ம வஸ்துக்களில் ப்ரவேசிக்குந் திறமையாம். சரீரம் பெரிதாயிருக்கப்பெறுகை மஹிமையென்னும் ஸித்தி. சரீரம் லேசான வஸ்துக்களைக்காட்டிலும் லேசாயிருக்கை லகிமையென்னும் ஸித்தி. ஸமஸ்த ப்ராணிகளுடைய இந்த்ரியங்களிலும் நுழைந்து அவரவர் அனுபவிக்கும் விஷயங்களோடு ஸம்பந்திக்கை ப்ராப்தியென்னும் ஸித்தி. (அந்தந்த இந்த்ரியங்களின் அதிஷ்டானதேவதா ரூபத்தினால் அந்தந்த விஷயங்களோடு ஸம்பந்திக்கை ப்ராப்தியென்னும் ஸித்தியாமென்று சிலர் சொல்லுவார்கள்.) இஹலோகத்திலுள்ளவைகளும் பரலோகத்திலுள்ளவைகளுமான விஷயங்களைப் பற்றின வ்யாபாரங்களில் மேன்மையுற்றிருக்கை ப்ராகாம்யமென்னும் ஸித்தியாம். தன

க்கும் பிறர்க்கும் எல்லா விஷயங்களிலும் திறமையை உண்டாக்குகை ஈஶத்வமென்னும் ஸித்தியாம். சப்தாதிவிஷயங்களை அனுபவிக்கினும் அவற்றில் பற்றில்லாமை வசித்வமென்னும் ஸித்தியாம். எந்த ஸுகத்தில் விருப்பமெல்லாம் ஸமுத்ரத்தில் திவலைபோல் ஸ்வல்பமாய் முடிந்துவிடுகிறதோ, அத்தகைய ஆநந்தத்தை அனுபவிக்கை பரமாநந்த மென்னும் ஸித்தியாம். நல்லியற்கை யுடையவனே! இவ்வெட்டு ஸித்திகளும் என்னுடையவை; த்யானயோகம் கைகூடின யோகிக்கு ஸ்வபாவஸித்தங்களாயிருக்கும். எந்த தேஹத்தோடு யோகத்தை அப்யஸிக்கிறானோ அந்த தேஹத்தில் சுதை மடிப்பு நரைமயிர் பசிதாஹம் முதலியவை யில்லாமை, தூரத்திலுள்ள ஸமஸ்த ப்ராணிகளுடைய சப்தங்களையும் கேட்கை, தூரத்திலுள்ள ஸமஸ்த வஸ்துக்களையும் ஸாக்ஷாத்கரிக்கை, எங்குப் போக வேண்டுமென்று மனத்தில் நினைக்கிறானோ அவ்விடத்தில் அந்தக்ஷணமே தேஹத்தினால் போயிருக்கை, நினைத்தபடி உருவங்களை ஏற்றுக் கொள்கை, மரணமடைந்த பிறருடைய சரீரங்களில் ப்ரவேசிக்கை, நினைத்தபொழுது மரணம் அடைகை, அப்ஸர ஸ்த்ரீகளோடு தேவதைகள் அனுபவிக்கும் போகங்களைப் பெறுகை, நினைத்தபடி எல்லாம் ஸித்திக்கை, தன்னுடைய ஆஜ்ஞை எங்கும் தடைபடாதிருக்கை ஆகிய இவை பத்தும் குணஸித்திகளென்று கூறப்படும். மற்றும், வருங்காலம் நிகழ்காலம் கழிகாலம் ஆகிய மூன்று காலகதிகளையும் அறிகை, குளிர் வெயில் முதலிய த்வந்த்வங்களால் வருந்தாமை, பிறருடைய சித்தம் சேஷ்டை முதலியவற்றை நன்றாக அறிகை, அக்னி ஸூர்யன் ஜலம் விஷம் இவை முதலியவற்றை ஸ்தம்பனஞ் செய்கை, எங்கும்

தோல்வி யடையாமை இவைகளும் யோகதாரணத்தி ஞல் விளையும் ஸித்திகளென்று சொல்லுகிருர்கள். எந்த தாரணையால் எந்த ஸித்தி எப்படி உண்டாகு மோ அதையெல்லாம் விவரித்துச் சொல்லுகிறேன்: தெரிந்துகொள்வாயாக. பூத ஸூக்ஷ்மங்களைச் சரீர மாகவுடைய என்னிடத்தில் வேறு விஷயங்களைக் கணிசியாமல் அவ்வளவு மாத்ரத்தையே விஷயமா கக் கொண்டு மனத்தை நிலைநிறுத்துவானுயின், என் னுடைய சரீரமாகிய பூதஸூக்ஷ்மங்களை உபாஸிக்கிற அவன் அணிமையென்னும் ஸித்தியைப் பெறுவான். மஹத்தத்வத்தைச் சரீரமாகவுடைய பரமாத்மாவான என்னிடத்தில் வேறு விஷயங்களில் செல்லாதபடி மனத்தை நிலைநிறுத்துவானுயின், அவன் ஆகாசம் முதலிய பூதங்களுக்குத் தனித்தனியே உள்ள மஹி மையைப் பெறுவான். பூதங்களின் ஸூக்ஷ்ம அவ யவங்களில் வியாபித்திருக்கிற என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி நான ஸூக்ஷ்மகாலஸ்வரூபனுயிருக்கும் நிலைமையை த்யானிப்பானுயின், அவன் லேசான வஸ் துக்களைக் காட்டிலும் லேசாயிருக்கையாகிற அணிமை யென்னும் ஸித்தியைப் பெறுவான். வைகாரிகமென் னும் அஹங்காரத்தைச் சரீரமாகவுடைய என்னிடத் தில் மனத்தை நன்கு நிலைநிறுத்தவானுயின், ஸமஸ்த ப்ராணிகளுடைய இந்த்ரியங்களிலும் அதிஷ்டானஞ் செய்து அவரவர் அனுபவிக்கும் விஷயங்களை அனுப விக்கையாகிற ப்ராப்தியென்னும் ஸித்தியைப் பெறு வான். மணிகளுக்குச் சரடு ஆதாரமாயிருப்பது போல் ஸமஸ்த கார்யங்களுக்கும் ஆதாரமாயிருப்பதும் ப்ரக்ரு தியின் கார்யமுமாகிய மஹத்தத்வத்தைச் சரீரமாக வுடைய என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துவானு

யின் ஸமஸ்த வியாபாரங்களுக்கும் உரிய அறிவும் அவற்றிற்குரிய திறமையும் அமைந்திருக்கையாகிற ப்ராகாச்ய மென்னும் ஸித்தியைப் பெறுவான். ஸர்வ வியாபகனும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களென்கிற மூன்றுவியாபாரங்களுக்கு நிர்வாஹகனும் காலத்தைச் சரீரமாகவுடையவனுமாகிய என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துவானாயின், ஸமஸ்த தேஹங்களையும் ஸமஸ்த ஆத்மாக்களையும நூண்டுந திறமையாகிற ஈஶத்வமென்னும் ஸித்தியைப் பெறுவான். ஜாகர ஸ்வப்ன ஸுஷுப்திகளென்னும் மூன்று அவஸ்தைகளைக் கடந்திருக்கையால் துரீயமென்று கூறப்படுகிற பரிசுத்த ஜீவாத்ம ஸ்வரூபத்தைச் சரீரமாகவுடையவனும் ஜீவாத்மாக்களுக்கு பரர்ப்யனும் ப்ராபகனும் ஆதாரனுமாகையால் நாராயணனென்று பேர்பெற்றவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துவானாயின் என்னோடொத்த தர்மமுடையவனாகிச் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கினும் அவற்றில் மனம் பற்றாமையாகிற வசிதவமென்னும் ஸித்தியைப் பெறுவான். கெட்ட குணங்களெவையும் தீண்டப் பெறாதவனும் கல்யாண குணங்களின் பெருமையால் ப்ரஹ்மமென்று பேர்பெற்றவனுமாகிய என்னிடத்தில் பரிசுத்தமான மனத்தை நிலைநிறுத்துவானாயின் விருப்பங்களெல்லாம் முடியும்படியான பரமாநந்தமென்னும் ஸித்தியைப் பெறுவான். (சப்தாதி விஷயங்களையே முக்ய ப்ரயோஜனமாகவுடைய குணஸித்திகளையும் அவற்றிற்கு ஸாதனமான யோகதாரணைகளையும் சொல்லுகிறேன்; கேட்பாயாக.) சுத்தஸத்வ ஸ்வரூபனும் தர்மநிர்வாஹகனுகையால் தர்மமயனும் ஶ்வேதத்வீபத்திற்கு ப்ரபுவுமாகிய என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துவானாகு

பின், பசி தாஹம் முதலிய அறுவகையான ஊர்மி களினின்று விடுபட்டு ஸ்வேதரூபத்தைப் பெறுவான். ஆகாசம்போல் நிர்மலமும் எங்கும் நிறைந்திருப்பது மான ஸ்வரூபத்தை யுடையவனும் ப்ராணவாயுவைச் சரீரமாகவுடையவனுமாகிய என்னிடத்தில் மனத்தினால் ப்ராணகோஷத்தைச் சிந்திப்பானாயின், வெகுதூரத்தி லுள்ள ப்ராணிகளுடைய பேச்சுக்களும் ஸ்பஷ்டமாகச் செவிப்படப் பெறுவான். (இது தூரஸ்ரவணமென்னும் ஸித்தியாம்). சக்ஷுரிந்த்ரியத்திற்கு அதிஷ்டாதாவான ஸூர்யனிடத்தில் சக்ஷுஸ்ஸையும், சக்ஷுஸ்ஸில் ஸூர்யனையும் ஸம்பந்தித்திருப்பதாக த்யானித்து அவ் விரண்டு ஸம்யோகத்திலும் என்னை மனத்தினால் த்யா னிப்பானாயின், ஸூக்ஷ்மதர்சனமுடையவனாகி தூரத் திலுள்ள எல்லாவற்றையும் எதிரில் இருப்பதுபோல் காண்பான். (இது தூரதர்சனமென்னும் ஸித்தியாம்.) மனஸ்ஸு என்னிடத்தில் ஸம்பந்தித்திருப்பதாகவும், பிறகு தேஹம் ப்ராணவாயுவோடு ஸம்பந்தித்திருப்பதா கவும் த்யானிப்பானாயின், இவனுடைய மனம் எங்குச் செல்லுகிறதோ, அவ்வளவில் அங்கு இவனுடைய தேஹ மும் அதிவேகத்தினால் செல்லும். (இது மனோவேகமென் னும் ஸித்தியாம்) மனத்தை என்னிடத்தில் நிலைநிறு த்தி என்னையே த்யானித்துக்கொண்டு வருவானாயின், அந்த யோகபலத்தினால் இவன் எந்தெந்த உருவத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று விரும்புகிறானோ, அந் தந்த உருவத்தைப் பெறுவான். (இது காமரூபமென் னும் ஸித்தியாம்). யோகஸித்தியுடையவன் பிறனு டைய சரீரத்தில் ப்ரவேசிக்கவேண்டுமென்று விரும்பு வானாயின், அந்தச் சரீரத்தில் தானிருப்பதாக த்யா னிக்கவேண்டும். பிறகு தன்தேஹத்தை விட்டு இந்த்

ந்ரியங்களோடும் முக்ய ப்ராணவாயுவோடும் கிளம்பி வாயு மூக்குரந்த்ரத்தினுல் உள்ளே நுழைவதுபோலவும், வண்டு ஒரு புஷ்பத்தினின்று மற்றொரு புஷ்பத்திற்குப் போவதுபோலவும், பிறனுடைய சரீரத்தில் அனுயாஸமாக ப்ரவேசிப்பான். (இது பரகாயப்ரவேசமென்னும் ஸித்தி). யோகஸித்தியுடையவன் மரணம் அடைய விரும்புவானுயின், குதிகாலால் மூலாதாரத்தை அழுத்தி ப்ராணவாயுவை ஹ்ருதயம் மார்பு கண்டம் சிரஸ்ஸு ஆகிய இந்த ஸ்தானங்களில் க்ரமமாக மேலேறச் செய்து ப்ரஹ்மரந்த்ரத்தினுல் பரப்ரஹ்மத்தை அடைந்து தேஹத்தைத் துறப்பான். (இது ஸ்வச்சந்தமரண மென்னும் ஸித்தி.) தேவோத்யானம் முதலிய இடத்தில் விளையாடவிரும்புவானுயின், என்னுடைய சரீரமாகையால் என்னிடத்தில் இருக்கின்ற ஸத்வத்தை த்யானிக்கவேண்டும். அங்ஙனம் சுத்தஸத்வத்தில் நிலைநின்ற மனமுடைய அன்னவனுக்கு எதிரில் தெய்வ மடந்தையர்கள் விமானத்துடன் வந்து நிற்பார்கள். (இது க்ரீடானுதர்சனமென்னும் ஸித்தியாம்). யோகஸித்தன் எப்பொழுது எவ்விதமாகப் புத்தியினுல் ஸங்கல்பிக்கிருனே, அப்பொழுது ஸத்யஸங்கல்பனுகிய என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துவானுயின், அப்பொழுது அவ்விதமாகவே தான் ஸங்கல்பித்தது நிறைவேறப் பெறுவான். ஸர்வநியாமகனும் ஸ்வதந்த்ரனுமாகிய என்னுடைய தன்மையாகிய வசித்வாதி குணங்களை அடைந்த யோகஸித்தன் அவ்வசித்வாதி குணங்களையுடைய என்னை த்யானிப்பானுயின், எங்கும் தடைபட மாட்டான். அவனுடைய ஆஜ்ஞையும் கதியும் என்னுடைய ஆஜ்ஞைபோலவும் கதிபோலவும் எங்கும் தடைபடா. என்னிடத்தில் பக்தி விளையப்பெறுகை

யால் பரிசுத்தமான மனமுடையவனும் என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துகையாகிற தாரணையை அறிந்தவனுமாகிய யோகஸித்தனுக்கு என்னிடத்தில் விளையும் பக்தியினுடைய மஹிமையினால் மூன்று காலங்களிலுமுள்ள வஸ்துக்களைப் பற்றின அறிவும் அவற்றின் ஜன்ம மரணங்களைப் பற்றின அறிவும் உண்டாகின்றன. என்னையே த்யானிக்குந் தன்மையனான யோகஸித்தனுடைய சரீரம் பக்தியோகமயமாகையால் அது அக்னி முதலியவைகளால் எவ்விதமான கெடுதியையும் அடையாது. பின்னையோவென்றால், அவ்வக்னி முதலியவைகளே அவனுடைய சரீரஸம்பந்தத்தினால் தம்முடைய சக்திகள் தடைபடப்பெறும். ஏனென்றால், அவன் என்னிடத்தில் பக்தியோகம் செய்கையால் சாந்தமான மனமுடையவன். ஆகையால் அவனுக்கு அவை எவ்விதமான கெடுதியையும் செய்யவல்லவையாகமாட்டா. ஜலஜந்துக்களுக்கு ஜலத்தினால் ஏதேனும் கெடுதி உண்டாகுமோ? அங்ஙனமே இதுவுமென்றுணர்க. ஸ்ரீவத்ஸம் அஸ்த்ரம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவைகளும் த்வஜம் குடை விசிறி முதலிய அடையாளங்களுடையவைகளுமாகிய என்னுடைய அவதாரங்களையும் மற்றுமுள்ள முக்யமான விபூதிகளையும் த்யானஞ் செய்வானாயின், அவன் எங்கும் தோல்வி யடையாதிருப்பான். இங்ஙனம் சொல்லப்பட்ட யோகதாரணையால் என்னை உபாஸிக்கும் யோகிக்கு முன்சொன்ன ஸமஸ்த ஸித்திகளும் தானே உண்டாகும். [1] அந்தரிந்த்ரியமான மனத்தை வென்றவனும் வெளியிந்த்ரியங்களை அடக்கியாள்பவனும் ப்ராணவாயுவை ஜயித்தவனும் இடைவிடாமல் என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்துபவனுமாகிய முனிவ

1 உள்ளிந்த்ரியமான.

னுக்கு எந்த ஸித்திதான் கிடைக்க அரிதாகும்? என்னை உபாஸிக்கையாகிற உத்தமமான யோகத்தை அனுஷ்டிக்கின்ற யோகிக்கு ஸித்திகளெல்லாம் தானே உண்டாகின்றனவாயினும் அவற்றில் மனப்பற்று செய்ய லாகாது; ஏனென்றால், இந்த ஸித்திகளெல்லாம் யோகத்தைத் தடுத்து மீளவும் ஸம்ஸாரத்தில் மூட்டுமாகையால் விக்னங்களென்று சொல்லுகிறார்கள். எந்த உபாஸனையால் என்னை அடைய முயற்சி செய்கிறானோ, அத்தகைய உபாஸனத்திற்கு இவை காலவிலம்பத்தை விளைக்கும். சில ப்ராணிகளுக்குச் சில ஸித்திகள் பிறவியோடு கூடவே உண்டாகின்றன. தேவதைகளுக்குச் சில ஸித்திகள் தானே உண்டாகின்றனவல்லவா. மற்றும், மீன்களுக்கு ஜலஸ்தம்பனமும் பக்ஷிகளுக்கு ஆகாயத்தில் திரியுந்தன்மையும் உண்டாயிருக்கின்றனவல்லவா; சில ஸித்திகள் ஓஷதிகளாலும், சில ஸித்திகள் தவத்தினாலும், சில ஸித்திகள் மந்த்ரத்தினாலும் உண்டாகின்றன. இங்ஙனம் மந்த்ராதிகளால் உண்டாகக்கூடிய ஸித்திகள் எவ்வளவு உண்டோ, அவ்வளவு ஸித்திகளையும் யோகத்தினால் அடைகின்றான். ஆகையால் ஜன்மம் ஓஷதி தவம் மந்த்ரம் முதலிய மற்றவைகளால் யோகஸித்தியைக் கைவிடலாகாது. (தேவாதிஜன்மம் முதலியவை நேருமாயின், அப்பொழுது அந்தந்த ஸித்திகள் ஸுலபமாக நேரக்கூடியவைகளே யென்று அந்த தேவாதிஜன்மம் முதலியவற்றைப் பெறுவதற்கு யோகத்தை உபயோகிக்கலாகாது. ஸமர்த்தனாகிய நான் ஸமஸ்தஸித்திகளையும் கொடுப்பவனும் அவற்றிற்கு நிர்வாஹகனுமாயிருப்பவன். நான் ஸித்திகளுக்குமாத்ரமே இத்தகையனென்பதில்லை. பின்னையோவென்றால், கைவல்யமென்று சொல்லப்படு

கிற ஆத்மானுபவத்திற்கு ஸாதனமான ஆத்மோபாஸனமாகிற ஸாங்க்யத்திற்கும் என்னை அடைவதற்குக் காரணமான என்னுடைய உபாஸனமாகிற யோகத்திற்கும் ப்ரஹ்மவாதிகள் அனுஷ்டிக்கிற யஜ்ஞாதிரூபமான தர்மத்திற்கும் நானே ஹேதுவும் ப்ரவர்த்தகனும் சேஷியுமாயிருப்பவன். நான் ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவும் அந்தர்யாமியுமாயிருப்பவன். ஆத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிருக்கையினால் அளவுடையவனோவென்று சங்கிக்கலாகாது. உள்ளே வியாபித்திருப்பது போல் வெளியிலும் வியாபித்திருப்பவன். ஆகையால் எனக்கு எங்கும் மறைவு கிடையாது. ஆகாசம் முதலிய பூதங்கள் தேவமனுஷ்யாதி பூதங்களில் உள்ளும் புறமும் வியாபித்திருப்பது போல், நானும் ஸமஸ்த பூதங்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருப்பவன். பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## விபூதியோகத்தைக் கூறுதல்.

உத்தவர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணா! ஒன்றான பரப்ரஹ்மம் நீயே. ஆதியந்தமில்லாதவனாகையால் நீயே ஸர்வகாரணன். உனக்குக் கர்மமாகிற மறைவு கிடையாது. மற்றும், நீ உள்ளும் புறமும் வியாபித்திருப்பவன். ஆகையால் ஸமஸ்த பதார்த்தங்களுக்கும் மோக்ஷத்திற்கு வேண்டிய அறிவைக் கொடுத்து ஆத்மோஜ்ஜீவனத்தை விளைப்பவனும், ஸம்ஸாரத்தில் அவ்வவற்றிற்கு வேண்டிய அபேக்ஷிதங்களைக் கொடுத்து ரக்ஷிப்பவனும், துர்வாஸனையினால் விபரீதங்களைச் செய்து முடியப் பார்க்கிற ஆத்மாக்களுக்கு அந்த

விபரீதவாஸனை மாறவேண்டுமென்று ப்ரக்ருதியில் மறைத்து வைக்கையாகிற ப்ரளயத்தை நடத்துபவனும், அங்ஙனம் அநாதிகாலம் ப்ரக்ருதியில் மழுங்கி அஸத்கல்பராய்க் கிடக்கிற ஆத்மாக்கள் உஜ்ஜீவிக்க வேண்டுமென்னும் திருவுள்ளத்தினால் அவர்களுக்குக் கரண களேபரங்களைக் கொடுக்கையாகிற ஸ்ருஷ்டியைப் பண்ணுகிறவனும் நீயே (ஸமஸ்தப்ராணிகளுக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களும் மோக்ஷமும் உன்னிடத்தினின்றே உண்டாகின்றன.) மேன்மையும் தாழ்மையும் உள்ள ஸமஸ்த பூதங்களிலும் நீ அமைந்திருக்கின்றனை. ஆயினும் அத்தகைய உன்னை இந்த்ரியங்களை வெல்லமுடியாத மூடர்கள் வருந்தியும் அறியவல்லராக மாட்டார்கள். ஷாட்குண்ய பூர்ணனே! வேதாந்தங்களை அறிந்த பெரியோர்கள் உன்னை உள்ளபடி அறிந்து உபாஸிக்கிறார்கள். உன்னை எந்தெந்த வஸ்துக்களில் உபாஸித்தால் பக்தி வளரப்பெற்று யோக ஸித்தியைப் பெறுவார்களோ, அதை எனக்கு விவரித்துச் சொல்லவேண்டும். ஸமஸ்த ப்ராணிகளுடைய ஸத்தையும் உன்னதீனமாயிருக்கின்றது. நீ ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன். நீ ஸமஸ்த பூங்களிலும் தெரியாமல் மறைந்து வர்த்திக்கின்றனை. நீ எல்லாவற்றையும் ஒரே ஸமயத்தில் ஸாக்ஷாத்கரிக்கின்றனை. ப்ராணிகள் உன்னுடைய மாயையினால் மதிமயங்கி உன்னை அறிகிறதில்லை. (நீ மனுஷ்யர்களுக்குள் ஒரு மனுஷ்யன்போல் மறைந்து திரிகின்றனை. ஆகையால் சிலர் உன்னுடைய மாயையினால் மதிமயங்கி உன்னை அறிகிறதில்லை. இவ்வளவு மாத்ரத்தினால் நீ ஸாதாரண மனுஷ்யனாகமாட்டாய். உன்னுடைய பரமாத்மத்வம் இதனால் மாறாது.) அவ்வற்று

ஐஶ்வர்யமுடையவனே! பூமி ஆகாயம் பாதாளம் திசைகள் இவைகளில் உன்னுடைய அம்சத்தினால் மேன்மைபெறும்படி செய்யப்பட்ட உன் விபூதிகள் எவ்வளவு உண்டோ, அவற்றையெல்லாம் எனக்குச் சொல்ல வேண்டும். புண்யதீர்த்தங்களுக்கெல்லாம் இருப்பிடமான உன் பாதாரவிந்தங்களை வணங்குகிறேன். எனக்கு அருள் புரியவேண்டும்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—கேள்வி கேட்பவர்களில் சிறந்தவனே! குருக்ஷேத்ரத்தில் சத்ருக்களோடு யுத்தஞ் செய்ய விரும்புகிற அர்ஜுனன் இதே கேள்வியை இங்ஙனமே என்னைக் கேட்டான். அவன் இங்ஙனம் கேட்பதற்கு என்ன ப்ரஸக்தியென்றால் சொல்லுகிறேன்; கேள். அவன் யுத்தபூமியில் யுத்தத்திற்கு வந்திருப்பவர்களெல்லோரும் தனக்கு பந்துக்களும் பூஜ்யர்களுமாயிருப்பதையும் அவர்களைத் தான் வதிப்பது கேவல ராஜ்யத்திற்காகவே யாகையால் அது தர்மத்தினின்று நழுவினதென்பதையும் ஆனது பற்றியே நிந்தைக்கிடமென்றும் நினைத்து 'நான் அடிக்கிறவன், இவன் அடிபடுகிறவன்' என்னும் ப்ராக்ருத புத்தியுடையவனாகி அந்த யுத்தமுயற்சியினின்று மீண்டு நின்றான். அப்பொழுது நான் யுக்திகளால் அவனை அறிவுமூட்டித் திருத்த, அவன் யுத்தாரம்பத்தில் உன்னைப் போலவே 'பகவானே! உன் விபூதிகளை எனக்கு விவரித்துச் சொல்லவேண்டும்' என்று வினவினான். உத்தவனே! (அர்ஜுனனைப் போன்ற மதியுள்ளவன் மற்றொருவன் இல்லை. நீயும் அவனைப்போல் வினவினையாகையால் நீ கேள்வி கேட்பவர்களில் சிறந்தவனென்பதில் ஸந்தேஹமென்? உன்கேள்விக்கு நான் மிகவும் ஸந்தோஷம்

அடைந்து மறுமொழி கூறுகிறேன்; கேட்பாயாக). நான் இந்தப் பூதங்களுக்கெல்லாம் அந்தராத்மாவாயிருப்பவன். இவற்றிற்கு நண்பனும் ப்ரபுவும் நானே. ஆகையால் ஸமஸ்த பூதங்களும் நானே. இவற்றின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகிறவனும் நானே. சிறந்த கதியுடையவர்களுடைய கதியும் நானே. அனர்த்தங்களை விளைப்பவர்களுக்குள் காலன் நான். ஸத்வாதி குணங்களின் ஸாம்யாவஸ்தை நான். குணமுள்ள வஸ்துவின் குணங்களுக்குள் எது ஸ்வபாவஸித்தமான குணமோ அது நான். ஸத்வாதி குணங்கள் வெளித்தோன்றப் பெற்றவைகளுக்குள் முதன்மையான மஹத்தத்வம் நான். பெருமையுள்ள வஸ்துக்களின் பெருமை யென்னும் குணம் நானே. ஸூக்ஷ்ம வஸ்துக்களுக்குள் மிகவும் ஸூக்ஷ்மமான ஜீவாத்மா நான். வருந்தியும் வெல்ல முடியாதவைகளுக்குள் முதன்மையான மனம் நானே. தேவதைகளுக்குள் ப்ரஹ்மதேவன் நான். மந்த்ரங்களுக்குள் அகார உகார மகாரங்களென்னும் மூன்றக்ஷரங்களையுடைய ப்ரணவம் நான். அக்ஷரங்களுக்குள் அகாரம் நான. சந்தஸ்ஸுக்களுக்குள் காயத்ரியென்னும் சந்தஸ்ஸு நான். ஸமஸ்த தேவதைகளுக்குள் இந்த்ரன் நான். வஸுக்களுக்குள் ஹவ்யவாஹன் நான். ஆதித்யர்களுக்குள் நான விஷ்ணு. ருத்ரர்களுக்குள் நான் நீலலோஹிதன். ப்ரஹ்மரிஷிகளுக்குள் நான் ப்ருகு. ராஜரிஷிகளுக்குள் நான் ஸ்வாயம்புவமனு. தேவரிஷிகளுக்குள் நான் நாரதன. பசுக்களுக்குள் நான் காமதேனு. ஸித்தேஶ்வரர்களுக்குள் மிகவும் உபாஸிக்கத்தகுந்த கபிலன் நான். பக்ஷிகளுக்குள் சிறந்த கருடன் நான். நவப்ரஜாபதிகளுக்குள் தக்ஷன் நான். பித்ருக்களுக்குள் நான் அர்யமன். உத்

தவனே! அஸுரர்களுக்குள் ச்ரேஷ்டனுகிய ப்ரஹ்லாத
தன் நானேயென்றுணர்வாயாக. நக்ஷத்ரங்களுக்கும்
ஓஷதிகளுக்கும் ப்ரபுவாகிய ஸோமன் நான். யக்ஷரா
க்ஷஸர்களுக்குள் குபேரன் நான். கஜேந்த்ரங்களுக்
குள் ஐராவதம் நான். ஜலஜந்துக்களுக்கு ப்ரபுவாகிய
வருணன் நான். ஒளியுடன் விளங்கும் வஸ்துக்களுக்
குள் ஸூர்யன் நானேயென்றறி. மனுஷ்யர்களுக்குள்
மன்னவன் நான். குதிரைகளுக்குள் உச்சைச்ச்ரவஸ்
ஸென்னும் குதிரை நான். லோஹங்களுக்குள் ஸ்வர்
ணம் நான். தண்டனை செய்கிறவர்களுக்குள் ப்ரதான
னுன யமன் நான். ஒருதலைப் பாம்புகளில் தலைமையுள்ள
வாஸுகி நான். பலதலைப்பாம்புகளில் சிறந்த ஆதி
சேஷன் நான். க்ரூரம்ருகங்களுக்குள் ஸிம்ஹம் நான்.
ப்ரஹ்மசர்யாதி ஆச்ரமங்களுக்குள் ஸந்நியாஸாச்ரமம்
நான். தோஷமற்றவனே! ப்ராஹ்மணுதி வர்ணங்களுக்
குள் முதன்மையான ப்ராஹ்மணவர்ணம் நான். ப்ரவ
ஹிக்கும்படியான புண்யதீர்த்தங்களுக்குள் கங்கை
நான். தேங்கும் ஜலமுள்ள புண்யதீர்த்தங்களுக்குள்
ஸமுத்ரம் நான். ஆயுதங்களுக்குள் தனுஸ்ஸு நான்.
வில்லாளிகளுக்குள் த்ரிபுரஸம்ஹாரஞ்செய்த ருத்ரன்
நான். வாஸஸ்தானங்களுக்குள் சிறந்த மேருபர்வதம்
நான். ப்ரவேசிக்கமுடியாத இடங்களுக்குள் சிறந்த
ஹிமவத்பர்வதம் நான். மரங்களுக்குள் நான் அரச
மரம். ஓஷதிகளுக்குள் நான் யவம். புரோஹிதர்க
ளுக்குள் சிறந்த வஸிஷ்டர் நான். வேதார்த்த நிஷ்
டர்களுக்குள் சிறந்த ப்ருஹஸ்பதி நான். ஸேனுபதி-
ளுக்குள் தேவஸேனுபதியாகிய ஸுப்ரஹ்மண்யன் நான்.
ஸன்மார்க்க ப்ரவர்த்தகர்களில் சிறந்த மஹானுபாவனு
கிய ப்ரஹ்மதேவன் நான். [illegible]ங்களுக்குள் சிறந்த

ப்ரஹ்மயஜ்ஞம் நான். வ்ரதங்களுக்குள் அஹிம்ஸை யென்னும் வ்ரதம் நான். சுத்தியை விளைக்கும் வஸ்துக்களுக்குள் காற்று அக்னி ஸூர்யன் ஜலம் ஆகாசம் ஆகிய இப்பஞ்சபூதஸ்வரூபனாகிய நானே மிகவும் சுசியானவன். எட்டு வகையான யோகங்களுக்குள் ஸமாதி யென்னும் யோகம் நான். ஜயிக்க விரும்புகிறவர்களுக்கு ஜயோபாயமாகிய ஆலோசனையென்னும் நீதி நான். விவேகம் முதலிய திறமைகளுக்குள் 'இது ஆத்மா' இது ஆத்மாவன்று' என்னும் விவேகத்தை விளைக்க வல்ல ஆன்வீக்ஷிகியென்னும் வித்யை நான். க்யாதி வாதஞ் செய்யுந் தார்க்கிகாதிகளுடைய விகல்பம் நான். ஸ்த்ரீகளுக்குள் ஸ்வாயம்புவ மனுவின் பார்யையாகிய சதரூபை நான். புருஷர்களுக்குள் நான் ஸ்வாயம்புவ மனு. முனிவர்களுக்குள் சிறப்புற்று பதர்யாஸ்ரமத்தில் வாஸஞ்செய்கிற நாராயணன் நானே. ஜிதேந்த்ரியர்களுக்குள் தலைமையுள்ள ஸனத்குமாரன் நான். தர்மங்களுக்குள் சிறந்த ஸந்யாஸ தர்மம் நான். க்ஷேமங்களுக்குள் சிறந்த ஆத்மஸ்வரூபானுஸந்தானமென்னும் க்ஷேமம் நான். குஹ்யங்களுக்குள் சிறந்த நல்வார்த்தையும் ஒன்றும் பேசாமையாகிற மௌனமும் நானே. 1 இரட்டைகளுக்குள் முதன்மையான ப்ரஹ்மதேவன் நான். ஊக்கந் தவறுதலில்லாதவைகளுக்குள் சிறந்த ஸம்வத்ஸரம் நான். ருதுக்களுக்குள் சைத்ர வைசாகங்கள் கூடிய வஸந்தருது நான். மாதங்களுக்குள் 2 மார்க்கசீர்ஷமாதம் நான். நக்ஷத்ரங்களுககுள்

1 இரட்டை-ஆணும் பெண்ணுமான மிதுனம். இந்த ப்ரஜாபதியினுடைய தேஹம் இரண்டு பிரிவாகப் பிரிய, அவற்றினின்று ஆணும பெண்ணுமான மிதுனம் உண்டாயிற்றாகையால் அவனே முக்யமான மிதுனமென்[illegible]ட்டான். 2 மார்கழிமாதம்.

அபிஜித்தென்கிற நக்ஷத்ரம் நான். யுகங்களுக்குள் நான் க்ருதயுகம். ஸுகதுக்காதிகளைப் பொறுக்குந் தீரர்களுக்குள் சிறந்த அஸிதரும் தேவலரும் நான். வேதங்களைப்பிரித்தவர்களுக்குள் சிறந்த வ்யாஸர் நான். தீர்க்கதர்சிகளுக்குள் ஸூக்ஷ்மபுத்தியுடைய சுக்ராசார்யன் நான். ஜ்ஞாநாதிகுணங்களுடையவர்களுக்குள் நான் வாஸுதேவன். பகவத்பக்தர்களுக்குள் சிறந்த உத்தவனென்னும் பெயருடைய நீ நானே. கிம்புருஷர்களுக்குள் நான் ஹநுமான். வித்யாதரர்களுக்குள் நான் ஸுதர்சனன். ரத்னங்களுக்குள் நான் பத்மராகம். அழகிய வஸ்துக்களுக்குள் நான் பத்மகோசம். த்ருண ஜாதிகளுக்குள் நான் குசம். புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸுக்களுக்குள் நான் பசுவின் நெய். பணம் ஸம்பாதிக்கும் முயற்சியுடையவர்களுக்கு நேருகிற பணம் முதலிய ஸம்பத்து நானே. சூதாடுகிறவர்கள் [1] சலஞ்செய்து நானே ஜயிப்பேனென்று நடத்தும் ஆக்ரஹம் நானே. பொறுமையுள்ளவர்களின் பொறுமை நானே. ஸத்வகுணம் தலையெடுத்தவர்களுடைய ஸத்வகுணம் நானே. இந்த்ரிய பலமுடையவர்களுடைய இந்த்ரிய பலமும் தாரணஸாமர்த்ய முடையவர்களுடைய தாரணஸாமர்த்யமும், சரீர பலமுடையவர்களுடைய சரீரபலமும் நானே. பாகவதர்கள் அநுஷ்டிக்கிற பாஞ்சராத்ர கர்மங்களெல்லாம் நானே. மத்ஸ்யாவதாரம் முதல் க்ருஷ்ணாவதாரம் வரையிலுள்ள ஒன்பது அவதாரங்களுக்கும் காரணமும் ஸர்வகாரணமுமான வாஸுதேவரென்கிற ஒரு மூர்த்தி உண்டு அம்மூர்த்தி நானே. கந்தர்வர்களுக்குள் நான் விஸ்வாவஸு. அப்ஸர மடந்தையர்களுக்குள் பூர்வசித்தியென்னும் அப்ஸரமடந்தை நான்.

1 மோசம்.

பர்வதங்களுக்குள்ள அசையாமல் நிலைநின்றிருக்குந் தன்மை நான். பூமிக்குள்ள கந்தகுணம் நான். ஜலத்திற்குள்ள ஸர்வரஸகாரணமான ரஸமென்னும் குணம் நானே. தேஜிஷ்ட வஸ்துக்களில் சிறந்த அக்னியின் தேஜஸ்ஸு நானே. ஸூர்யன் சந்த்ரன் நக்ஷத்ரம் இவற்றின் ஒளியும் நானே. ஆகாசத்திற்கு அஸாதாரண குணமான சப்தமும் நானே. (ஆயிரஞ் சொல்லியென்? இந்த்ரியங்களுக்கு விஷயமானவைகளில் சிறந்தவை எவ்வெவையுண்டோ அவையெல்லாம் நானே.) ப்ராஹ்மண குலத்திற்கு நன்மை செய்பவர்களுக்குள் சிறந்த பலிசக்ரவர்த்தி நான். வீரர்களுக்குள் சிறந்த அர்ஜுனன் நான். பூதங்களுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களெல்லாம் நானே. பாதம் வாக்கு பாயு பாணி உபஸ்தங்களென்கிற ஐவகையான கர்மேந்திரியங்களின் வியாபாரங்களாகிய நடை பேச்சு மலோத்ஸர்க்கம் உபாதானம் ஆநந்தம் என்கிற இவை யைந்தும், உடல் கண் காக்கு காது மூக்கு என்கிற ஐவகையான ஜ்ஞானேந்திரியங்களின் வியாபாரங்களான ஊறல் பார்வை சுவை கேள்வி மோருதல் ஆகிய இவை யைந்தும் நானே. ஸமஸ்த இந்த்ரியங்களுக்கும் அந்தந்த சக்தியைக் கொடுத்து நடத்துகிறவன் நானே. பூமி வாயு ஆகாசம் ஜலம் தேஜஸ்ஸு என்னும் இப்பஞ்சபூதங்களும் நானே. மற்றும், அஹங்காரம் மஹத்து அஹங்காரத்தின் விக்ருதிகளாகிய பதினொரு இந்த்ரியங்கள் சேதன ஸமஷ்டி அசேதன ஸமஷ்டி அசேதனஸமஷ்டியின் குணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்கள் இவற்றை யெல்லாம் கடந்த மூக்தாத்மஸ்வரூபம் இவையெல்லாம் நானே. நான் இத்தத்வங்கள் மாத்ரமேயல்லேன்; இவற்றின் ஸங்க்யையும் இவற்றை லக்ஷணத்தின்படி அறிகையும் இவற்

றின் ஸ்வரூப ஸ்வபாவங்களை உள்ளபடி நிச்சயித்தறி கையும் நானே. ஸமஸ்த வஸ்துக்களுக்கும் உள்ளே புகுந்து நியமித்துக் கொண்டிருப்பவனும் ஜீவஸ்வரூபனும் ஸத்வாதிகுணஸ்வரூபனும் ஸமஷ்டி வியஷ்டி ரூபமாயும் ஸர்வகார்ய ஸ்வரூபமாயுமுள்ள அசேதனத்ரவ்ய ஸ்வரூபனுமாகிய என்னை யொழிய எங்கும் எந்த வஸ்துவுக்கும், ஸத்தையே கிடையாது. ஸர்வஜ்ஞனும் கால ஸ்வரூபனுமாகிய நான் பூமியிலுள்ள பரமாணுக்களை எண்ணினும் எண்ணுவேன்; கோடி கோடியாக அண்டங்களைப் படைக்கிற நான் அவ்வண்டங்களிலுள்ள என் விபூதிகளைக் கணக்கிட்டுச் சொல்லமுடியாது. (நான் படைத்த அண்டங்களுக்கே எண்ணிக்கை இல்லை. அவற்றிலுள்ள விபூதிகளை எங்ஙனம் எண்ணமுடியும்?) தேஜஸ்ஸு காந்தி கீர்த்தி ஐச்வர்யம் லஜ்ஜை த்யாகம் ஸௌந்தர்யம் பாக்யம் வீர்யம் பொறுமை வஸ்துக்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களை உள்ளபடி அறிகை திருமந்த்ரம் ஹிதாஹிதங்களை ஆராய்கை இவை யெல்லாமாவது இவற்றில் சிலவாவது ஏதேனுமொன்றாவது எவ்விடத்தில் இருக்கிறதோ அதுவெல்லாம் என்னுடைய அம்சமேயாம். இங்ஙனம் என்னுடைய விபூதிகளையெல்லாம் உனக்குச் சுருக்கமாகச் சொன்னேன். இப்பதார்த்தங்களெல்லாம் என்னுடைய ஸங்கல்ப மாத்ரத்தினால் உண்டானவை யென்று வேதங்கள் உள்ளபடி நிரூபித்துச் சொல்லுகின்றன. கெட்ட விஷயங்களைப் பேசுவதினின்று வாக்கையும், கெட்ட விஷயங்களை த்யானிப்பதினின்று மனத்தையும் அடக்குவாயாக. கெட்ட ஆஹாரங்களைத் துறந்து சுத்தமான ஆஹாரங்களை உட்கொள்வதனாலும் பூரகம் ரேசகம் கும்பகம் முதலிய உபாயங்களாலும் ப்ராணவாயுவையும் இந்த்ரியங்களையும் ஸ்வா

தீனப்படுத்த வேண்டும். அபாயங்களில் ப்ரவர்த்திக்க லாகாதென்னும் அத்யவஸாயத்துடன் தன்னைத் தானே அடக்க வேண்டும். இங்ஙனம் இவற்றையெல்லாம் அடக்கி விபூதிகளோடுகூடின என்னை உபாஸிப்பாயாயின், மீளவும் ஸம்ஸார மார்க்கத்திற்கு நீ ஆளாக மாட்டாய். எல்லாவற்றையும் துறந்த துறவியாயினும் வாக்கையும் மனத்தையும் புத்தியினால் நன்கு நியமித்துக்கொண்டு போகானாயின், அவன் செய்யும் வ்ரதத்வம் தானம் இவையெல்லாம் பச்சை மண் குடத்தில் எடுத்த ஜலம்போல் நழுவிப்போம். ஆகையால் என்னையே முக்யமாகப்பற்றி மனம் வாக்கு ப்ராணன் இவைகளை என்னிடத்தில் பக்தியோடு கூடிய புத்தியினால் அடக்குவானாயின், அவனுக்கு அதனால் மோக்ஷாபாயமெல்லாம் நிறைவேறினாற்போலவே. பதினொருவது அத்யாயம் முற்றிற்று.

---

வர்ணாஸ்ரம தர்மங்களை விவரித்துக் கூறுதல்.

உத்தவர் சொல்லுகிறார்:—இவ்வுலகத்திலுள்ள யாவரும் தங்கள் தங்கள் வர்ணங்களுக்கும் ஆஸ்ரமங்களுக்கும் உரிய தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு உன்னிடத்தில் பக்தி செய்கையாகிற தர்மத்தை அனுஷ்டிப்பார்களாயின் உன்னைப் பெறுவார்களென்று நீ மொழிந்தனை. தாமரைக் கண்ணனே! வர்ணங்களுக்கும் ஆஸ்ரமங்களுக்கும் ஏற்பட்ட தர்மங்கள் எவை. அவற்றை எப்படி அனுஷ்டித்தால் உன்னிடத்தில் பக்தி உண்டாகும்? அதையெல்லாம் எனக்குச் சொல்ல வேண்டும். மஹாபாஹுவே! ப்ரபூ! முன்பு நீ ஹம்ஸரூபியாய் ப்ரஹ்மதேவனுக்கும் ஸனகாதிகளுக்கும் மேலான தர்மத்தை உபதேசித்தனை. சத்ருக்களை

அழியப்பவனே! இப்பொழுதைக்கு நெடுங்காலமானமை யால் முன்பு நீ உபதேசித்த அந்த தர்மம் மனுஷ்ய லோகத்தில் பெரும்பாலும் வழங்கி வராமல் விச்சின்ன மாய்விட்டது. அச்சுதனே! ஆகையால் அந்த தர்மத்தை உபதேசிப்பவனும் அதை அனுஷ்டிப்பவனும் பாதுகாப்பவனும் உன்னை யொழிய மற்றொருவனும் இல்லை. எவ்விடத்தில் வித்யைகளெல்லாம் மூர்த்தீகரித்து விளங்குகின்றனவோ, அத்தகையப்ரஹ்ம ஸபையிலும் இந்த தர்மத்தை உபதேசிப்பவனாவது அனுஷ்டிப்பவனாவது காப்பவனாவது கிடையாது. மதுஸூதனனே! அனுஷ்டிக்கவும் பாதுகாக்கவும் உபதேசிக்கவும் வல்லவனாகிய நீ இப்பூமண்டலத்தை விட்டுப் போகையில் விச்சின்னமான இந்த தர்மத்தை எவன் உபதேசிக்கப் போகிறான்? எவனும் இல்லை. ஆகையால் நீயே உபதேசிக்கவேண்டும். ஸர்வதர்மங்களையும் அறிந்தவனே! ப்ரபு! அங்ஙனம் அனுஷ்டிக்கவும் பாதுகாக்கவும் உபதேசிக்கவும் வல்லவனாகிய நீ பக்தியோகமாகிற தர்மம் எவரெவர்க்கு எவ்வெப்படி ஏற்பட்டிருக்கின்றதோ அதை யெல்லாம் அப்படியே உபதேசிப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தன் பக்தர்களில் முக்யராகிய உத்தவரால் வினவப்பெற்ற அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவான் ஸந்தோஷம் அடைந்து மனுஷ்யர்களின் க்ஷேமத்திற்காக ஸனாதன தர்மங்களை உபதேசித்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—உத்தவனே! நீ கேட்ட கேள்வி ப்ராணிகளுக்கு ஹிதஞ்செய்கையாகிற தர்மத்தினின்று நழுவாதிருக்கின்றது. இ[illegible]ர

ரமதர்மங்களுக்குட்பட்ட மனுஷ்யர்களுக்கு மோக்ஷத்தை விளைக்கவல்லது. உத்தவனே! பக்தி யோகத்திற்கு உதவி செய்வதும் வர்ணாஶ்ரமங்களைத் தொடர்ந்திருப்பதுமாகிய அத்தர்மத்தைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. முன்பு க்ருதயுகத்தில் ஹம்ஸமென்று ஒரே வர்ணம் உண்டாயிருந்தது (க்ஷத்ரியாதி வர்ணங்கள் இல்லை.) அந்த ஹம்ஸ ஜாதியினால் மனுஷ்யர்களெல்லாரும் ப்ரயோஜனங்களெல்லாம் கைகூடப் பெற்றிருந்தார்களாகையால் க்ருதயுகமென்று பேராயிற்றென்று கூறுகிறார்கள். அப்பொழுது ப்ரணவம்மாத்ரமே வேதமாயிருந்தது. (ருக்யஜுஸ்ஸாமங்களென்கிற இம்மூன்று வேதங்களும் அப்பொழுதில்லை). தர்மமும் மனத்திற்கு விஷயமாகிய நானே வ்ருஷபத்தின் உருவந்தரித்து நான்கு பாதங்களுடன் இருந்தேன். அப்பொழுதுள்ள மனுஷ்யர்கள் கேவலம் த்யானயோகநிஷ்டர்களாகி எவ்வித தோஷமும் தீண்டப்பெறாமல் பரிசுத்தனாயிருக்கின்ற என்னை உபாஸித்து என்னைப்போலவே பரிசுத்தர்களாயிருந்தார்கள். ஆனதுபற்றியே அவர்களுக்கு ஹம்ஸர்களென்று பேராயிற்று. மிகுந்த மதியுடையவனே! பிறகு த்ரேதாயுகம் தொடங்குகையில் என் ஹ்ருதயத்திலுள்ள ப்ரணவத்தினின்றும் ருக்யஜுஸ்ஸாமங்களென்கிற மூன்று பிரிவினைகளையுடைய வேதவித்யை உண்டாயிற்று. அவ்வேதத்தினின்று ருக்யஜுஸ்ஸாமங்களென்கிற மூன்று வேதங்களின் மந்த்ரங்களும் அடங்கின யஜ்ஞஸ்வரூபனாகிய நான் உண்டானேன். பிறகு விராட்புருஷனுடைய முகம் பாஹு துடை பாதம் இவைகளினின்றும் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்ரர்களென்கிற நான்கு வர்ணத்தவர்களும் உண்டானார்கள். அவர்கள் தத்தமது வர்ணதர்மங்

களை அடையாளமாக வுடையவர்களாயிருந்தார்கள். ப்ரஹ்மதேவனைச் சரீரமாகவுடைய என்னுடைய பின் புறத்தினின்று க்ருஹஸ்தாஶ்ரமமும் ஹ்ருதயத்தினின்று ப்ரஹ்மசர்யாஶ்ரமமும் வக்ஷஸ்தலத்தினின்று வானப்ரஸ்தாஶ்ரமமும் சிரஸ்ஸினின்று ஸந்நியாஸாஶ்ரமமும் உண்டாயின. ப்ராஹ்மணாதிவர்ணங்களும் ப்ரஹ்மசர்யாதி ஆஶ்ரமங்களும் தத்தமது உத்பத்திஸ்தானங்களுடைய மேன்மை தாழ்மைகளுக்குரிய மேன்மைதாழ்மைகளை யுடையவைகளா யிருந்தன. உத்தம ஸ்தானங்களினின்றும் உண்டான வர்ணாஶ்ரமங்கள் உத்தமங்களும் அதமஸ்தானங்களினின்றும் உண்டான வர்ணாஶ்ரமங்கள் அதமங்களுமாயின. சமம் தமம் தவம் சௌசம் ஸந்தோஷம் பொறுமை ஆர்ஜவம் (நேர்மை) என்னிடத்தில் பக்தி தயை ஸத்யம் ஆகிய இவை ப்ராஹ்மண வர்ணத்திற்கு ஸ்வபாவஸித்தமான தர்மங்கள். (சமமாவது அனர்த்தங்களுக்கிடமான சப்தாதி விஷயங்களினின்று வெளியிந்த்ரியங்களை அடக்குகை. தமமாவது அந்தக்கரணத்தை அடக்குகை. தவமாவது போகங்களில் விருப்பத்தைத் துறந்து சாஸ்த்ரங்களில் சொல்லியபடி உபவாஸாதிகளால் சரீரத்தை ஒடுக்குகை. சௌசமாவது சாஸ்த்ரங்களில் விதித்தகர்மங்களை அனுஷ்டிப்பதற்கு உரியனாயிருக்கை. அதாவது ஸ்னானாதிகளால் சுத்தனாயிருக்கை. ஸந்தோஷமாவது தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு இது போதுமென்றிருக்கை. பொறுமையாவது பிறரால் பீடிக்கப் படினும் மனங்கலங்காதிருக்கை. ஆர்ஜவமாவது பிறரிடத்தில் மனமும் செய்கையும் ஒத்திருக்கை. தயையாவது பிறர் துக்கங்கண்டு வருந்துகை. ஸத்யமாவது ப்ராணிகளுக்கு ஹிதமாய்ப் பேசுகை.) தேஜஸ்ஸு பலம்

த்ருதி ஸௌர்யம் திதிக்ஷை ஔதார்யம் உத்யமம் ஸ்தைர்யம் ப்ரஹ்மண்யம் ஐஸ்வர்யம் ஆகிய இவை க்ஷத்ரியவர்ணத்திற்கு ஸ்வபாவஸித்தமான தர்மங்கள். (தேஜஸ்ஸாவது பிறரால் பரிபவிக்க முடியாதிருத்தல். பலமாவது பிறரைப் பரிபவிக்குந்திறமை. த்ருதியாவது ஆரம்பித்த கார்யத்தில் எவ்வளவு விக்னங்கள் வரினும் அதை முடித்தே தீருந்திறமை. ஸௌர்யமாவது வீட்டில் நுழைவதுபோல் நிர்ப்பயமாக யுத்தபூமியில் நுழையுந்திறமை. திதிக்ஷையாவது ஆயுத அடி முதலியவற்றால் விளையும் வருத்தங்களைப் பொறுக்குந்திறமை. ஔதார்யமாவது தானசீலனாயிருக்கை. உத்யமமாவது உள்ளது போதுமென்று தருப்தி அடையாமல் மேன்மேலும் முயற்சி செய்கை. ஸ்தைர்யமாவது யுத்தத்தில் தனக்கு மரணம் நேருமென்கிற நிச்சயம் உண்டாயிருப்பினும் ஓடிப்போகை முதலியனவில்லாமை. ப்ரஹ்மண்யமாவது ப்ராஹ்மணகுலத்திற்கு ஹிதஞ்செய்கை. ஐஸ்வர்யமாவது தன்னை யொழிந்த மற்ற ஜனங்களை யெல்லாம் அடக்கியாளுந்திறமை.) சாஸ்த்ரார்த்தங்கள் உண்மை யென்னும் நினைவாகிய ஆஸ்திக்யம் தானசீலனாயிருக்கை வஞ்சனை செய்யாமை ப்ராஹ்மணர்களைப் பணிகை பணம் ஸம்பாதிப்பதில் துஷ்டியில்லாமை ஆகிய இவை வைஸ்யவர்ணத்திற்கு ஸ்வபாவஸித்தமான தர்மங்கள். ப்ராஹ்மணர்களுக்கும் பசுக்களுக்கும் தேவதைகளுக்கும் கபடமில்லாமல் சுஸ்ரூஷை செய்கை தெய்வாதீனமாய்க் கிடைத்தவற்றைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கை ஆகிய இவை சூத்ரவர்ணத்திற்கு ஸ்வபாவ ஸித்தமான தர்மங்கள். சௌசமில்லாமை பொய்பேசுகை திருட்டுத்தனம் சாஸ்த்ரார்த்தங்களில் விஸ்வாஸமில்லாமை நிஷ்காரணமாகச்-

சண்டை செய்கை விஷயங்களைக் கண்டால் அவற்றை அனுபவிக்காமல் விடமுடியாமையாகிற காமம் அதற்கு விரோதஞ் செய்கையில் அதைப் பொறுக்கமுடியாத மனவிகாரமாகிற கோபம் அர்த்தகாமங்களில் பேராசை ஆகிய இவை வர்ணாஶ்ரமங்களுக்கு வெளிப்பட்ட சண்டாளாதிகளுக்கு ஸ்வபாவ ஸித்தமான தர்மங்கள். ஒருவர்க்கும் ஹிம்ஸை செய்யாமை பொய் பேசாமை திருடாமை காம க்ரோத லோபங்களுக்குட்படாமை ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ப்ரியத்தையும் ஹிதத்தையுமே செய்யவேண்டுமென்னும் விருப்பம் ஆகிய இவை ஸமஸ்த வர்ணங்களுக்கும் ஸமஸ்த ஆஶ்ரமங்களுக்கும் பொதுவான தர்மங்கள். ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்களென்கிற மூன்று வர்ணத்தவர்களும் கர்ப்பாதாதானம் முதலிய ஸம்ஸ்காரங்களெல்லாம் க்ரமமாக நடக்கப்பெற்று இரண்டாவது ஜன்மமாகிய உபநயனஸம்ஸ்காரத்தையும் பெற்று குருகுலத்தில் வாஸஞ்செய்துகொண்டு அந்தக்கரணத்தைவென்று ப்ரஹ்மசாரிகளாய் (அத்யயனத்தினால் வேதங்களைப்பெறுபவராகி) தன்னுடைய ஆஶ்ரமத்திற்கு ஏற்பட்ட வ்ரதங்களை ஊக்கத்துடன் அனுஷ்டித்துக்கொண்டு மேகலை அஜினம் தண்டம் அக்ஷமாலை யஜ்ஞோபவீதம் கமண்டலு தர்ப்பம் இவைகளைத் தரித்து எண்ணெய் தேய்த்து ஸ்னானஞ் செய்கை முதலிய ஸம்ஸ்காரங்களில்லாமையால் தலைமயிர்கள் ஜடையாகவும் பற்களும் வஸ்த்ரங்களும் வெளுத்துச் சுத்தமாயிருக்கவும் பெற்றுப் பரிசுத்தராயிருக்க வேண்டும். சிவப்பு வஸ்த்ரங்களையாவது பொன்னிறமான வஸ்த்ரங்களையாவது வேடிக்கைக்காகவுங்கூட ப்ரஹ்மசாரிகள் தரிக்கலாகாது. ஸ்னானம் போஜனம் ஹோமம் ஜபம் மலமூத்ர விஸர்ஜனம் ஆகிய இந்த

ஸமயங்களில் மௌனமாயிருக்கவேண்டுமென்றிப் பேசலாகாது. நகங்களையாவது கக்ஷம் உபஸ்தம் இந்த இடங்களிலுள்ள ரோமங்களையாவது எடுக்கலாகாது. ப்ரஹ்மசர்ய வ்ரதத்தை நடத்துகிறவன் ஒருகாலும் புத்திபூர்வகமாக ரேதஸ்ஸை விடலாகாது. ஒருகால் வருந்தி அந்த வ்ரதத்தினின்று தவறிப் போவானாயின் ஜலத்தில் இழிந்து ஸ்நானஞ் செய்து ப்ராணாயாமஞ் செய்து ஸாவித்ரியை ஆயிரத்தெட்டு தடவைகள் ஜபிக்கவேண்டும். (அவ்வளவினால் பரிசுத்தனுவான்). இரண்டு ஸந்த்யைகளிலும் பரிசுத்தனாய் அக்னி ஸூர்யன் ஆசார்யன் கோக்கள் ப்ராஹ்மணர் குருக்கள் பெரியோர்கள் தேவதைகள் இவர்களை மனவூக்கத்துடன் பணியவேண்டும். மற்றும், மௌனத்துடன் மனவூக்கமுற்று ஸாவித்ரியை ஜபிக்கவேண்டும். நானே ஆசார்யஸ்வரூபியாயிருக்கிறேனென்று நினைத்து ஆசார்யனை மிகுந்த பக்தியுடன் உபாஸிக்கவேண்டும். ஆசார்யனை ஒருகாலும் அவமதிக்கலாகாது. அவனை மனுஷ்யனாக நினைத்து அவன்மேல் அஸூயை செய்யலாகாது. அவனிடத்தில் ஏதேனும் தோஷம் புலப்படினும் அதை வெளியிடலாகாது. ஆசார்யன் ஸர்வ தேவதாஸ்வரூபனாகையால் அவனை அவமதிக்கில் ஸமஸ்த தேவதைகளையும் அவமதித்தவனாவான். (ஸமஸ்த தேவதைகளும் எனக்கு அங்கங்களாகையால் நானே ஆசார்யனாய் வந்தவதரித்து அவரவர்களை அனுக்ரஹிக்கிறேனாகையால் ஆசார்யன் ஸர்வ தேவதாஸ்வரூபனென்பதில் ஸந்தேஹம் உண்டோ?) காலை மாலை இரண்டு வேளைகளிலும் ஆசார்யனை உபாஸிக்க வேண்டும். பிச்சையெடுத்த அன்னத்தையும் மற்றும் தனக்கு உபயோகிக்கத் தகுந்தது எதுவெது உண்டோ அதையும் ஆசார்

யனுக்கெதிரில் கொண்டு போய் வைத்து அவனுடைய அனுமதியின்மேல் அதை மௌனத்துடன் உபயோகப்படுத்த வேண்டும். ஸர்வகாலமும் தாஸன் போல் சுச்ரூஷை செய்துகொண்டு ஆசார்யனை உபாஸிக்கவேண்டும்; ஆசார்யன் எங்கேனும் போகும் பொழுது வெகு தூரமும் வெகு ஸமீபமும் ஆகாதபடி நடுத்தரமாக இருந்து அஞ்சலித்துக்கொண்டு அவனைப் பின்றொடர்ந்து செல்லவேண்டும். அவன் சயனிக்கும் பொழுது மனவூக்கத்துடன் அருகாமையில் படுத்துப் பாதுகாக்கவேண்டும். அவன் இளைப்பாறும் பொழுது கால் பிடிப்பது முதலிய உபசாரங்களைச் செய்து கொண்டு ஸமீபத்தில் உட்காரவேண்டும். அவன் உட்கார்ந்திருக்கும் பொழுது உத்தரவை எதிர் பார்த்துக் கொண்டு அருகாமையில் நின்றிருக்க வேண்டும். இத்தகைய நிலைமையில் இருந்துகொண்டு போகங்களையெல்லாம் துறந்து வித்யாத்யயனம் முடியும் வரையில் கீழ்ச் சொன்ன விரதங்களைத் தவறாமல் அனுஷ்டித்துக் கொண்டு குருகுலத்தில் வாஸஞ்செய்யவேண்டும். இந்த ப்ரஹ்மசாரி வேதாத்யயனம் முதலிய கர்மங்களுக்குப் பலனான ப்ரஹ்மலோகத்தை அடைய விரும்புவானாயின் வேதங்களையே அத்யயனஞ்செய்துகொண்டு தேஹத்தை ஆசார்யனுக்கு அதீனமாக்கி ப்ராணனகள் உள்ளவரையிலும் ப்ரஹ்மசர்யத்தையே அனுஷ்டித்துக்கொண்டிருக்க வேண்டும். (இவனையே நைஷ்டிக ப்ரஹ்மசாரியென்று சொல்லுகிறார்கள். வேதாத்யயனம் முடியும் வரையில் குருகுலவாஸம் செய்து முடிந்தவுடன் வ்ரதஸமாபனம் செய்து கொள்பவனை உபகுர்வாணப்ரஹ்மசாரியென்று சொல்லுகிறார்கள்). நைஷ்டிகன், அக்னியிடத்திலும் குருவினிடத்திலும் தன்னிடத்திலும்ஸமஸ்த

பூதங்களிடத்திலும் அந்தராத்மாவாயிருக்கிற பரம புருஷனாகிய என்னைப் பேதபுத்தியில்லாமல் ப்ரஹ்மசர்ய வ்ரதானுஷ்டானத்தினால் விளையும் தேஜஸ்ஸுடன் சிறிதும் கல்மஷமின்றி உபாஸிக்கவேண்டும். மற்றும், அவன் ஸ்த்ரீகளைப் பார்ப்பது தொடுவது பேசுவது பரிஹாஸஞ்செய்வது முதலியவற்றையும் துறக்கவேண்டும். ஆணும் பெண்ணுமாய்க் கலந்திருக்கிற பசு பக்ஷி முதலிய ஜந்துக்களையுங்கூடப் பார்க்கலாகாது. குலத்தைக் களிப்புறச் செய்பவனே! ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை அனுஷ்டிப்பதற்குரியனாகும்படி பரிசுத்தனாயிருக்கை, ஆசமனம், ஸ்னானம், ஸந்த்யாவந்தனம், பிறர்விஷயத்தில் உள்ளும் புறமும் ஒத்திருக்கை, புண்யதீர்த்தங்களையும் பெரியோர்களையும் பணிகை, காயத்ரி முதலிய மந்த்ரங்களை ஜபிக்கை, தீண்டத் தகாதவர்களைத் தீண்டாமை, பக்ஷிக்கத்தகாதவைகளைப் பக்ஷிக்காமை, பேசத்தகாதவர்களோடு பேசாமை, ஸமஸ்த பூதங்களையும் பரமாத்மாவான என் ஸ்வரூபங்களாகப் பாவிக்கை, மனம் வாக்கு காயம் இவைகளை அடக்குகை ஆகிய இவை யெல்லாம் ஸமஸ்த ஆஶ்ரமங்களுக்கும் பொதுவான நியமங்களாம். இங்ஙனம் ப்ரஹ்மசர்யவ்ரதத்தை ஊக்கத்துடன் அனுஷ்டிக்கும் ப்ராஹ்மணன் வேதங்களை ஓதி அதன் பொருள்களையும் உணர்ந்து இடைவிடாத பெருந்தவத்தினால் அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு என்னிடத்தில் பக்தியோகம் உண்டாகப் பெற்று அதனால் என்னைப் பெறுதற்குத் தடையான கர்மங்களும் அவற்றின் வாஸனையும் தீரப்பெற்று தேஹாவஸானத்தில் ப்ரக்ருதி ஸம்பந்தமாகிற அழுக்கும் அடியோடு நீங்கப்பெறுவான். இங்ஙனம் நைஷ்டிக ப்ரஹ்மசர்யத்தை அனுஷ்டிக்க வல்லமையற்றிருப்பானாயின்,

வேதாத்யயனம் முடித்து வேதங்களின் பொருள்களை யும் அறிந்து பிறகு எப்பொழுது மேற்பட்ட ஆஶ்ரமங்க ளில் ஏதேனுமொன்றைப் பெற விரும்புகிறானோ, அப் பொழுதே ஆசார்யனுக்குத் தக்ஷிணை கொடுத்து அவ னால் அனுமதி கொடுக்கப்பெற்று ஸமாவர்த்தனமென் னும் ஸ்னானத்தை அனுஷ்டிக்க வேண்டும். பிறகு க்ரு ஹஸ்தாஶ்ரமத்தையாவது வானப்ரஸ்தாஶ்ரமத்தையா வது பெறவேண்டும். ப்ராஹ்மணனாயிருப்பானாயின் ஸந்நி யாஸாஶ்ரமத்தைப் பெறவேண்டும். ப்ராஹ்மண க்ஷத்ரி யவைஶ்யர்களுக்குள் என்னிடத்தில் பக்தியுடைய எவ னாயினும் ஆஶ்ரமத்தினின்று மற்றோராஶ்ரமத்தைக்கை ப்பற்றவேண்டுமேயன்றி ஆஶ்ரமத்தைத் துறந்து ஓரா ஶ்ரமமுமின்றி வெறுமெனே யிருக்கலாகாது. ப்ரஹ்மசர் த்தின் பின்பு க்ருஹஸ்தாஶ்ரமத்தைப்பெறவிரும்புவானா யின், தனக்குத் தகுந்தவளும் நிந்தைக்கிடமில்லாதவளும் வயதில் தனக்குக் குறைந்தவளும் தன்ஜாதியிற் பிறந் தவளுமான பார்யையை முதலில் மணம் புரியவேண்டும். பிறகு க்ஷத்ரியாதிவர்ணங்களில் கீழ்ச்சொன்ன குண ங்களெல்லாம் அமைந்த பெண்ணைப் பார்த்து மணம் புரியலாம். இருபிறப்பினர்களாகிய ப்ராஹ்மணக்ஷத் ரிய வைஶ்யர்களென்கிற மூன்றுவர்ணத்தவர்களுக்கும் யாகம் அத்யயனம் தானம் இவை மூன்றும் பொது வான தர்மங்கள். தானம் வாங்குதல் வேதமோதுவித் தல் யாகஞ் செய்வித்தல் ஆகிய இவை மூன்றும் ப்ராஹ் மணனுக்கு மாத்ரமே ஏற்பட்டவை. அவற்றில் தானம் வாங்குதல் தவத்திற்கும் ப்ரஹ்மதேஜஸ்ஸுக்கும் புக ழுக்கும் கெடுதியை விளைக்குமென்று நினைப்பானாயின், யாகஞ் செய்வித்தல் வேதமோதுவித்தல் ஆகிய மற்ற வைகளால் ஜீவிக்கவேண்டும். அவற்றிலும் தோஷங்

கள் உண்டென்று பார்ப்பானாயின், கழனிகளில் உதிர்ந்த கதிர்களையாவது தான்யங்களையாவது பொறுக்கி அதைக்கொண்டு ஜீவிக்கவேண்டும். மற்றவைகளைக் காட்டிலும் இது வருத்தமே. (ஆயினும் அவை தோஷங்களுக்கிடமாகையால் இதுவே ஶ்லாக்யம்). ப்ராஹ்மணனுடைய தேஹம் அற்பபோகங்களை அனுபவிப்பதற்காக ஏற்பட்டதன்று; பின்னையோவென்றால், இஹத்தில் ஜீவித்திருக்கும்வரையில் தேஹஶ்ரமங்களுக்கிடமான தவத்தை அனுஷ்டிப்பதற்காகவும் பரத்தில் அளவற்ற ஸுகரூபமான மோக்ஷத்தை அனுவிப்பதற்காகவும் ஏற்பட்டது. உதிர்ந்த கதிர்களைப் பொறுக்கி ஜீவித்தல் உதிர்ந்த தான்யங்களைப் பொறுக்கி ஜீவித்தல் இவைகளால் மனமகிழ்ச்சியுற்று மனத்தூய்மைக்கிடமாயிருப்பதும் மஹத்தான பலனை விளைப்பதுமாகிய வர்ணாஶ்ரமதர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு என்னிடத்தில் நிறுத்தப்பட்ட மனமுடையவனுமாகி அதிகமாகப் போகங்களில் விருப்பமுறாதிருப்பானாயின், க்ருஹஸ்தாஶ்ரமத்திலேயே இருப்பினும் ஸம்ஸாரஶ்ரமங்களெல்லாம் தீரப்பெறுகையாகிற மோக்ஷத்தைப் பெறுவான். (க்ருஹஸ்தாஶ்ரமத்திலிருப்பானாயின், பெண்டிர் பிள்ளை பெண் முதலிய குடும்பங்கள் பெருக்குமாகையால் அவன் உஞ்சவ்ருத்தியினால் எங்ஙனம் ஜீவிக்க முடியுமென்றால், அங்ஙனம் குடும்பங்கள் பெருத்தும் உஞ்சவ்ருத்தியிலேயே இருந்து வருந்துவானாயின் அவனுக்குப் பிறர் உபகரிப்பார்கள்). என்னையே முக்யமாகப் பற்றின அந்தணன் உஞ்சவ்ருத்தி முதலியவற்றால் குடும்பத்தைப் போஷிக்க முடியாமல் வருந்தும் பொழுது, அவனை அவ்வருத்தத்தினின்று எவர் உத்தரிக்கிறார்களோ, அவர்களை நான் ஸமுத்ரத்தினின்று ஓடம்

கரையேற்றுவதுபோல் ஆபத்துக்களினின்று சீக்ரத்தில் கரையேற்றுவேன். அரசன் தந்தைபோல் அருளுடையவனாகி ப்ரஜைகளையெல்லாம் வருத்தத்தினின்று கரையேற்ற வேண்டும். யானைக்கூட்டங்களில் தலைமையுள்ள யானை யானைகளை வருத்தத்தினின்று கரையேற்றித் தானும் கரையேறுவதுபோல், தைர்யத்துடன் ப்ரஜைகளை வியஸனத்தினின்று கரையேற்றித் தனக்கு வியஸனம் நேரிடில் தன்னையும் தானே கரையேற்ற வேண்டும். இத்தகைய மன்னவன் இங்குப் பாபங்களையெல்லாம் துறந்து ஸூர்யனோடொத்த ஒளியுடைய விமானத்தில் ஏறிச் சென்று இந்த்ரனுடன் கலந்து ஸந்தோஷமுற்றிருப்பான். இவ்விதமான ஜீவனம் ஏதும் ஏற்படாமல்[1] சில உஞ்சங்களாலும் ஜீவனம் நடத்த முடியாமல் வருந்துகிற அந்தணன் வர்த்தக வியாபாரத்தில் இழிந்து அதிலும் தான் விற்பனை செய்யத்தகுந்த புல் கட்டை முதலியவைகளை விற்று, ஜீவனம் கிடைக்காமையாகிற ஆபத்தைக் கடக்கவேண்டும். குடும்பம் பெருத்து அதிலும் ஜீவனம் நடக்காது போய் வருந்துவானாயின், கத்தியையேந்தி க்ஷத்ரியவ்ருத்தியினாலாவது ஜீவிக்கவேண்டும். ஒருகாலும் கீழ்வர்ணத்தவர்களுக்குப் பணிவிடைசெய்து பிழைக்கலாகாது. க்ஷத்ரியன் தன்வ்ருத்தியினால் ஜீவிக்கமுடியாதிருப்பானாயின், வைஶ்யவ்ருத்தியைக் கைப்பற்றி ஜீவிக்கவேண்டும்; அல்லது, அரண்யத்தில் வேட்டையாடி ஜீவிக்கலாம். அல்லது, ப்ராஹ்மணவ்ருத்தியினாலாவது ஜீவிக்கலாமன்றி, ஒருகாலும் கீழ்வர்ணத்தவர்களைப் பணிகையாகிற ஶ்வ

1. சிலமாவது—கழனிகளில் உதிர்ந்த கதிர்களைப் பொருக்குதல். உஞ்சமாவது-கொஞ்சம் கொஞ்சமாக யாசித்துப் பெறுதல்.

வ்ருத்தியினால் ஜீவிக்கலாகாது. வைஶ்யனுக்குத் தன் வ்ருத்தியினால் ஜீவிக்க முடியாமல் ஆபத்து நேரிடில் சூத்ரவ்ருத்தியினால் ஜீவிக்கவேண்டும். சூத்ரன் ப்ராஹ்மணாதி வர்ணத்தவர்களைப் பணிந்து ஜீவிக்கையாகிற தன் வ்ருத்திக்கு லோபம் நேர்ந்து ஜீவிக்க வருந்துவானாயின், துணிநெய்வது பாய்மிடைவது முதலிய செயல்களைச் செய்து அதனால் ஜீவிக்கவேண்டும். ப்ராஹ்மணாதி வர்ணத்தவர்கள் அனைவரும் தங்கள் தங்களுடைய ஆபத்து நீங்கப்பெறுவார்களாயின், நிந்தைக்கிடமான கார்யங்களைச் செய்து ஜீவிக்கப் பார்க்கலாகாது. (ஒருவர்ணத்திலிருப்பவன் மற்றொருவர்ணத்திற்கு ஏற்பட்ட கார்யத்தைச் செய்வானாயின், அவனுக்கு அது நிந்தைக்கிடமான கார்யமேயாமல்லவா? ஆகையால் அவன் அதைச் செய்யலாகாது.) வேதங்களை ஓதுகை, ஸ்வதை ஸ்வாஹை பலி அன்னம் முதலியவைகளால் என்னுடைய உருவங்களாகிய தேவதைகளையும் ரிஷிகளையும் பித்ருக்களையும் மற்ற ப்ராணிகளையும் தன்னுடைய விபவத்திற்குத் தகுந்தபடி ஆராதிக்கை, தெய்வாதீனமாய்க் கிடைத்த தனத்தினாலாவது தன் வ்ருத்தியினால் ஸம்பாதித்த பரிசுத்தமான அன்னத்தினாலாவது தன் போஷ்ய வர்க்கங்களை வருத்தாமல் என்னுடைய ஆராதனரூபமான யாகங்களைச் செய்கை ஆகிய இவையெல்லாம் மூன்று வர்ணத்தவர்களுக்கும் பரலோகத்தை விளைக்கவல்ல பொதுவான தர்மங்களாம். க்ருஹஸ்தாஶ்ரமத்திலிருப்பினும் பிள்ளை பெண்டிர் முதலிய குடும்பங்களில் மிகவும் மனப்பற்று செய்யலாகாது; குடும்பியாயினும் தேஹத்தில் ஆத்மாபிமானம் கொள்ளலாகாது. பின்னையோ வென்றால், சித்து அசித்து ஈஶ்வரன் என்கிற மூன்று தத்வங்களின் உண்மையை ஆராய்ந்தறிந்து இஹத்தி

லுண்டான போகங்களைப்போல் ஸ்வர்க்காதி போகங்களும் நஶ்வரங்களென்று நினைக்கவேண்டும். பிள்ளை பெண்டிர் நண்பர் பந்துக்கள் ஆகிய இவர்களோடு கலந்திருப்பது, வழிப்போக்கர் பலரும் ஒரு தண்ணீர்ப் பந்தலில் கலந்திருப்பதுபோல் அநித்யமேயொழிய நித்யமன்று. பிள்ளை பெண்டிர் முதலியவர்கள் தேஹங்கள் தோறும் மாறுகிறார்கள். தூங்கும்பொழுது நேருகிற ஸ்வப்னம் விழித்துக்கொண்டவுடன் மறைவதுபோல், ஒரு தேஹத்தைப்பற்றி ஏற்பட்ட புத்ர களத்ராதிகள் அந்த தேஹாவஸானத்தில் மாறிவிடுபவரல்லவா? (மற்றும், அவர்கள் தேஹாவஸானம் வரையில் தொடருகிறார்களென்பதுங்கூட இல்லை. இடையிலும் பிரிந்து போகிறார்கள். ஆகையால் புத்ர களத்ராதிகளுடைய ஸமாகமம் தண்ணீர்ப் பந்தலில் வழிப்போக்கர்கள் பலரும் ஒன்று சேருவதுபோல் அநித்யமேயாம்). இங்ஙனம் த்ருஷ்டத்திலுள்ள போகங்கள் அநித்யமாயிருப்பது போல் அத்ருஷ்டமான ஸ்வர்க்காதிபோகங்களும் அநித்யமே யென்றாராய்ந்தறிந்து மனஊக்கத்துடன் க்ருஹத்தில் அதிதியைப்போல் வாஸஞ்செய்துகொண்டு அஹங்கார மமகாரங்களைத் துறந்து க்ருஹத்தில் ஆஸக்தியற்றிருக்க வேண்டும். க்ருஹஸ்தாஶ்ரமத்திற்கு விதிக்கப்பட்ட யஜ்ஞாதிகர்மங்களால் என்னை ஆராதித்து பக்தியுடையவனாகி ஆயுள் முழுவதும் க்ருஹஸ்தாஶ்ரமத்திலேயே இருக்கலாம். ஸந்ததியுடையவனா யிருப்பானாயின், வானப்ரஸ்தாஶ்ரமத்தையாவது ஸந்ந்யாஸாஶ்ரமத்தையாவது பெறலாம். இல்லறவாழ்க்கையில் மனப்பற்று செய்வானாயின், பிள்ளை பெண்டிர் பணம் முதலியவற்றிலாசையால் வருந்திப் பெண்டிர்களுக்குட்பட்டு அஹங்கார மமகாரங்களால் மதிமயங்கி

விவேகமற்று மேன்மேலும் ஸம்ஸாரபந்தத்தைப் பெறுவான். 'ஆ! என்தாய் தந்தைகள் கிழவர்களாயிருக்கிறார்கள். இளம்பிள்ளைகளையுடைய என் பார்யையும் என் பிள்ளைகளும் என்னைப் பிரிந்து வேறுகதியின்றி வருந்தி எங்ஙனம் ஜீவிக்கப் போகிறார்கள்?' என்று இல்லற வாழ்க்கையில் ஆஸக்தியால் மனக்கலக்கமுற்று மதிமயங்கி விஷயங்களில் த்ருப்தி உண்டாகப் பெறாதவனாகிப் பிள்ளை பெண்டிர் முதலியவர்களையே சிந்தித்துக்கொண்டு மரணம் அடைந்து மிகவும் தாமஸமான யோனியில் பிறப்பான். பதினேழாவது அத்யாயம் முற்றிற்று

---

வானப்ரஸ்தாஶ்ரம தர்மங்களையும் ஸந்ந்யாஸாஶ்ரம தர்மங்களையும் கூறுதல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—வானப்ரஸ்தாஶ்ரமத்தைப் பெற விரும்புவானாயின் பார்யையைப் பிள்ளைகளிடம் ஒப்புவித்து விட்டு, அல்லது பார்யையோடுகூடவாவது சென்று இந்த்ரியங்களையெல்லாம் வென்று ஆயுளுடைய மூன்றாம் பாகம் முழுவதும் வனத்திலேயே வாஸஞ் செய்யவேண்டும். (பிறகு இந்த்ரியங்களெல்லாம் தளர்ந்துபோய்விடுமாகையால் சிறிது வைராக்யம் உண்டாயினும் ஸந்ந்யாஸாஶ்ரமத்தைப் பெறலாம். வானப்ரஸ்தாஶ்ரமத்தை அனுஷ்டிப்பவன் வனத்தில் விளையக்கூடியவைகளும் சாஸ்த்ரங்களில் புசிக்கலாமென்று அனுமதிக்கப்பட்டவை யாகையால் பரிசுத்தங்களுமான கிழங்கு வேர் காய் பழம் முதலியவைகளால் ஜீவனத்தை நடத்திக்கொள்ளவேண்டும். மரவுரியை வஸ்த்ரமாக உடுத்திக்கொள்ளவேண்டும். அது கிடைக்காத பக்ஷத்தில் புல் இலை தோல் இவைகளையாவது

உடுத்திக்கொள்ளவேண்டும். தலைமயிர் உடம்பு மயிர் நகங்கள் தாடி மீசை ஆகிய இவைகளை அப்படியே தரித்துக் கொண்டிருக்கவேண்டுமன்றி வாங்கலாகாது. பல் தேய்க்கலாகாது. மூன்று காலங்களிலும் ஸ்னானஞ் செய்யவேண்டும். வெறும் பூமியில் புல் முதலியவைக ளைப் பரப்பி அதன்மேல் படுத்துக்கொள்ளவேண்டும். க்ரீஷ்ம ருதுவில் பஞ்சாக்னி மத்யத்தில் இருந்துகொ ண்டு தன்னை அவ்வக்னி ஜ்வாலைகளால் தபிக்கச் செய்ய வேண்டும். வர்ஷருதுவில் விடா மழை பெய்துகொண் டிருப்பினும் அதைப் பொறுத்துக்கொண்டிருக்க வேண் டும். சிசிர ருதுவில் கழுத்தளவு ஜலத்தில் அமிழ்ந் திருக்கவேண்டும். இத்தகைய நிலைமையுடன் தவஞ் செய்யவேண்டும். கிழங்குகளையும் வேர்களையும் அக் னியில் பக்வஞ்செய்து புசிக்கவேண்டும். பழங்களையோ வென்றால் காலத்தினால் தானே பக்வங்களானவற்றைப் புசிக்கவேண்டும். செந்நெல் முதலியவைகளை உரலினா லாவது கல்லினாலாவது குத்தி உபயோகப்படுத்த வேண் டும். அல்லது பற்களையே உரலாகக் கொண்டு கார்யத் தை நடத்திக் கொள்ளலாம். தன்னுடைய ஜீவனத் திற்கு ஸாதனமான கிழங்கு வேர் முதலியவைகளைத் தானேகொண்டுவர வேண்டுமன்றிப் பிறரால் வரவழைக் கலாகாது. தேச காலங்களின் பலாபலங்களை ஆராய் ந்து காலாந்தரத்தில் கொண்டுவந்த காய் கிழங்கு முத லியவைகளைப் புசிக்கலாகாது. வனத்தில் கிடைக்கக் கூடிய செந்நெல் முதலியவைகளால் அந்தந்த காலங் களில் விதிக்கப்பட்ட ஆக்ரயணம் முதலிய சருபுரோ டாசாதிகளைச் செய்து அவைகளால் என்னை ஆராதிக் கவேண்டுமன்றி, வானப்ரஸ்தாஸ்ரமத்திலிருப்பவன் வே தங்களில் விதிக்கப்பட்ட பசுக்களைக் கொன்று அவைக

ளால் என்னை ஆராதிக்கலாகாது. வேதங்களால் முனிவர்களுக்கு விதிக்கப்பட்ட அக்னிஹோத்ரம் தர்சம் பூர்ணமாஸம் முதலிய கர்மங்களாலும் என்னை வானப்ரஸ்தன் ஆராதிக்க வேண்டும். இங்ஙனம் ஆயுள் வரையிலும் அனுஷ்டித்த தவத்தினால் ரக்த மாம்ஸங்களெல்லாம் உலர்ந்து உடம்பு முழுவதும் நரம்புகளே நிறைந்தவனாகித் தவத்திற்கு நிர்வாஹகனாகையால் தபோமயனாகிய என்னை ஆராதித்து ரிஷிலோகமாகிய மஹர்லோகத்தைக் கடந்து தேஹாவஸானத்தில் என்னைப் பெறுவான். (இந்தத்தவத்தையே பலாபிஸந்தியுடன் செய்வானாயின், அவனுக்கு ரிஷிலோகந்தான் நேரும். பலாபிஸந்தியில்லாமல் செய்வானாயின், அவனுக்கு என்னுடைய ப்ராப்தியே உண்டாகும்). மோக்ஷத்தை நிறைவேற்றிக் கொடுக்கவல்ல இத்தகைய தவத்தை மிக்க வருத்தத்துடன் நடத்தி அதை அற்பமான காமத்திற்காக எவன் உபயோகப்படுத்துகிறானோ, அவனை விட எவன்தான் மூர்க்கனாவான்? அவனைப் போன்ற அறிவுகேடன் எவனுமே இல்லை. இந்த வானப்ரஸ்தன் கிழத்தனத்தினால் உடம்மெல்லாம் நடுக்கமுற்றுத் தன்னுடைய ஆஶ்ரமத்திற்கு ஏற்பட்ட இத்தகைய தர்ம நியமத்தை அனுஷ்டிக்க வல்லமை யற்றிருப்பானாயின், ஆஹவனீயம் முதலிய அக்னிகளை ஹ்ருதயத்தில் ஆரோபணஞ் செய்து என்னிடத்திலேயே நிலைநின்ற மனமுடையவனாகி அக்னிப்ரவேசஞ் செய்யவேண்டும். யஜ்ஞாதி கர்மங்களுக்குப்பலனாக ஏற்படுபவைகளும் நரகம்போன்றவைகளுமான ஸ்வர்க்காதி லோகங்களில் நன்கு வைராக்யம் உண்டாகுமாயின், அப்பொழுது அக்னிகளை ஆரோபணஞ் செய்து ஸந்ந்யாஸாஶ்ரமத்தைப் பெறவேண்டும். ஸந்ந்யாஸாஶ்ரமத்தைப் பெற விரும்புகிறவன் முதலில்

சாஸ்த்ரங்களில் சொல்லியபடி ப்ராஜாபத்ய இஷ்டியினால் என்னை ஆராதித்துத் தன்னுடைய ஸொத்துக்களை யெல்லாம் ருத்விக்குக்குக் கொடுத்து அக்னிகளைத் தன்னிடத்தில் ஆரோபணஞ் செய்து என்னை யொழிய மற்ற எதிலும் விருப்பமின்றி எல்லாவற்றையும் துறந்து போகவேண்டும். தேவதைகள் ஸந்த்யாஸாஶ்ரமத்தைப் பெற விரும்புகிற அந்தணனிடத்தில் 'இவன் ஸந்த்யாஸஞ் செய்து நம்மை யெல்லாங் கடந்து பரமபதத்தைப் பெறப்போகிறான். நாம் பார்த்துக் கொண்டிருக்கையில் நமக்குக் கிடைக்க அரிதான பதவியை இவன் பெறப்போகிறானல்லவா? இதை நாம் எங்ஙனம் பொறுத்திருக்க முடியும்?' என்னும் பொறாமை கொண்டு பெண்டிர் பிள்ளை பந்துக்கள் இவர்கள் மூலமாய் அவனுக்கு விக்னஞ் செய்கிறார்கள். ஆகையால் இவ்வாஶ்ரமத்தைப் பெறுவது மிகவும் அரிதான விஷயம். பல விக்னங்கள் நேரிலும் அவற்றை யெல்லாம் உதறிவிட்டு, தைர்யத்துடன் ஸந்த்யாஸாஶ்ரமத்தைக் கைப்பற்ற வேண்டும். இங்ஙனம் ஸந்த்யாஸாஶ்ரமத்தைக் கைப்பற்றின யதி கௌபீனம் அரை வஸ்த்ரம் இவைகளையே தரிக்கவேண்டும். இதற்குமேல் தலைப்பாகை போர்வை முதலியவை எவற்றையும் எடுத்துக் கொள்ளலாகாது. இந்தயதி தண்டம் பாத்ரம் இவைகளைத்தவிர ஸந்த்யஸிக்கும் பொழுது விட்டவைகளை எவற்றையும் மீண்டுகைப்பற்றலாகாது. மற்றும், இவன் கண்ணால் பார்த்து ஜந்துக்கள் முதலியவை எவையும் இல்லையா வென்றுதெரிந்து கொண்டு பரிசுத்தமான இடத்தில்பாதத்தைவைக்க வேண்டும். வஸ்த்ரத்தினால் வடிக்கட்டி ஜந்துக்கள் முதலியவையில்லாமல் பரிசுத்தமான ஜலத்தைப்பானஞ்செய்ய வேண்டும். பொய் முதலியவையில்லாமல்

பரிசுத்தமான வாக்கைப் பேசவேண்டும். மனத்தினால் குணதோஷங்களை நன்றாக ஆராய்ந்து பரிசுத்தமான கார்யத்தைச் செய்யவேண்டும். பேசாதிருக்கை வாக்குக்கு தண்டனை. காம்யகர்மங்களைச் செய்யாமை தேஹத்திற்கு தண்டனை. ப்ராணாயாமஞ் செய்தல் மனத்திற்கு தண்டனை. உத்தவரே! இம்மூன்று தண்டங்களும் எந்த யதிக்கு இல்லையோ, அவன் வெறுமெனே மூங்கில்கொம்புகளை ஏந்திக்கொண்ட மாத்ரத்தினால் யதியாக மாட்டான். நிந்தைக்கிடமான பதிதர் முதலியவர்களைத் தவிர மற்ற நான்கு வர்ணத்தவர்களிடத்திலும் பிக்ஷையெடுக்கலாம். இந்த இடத்தில் இன்ன லாபம் கிடைக்குமென்னும் எண்ணத்துடன் முன்னதாக உத்தேசித்துக்கொண்டு போகலாகாது. அவ்வளவில் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷம் அடையவேண்டும். (பூர்வ பூர்வ வர்ணங்களில் பிக்ஷை கிடைக்காது போமாயின் உத்தரோத்தர வர்ணங்களில் பிக்ஷையெடுக்கலாமென்று சிலர் சொல்லுகிறார்கள். ப்ராணாபத்தான ஸமயத்தில்தான் வேறு வர்ணங்களில் பிக்ஷையெடுப்பது சாஸ்த்ர ஸம்மதமேயன்றி மற்ற ஸமயங்களில் ப்ராஹ்மண வர்ணந்தவிர மற்ற வர்ணங்களில் பிக்ஷை கூடாதென்றே சிலர் சொல்லுகிறார்கள்): க்ராமத்திற்கு வெளியில் ஜலாசயத்திற்குச் சென்று அங்கு ஆசமனஞ் செய்து மௌனியாய் எவனேனும் கேட்பானாயின் அவனுக்குப் பங்கிட்டுக் கொடுத்து மிகுந்த அன்னத்தை மிகுத்தாமல் புசிக்க வேண்டும். வெளியிந்த்ரியங்களையும் உள்ளிந்த்ரியத்தையும் அடக்கிக் கொண்டு எங்கும் பற்றில்லாமல் தனியனாகவே இப்பூமி முழுவதும் ஸஞ்சரிக்க வேண்டும். பரமாத்மாவினிடத்திலேயே குதூஹலமும் ஸந்தோஷமுமுற்று எல்லாம் பரப்ரஹ்மரூ

பமே யென்னும் பாவனை யுடையவனாகி எப்பொழுதும் தீரனாயிருக்கவேண்டும். ஜனஸங்கமில்லாமல் நிர்ப்பயமு மாயிருக்கிற இடத்தில் வாஸஞ்செய்துகொண்டு என் னிடத்தில் பக்தியினால் நிர்மலமான மனமுடையவனு மாகி ஜ்ஞானத்தையே வடிவாகவுடைய ஆத்மா என க்கு நியாம்யமும் தார்யமும் சேஷமுமாயிருப்பதாகை யால் என்னைக்காட்டிலும் பேதப்பட்டதன்றென்று அபேதமாக த்யானிக்கவேண்டும். இந்த்ரியங்களை அந் தந்த விஷயங்களில் போகவிடுதல் ஸம்ஸாரபந்தத்திற் குக் காரணமென்றும், இவைகளை அவ்விஷயங்களில் போக வொட்டாமல் அடக்குதல் மோக்ஷஹேது வென்றும் தத்வத்ரயத்தினுடைய உண்மையின் ஆரா ய்ச்சியால் தன்னுடைய ஸம்ஸாரபந்தத்திற்கும் அதி னின்று தான் விடுபடுதற்கும் காரணத்தை ஆராய்ந் தறிய வேண்டும். ஆகையால் மனத்தோடு கூடிய ஜ்ஞானேந்த்ரியங்களைத்தையும் அடக்கிக் கொண்டு என்னிடத்திலேயே பக்தியுடையவனாகி அற்பங்களான சப்தாதி விஷயங்களில் வைராக்யமுற்று ஆத்மானு பவத்தினால் ஸுகத்தை அடைந்து ஸஞ்சரிக்கவேண் டும். பட்டணங்கள் க்ராமங்கள் பசுக்கள் கட்டுமிடம் ஸாத்விகர்களின் ஸமூஹங்கள் இவ்விடங்களில் பிக்ஷை யெடுத்துப் புசித்துக்கொண்டு புண்ய தேசங்கள் புண்யநதிகள் புண்யமான பர்வதங்கள் புண்யமான வனங்கள் புண்ய ஆஶ்ரமங்கள் இவைகள் அமைந்த பூமியில் ஸஞ்சரிக்கவேண்டும். பெரும்பாலும் வான ப்ரஸ்தர்களுடைய ஆஶ்ரமங்களில் பிக்ஷையெடுத்துப் புசிக்க வேண்டும். அவர்கள் சில வ்ருத்தியினால் (உதிர் ந்த கதிர்களைப் பொறுக்கி ஜீவிக்கையாகிற வ்ருத்தியி னால்) ஜீவிப்பவர்களாகையால் அவர்களுடைய ஆஹா

ரம் பரிசுத்தமாயிருக்கும். அங்குச் சென்று பிச்சையெடுத்துப் புசிப்பானாயின், அந்த ஆஹாரத்தினால் சீக்ரத்தில் மனத்தெளிவு உண்டாகப்பெற்று மதிமயக்கம் தீர்ந்து மோக்ஷஸித்தியைப் பெறுவான். (சப்தாதி விஷயங்களினின்று எப்படி விரக்தனாகமுடியுமென்றால், சொல்லுகிறேன்; கேள்). இதோ புலப்படுகிற சப்தாதி விஷயங்களையெல்லாம் இது வொரு வஸ்து வென்றுங்கூட நினைத்துப் பார்க்கலாகாது. ஏனென்றால், அவையெல்லாம் நஶ்வரங்களல்லவா? இங்ஙனமே பரலோகங்களிலுள்ள சப்தாதி விஷயங்களில் மனப்பற்றை மாற்றிக் கொள்ளவேண்டும். இஹ்பரலோகங்களிலுள்ள விஷயஸுகங்களைப் பெறுதற்காகச் செய்ய விரும்புகிற செயல்களினின்றும் மீளவேண்டும். இங்ஙனம் விவேகத்தினால் சப்தாதி விஷயங்களில் விரக்தனாவான். கர்மேந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் மனம் பஞ்சபூதங்கள் இவற்றின் ஸமுதாய ரூபமாயிருப்பதும் ஜங்கமமுமாகிய இந்த சரீரம் முழுவதும் ப்ரக்ருதியின் கார்யமாகையால்அசித்தேயன்றிச்சேதனனான ஆத்மாவாகமாட்டாது. ஆத்மா இதைக்காட்டிலும் விலக்ஷணன். வேறுப்பட்டவனென்று நன்றாக ஊஹித்து நிச்சயித்துக்கொண்டு பரமாத்மாவுக்கு உட்பட்ட அந்த ஆத்மாவின் ஸ்வரூபத்தை ஆராய்வதில் ஊக்கமுற்றுச் சரீரத்தில் ஆத்மாபிமானத்தைத் துறந்து மீளவும் அதை ஆத்மாவென்று அபிமானிக்கலாகாது. ப்ரஹ்மசர்யம் முதலிய நான்கு ஆஶ்ரமங்களுக்குள் எந்த ஆஶ்ரமத்தில் இருப்பவர்களாயினும் வைராக்யம் அமைந்த ஜ்ஞான நிஷ்டையிலாவது ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர்பாராத பக்திநிஷ்டையிலாவது நிலைநின்றிருப்பார்களாயின் அந்தந்த அடையாளங்களோடு கூடின ஆஶ்ரமங்களைத் துறந்து விதிநிஷேதங்களுக்கு

உட்படாமல் நடக்கலாம்.(ஸித்தோபாயமானபரமபுருஷ னைப் பற்றினவனுக்குத் தான் செய்யவேண்டுவதொன் றும் இல்லாமையால்அவன் விதிநிஷேதங்களுக்குட்பட்டு ஒன்றும் செய்யவேண்டிய அவஸ்யமில்லை. ஆயினும் சேஷபூதனான ஆத்மாவுக்குக் கைங்கர்யமே ஸ்வரூபமா கையால் பகவானுக்கு முகோல்லாஸஹேதுவான ஏதே னுமொன்றைச் செய்து கொண்டே யிருப்பான். விவேக முடையவனாயினும் ஒன்றுமறியாத சிறுவன்போல் மானா வமானங்களைத் துறந்து விளையாடுபவன்போல் அபி நயித்துக் கொண்டிருக்கவேண்டும். எல்லாந்தெரிந்த வனாயிருந்தும் பித்தம் பிடித்தவன்போல் பேசவேண்டும். வேதார்த்தங்களில் நன்கு நிலைநின்றவனாயினும் பசுவைப் போல் ஆஹார நித்ராபயங்களை யொழிய மற்றொன்றை யும் அறியாதவன்போல் நடக்கவேண்டும். வேதத்தின் பூர்வபாகத்தில் மனஞ்செலுத்தலாகாது. வேதமார்க் கத்திற்கிணங்காத ஆசாரங்களை விரும்பலாகாது. கே வல தர்க்கங்களால் வேதார்த்தங்களை அழிக்கலாகாது. நிஷ்ப்ரயோஜனமாய் வாது செய்யுங் கோஷ்டியில் நுழை ந்து விவாதஞ் செய்யத் தொடங்கி ஏதேனு மொருபக்ஷ த்தைப் பிடித்துக்கொண்டு வழக்காடலாகாது. தீரனாகி எந்த ஜனத்தினின்றும் பயப்படலாகாது. எந்த ஜன மும் பயமுறும்படி நடக்கலாகாது. எவனேனும் துர்ப் பாஷணங்களைப் பேசுவானாயின், அவற்றை யெல்லாம் பொறுத்துக் கொள்ளவேண்டும். எதையும் அவமதிக் கலாகாது. 'ப்ருதிவி முதலிய பஞ்ச பூதங்களின் பரி ணாமமான தேவ மனுஷ்யாதி தேஹங்களிலுள்ள ஆத் மாக்களுக்கு அந்தராத்மாவாகி அவர்களைக்காட்டி லும் விலக்ஷணனுமான பரமபுருஷன் ஒருவனே. சந்த் ரன் ஒருவனே பலகுடனீர்களில் ப்ரதிபலிப்பதுபோல்

அவனொருவனே பல ஆத்மாக்களுக்கும் அந்தராத்மா வாயிருக்கிறான். ஸமஸ்த பூதங்களும் அவனொருவனை யே ஆத்மாவாகவுடையவை. ஆகையால் எந்த ப்ரா ணிக்கு அபகாரஞ் செய்யினும் அது அந்தப்ராணியைச் சரீரமாகவுடைய பரமாத்மாவுக்கே அபகாரஞ் செய்த தாம்" என்று நிச்சயித்துக்கொண்டு தன் தேஹ ஸௌக்யத்திற்காகப் பசுவைப்போல எந்த ப்ராணி யிடத்திலும் வைரம் வைத்துக் கொள்ளலாகாது. பசி யெடுக்கும் காலங்களில் ஆஹாரம் கிடைக்காமற் போயி னும் வருந்தலாகாது. தீரனாயிருக்கவேண்டும். ஒரு கால் ஆஹாரம் கிடைக்கினும் ஸந்தோஷப்படலாகாது. ஏனென்றால், ஆஹாரம் கிடைப்பதும் கிடையாததுமா கிய அவ்விரண்டும் தெய்வாதீனமல்லவா. ஆகையால், ஆஹாரம் கிடைக்கினும் கிடையாமற் போயினும் தீரனா யிருக்கவேண்டும். (ஆனால் பிக்ஷையெடுக்கிற ப்ரயாஸ மேயில்லாதிருக்கலாமோவென்றால்; சொல்லுகிறேன்). ஆஹாரத்திற்காக யத்னஞ் செய்யவேண்டியது ஆவஶ் யகம். ப்ராணன்களைத் தரித்துக்கொண்டிருக்கவேண் டுமல்லவா? அதற்கு என்ன ப்ரயோஜனமென்றால், சரீ ரத்தில் ப்ராணன்கள் இருந்தாலல்லவோ தத்வங்களை ஆராய்ந்தறியலாம். தத்வங்களை அறிந்தாலல்லவோ ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடலாம். ஆகையால் தத்வங்களை ஆராய்ந்தறிவதற்காக ப்ராணன்களைத் தரித்துக்கொண்டிருக்க வேண்டும். ப்ராணதாரணத் திற்காக ஆஹாரந் தேடவேண்டும். ஒருகால் தான் ப்ரயத்னஞ் செய்யாமலே அன்னம் கிடைக்கில், அது நன்றாயிருப்பினும் நன்றாயிராமற் போயினும் அதின் குணகுணங்களைப் பாராமல் புசிக்கவேண்டும். அந் னம் வஸ்த்ரம் படுக்கை இவைகளிலும் குணகுணங்

களைப் பாராமல் கிடைத்ததைக் கிடைத்தபடியே அனு பவிக்கவேண்டும். ஜ்ஞானியாயிருப்பவன், சௌசம் ஆ சமனம் ஸ்னனம் இவைகளையும் மற்ற நியமங்களையும் சாஸ்த்ர சோதனைக்குட்பட்டுச் செய்யலாகாது. நிறை வாளனாகிய நான் சாஸ்த்ர விதிகளை லீலையினால் அனு ஷ்டிப்பதுபோல் கைங்கர்யம் ஸ்வரூபானுரூபமென்னும் புத்தியுடன் செய்யவேண்டும். இத்தகைய ஆசார ரத்துடன் இருப்பானாயின், அவனுக்கு தேஹா த்ம ப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ரமம் முதலிய விபரீத எண்ணங்கள் உண்டாகமாட்டா. அவன் ஸர்வ கால மும் எல்லாவற்றையும் என்னைக்காட்டிலும் வேறுபட் டவையன்றென்று பாவித்துக் கொண்டிருக்கிறானகை யால் அவனுக்கு அந்த விபரீத எண்ணங்கள் பறந்து போகின்றன. ஒருகால் அவை தொடர்ந்து வருமாயி னும் தேஹாவஸானத்தில் ஜகத்தையெல்லாம் என்னு டைய உருவங்களாகவே பார்த்துக்கொண்டிருந்த அந்த பாவனை உண்டாகப் பெற்று அதன் மஹிமையால் என்னை அடைகின்றான். (ஜகத்தெல்லாம் என்னுடைய உருவங்களேயென்னும் பாவனையுடையவனுக்கு தேஹா வஸானத்தில் தேஹாத்ம ப்ரமம் முதலியவை யெல்லாம் நிவர்த்திக்கின்றன. ஜீவதசையில் ஒருகால் தொடர்ந்து வரினும் அவை என்னுடைய ப்ராப்திக்குத் தடை செய் பவையாகிறதில்லை). (இதுவரையில்உபாயானுஷ்டானம் கைபுகுந்தவன் தேஹாவஸானம்வரையில் இருக்கவே ண்டிய நிலைமையைச் சொன்னேன். இனி ஸ்வதர்மநிஷ் டன் உபேயம் உபாயம் முதலியவற்றை அறிய விரும்பு வானாயின், அவன் நடக்கவேண்டிய நிலைமையைச் சொல்லுகிறேன்;கேட்பாயாக). விவேகமுடையவன் துக் கத்தையே மேல்வரும் பலனாகவுடைய சப்தாதி விஷயங்

களில் வெறுப்புற்று என்னைப் பெறுதற்கு ஸாதனமான தர்மத்தை அறிய விரும்புவானுயின், பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபரூபகுண விபூதிகளை நன்ருக ஆராய்ந்தறிந்து அவற்றையே மனனஞ்செய்துகொண்டிருக்குங் குருவை அடையவேண்டும். பரப்ரஹ்மஸ்வரூபத்தையும் அதன் ப்ராப்திக்கு ஸாதனம் முதலியவற்றின் ஸ்வரூபங்களையும் அறியும் வரையில் ஈய்வரனே இங்ஙனம் குருவாக உருவங்கொண்டு வந்திருக்கிருனென்று குருவை என்னைக் காட்டிலும் வேறுபட்டவனன்றென்றே பாவித்து இவனொரு மனுஷ்யனே யென்னும் புத்தியால் வரும் அஸூயையைத் துறந்து அவன் உபதேசிக்கும் அர்த்தங்களெல்லாம் உண்மையே யென்னும் ச்ரத்தையும் பக்தியும் ஆதரவும் உடையவனுகி அக்குருவுக்குச் சுய்ரூஷை செய்யவேண்டும். (இங்ஙனம் ஸதாசார்ய சுய்ரூஷையினுல் ஜ்ஞான பக்தி வைராக்யங்களைப் பெறவேண்டும்.) மனம் செவி வாய் கண் மூக்கு உடல் என்னும் இவ்விந்த்ரியங்களாறையும் வெல்லாமல் சப்தாதிவிஷயங்களில் மிகவும் அழுந்தின புத்தியுடையவனுகிச் சாஸ்த்ராப்யாஸ யோகாப்யாஸங்களால்விளையும்அறிவின்றிக்கேவலமான தண்டம் முதலிய ஆய்ரமலிங்கங்களால் எவன் ஜீவிக்கப் பார்க்கிருனோ, அவன் ஆத்மாவையும் ஆத்மாவுக்குஅந்தராத்மாவான என்னையும் வஞ்சித்தவனுவான். (ஆத்மா ஈய்வரனுக்குச் சேஷப்பட்டவனென்னும்சேஷத்வஜ்ஞானமில்லாமையால் ஆத்மாவையும் தன்னை ஸ்வதந்த்ரனுக நினைக்கையால் என்னையும் அவன் வஞ்சித்தவனே). ஆனதுபற்றியே அவன் பகவத்பக்தியாகிற தர்மத்தை அழித்தவனுவான். மற்றும், பகவத்பக்தியில்லாமையால் பாபங்களெல்லாம் கழியப் பெருமல் இஹலோக ஸுகம் பரலோக ஸுகம் ஆகிய இரண்டினின்றும் ப்ர

ஷ்டனாகிறான். ஸந்யாஸாஸ்ரமத்திலிருப்பவனுக்கு இந்த்ரிய நிக்ரஹம் ப்ராணிகளுக்கு த்ரோஹஞ் செய்யாமை ஆகிய இவை யிரண்டும் முக்யமான தர்மங்களாம். வானப்ரஸ்தனுக்குச் சாஸ்த்ரங்களில் சொல்லியபடி சரீரத்தை ஒடுக்குகையாகிற தவமும் ஆத்மபரமாத்மாக்களின் உண்மையை ஆராய்ந்தறிகையும் ஆகிய இவையிரண்டும் முக்யமான தர்மங்களாம். க்ருஹஸ்தனுக்கு ப்ராணிகளைப் பாதுகாக்கையும் பஞ்சமஹாயஜ்ஞங்களை அனுஷ்டிக்கையும் ஆகிய இவையிரண்டும் முக்யமான தர்மங்களாம். ப்ரஹ்மசர்யாஸ்ரமத்திலிருப்பவனுக்கு ஆசார்யனைப் பணிகையே முக்யமான தர்மமாம். ப்ரஹ்மசர்யம் தவம் சௌசம் ஸந்தோஷம் ப்ராணிகளிடத்தில் நட்பு ஆகிய இவை முக்யமாயிருக்கவேண்டியவை. க்ருஹஸ்தனுக்கு ப்ரஹ்மசர்யம் எப்படி ஸம்பவிக்குமென்று நினைக்கவேண்டாம். ருதுகாலம் தவிர மற்ற காலங்களில் ஸ்த்ரீகளைப் புணராதிருப்பானாயின், அதுவே க்ருஹஸ்தனுக்கு ப்ரஹ்மசர்யமாம். என்னைப் பணிவது ஸமஸ்தஆஸ்ரமஸ்தர்களுக்கும் முக்யமான தர்மம். இங்ஙனம் தத்தமக்கு ஏற்பட்ட வர்ணாஸ்ரமதர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு தேவதாந்த்ரங்களைப் பணிகையும என்னிடத்தில் ப்ரயோஜனாந்தரங்களை அபேக்ஷிக்கையும் தவிர்ந்து ஸமஸ்த பூதங்களும் நானேயென்னும் பாவனையுடையவனாகி எவன் என்னை என்றும் பணிகிறானோ, அவன் சீக்ரத்திலேயே என்னிடத்தில் பக்தியைப் பெறுவான். உத்தவரே! அவன் அந்த பக்தி வளர்ந்து நிலைநிற்கப்பெற்று அதனால் ஸமஸ்த பூதங்களுடைய ஸ்ருஷ்டி ப்ரளயங்களுக்குங் காரணனும ஸர்வகாரணனும் மஹேஸ்வரனும் ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவிறந்தவனாகையால் பரப்ரஹ்ம

மென்று கூறப்படுபவனுமாகிய என்னை அடைகின்றான். இங்ஙனம் தன்னுடைய வர்ணாஶ்ரமங்களுக்கு ஏற்பட்ட தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு வருவானாயின், மனம் பரிசுத்தமாகப் பெற்று என்னுடைய ஸ்வரூப ஸ்வபாவாதிகளை நன்றாக அறிந்து சாஸ்த்ரஜ்ஞானம் உபாஸனஜ்ஞானம் இவையிரண்டும் அமைந்து விரக்தனாகி என்னை அடைகின்றான். வர்ணாஶ்ரமங்களிலிருப்பவர் அனுஷ்டிக்கவேண்டுமென்று நிரூபிக்கப்பட்ட ஆசாரமென்னும் பெயருடைய இந்த தர்மம் என்விஷயமான பக்திக்கு அங்கமாயிருக்குமாயின் மோக்ஷத்தை நிறைவேற்றிக் கொடுப்பதாகி மேன்மை பெற்றிருக்கும். (வர்ணாஶ்ரமதர்மானுஷ்டானத்தினால் பக்தியோகத்தை வளர்த்திக்கொண்டு அப்பக்தியினால் என்னைப் பெறுவான்). நல்லியற்கையுடையவரே! என்னுடைய பக்தன் தனக்கு ஏற்பட்ட வர்ணாஶ்ரமதர்மங்களால் எப்படி என்னைப் பெறுவானோ அதைச் சொல்லவேண்டுமென்று என்னைக் கேட்டீரல்லவா. அதைப்பற்றி விசதமாக மொழிந்தேன். பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

பக்தியோகத்தை அனுஷ்டிக்க முடியாதவனுக்கு ந்யாஸமென்றும் ப்ரபத்தியென்றும் வழங்கிவரும் உபாயத்தை உபதேசிக்கை.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—ஶாஸ்த்ராப்யாஸத்தினாலுண்டாகும் ஜ்ஞானமாவது கேவலம் பெரியோர்களைப் பணிந்து அவர்களுடைய உபதேசத்தினாலுண்டாகும் ஜ்ஞானமாவது அமைந்தவனும் சாஸ்த்ரங்களுக்கு விருத்தமல்லாத தர்க்கங்களை அறிந்தவனும் க்ருஷி முதலிய லௌகிககர்மங்களால் விளையும் பலன்களைப்

போல் வைதிகமான யாகாதிகர்மங்களால் விளையும் ஸ்வர்க்காதிபலன்களும் அநித்யங்களேயென்னும் ஊஹ முடையவனும் மனஷுக்கமுற்றவனுமாகிய புருஷன் பக வானுக்குச் சேஷமாயிருக்கையையே முக்யரஸமாக வுடைய ஆத்மாவுக்கு இச்சரீரம் பகவானுடைய மாயை யினால் விளைந்ததென்று தெரிந்துகொண்டு ஜ்ஞான ஸ்வ ரூபனான ஆத்மா ஸர்வசேஷியும் ஸர்வாந்தராத்மாவும் உபாயோபேயபூதனும் ஸத்யஸங்கல்பனும் பரமகாரு ணிகனும் ஒரு விசேஷங்களையும் எதிர் பாராமல் ஸர்வ லோகஸம்ரக்ஷகனுமாகிய என்னிடத்தில் அதீனமா யிருப்பதென்று அநுஸந்திக்கவேண்டும். பகவானுக்குச் சேஷமாயிருக்கையையே முக்யரஸமாகவுடையவனும் ப்ரக்ருதிஸம்பந்தத்தினின்று விடுபட்ட ஆத்மாவினு டைய அனுபவத்தில் கால்தாழாமல் பகவத்ப்ராப்தியை விரும்புகின்றவனுமாகிய ஜ்ஞானி தனக்குப் பெறவேண் டிய ப்ரயோஜனமாக என்னையே விரும்புவானன்றி மற் றொன்றையும் விரும்பமாட்டான். அவன் என்னைப் பெறு தற்கு என்னையே உபாயமாகப் பற்றியிருப்பவனன்றி மற் றொன்றை உபாயமாக நினைக்கமாட்டான். அவனுக்கு என்னையொழிய ஸ்வர்க்கமாவது மோக்ஷமாவது மற்ற எந்தப் பொருளும் ப்ரியமன்று. சரீரம் பகவானுடைய மா யையினால் விளைந்ததென்றும் ப்ரக்ருதியைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மா பகவானுக்குச் சேஷமாயிருக் கையையே முக்யரஸமாகவுடையவனென்றும் பகவானே உபாயமும் உபேயமுமென்றும் இவ்வறிவுகள் அமைந்த வர்களே ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷண மாயிருப்பதும் எல்லாவற்றிலும் மேன்மையுற்றிருப்பது மாகிய என் ஸ்வரூபத்தை அறிகிறார்கள். ஜ்ஞானி என க்கு மிகவும் ப்ரியமானவன். இந்த ஜ்ஞானி என்னை யொ

ழிய ஆத்மதாரணம் ஸம்பவிக்காதென்னும் ஜ்ஞானத்தி ஞல் என்னைத் தரிப்பிக்கிருன். (நான் தரித்திருப்பது அவனுலேயே. ஏனென்ருல் அவன் என்னை யொழியத் தனக்குத் தாரணம் ஸம்பவிக்காதென்று என்னையே சிறந்த ப்ரயோஜனமாகப் பற்றியிருக்கிருன். என்னை எவர்கள் எப்படி அடைகிருர்களோ அவர்களை நான் அப்படியே அடையுந்தன்மையுடையவனுகையால் எனக் கும் அவனை யொழிய ஆத்மதாரணம் ஸம்பவிக்கிற தில்லை). ('சரீரம் ப்ரக்ருதியின் பரிணுமம்; அநித்யம். இதை ஆத்மாவென்று நினைப்பது ப்ரமமே. ஆகையால் இதன்போஷணத்திற்காக நாம் வருந்துவது அஜ்ஞா னமே. இது பகவானுடைய ஸங்கல்பத்தினுல் ஏற்பட் டது' என்னும் ஜ்ஞானத்தை முன்னிட்டுக்கொண்டே பகவானிடத்தில் ஆத்மஸமர்ப்பணம் செய்யவேண்டும்.) ஏனென்ருல், கீழ்ச் சொன்ன ஜ்ஞானலேசத்தினுலுண் டாகும் சுத்தியைத் தவம் புண்யதீர்த்தம் ஜபம் தானம் இவைகளாவது பரிசுத்தங்களான சௌசம் ஆசமனம் முதலிய மற்றவைகளாவது விளைக்கவல்லவையாகமாட் டா. உத்தவரே! ஆகையால் அத்தகைய ஜ்ஞானத் தை முன்னிட்டுக் கொண்டு அந்தராத்மாவான என் னையே ப்ராப்யனுகவும் ப்ராபகனுகவும் அறிந்து சரீரம் ப்ரக்ருதிபரிணுமமென்றும் பகவானுடைய ஸங்கல்பத்தி ஞல் விளைந்ததென்றும் ஆத்மா ப்ரக்ருதிவிலக்ஷணனெ ன்றும் பகவானுக்குச் சேஷமாயிருக்கையையே முக்ய ரஸமாகவுடையவனென்றும் அறிகையாகிற ஜ்ஞா னமும் பகவானே உபாயமும் உபேயமுமென்னும் அத் யவஸாயமாகிற விஜ்ஞானமும் அமைந்து என்னிடத் தில் பக்தியினுல் மனம் தெளியப்பெற்று என்னைப் பணி வீராக. பல முனிவர்கள் இத்தகைய ஜ்ஞானவிஜ்ஞா

ணங்களாகிற யஜ்ஞத்தினால் ஜீவாத்மாவுக்கு அந்தராத்மாவாயிருப்பவனும் ஸர்வயஜ்ஞநிர்வாஹகனுமாகிய என்னை ஆராதித்து என்னை அனுபவிக்கையாகிற சிறந்த ஸித்தியைப் பெற்றார்கள். (முக்தியை அடைந்தார்கள்). உத்தவரே! ப்ரக்ருதியின் பரிணாமமான சரீரத்திற்குள் இருக்கிற ஸம்ஸாரியாகிற உமக்கு ஸ்ருஷ்டிஸ்திதி ப்ரளயங்களென்னும் இவை உண்டாகின்றனவே. இவை வந்தேரியேயன்றி இயற்கையில் ஏற்பட்டவையன்று. ஏனென்றால், சரீரஸம்பந்தத்திற்குப் பூர்வகாலத்திலும் சரீரஸம்பந்தம் கழிந்த பின்பும் அவை இல்லையல்லவா? மற்றும், இந்த ஜன்மாதிகள் (ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரளயங்கள்)இந்தச் சரீரத்திற்கேயன்றி உமக்குக் கிடையா. சரீரஸம்பந்தம் உண்டாவதற்கு முன்னமும் அது கழிந்ததற்குப் பின்னும் யாதொரு ஆத்மஸ்வரூபம் இருக்கின்றதோ, அத்தகைய ஆத்மஸ்வரூபம் இடையிலும் இருக்கவே இருக்கின்றது. அதற்கு வ்ருத்திக்ஷயாதிகள் கிடையா. தேஹம் அசேதனமான ப்ரக்ருதியின் பரிணாமம்; ஜன்மஜராமரணாதிவிகாரங்களுக் கிடமாயிருக்கும்; அநித்யம். ஆத்மாவோவென்றால் இவையொன்றுமின்றி நித்யனாயிருப்பவன். இங்ஙனம் அறிகையே ஜ்ஞானமென்று கூறப்படுகின்றது.

உத்தவர் சொல்லுகிறார்:—பெரியோர்களுடைய உபதேசபரம்பரையால் ப்ராப்தமாயிருப்பதும் நல்ல சுத்தியை விளைப்பதுமாகிய ஜ்ஞானத்தையும் ஜ்ஞானத்தின் கார்யமான வைராக்யத்தையும் அதனால் விளையக்கூடிய விஜ்ஞானத்தையும் (பகவானே உபாயமும் உபேயமுமென்னும் அத்யவஸாயஜ்ஞானத்தையும்) பெரியோர்களும் தேடும்படி பரமகோப்யமான உன்னுடைய பக்தியோகத்தையும் எனக்கு விரிவாகச் சொல்லவேண்டும்.

ஈமனே! பொறுக்கமுடியாத ஸம்ஸார மார்க்கத்தில் ஆத்யாத்மிகம் முதலிய மூன்று தாபங்களால் பீடிக்கப் பட்டுப் பரிதபித்துக்கொண்டிருக்கும் புருஷனுக்கு மோக்ஷஸுகத்தைப் பெய்பவைகளும் குடைபோல் நிழலைக் கொடுத்து ரக்ஷிப்பவைகளுமாகிய உன்னுடைய திருவடிகளையொழிய வேறொருஸாதனம் இருப்பதாக எனக்குத் தோற்றவில்லை. (இத்தகைய அத்யவஸாயமுடைய நீ இதை ஏன் கேட்கிறாயென்றால், சொல்லுகிறேன். ஸம்ஸாரமாகிற பாழியில் விழுந்து காலமாகிற ஸர்ப்பத்தினால் கடியுண்டு அற்பமான சப்தாதிவிஷயஸுகங்களில் பேராவலுற்றிருக்கிற இந்த ஜனத்தை உன்கருணையால் கரையேற்றுவாயாக. மஹானுபாவ! கரையேற்றுவது எப்படி யென்றால், மோக்ஷத்தை வெளியிடுகிற உன் வாயமுதங்களால் நன்கு நனைப்பாயாக. அவ்வளவில் இந்த ஜனம் கரையேறும்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—முன்பு ராஜனை யுதிஷ்டிரர் நாங்கள் எல்லோரும் கேட்டுக் கொண்டிருக்கையில் இந்த விஷயத்தைக் குறித்து இங்ஙனமே பகவத் பக்தியென்னும் தர்மத்தை அனுஷ்டிப்பவர்களில் சிறந்தவராகிய பீஷ்மரை வினவினார். அவர் வினவுவதற்கு என்ன ப்ரஸக்தி யென்றால் சொல்லுகிறேன். பாரத யுத்தம் முடிந்த பின்பு நண்பர்களுடைய மரணத்தினால் மனம் கலங்கப்பெற்ற யுதிஷ்டிரர் அந்த மனக் கலக்கம் தீரும்பொருட்டுப் பல தர்மங்களைக் கேட்டு அனந்தரம் மோக்ஷதர்மங்களை வினவினார். அந்த ப்ரஸங்கத்தில் நீர் யாது வினவினீரோ இதையே அவரும் பீஷ்மரை இங்ஙனமே வினவினார். அப்பொழுது பீஷ்மருடைய முகத்தினின்றும் கேட்ட அந்த மோக்ஷ

தர்மங்களையும் ஜ்ஞானம் விஜ்ஞானம் வைராக்யம் ஶ்ரத்தை பக்தி இவைகளையும் சொல்லுகிறேன்; கேட்பீராக. உத்தவரே! இதோ புலப்படுகின்ற தேவமனுஷ்யாதி சரீரங்களில் ஶப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் மலமூத்ரங்களை விடுதல் வேலை செய்தல் நடை பேச்சு இவ்வொன்பது பதார்த்தங்களையும், செவி வாய் கண் மூக்கு உடல் வாக்குபாணி பாத பாயு உபஸ்தங்கள் மனம் ஆகிய பதினொரு இந்த்ரியங்களையும் பஞ்ச பூதங்களையும் ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற மூன்று குணங்களையும் ஜ்ஞானத்தையே வடிவாகவுடைய ஆத்மாவையும் உள்ளபடி அறிகையே ஜ்ஞானமென்று நான் நிச்சயித்திருக்கிறேன். ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணனான என்னையே உபாயமாகவும் உபேயமாகவும் திடமாக நினைத்திருக்கையே விஜ்ஞானமாம். ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரளயங்கள் மூன்றும் ஸத்வரஜஸ்தமோ குணங்களின் பரிணமங்களான தேஹங்களுக்கேயுள்ளவையன்றி அவை ஆத்மாக்களுக்குக் கிடையாவென்றும், ஆகையால் ஆத்மாக்கள் தேஹங்களைக்காட்டிலும் வேறுபட்டவர்களென்றும் பகவானுக்கே சேஷப்பட்டவர்களென்றும் தெளிவாக அறிந்து இவ்வறிவுடன் பகவானையே உபாயமாகவும் உபேயமாகவும் அத்யவஸிக்கை விஜ்ஞானமாமன்றி இவ்வறிவின்றிக் கேவலம் பகவானை அங்ஙனம் நினைக்கை விஜ்ஞானமாகமாட்டாது. சரீரம் பால்ய யௌவன வார்த்தகாதிகளான பல தசைகளை அடைகின்றதாகி வெவ்வேறாக மாறிக்கொண்டேயிருக்கின்றது. அத்தகைய சரீரத்தில் ஜீவாத்மா ஒருவனாகவே தொடர்ந்து கொண்டு வருகின்றான். பால்ய தசையை அடைந்த சரீரத்திலிருந்த ஜீவாத்மாவே யௌவனதசையை அடைந்த சரீரத்தி

லும் தொடர்ந்திருக்கின்றான். அச்சரீரத்திலுள்ள ஜீவ னே வார்த்தக தசையை அடைந்த சரீரத்திலும் தொடர்ந்து வருகின்றான். அன்றியும், அச்சரீரம் அழியும் பொழுதும் ஜீவாத்மா அழியாமல் அங்ஙனமே மிகுந்திருக்கின்றான். இங்ஙனம் எவ்வகை விகாரங்களுமின்றி ஒருவாறாயிருக்கின்ற ஆத்மஸ்வரூபமே ஸத்தென்று கூறப்படுமென்றுணர்கையும் ஜ்ஞானமாம். ஶ்ருதியென்றும் ப்ரத்யக்ஷமென்றும் ஐதிஹ்யாதிகளென்றும் அனுமானமென்றும் ப்ரமாணங்கள் நான்கு வகைப்பட்டிருக்கின்றன. அவற்றில் ஶ்ருதி ஸ்வர்க்காதிபலன்களை விரும்புவோர்கள் யஜ்ஞாதி கர்மங்களைச் செய்யவேண்டுமென்று விதிக்கின்றது. க்ருஷி முதலிய கர்மங்களால் அன்னாதி பலன்களை நாம் ப்ரத்யக்ஷமாகவே அனுபவித்துக் கொண்டு வருகிறோம். ஐதிஹ்யாதிகளும் ஶ்ருதியைப்போலவே அந்தந்த பலன்களை விரும்புகிறவர்களுக்கு அவ்வவற்றிற்குரிய கர்மங்களை விதிக்கின்றன. ஔஷதாதிகள் ஆரோக்யாதிகளை விளைக்கின்றனவென்று ஊஹிக்கை அனுமானம். இங்ஙனம் ஶ்ருதிமுதலிய ப்ரமாணங்களால் விதிக்கப்பட்ட யஜ்ஞாதி கர்மங்களால் விளைகின்ற ஸ்வர்க்காதி பலன்களெல்லாம் ஒருவகையாயில்லாமையையும் தாரதம்யமாயிருப்பதையும் நஶ்வரமாயிருப்பதையும் ஆராய்ந்து 'ப்ரத்யக்ஷத்தில் ஸித்தமான அன்னாதிபலன்களைப்போல் அப்ரத்யக்ஷமான ப்ரஹ்மாதிபத்யம்வரையிலுள்ள எல்லாப்பலன்களும் நஶ்வரங்களே; மற்றும் துக்கத்தை உட்கொண்டிருப்பவைகளே' என்று நிச்சயித்துக் கொண்டு ஜ்ஞானியாயிருப்பவன் அவற்றில் வைராக்யத்தை அடையவேண்டும். உத்தவரே! என்னிடத்தில் மிகவும் ப்ரீதியுள்ள நீர் பக்தி யோகத்தைப்பற்றி வினவுகையில் முன்னமே அதை

உமக்கு விரிவாக மொழிந்தேன். தோஷமற்றவரே! அதன் காரணங்களையும் அப்பொழுதே உமக்குக் கூறினேன். இப்பொழுது அந்த பக்தியோக காரணங்களில் அந்தரங்கமாய்ச் சிறந்த காரணம் எதுவோ அதை மறுபடியும் சொல்லுகிறேன்; கேட்பீராக. அம்ருதம் போன்ற என்னுடைய கதையைக் கேட்கை முதலியவற்றில் ச்ரத்தையும், ஸர்வகாலமும் என் குணங்களைப் பேசுகையும், என்னைப் பூஜிப்பதில் ஆஸக்தியும், என்னுடைய ஜன்ம கர்மங்களை வெளியிடுகிற வசனங்களால் என்னைத் துதிக்கையும், என்னுடைய ஆலயங்களை விளக்குவது மெழுகுவது முதலிய என் பரிசர்யையில் ஆதரமும், கை கால் தலை முதலிய அங்கங்களெல்லாம் பூமியில் படும்படி விழுந்து என்னை நமஸ்காரஞ் செய்கையும, என்னுடைய பக்தர்களை விசேஷமாகப் பூஜிக்கையும், ஸமஸ்த பூதங்களும் பரமாத்மஸ்வரூபங்களே யென்று பாவிக்கையும், சரீர வியாபாரங்களையெல்லாம் என்னுடைய ஆராதனத்திற்கு வேண்டிய துளஸி புஷ்பம் முதலியவைகளைச் சேகரிப்பதில் உபயோகப்படுத்துகையும், லௌகிக வியவஹாரங்களிலும் என் குணங்களைச் சொல்லுகையும், மனத்தை என்னிடத்தில் நிலைபெறச் செய்கையும், ப்ரயோஜனாந்தரங்களில் எதையும் விரும்பாமையும், என்னுடைய முகோல்லாஸத்திற்காகப் பணஞ் செலவழிக்கையும், போகஸாதனமான சந்தனாதிகள் பிள்ளையைச் சீராட்டுதல் முதலிய ஸுகங்கள் இவைகளைத் துறக்கையும், யாகம் [illegible]ம் ஹோமம் அதிதிகளைப் புசிப்பிக்கை ஏகாதச[illegible]ஸம் முதலிய விரதம் மற்றும் சாஸ்த்ரங்களில் [illegible]லிய [illegible]வம் ஆகிய இவையெல்லாவற்றையும் என்னு[illegible]ய ப்ரீதி[illegible]ாகச் செய்கையும் தானும் தன்னுடைய

வைகளும் பகவானுக்கே அதீனங்களென்று அனுஸந்திகையும் ஆகிய இத்தர்மங்களெல்லாம் மனுஷ்யர்கள் அனைவரும் ஸாதாரணமாய் அனுஷ்டிக்க வேண்டியவை. இந்த தர்மங்களால் என்னிடத்தில் பக்தி உண்டாகின்றது. இங்ஙனம் தர்மானுஷ்டானத்தினால் பக்தி உண்டாகப்பெற்ற புருஷனுக்கு எந்தப் புருஷார்த்தந்தான் கிடைக்க அரிது? ஸத்வகுணம் தலையெடுத்து ரஜஸ்தமோகுணங்கள் தலைசாய்ந்து ராகாதி தோஷங்களும் கழிந்து நிர்மலமாகிய மனத்தை அந்தராத்மாவாகிய என்னிடத்தில் எப்பொழுது அர்ப்பணஞ்செய்கிறானோ, அப்பொழுதே அப்புருஷன் தர்மம் ஜ்ஞானம் வைராக்யம் ஐஶ்வர்யம் இவையெல்லாவற்றையும் அடைகின்றான். மனம் ரஜஸ்தமோகுணங்களுக்குட்பட்டு தேஹத்தில் ஆஸக்தியுற்று இந்த்ரியங்களால் இழுக்கப்பட்டுச் சப்தாதிவிஷயங்களைத் தொடர்ந்தோடுமாயின், அப்பொழுது அப்புருஷனுக்கு அதர்மம் அஜ்ஞானம் அவைராக்யம் அனைஶ்வர்யம் இவையெல்லாம் ஸம்ருத்தமாயிருக்கும். என்னிடத்தில் ப்ரீதியை விளைக்குமதுவே பக்தியென்றும், ஸமஸ்த ஆத்மாக்களும் பரமாத்மைகஸ்வரூபர்களேயென்று பாவிக்கையே ஜ்ஞானமென்றும், சப்தாதி விஷயங்கள் அனர்த்த ஹேதுக்களென்று பாவித்து அவற்றில் மனப்பற்று செய்யாமையே வைராக்யமென்றும், அணிமாதிஸித்திகளே ஐஶ்வர்யமென்றும் கூறப்படும்.

உத்தவர் சொல்லுகிறார்:—சத்ருக்களை அழி[illegible]னே! யமம் நியமம் இவையிரண்டும் எத்தனை வகை[illegible]டிருக்கும். ப்ரபூ! க்ருஷ்ணா! சமம் தமம் திதி[illegible] த்ருதி இவை யாவை? தானமாவது யாது? தவம் [illegible] தகையது? ஶௌர்யம் ஸத்யம் இவை யா[illegible] [illegible]தமெ[illegible]

கிறார்களே; அது யாது? த்யாகம் தனம் இவை யாவை? இஷ்டமான தனம் எது? யஜ்ஞம் எது? தக்ஷிணை எது? ஸ்ரீவல்லப! புருஷனுக்கு பலம் எது? கேசவனே! தயை எது? லாபம் எது? வித்யை எது? லஜ்ஜை எது? செல்வம் எது? ஸுகதுக்கங்களென்பவை யாவை? பண்டிதன் எவன்? மூர்க்கன் எவன்? நல்வழி எது? தீவழி எது? ஸ்வர்க்கம் எது! பந்து எவன்? க்ருஹம் எது? நிறைவாளன் எவன்? ஏழை எவன்? க்ருபணன் எவன்? ப்ரபு எவன்? ஸத்புருஷர்களுக்கு ப்ரபுவே! நான் கேட்ட இந்த குணங்களையும் இவற்றிற்கு விபரீதமான துர்க்குணங்களையும் எனக்கு விவரித்துச் சொல்வாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ப்ராணிகளுக்கு த்ரோஹஞ் செய்ய நினையாமை, ப்ராணிகளுக்கு ஹிதமாகப் பேசுகை, பிறர் ஸொத்தை மனத்தினாலும் எடுக்காமை, எங்கும் மனப்பற்று செய்யாமை, வெட்கம், த்ரவ்யம் சேர்த்து வைத்துக் கொள்ளாமை, சாஸ்த்ரார்த்தங்களில் விஶ்வாஸம், ஸ்த்ரீஸங்கமற்றிருக்கை, வீண் பேச்சு பேசாமை, ஸ்திரமாயிருக்கை, பொறுமை, பாபத்தினின்று பயப்படுகை இப்பன்னிரண்டும் யமங்களாம். சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை அனுஷ்டிப்பதற்குரிய சுத்தியாகிய சௌசம், ஜபம், தவம், ஹோமம், ஶ்ரத்தை, அதிதிஸத்காரஞ் செய்கை, என்னை ஆராதிக்கை, தீர்த்தயாத்ரை செய்கை, பரோபகாரஞ்செய்கை, தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கை, ஆசார்யஸேவை ஆகிய இவை பன்னிரண்டும் நியமங்களாம். இந்த யமநியமங்களிரண்டையும் அனுஷ்டிப்பார்களாயின் அவை அவர்கள் விரும்பும் பலன்களையெல்லாம் கறக்கும். சமமாவது புத்தியை என்னிடத்தில் நிலைநிறுத்துகை. தம

மாவது வெளியிந்த்ரியங்களை அடக்குகை. திதிக்ஷையாவது துக்கங்களைப் பொறுக்கை. த்ருதியாவது நாக்கு உபஸ்தம் இவைகளை அடக்குகை. ப்ராணிகளுக்கு த்ரோஹஞ் செய்யாமையே தானங்களில் சிறந்த தானமாம். போகங்களில் விருப்பமில்லாமையே சிறந்த தவமாம். பசி தாஹம் முதலியவைகளால் வருந்தாமையே பௌர்யமாம். எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபங்களேயென்று எல்லாவற்றையும் தாரதம்யமில்லாமல் பார்க்கையே ஸத்யமாம். ருதமாவது உள்ளதை உள்ளபடியே பேசுகையென்று தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். கர்மங்களில் 'நான் செய்கிறேன்' என்னும் அபிமானமில்லாமையே சௌசமாம். (கேவலம் ஸ்னானாதிகளால் விளையும் சுத்திமாத்ரம் சௌசமாகாது). கர்மங்களை அவற்றின் பலனை உத்தேசியாமல் செய்கையே த்யாகமென்று கூறப்படும். மனுஷ்யர்களுக்கு என்னிடத்தில் பக்தியை விளைக்குந்தர்மமே இஷ்டமான தனமாம். பகமென்று கூறப்படுகிற ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் மிகவும் அமைந்திருக்கிற நானே ஸ்வர்க்காதிகளுக்கு ஸாதனமான யஜ்ஞமாவேன். பெரியோர்கள் அருள் புரிந்து ஜ்ஞானோபதேசஞ் செய்வதற்கு ஹேதுவான வணக்கம் பணிவிடை முதலியவைகளே தக்ஷிணையாமன்றி ஸ்வர்ணாதிகளைக் கொடுக்கை தக்ஷிணையாகமாட்டாது. ப்ராணாயாமமே சிறந்த பலமாமன்றி தேஹபலம் பலமாகமாட்டாது. என்னுடைய ஐஸ்வர்யவீர்யாதிகள் பகமென்று கூறப்படும். என்னிடத்தில் சிறந்த பக்தி உண்டாகப் பெறுகையே லாபமாமன்றிப் பிள்ளை முதலியவை லாபமாகமாட்டா. ஆத்மாக்களிடத்தில் தேவ [illegible]யாதிபேதம் இல்லையென்னும் ஜ்ஞானமே வித்யையா[illegible]ன்றிக் கேவல

ஜ்ஞானம் வித்யையாகமாட்டாது. நிஷித்த கர்மங்களில் 'சீ! இவற்றைச் செய்யலாகாது' என்னும் ஜுகுப்ஸையே லஜ்ஜையாமன்றி வெறும் லஜ்ஜை லஜ்ஜையாகாது. பகவானைத் தவிர மற்ற எதையும் விரும்பாமை முதலிய குணங்களே அலங்காரமாமன்றிக் கிரீடம் முதலியவை அலங்காரமாகமாட்டா. துக்கங் கலந்த ஸுகம் நீங்கப்பெறுகையே ஸுகமாமன்றிப் போகங்களை அனுபவிக்கை ஸுகமாகமாட்டாது. 'சப்தாதி விஷய ஸுகங்களை அபேக்ஷிக்கையே துக்கமாம். ஸம்ஸாரபந்தமோக்ஷங்களின் காரணங்களை அறிந்தவனே பண்டிதனுவான். தேஹத்தில் அஹம்புத்தியும் (ஆத்மாபிமானமும்), தேஹானுபந்திகளிடத்தில் மமதாபுத்தியும் (என்னுடையதென்னும் அபிமானமும்) உடையவன் மூர்க்கனுவான். என்னைப் பெறுதற்கு ஹேதுவான ஜ்ஞானமே ஸன்மார்க்கமாமன்றி முள் கல் முதலியவையில்லாத வழி மார்க்கமாக மாட்டாது. சித்தம் சப்தாதிவிஷயங்களில் செல்லுகையே கெட்டவழியாமன்றித் திருடர் முதலிய உபத்ரவமுள்ள வழி கெட்டவழியாகாது. ஸத்வகுணம் தலையெடுக்கையே ஸ்வர்க்கமாமன்றி இந்த்ராதிகளுடைய லோகம் ஸ்வர்க்கமாகமாட்டாது. தமோகுணம் தலையெடுக்கையே நரகமாமன்றித் தாமிஸ்ராதிகள் நரகமாகமாட்டா. அஜ்ஞானத்தைப் போக்கும் ஆசார்யரூபியான நானே பந்துவாவேனன்றித் தந்தை முதலியவர் பந்துக்களாகமாட்டார்கள். மனுஷ்யசரீரமே க்ருஹமாமன்றி உப்பரிகை முதலிய போகஸ்தானங்கள் க்ருஹமாகமாட்டா. குணங்கள் அமைந்தவன் பணக்காரனுவானன்றிக் கேவலம் பணமுள்ளவன் பணக்காரனுகமாட்டான். தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷம் அடைந்தவன்

எவனோ, அவனே தரித்ரனுவான். இந்த்ரியங்களை வெல்லமுடியாமல் அவற்றின் வழியே போகிறவன் மனஇரக்கத்திற்கிடமான க்ருபணனுவான். சப்தாதி விஷயங்களில் பற்றற்ற மதியுடையவன் ஈஸ்வரனுவான். அவற்றில் பற்றுடையவன் அனீஸ்வரனுவான். உத்தவரே! நீர் கேட்ட விஷயங்களுக்கெல்லாம் இங்ஙனம் நன்கு நிரூபித்து மறுமொழி கூறினேன். 'இங்ஙனம் மோக்ஷத்திற்கு வேண்டிய யமநியமாதிகளை மொழிந்தாய். இங்ஙனமே மோக்ஷவிரோதிகளையும் விவரித்துச் சொல்லவேண்டும்' என்று வினவக்கூடும். அவற்றையெல்லாம் தனித்தனியே பலவாறு நிரூபித்துச் சொல்லுவதனுல் என்ன ப்ரயோஜனம்? மோக்ஷத்திற்கு வேண்டியவை இன்னவையென்றும் விரோதிகள் இன்னவையென்றும் அவற்றைச் சுருக்கிச் சொல்லுகிறேன், கேளும். ஸம்ஸாரிகள் இஹத்திலும் பரத்திலுமுள்ள சப்தாதி விஷய ஸுகங்களையும் அவற்றின் ஸாதனங்களையும் அனுகூலமென்று நினைத்திருப்பார்கள்; ஸாம்ஸாரிக துக்கங்களையும் அவற்றின் ஸாதனங்களையும் ப்ரதிகூலமென்று நினைத்திருப்பார்கள். இவ்விரண்டு நினைவுகளும் மோக்ஷவிரோதியாகையால் முமுக்ஷுவுக்கு தோஷமேயாம். ஸம்ஸாரிகள் குணமாக நினைக்கிற ஸுகங்கள், அவர்கள் தோஷமாக நினைக்கிற துக்கங்கள் ஆகிய இரண்டையும் தோஷமென்று நினைத்துத் துறந்திருக்கையே முமுக்ஷுவுக்குக் குணமாம். பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஜ்ஞானயோகம் கர்மயோகம் பக்தியோகம் இவைகளையும், இவற்றின் அதிகாரிகளையும் நிரூபித்தல்.

உத்தவர் சொல்லுகிறார்:— தாமரைக் கண்ணனே! ஸம்ஸாரிகள் குணதோஷங்களென்று நினைக்கிற ஸுக துக்கங்களிரண்டையும் துறக்கையே முமுக்ஷுவுக்குக் குணமாமென்று மொழிந்தனை. இஹலோகஸுகங்களும் அவற்றின் ஸாதனங்களும் ப்ரத்யக்ஷமாகையால் அவற்றை ஆராய்ந்தறிந்து துறக்கலாம்; பரலோகஸுகங்களும் அவற்றின் ஸாதனங்களும் கேவலம் வேத சாஸ்த்ரத்தினால் அறியக் கூடியவைகளாயிருக்கின்றன. 'இதைச் செய் இதைச் செய்யாதே' என்று விதி நிஷேத ஸ்வரூபமான அவ்வேதசாஸ்த்ரம் ஸர்வேஶ்வரனான உன்னுடைய ஆஜ்ஞையேயன்றி வேறன்று. அத்தகைய வேதம் 'இதைச் செய்' என்று சிலவற்றைக் குணமாகவும் 'இதைச் செய்யாதே' என்று சிலவற்றை தோஷமாகவும் நிரூபித்துச் சொல்லுகிறது. மற்றும், அது ப்ராஹ்மணாதி வர்ணங்களையும் அவற்றில் அனுலோமமாகவும் ப்ரதிலோமமாகவும் பிறக்கிற ஸங்கர வர்ணங்களையும் குறித்து இன்னவன் இன்ன வயதில் இன்ன தேசத்தில் இன்ன காலத்தில் இன்ன த்ரவ்யத்தைக் கொண்டு இன்ன விதியை அனுஷ்டிக்கவேண்டுமென்றும், அவ்விதிகளை அனுஷ்டிக்கிறவர்களுக்குப் பலன் ஸ்வர்க்கமென்றும் நிஷித்தங்களைச் செய்கிறவர்களுக்குப் பலன் நரகமென்றும் நிரூபித்துச் சொல்லுகிறது. 'இதைச் செய்யலாகாது' என்று நிஷேதரூபமாயும் 'இதைச் செய்ய வேண்டும்' என்று விதிரூபமாயுமிருக்கிற வேதரூபமான உன்வசனம் இது குணமென்றும் இது தோஷமென்றும் பேதபுத்தியை உண்டாக்கியல்லது புருஷர்களுக்கு எப்

படி நன்மையை அறிவிக்கவல்லதாகும்? குணதோஷ பேதபுத்தியையும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் உண்டாக்கித்தான் புருஷார்த்தத்தை அறிவிக்கும். ஜகதீசனே! அலௌகிகமான ஸ்வர்க்காதி புருஷார்த்தங்களையும் யஜ்ஞாதிகளான அவற்றின் ஸாதனங்களையும் ப்ரத்யக்ஷத்தினால் அறியமுடியாது. பித்ருக்களுக்கும் தேவதைகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் அவற்றை அறிதற்கு வேதமே சிறந்த கண்ணாயிருக்கின்றது. ஆகையால் குணதோஷ பேதஜ்ஞானம் உனது ஆஜ்ஞாரூபமான அவ்வேதத்தினால்தான் உண்டாகவேண்டுமன்றி ஸ்வயமாக உண்டாகாது. இப்படியிருக்க இப்பொழுது இது குணமென்றும் இது தோஷமென்றும் பேதபுத்தியைத் துறக்கையே முமுக்ஷுவுக்குக் குணமென்று அதற்கு விபரீதமாக மொழிகின்றனை. ஆகையால் இதை நிர்ணயிக்க முடியாமல் மதிமயக்கமாயிருக்கின்றது.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மனுஷ்யர்களுக்கு நன்மையை விளக்கும்பொருட்டு ஜ்ஞானயோகமென்றும் கர்மயோகமென்றும் பக்தியோகமென்றும் மூன்று உபாயங்களைச் சொன்னேன். இவைகளைத் தவிர மற்றொரு உபாயம் எங்கும் கிடையாது. (ஸமஸ்தவேதங்களும் அவற்றைத் தொடர்ந்த ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதிகளும் இவற்றையே நிரூபிக்கின்றன.) இவற்றுள் 'கர்மபலன்களெல்லாம் துக்கரூபமாயிருக்கின்றன' என்று அவற்றில் வெறுப்புற்று அவற்றிற்கு ஸாதனமான கர்மங்களைத் துறந்தவர்களுக்கு ஜ்ஞானயோகத்தில் அதிகாரம். அவற்றில் மனவெறுப்பின்றி அவற்றையே விரும்பி அந்தக் கர்மங்களை அனுஷ்டிப்பதில் உத்ஸாஹமுடையவர்களுக்குக் கர்மயோகத்தில் அதிகாரம். எவன் தெய்வாதீனமாய் என்னுடைய கதை

யைக் கேட்பது முதலியவற்றில் ப்ரீதியுண்டாகப் பெற்றுக் கர்மபலன்களில் அவ்வளவாக வெறுப்புறுமற் போயினும் தோஷம் தோன்றுகையால் அதிக ஆஸக்தியில்லாதிருக்கிறுனே, அவன் பக்தியோகத்தை அனுஷ்டிக்கத் தகுந்தவன். அவனுக்கு அது மோக்ஷ ஸித்தியைக் கொடுக்கும். (கர்ம பலன்களில் நன்கு வெறுப்புண்டாகாமல் அவற்றில் வாஸனை தொடர்ந்துகொண்டேயிருக்குமாயின், கர்மங்களையே செய்ய முயற்சிகொள்வானன்றி உன் கதையைக் கேட்பது முதலியவற்றில் இரங்கமாட்டானேயென்றால், சொல்லுகிறேன்; கேள்). எதுவரையில் நன்றாக வெறுப்புண்டாகப்பெறுதிருக்கிறுனே, எதுவரையில் என் கதையைக் கேட்பது முதலியவற்றில் ஶ்ரத்தை நன்றாக விளையாதிருக்கின்றதோ அதுவரையில் கர்மங்களை அவற்றின் பலன்களை விரும்பாமல் அனுஷ்டித்துக்கொண்டு வரவேண்டும். உத்தவரே! இங்ஙனம் ஸந்த்யாவந்தனம் முதலிய ஆசாரங்களில் நிலைநின்று பஞ்சமஹாயஜ்ஞங்களால் என்னை ஆராதித்துக்கொண்டு அவற்றின் பலன்களை விரும்பாதிருப்பானுயின், ஸ்வர்க்கத்தையாவது நரகத்தையாவது அடையமாட்டான். இவற்றைத் தவிர பலாபிஸந்திக்கிடமான வேறு கர்மங்களைச் செய்யலாகாது. (ஸ்வர்க்க நரகங்களை அடையானுயின், பின்னை எதை அடைவானென்றால்) இந்த தேஹத்துடன் இருக்கும் வரையில் நிஷித்த கர்மங்களினின்றும் மீண்டு தன்னுடைய வர்ணாஶ்ரம தர்மங்களில் நிலைநின்று பரிசுத்தனுகிப் பலாபிஸந்தியாகிற அசுத்திக்கிடமல்லாத நல்ல ஞானயோகத்தைப்பெறுவான்; அல்லது ஏதோவொரு பாக்ய விசேஷத்தினால் என்விஷயமான பக்தியோகத்தையே பெற்றாலும் பெறுவான். ஸ்வர்க்கலோகத்திலிருப்பவர்களும் நரகத்

திலிருப்பவர்களும் 'இது ஜ்ஞானயோக பக்தியோகங்களால் மோக்ஷத்தை நிறைவேற்றிக் கொடுக்கும்' என்று இந்த மனுஷ்யதேஹத்தை விரும்புகிறார்கள். அந்த ஸ்வர்க்கசரீர நரகசரீரங்களிரண்டும் அந்த மோக்ஷ புருஷார்த்தத்தை நிறைவேற்றிக்கொடுக்க வல்லவையாகமாட்டா. (சாஸ்த்ரத்தில் மனுஷ்யர்களுக்கே அதிகாரம் உள்ளதாகையால் சாஸ்த்ரத்தில் விதித்தவைகளே புருஷார்த்தஸாதனங்களாகையால் அவற்றை அநுஷ்டிப்பதற்குரிய மனுஷ்ய சரீரமே புருஷார்த்தங்களை நிறைவேற்றிக் கொடுக்கவல்லதாம்). திறமையுள்ளவன் ஸ்வர்க்காநுபவத்தையாவது நரகாநுபவத்தையாவது விரும்பலாகாது. நரகாநுபவத்தை எங்ஙனம் விரும்பமாட்டானே, அங்ஙனமே ஸ்வர்க்காநுபவத்தையும் விரும்பலாகாது. மீளவும் இஹபரலோக ஸுகங்களுக்கு ஸாதனமான இந்த மனுஷ்யதேஹத்தையும் விரும்பலாகாது. மீளவும் தேஹத்தை அபேக்ஷிக்கிறது ஸுகாநுபவத்திற்கேயன்றி வேறன்று. அங்ஙனம் தேஹஸுகத்தை அபேக்ஷிப்பானாயின், மதிமயங்கிக் கடைசியில் ஸ்தாவர ஜன்மத்தைப் பெறுவான். ஆகையால் தேவாதிகளும் விரும்பும்படி மோக்ஷஸாதனமான மனுஷ்ய தேஹத்தை ஸ்வர்க்காதிகளுக்கு உபயோகப்படுத்தி வீண் செய்யலாகாது. எவன் இந்த மனுஷ்ய சரீரம் மரணம் அடைவதற்கு முன்னமே (திடமாயிருக்கும்பொழுதே) மரணம் அடையுந் தன்மையதாயினும் இம்மனுஷ்ய சரீரம் சிறந்த புருஷார்த்தமான மோக்ஷத்தை நிறைவேற்றிக் கொடுப்பதென்று தெரிந்துகொண்டு இஹபரலோகஸுகங்களில் கால் தாழ்கையாகிற மனவூக்கந் தவறுதலின்றி ஊக்கமுற்றிருக்கிறானே, அவ்வறிஞன் மோக்ஷத்திற்கு

உரியவனுவான். ஒரு பறவை தான் கூடுகட்டிக்கொண்டிருக்கிற மரத்தை யமனைப்போல் மன இரக்கமில்லாத புருஷர்கள் வெட்டிப்போடுவதைக் கண்டு தான் வாஸஞ்செய்யுமிடமாகிய கூடைத் துறந்து ஓடிப்போய் க்ஷேமப்படுவதுபோல், ஜீவன் ஹ்ருதயத்தில் தான்வாஸஞ்செய்துகொண்டிருக்கிற தேஹம் தினபக்ஷமாஸாதி காலபரிணமத்தினுல் ஆயுள்காலம் முடிந்து மரணம் அடைவதற்கு முன் தேஹஸுகங்களில் கால்தாழாமல் அத்தேஹத்தில் தன்னுடைய வாஸஸ்தானமாகிய ஹ்ருதயத்தினின்று தான் மீண்டு போவதற்குரிய பிரயத்னங்களைச் செய்து மோக்ஷமாகிற க்ஷேமத்தை அடையவேண்டும். பகல் இரவு முதலிய காலாவயவங்களால் ஆயுள் க்ஷீணிப்பதை அறிந்து பயந்து நடுங்கி இஹபரலோகஸுகங்களில் மனப்பற்றைத் துறந்து மப்தாதிவிஷயஸுகங்களைப்பெறுதற்குரிய வியாபாரங்களையெல்லாம் ஒழித்து ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனுன என்னை அறிந்து உபாஸித்து வருவானுயின், ப்ரக்ருதி பந்தத்தினின்று விடுபடுவான். மனுஷ்யதேஹம் ஸமஸ்த புருஷார்த்தங்களையும் பெறுதற்கு முக்ய காரணமாயிருப்பது; எவ்வளவு முயற்சி செய்யினும் இதைக்கிடைப்பது அரிது. இது ஸம்ஸாரஸாகரத்தைக் கடப்பதற்கு ஓடம்போன்றிருக்கும். இந்த ஓடத்திற்கு குருவே கர்ணதாரன். நினைத்தபொழுது உடனிருந்து நடத்துந் தன்மையனுன நானே இதற்கு அனுகூலமான காற்ருயிருந்து இதைத் தள்ளுவேன். கிடைக்க அரிதும் எல்லாவற்றையும் ஸாதித்துக்கொடுக்க வல்லதுமான மனுஷ்ய தேஹமாகிற இவ்வோடத்தை பாக்யவசத்தினுல் ஸுலபமாகப் பெற்றும் ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தை எவன் தாண்டாதிருக்கிருனே, அவன் ஆத்மஹத்யை

செய்தவனுவான். எப்பொழுது காம்யகர்மங்களெல்லாம் துக்கத்திற்கிடமாயிருக்கின்றனவென்று அவற்றில் வெறுப்புற்று அவற்றின் பலன்களிலும் விருப்பம் அறப்பெறுகிருனே, அப்பொழுதே அவன் இந்த்ரியங்களையெல்லாம் அடக்கி அப்யாஸத்தினுல் தன் மனத்தை வேறெங்கும் செல்லாதபடி என்னிடத்திலேயே நிலைநிறுத்த வேண்டும். மனத்தை என்னிடத்தில் நிலைநிறுத்தப்பார்க்கிலும் அது விஷயாந்த்ரங்களில் திரியத் தொடங்கிச் சீக்ரத்தில் நிலைப்படாதாயின், அப்பொழுது சோம்பலின்றி ஊக்கத்துடன் அதைத் தொடர்ந்தாற்போலிருந்து உபாயமாக ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளவேண்டும். மனதை அடக்கத்தை விடலாகாது. அதை அடக்கப் பார்க்கிலும் அது உட்படுகிறதில்லையேயென்று வெறுமனே இருக்கலாகாது. பின்னையோவென்ருல், ப்ராணன்களையும் இந்த்ரியங்களையும் வென்று ஸாத்விகாஹாரம் முதலியவற்ருல் ஸத்வகுணம் தலையெடுக்கும்படி செய்து அதனுல் புத்தி பரிசுத்தமாகப் பெற்று மனத்தை அடக்கி மெல்லமெல்ல ஸ்வாதீனப்படுத்தவேண்டும். அடக்க முடியாத குதிரையைத் தன்மனேபிப்ராயத்தின்படி நடத்த விரும்புகிறவன் அது போன வழியே விடுவதுபோல் விட்டு மெல்லமெல்ல ஸ்வாதீனப்படுத்துவதுபோல், மனத்தையும் அதுபோகிற வழியே விடுவதுபோல் விட்டு மெல்லமெல்ல ஸ்வாதீனப்படுத்தவேண்டும். இங்ஙனம் மனத்தை ஸ்வாதீனப்படுத்துகையே சிறந்த யோகமென்று பெரியோர்கள் நினைக்கிருர்கள். தத்வவிவேகத்தினுல் மஹத்து முதல் ப்ருதிவிவரையிலுமுள்ள ஸமஸ்த பதார்த்தங்களின் ஸ்ருஷ்டிக்ரமத்தை அனுலோமமாகவும் (முதலே பிடித்துக் கடைசி வரையிலும்) ப்ரளயக்ரமத்தை ப்ரதிலோமமாகவும் (கடை-

யே பிடித்து முதல் வரையிலும்) ஆராய்ந்தறிந்து மனத் தெளிவு உண்டாகும் வரையிலும் இந்த ஸ்ருஷ்டி ப்ரளயக்ரமங்களை அடிக்கடி சிந்தித்துக்கொண்டிருக்கவேண்டும். இங்ஙனம் தத்வ விசாரத்தினால் சிந்திக்கப்பட்ட ஸ்ருஷ்டி ப்ரளயாதிகளை அடிக்கடி சிந்திப்பானாயின், ஸம்ஸாரத்தில் வெறுப்பும் விரக்தியும் உண்டாகும். மனத்தை அடக்கவேண்டிய வழியையும் தத்வவிசாரத்தையும் அறிந்து ஸம்ஸாரத்தில் வெறுப்பும் விரக்தியும் உண்டாகப் பெறுவானாயின், அவனுடைய மனம் சப்தாதி விஷயங்களில் கால் தாழ்கையாகிற துஷ்டஸ்வபாவத்தைத் துறந்து ஸ்வாதீனப்படும். யம நியமாதிரூபமான யோகமார்க்கங்களாலும் தத்வவிசாரரூபமான வித்யையினாலும் மனத்தை ஸ்வாதீனப்படுத்த வேண்டும். அல்லது, என்னை அர்ச்சிப்பது த்யானிப்பது முதலிய வழியினாலாவது ஸ்வாதீனப்படுத்த வேண்டும். இந்த உபாயங்களால் மனத்தை வசப்படுத்திக் கொண்டு என்னை த்யானிக்கவேண்டும். இவை தவிர வேறு என்ன உபாயங்கள் செய்யினும் மனத்தைச் சப்தாதி விஷயங்களினின்றும் என்னிடத்தில் நிலைநிறுத்த முடியாது. யோகாப்யாஸத்தில் இழிந்தவன் மனவுக்கந்தவறிச் சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட கார்யத்தை எதையேனும் செய்வானாயின், அந்தப் பாபத்தை யோகத்தினாலேயே போக்கடித்துக்கொள்ளலாம். அவன் அதற்காக வேறு ப்ராயச்சித்தாதிகள் செய்ய வேண்டியதில்லை. எவனெவனுக்கு எந்தெந்த தர்மத்தில் அதிகாரம் ஏற்பட்டிருக்கிறதோ, அவனவன் தந்தனக்கேற்பட்ட அந்தந்த அதிகாரத்தில் நிலைநின்றிருக்கை அவனவனுக்குக் குணமாகும். அதினின்று மாறுகை தோஷமாம். (சூத்ரனுக்கு ப்ராஹ்மண தர்மம்

குணமாகாது. ஸம்ஸாரத்தில் விரக்தி உண்டாகப் பெருதவனுக்கு ஸந்யாஸிதர்மம் குணமாகாது. விரக்தி உண்டாகப் பெற்றவனுக்கு அதுவே குணமாம்.) குணதோஷங்களைப்பற்றிய நிர்ணயம் இதுவே யென்று கண்டு கொள்வாயாக. மோக்ஷத்தில் விருப்பமுடையவன் பலாபிஸந்தியினுல் அசுத்தமான காம்ய கர்மங்களையும் அசுத்திக்கிடமான பற்றுக்களையும் துறக்கவேண்டுமென்று தெரிவிக்கும் பொருட்டு, உலகத்தவர் குணமென்றும் தோஷமென்றும் நினைக்கிற ஸுகதுக்கங்களை அங்ஙனம் நினைக்கை முமுக்ஷுவுக்கு தோஷமென்றும் அவையிரண்டும் மோக்ஷவிரோதியாகையால் தோஷமேயென்று அவற்றைத் துறக்கை அவனுக்குக் குணமென்றும் நியமித்துச் சொன்னேன். குணதோஷங்களை நினைக்கை தோஷமென்றும் அவையிரண்டையும் துறக்கை குணமென்றும் சொன்னது முமுக்ஷுவைப்பற்றியேயன்றிப் புபுக்ஷுவைப்பற்றி (சப்தாதி விஷயபோகங்களில் விருப்பமுடையவனைப்பற்றி) யன்று. ஆகையால் நான் சொன்னதற்கு விரோதமில்லை யென்று கண்டு கொள்வாயாக. ஆனதுபற்றி மோக்ஷத்தில் விருப்பமுடையவன் காம்ய கர்மங்களையும் அவற்றின்பலன்களையும் குணமென்றும் துக்கங்களைத் தோஷமென்றும் நினைத்து அவற்றை நிவ்ருத்தி செய்யும் உபாயங்களில் ப்ரவர்த்திக்கலாகாது. கீழ்ச்சொன்ன அந்தரங்கஸாதனங்களால் என்னுடைய கதைகளில் ஶ்ரத்தை உண்டாகப் பெற்றவன் ஸமஸ்தமான காம்ய கர்மங்களிலும் (பலாபிஸந்தியுடன் செய்யுங் கர்மங்களிலும்) வெறுப்புற்றுக் கர்மபலன்கள் துக்கரூபங்க ளென்று நன்ருக அறிவானாயினும் அவற்றைத் துறக்கவல்லனுகமாட்டான். அனந்தரம் பக்தியாலேயே எல்லாம் நிறைவேறுமென்று திட

மான நிச்சயமுடையவனாகி அந்த நிச்சயத்தில் ஸ்ரத்தை உண்டாகப்பெற்று ப்ரீதியுடன் என்னைப் பணிய வேண்டும். அந்தக் கர்மபலன்களை அனுபவித்துக் கொண்டிருப்பினும் அவை மேன்மேலும் துக்கத்தையே பலமாகவுடையவை யென்றறிந்தவனாகையால் அவற்றை நிந்தித்துக்கொண்டே ப்ரீதியுடன் என்னைப் பணியவேண்டும். இங்ஙனம் அங்கஸாதனங்கள் எல்லாம் அமைந்த பக்தியோகத்தினால் எப்பொழுதும் என்னைப் பணிபவனாகி என் ஸ்வரூப ரூப குண விபூதிகளையே மனனஞ் செய்துகொண்டிருக்குந் தன்மையனுடைய ஹ்ருதயத்தில் நான் நிலைநின்றிருக்கையால் அவன் ஹ்ருதயத்திலுள்ள விஷயாபிலாஷங்களெல்லாம் தானே நசித்துப்போம். (அவன் நிச்சயித்திருந்தபடியே எல்லாம் நிறைவேறும்). அங்ஙனம் பக்தி மேன்மேலும் வளர்ந்துவரப்பெற்று ஹ்ருதயத்தில் இருக்கின்றவனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய என்னை அந்த பக்தியின் மிகுதியால் ப்ரத்யக்ஷமாய்க் காண்பதுபோல் ஸாக்ஷாத்கரிப்பானாயின், அவனுடைய ஹ்ருதயத்திலுள்ள தேஹாத்மாபிமானம் ஸ்வதந்த்ராத்மாபிமானம் முதலிய அவிழ்க்க முடியாத முடிச்சுகளெல்லாம் தானே அவிழ்ந்துபோகின்றன. 'நான் தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனா? அல்லது தேஹமேதானா? நான் பரதந்த்ரனா? அல்லது ஸ்வதந்த்ரனா?' என்னும் இவை முதலிய ஸம்சயங்களெல்லாம் தானே அறுந்துபோம். என்னைப் பெறுதற்கு ப்ரதிபந்தகங்களான இவனுடைய புண்ய பாபகர்மங்களெல்லாம் நசித்துப்போம். இங்ஙனம் பக்தியோகம் ஸமஸ்த ஸித்திகளையும் விளைக்குமாகையால் என்னிடத்தில் பக்தி உண்டாகப்பெற்றவனும் [1] நிரதிசயப்ரீதி விஷயனான

---

1. நிரதிசய ப்ரீதியாவது இதைக்காட்டிலும் வேறு அதிசயமில்லையென்னும்படியான ப்ரீதி.

என்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகிய யோகிக்கு, ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவை உபாஸிக்கையாகிற ஜ்ஞானமும் அதற்கு வேண்டிய வைராக்யமும் 'நமக்கு இவை வேண்டுமே' யென்று பெரும்பாலும் ஆசைப்படத்தக்கவைகளாயிருக்கமாட்டா. (தானே ஸித்தமாயிருப்பவைகளை ஏன் ஆசைப்படவேண்டும்? இனி அவன் கர்மயோகாதிகளை விரும்பமாட்டானென்று சொல்லவேண்டுமோ? அவற்றால் அவனுக்கு ஆகவேண்டிய ப்ரயோஜனம் என்ன இருக்கிறது? அவனுக்கு எல்லாம் பக்தியோகத்தினாலேயே நிறைவேறினவாகையால் அவன் மற்றொன்றையும் விரும்பவேண்டிய அவஶ்யமில்லை.) யஜ்ஞாதிரூபமான கர்மங்களாலாவது சாஸ்த்ரவிதியின்படி சரீரசோஷணஞ் செய்கையாகிற தவத்தினாலாவது ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவை உபாஸிக்கையாகிற ஜ்ஞானத்தினாலாவது அதற்கு வேண்டிய வைராக்யத்தினாலாவது யோகஸ்ம்ருதியிற் சொன்ன யோகத்தினாலாவது தானத்தினாலாவது கிணறு குளம் வெட்டுவிப்பது முதலிய தர்மத்தினாலாவது தீர்த்தயாத்ரை வ்ரதம் முதலிய மற்ற நன்மைகளாலாவது ஸாதிக்கக்கூடிய ஸ்வர்க்காதிகள் கைவல்யமென்னும் மோக்ஷம் பகவல்லாபமென்னும் மோக்ஷம் ஆகிய ப்ரயோஜனம் எதுவெதுவுண்டோ, அது வெல்லாம் என் பக்தனுக்கு அந்தப்பக்தியோகத்தினாலேயே விரைவில் ஸித்திக்கும். அவன் என்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை அனுபவிக்கையாகிற மஹாநந்தத்தில் மூழ்கியிருப்பவனாகையால் பரமபதத்தில் சேர்ந்து என்னை அனுபவிக்கையாகிற மோக்ஷத்தையுங்கூட விரும்பமாட்டான். இனி ஸ்வர்க்காதி ஸுகங்களையாவது கைவல்யமென்னும் மோக்ஷத்தை

யாவது விரும்பமாட்டானென்பதைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? ஒருகால் அவன் விரும்புவானாயினும் அவனுக்குக் கிடைக்கக்கூடாதது எதுவுமே இல்லை. என்னுடைய பக்தர்கள், ஸமஸ்த பாபங்களும் தொலைந்து மீளவும் இந்த ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவாராமல் பரமபதத்திலேயே இருந்து என்னை அனுபவிக்கையாகிற மோக்ஷத்தை நான் வேண்டிக் கொடுப்பேனாயினும் விரும்பமாட்டார்கள். அவர்கள் என்னை அனுபவிக்கையாகிற ப்ரயோஜனத்திலேயே நிலைநின்றிருப்பவர்; சப்தாதி விஷயங்களுக்குக் கலங்காத மன உறுதியுடையவர். ஆகையால் என்னை அனுபவிக்கையாகிற ப்ரயோஜனம் இவ்விடத்திலேயே 1 நிராபாதமாகக் கைகூடுகின்றமையால் மோக்ஷத்தையுங்கூட விரும்புகிறதில்லை. இனி மற்ற புருஷார்த்தங்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆனால் அவர்களுக்கு மோக்ஷம் உண்டாகாமலே போய்விடுமோவென்று சங்கிக்கவேண்டாம். மனவுறுதியுடன் எதையும் விரும்பாதிருக்கையில் குறைவற்றிருக்கையே மோக்ஷம் பெறுதற்குச் சிறந்த ஸாதனமாம். (அதாவது - மற்றொன்றையும் விரும்பாமல் என்னிடத்தில் நிலைநின்ற பக்தி உண்டாகப்பெறுகையே மோக்ஷத்திற்கு ஸாதனமாயிருப்பது. ஆகையால் அத்தகைய பக்தியோக முடையவர்கள் விரும்பாமற் போயினும் மோக்ஷம் அவர்களுடையதேயாமன்றி வேறில்லை) ஆனதுபற்றி இஹபரலோகபலன்களெல்லாவற்றிலும் விருப்பமின்றி மோக்ஷத்தையுங்கூட விரும்பாதிருப்பவனுக்கே என்னிடத்தில் எவ்விதத்திலும் தடையின்றி நிலைநின்ற பக்தி உண்டாகும். ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் என்னிடத்தில் பக்தி செய்ப

1 நிர்விக்னமாக

வர்களும் குணமென்றும் தோஷமென்றும் உலகத்தவர் வழங்குகிற ஸுகதுக்கங்களுக்குச் சிறிதும் இடங்கொடாத மனமுடையவர்களும் இது குணமென்றும், இது தோஷமென்றும் நினைக்கும் நிலைமையைக் கடந்திருக்கையாகிற தர்மத்தை அனுஷ்டிப்பதில் நிலைநின்றிருப்பவர்களுமான ஸாதுக்களுக்கு குணதோஷஜ்ஞானமாத்ரத்தினால் உண்டாகக்கூடிய ராகத்வேஷாதிகள் சிறிதும் உண்டாகமாட்டா. ராகத்வேஷாதிகள்பக்தியோகத்திற்கு விக்னஞ்செய்பவை. அவை அவர்களுக்குச் சிறிதேனும் உண்டாகிறதில்லை. இங்ஙனம் நான் உபதேசித்த இம்மோக்ஷதர்மங்களை எவர்கள் அனுஷ்டிக்கிறார்களோ, அவர்கள் பரப்ரஹ்மமென்று கூறப்படுகிற என்னுடைய ஸ்தானத்தை அனாயாஸமாக அடைகின்றார்கள். இருபதாவது அத்யாயம் முற்றிற்று.

---

கர்மஜ்ஞானபக்திகளில் அதிகாரமில்லாத ஸம்ஸாரிகளுக்கு த்ரவ்யதேசாதி குணதோஷங்களை நிரூபித்தல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஜீவாத்மாக்கள் கர்ப்பஜன்மஜராமரணாதி ரூபமான ஸாம்ஸாரிகதுக்கஸாகரத்தில் முழுகிக் கிடப்பதைக் கண்டு இவர்களை அனுக்ரஹிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் என்னை ஆராதிப்பதற்குரியவையான கரணகளேபரங்களையும் சாஸ்த்ராதிகளையும்கொடுத்து இவர்கள் நம்மைப் பெறவேண்டுமேயென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற நான் என்னைப் பெறுதற்கு உபாயங்களான கர்மயோக ஜ்ஞானயோக பக்தியோகங்களை வெளியிட்டேன். எவர்கள் இந்தஉபாயங்களை உபேக்ஷித்துச்சஞ்சலமான இந்த்ரியங்களுக்குட்பட்டு அற்பமான சப்தாதி விஷயங்

களை அனுபவிக்கப் பார்க்கிறார்களோ, அவர்கள் மேன்மேலும் கர்ப்ப ஜன்ம ஜரா மரணாதிரூபமான ஸம்ஸாரத்தையே அனுபவிப்பார்களன்றி அதினின்று மீளமாட்டார்கள். எவனெவனுக்கு எந்தெந்த தர்மத்தில் அதிகாரம் ஏற்பட்டிருக்கிறதோ, அவனவன் தன்தனக்கேற்பட்ட அந்தந்த அதிகாரத்தில் நிலைநின்றிருக்கை அவனவனுக்கு குணமாகும். அதினின்று மாறுகை தோஷமாம். (சூத்ரனுக்கு ப்ராஹ்மண தர்மம் குணமாகாது. ஸம்ஸாரத்தில் விரக்தி உண்டாகப் பெறாதவனுக்கு ஸந்நியாஸதர்மம் குணமாகாது. விரக்தி உண்டாகப் பெற்றவனுக்கு அதுவே குணமாகும்). குணதோஷங்களைப்பற்றிய நிர்ணயம் இதுவே யென்று கண்டு கொள்வாயாக. (ஆகையால் மனுஷ்யஜாதியில் பிறந்தவர் அனைவர்க்கும் க்ஷுத்ரமான சப்தாதி விஷயங்களில் அபிநிவேசங் கொள்ளுகை மேன்மேலும் ஸம்ஸாரத்தை வளர்க்குமாகையால் தோஷமேயாம்). வஸ்துக்களெல்லாம்பஞ்சபூதாதிஸ்வரூபங்களாகையால் ஒத்திருப்பினும் 'இது யோக்யமா? அன்று' என்கிற ஸந்தேஹத்தை உண்டாக்கி அதன் மூலமாய் அவற்றில் ஸ்வாபாவிகமான ப்ரவ்ருத்தியைத் தடுக்கும்பொருட்டுச் சுத்தியும் அசுத்தியும் விதிக்கப்படுகின்றன. அவைகளால் இதில் தனக்குஅதிகாரம் உண்டென்பதும் இல்லையென்பதுமாகிய குணதோஷங்கள் நன்கு தெரிவிக்கப் படுகின்றன. உலகத்தில் மனுஷ்யர்களுக்கு அவரவர்க்கு இஷ்டமானவற்றில் ப்ரவ்ருத்தி உண்டாவது ஸஹஜம். ஆனால்சாஸ்த்ர மர்யாதைக்கு நாம் உட்பட்டு நடக்க வேண்டுமாகையால் ஒரு வஸ்துவில் நமக்கு விருப்பம் உண்டாயினும், சாஸ்த்ரம் இதை நமக்குச் சுத்தமென்கிறதோ அசுத்தமென்கிறதோ வென்று ஸந்தேஹித்

து அதில் நாம் ப்ரவர்த்திக்கலாகாது. சாஸ்த்ரத்தை ஆராய்ந்து சுத்தமென்று ஏற்படுமாயின் 'இதில் நமக்கு அதிகாரம் உண்டு. இது நமக்கு குணமா'மென்று நிச்சயித்துக் கொண்டு ப்ரவர்த்திக்கவேண்டும். இதற்காகவே சாஸ்த்ரங்களில் வஸ்துக்களுக்குச் சுத்தியும் அசுத்தியும் அவரவர்க்குத் தகுந்தபடி நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. பாபமற்றவரே! தந்நம் அதிகாரத்தில் நிலைநின்றிருக்குந் தர்மமாகிற பாரத்தை ஏற்றுக்கொள்ள விரும்புகிறவர்கள் அனுஷ்டிக்க வேண்டிய ஆசாரம் இதுவே. (அதாவது சுத்தியும் அசுத்தியும் இன்னவையென்று தெரிந்துகொண்டு ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் செய்கையே). தர்மத்திற்காகவும் 'இது பற்றத்தக்கது. இது பற்றத்தக்கதன்று,' என்ற வியவஹாரத்திற்காகவும் தர்மத்திற்கு விரோதமில்லாமல் தேஹயாத்ரை நடப்பதற்காகவும் இந்த ஆசாரத்தை நான் நிரூபித்துச் சொன்னேன். பூமி ஜலம் அக்னி அனிலம் (காற்று) ஆகாசம் என்னும் பஞ்சபூதங்கள் ஸ்தாவரம் முதல் ப்ரஹ்மதேவன் வரையிலுள்ள ஸமஸ்த தேஹங்களுக்கும் காரணங்கள். அவை அந்தராத்மாவான என்னோடு ஸர்வகாலமும் கூடிக்கொண்டிருப்பவை. அவை எப்பொழுதும் என்னைவிட்டுப்பிரிந்திருக்கமாட்டா (ஸமஸ்த பதார்த்தங்களும் சித்து அசித்து ஈஶ்வரன் என்னும் தத்வத்ரய ரூபங்களாயிருக்கும். ஆகையால் ஸமஸ்தவஸ்துக்களும் ஒன்றோடொன்று ஒத்திருப்பவையென்பது வெளிச்சமே.) இங்ஙனம் ப்ரஹ்மதேவன்முதல் ஸ்தாவரம்வரையிலுள்ள ஸமஸ்த பதார்த்தங்களும் ஒத்திருப்பவையாயினும் அவற்றின் சரீரங்களுக்குக் காரணமான பஞ்சபூதங்களில் பற்பல விதமான நாமங்களையும் ரூபங்களையும் ப்ரஹ்மதேவன் வேதத்தின் மூலமாய்த்

தெரிந்துகொண்டு ஸ்ருஷ்டிக்கிருன். அங்ஙனம் ஸ்ருஷ்டிப்பது இந்த ஸம்ஸாரிஜீவாத்மாக்களுக்கு அவரவர் விரும்பும் ப்ரயோஜனம் ஸித்திப்பதற்குரிய அதிகாரங்களின் நிலைமைக்காகவே. பெரியோர்களில் சிறந்தவரே! தேசகாலாதி ரூபமான வஸ்துக்களுக்கு யோக்யத்வமென்றும் சுத்தியென்றும் சொல்லப்படுகிற குணமும் அயோக்யத்வமென்றும் அசுத்தியென்றும் சொல்லப்படுகிற தோஷமும் தேசகாலாதி நிஷ்டமான கர்மங்களின் நியமத்திற்காக விதிக்கப்படுகின்றன. (இன்ன தேசத்தில் இன்ன காலத்தில் இன்னவஸ்துவைக் கொண்டு இன்ன கர்மத்தை இன்னவன் அனுஷ்டிக்கவேண்டும். இன்னவன் அனுஷ்டிக்கலாகாதென்கிற நியமத்திற்காக இன்னவனுக்கு இன்னது சுத்தம். இன்னது அசுத்த மென்று தேசகாலாதிவஸ்துக்களின் குணதோஷங்களை நான் நிரூபித்துச் சொல்லுகிறேன்). க்ருஷ்ணஸாரம்ருகம் (கறுப்புப் புள்ளிமான்) திரியப்பெருத இடமும், ப்ராஹ்மணர்களிடத்தில் மற்றவர் பக்தி செய்யாத இடமும் தேசங்களுக்குள் அசுத்தமான தேசமாம். (க்ருஷ்ணஸாரம்ருகம் திரியப்பெற்ற இடமும் ப்ராஹ்மணர்களிடத்தில் மற்றவர் பக்தி செய்கிற இடமும் சுத்தமான தேசமென்றறிக). அதிலும் க்ருஷ்ணஸாரம்ருகம் திரிகிற இடமெல்லாம் சுத்தமாக மாட்டாது. பின்னையோவென்றால், ஸௌராஷ்ட்ர மென்கிற ஸௌவீர தேசம் மகதம் களிங்கம் முதலிய கீகடதேசம் ம்லேச்சர் நிறைந்த அஸம்ஸ்க்ருதமான தேசம் கிளர்நிலம் இவை தவிர மற்ற தேசங்களே க்ருஷ்ணஸாரம்ருகம் திரியப்பெறுமாயின் சுத்தமாம். இல்லையாயின் சுத்தமாகமாட்டா. ஸௌவீராதிதேசங்கள் க்ருஷ்ணஸாரம்ருகம் திரியப்பெறுமாயினும் சுத்தமாகமாட்டா. கார்யத்

திற்கு வேண்டிய த்ரவ்யங்கள் நிறைந்திருக்கை யாலும் பூர்வாஹ்ணத்வம் (பகலின் முன்பாகமாயிருக்கை) முதலியவைகளாலும் குணமுள்ள காலம் கர்மத்திற்குரியதாகையால் சுத்தமென்று கூறப்படும். எந்தக் காலத்தில் த்ரவ்யம் அகப்படாமையாலாவது தேச க்ஷோபத்தினாலாவது கர்மம் நிறைவேறமாட்டாதோ அத்தகைய காலமும் ஸூதகாதி காலமும் கர்மத்திற்கு உரியதன்றாகையால் அசுத்தமென்று கூறப்படும் (காலத்திற்குச் சொன்ன இந்த சுத்தி அசுத்திகளைத் தேசத்திலும் கண்டுகொள்க.) தேச காலங்களிரண்டும் இயற்கையாலாவது த்ரவ்யாந்தரஸம்பந்தத்தினாலாவது கர்மத்திற்குரியனவாகின்றன. மதுரை முதலிய தேசமும் ஜயந்தி முதலிய காலமும் பகவானுடைய ஸம்பந்தத்தினால் குணமுள்ளவையாகின்றன). வஸ்த்ரம் முதலிய த்ரவ்யத்திற்கு மண் ஜலம் வெய்யில் அக்னி முதலியவற்றாலும் சாஸ்த்ரபலத்தினாலும் 'இது சுத்தமோ? அசுத்தமோ?' என்னும் ஸந்தேஹத்தில் 'இது சுத்தமே' என்னும் ப்ராஹ்மணவசனத்தினாலும் சுத்தி ஏற்படும். மூத்ராதிகளால் அசுத்தி ஏற்படும். புஷ்பம் முதலியவற்றிற்கு ப்ரோக்ஷணம் முதலியவற்றால் சுத்தி உண்டாகும். (பழைய அன்னம் முதலியவற்றிற்கு அது சுத்தியாகாது) புஷ்பம் முதலியவற்றிற்கு மோருவது முதலியவற்றால் அசுத்தி உண்டாகும். சில த்ரவ்யங்களுக்குக் காலத்தினால் சுத்தி உண்டாகும். (புதிய ஜலத்திற்குப் பத்து நாள் கழிந்தால் சுத்தி உண்டாகின்றது). பெருமை சிறுமைகளாலும் சுத்தி அசுத்திகள் உண்டாகின்றன. (நதீஜலம் அதிகமாயிருக்கையால் சுத்தமாகின்றது. தெரு ஜலம் அல்பமாயிருக்கையால் அசுத்தமாகின்றது). சக்தியும் அசக்தியும் சுத்திக்குக் காரண

மாகின்றன. ஸூர்ய சந்த்ரோபராகம் முதலிய காலங்களில் ஸ்நானஞ் செய்வதற்குரிய சக்தியுடையவனுக்கு ஸ்நானாதிகளால்தான் சுத்தி உண்டாகும். வியாதி க்ரஸ்தனா யிருப்பானாயின், அவனுக்கு ஸ்நானஞ் செய்யமுடியாததாகையால் அவன் ஸ்நானஞ் செய்யாதிருப்பினும் சுத்தியேயன்றி அசுத்தி உண்டாகிறதில்லை. புத்தியுங்கூட சுத்தி அசுத்திகளுக்குக் காரணமாகின்றது. புத்ர ஜன்மாதிகளில் பத்து நாள் கழித்துத் தெரியுமாயின் சுத்தியே. பத்து நாளுக்குள் தெரியுமாயின் அசுத்தியே. உத்ஸவமும் சுத்திக்குக் காரணமாகின்றது. பகவதுத்ஸவாதிகளில் தொடத்தகாதவனைத் தொட்ட போதிலும் சுத்தியேயன்றி அசுத்தி கிடையாது. அதற்குக் காரணம் உத்ஸவமே. மற்றும், தேசத்தையும் அவஸ்தையையும் அனுஸரித்து நன்கு சுத்தி செய்கிறார்கள். நிர்ப்பயமான தேசத்தில்தான் விதிப்படி சுத்தியை நடத்துவார்கள். திருடர் முதலிய உபத்ரவத்திற் கிடமான தேசங்களில் அங்ஙனம் சுத்தி செய்யமாட்டார்கள். அப்படி செய்யாமற் போயினும் அந்தத்ரவ்யங்கள் அத்தேசத்தைப் பற்றிச் சுத்தங்களேயாமன்றி அசுத்தங்களாகமாட்டா. நீரோகமான அவஸ்தையில்தான் விதிப்படி சுத்தியை நடத்துவார்களன்றி ரோகாத்யவஸ்தையில நடத்தமாட்டார்கள். அப்படி நடத்தாமற் போயினும் அந்த ரோகாதி அவஸ்தையைப்பற்றி அவற்றிற்குச் சுத்தியேயன்றி அசுத்தி கிடையாது. யௌவனவயதில் போல் பால்ய வார்த்தகங்களில் சுத்தியைத் தேடவேண்டியதில்லை. ஸம்ருத்தியுங்கூடச் சுத்தி யசுத்திகளுக்குக்காரணமாகின்றது. கிழிந்த துணி அழுக்குத்துணி தைய்த்த துணி முதலியவை ஸம்ருத்தியுள்ளவனுக்கு அசுத்

தியை விளக்கும். தரித்ரனுக்குச் சுத்தியையே விளக்குமன்றி அசுத்தியை விளக்காது. தான்யத்திற்குக் காலம் காற்று வெய்யில் முதலியவற்றாலும், மரத்தில் செய்த பாத்ரம் முதலியவற்றிற்கு மண் ஜலம் இவைகளாலும் யானைதந்தம் முதலியவற்றிற்குக் காற்று வெய்யில் முதலியவற்றில் உலற்றுவதனாலும், நூலுக்கு ஜலத்தினாலும், பால் முதலிய ரஸத்ரவ்யங்களுக்குக் காய்ச்சுவதனாலும், வெண்கலம் முதலிய தைஜஸ பதார்த்தங்களுக்கு அக்னியினாலும், தோல்களுக்கு எண்ணெயினாலும், பார்த்திவபதார்த்தங்களுக்குச் சில ஸம்பந்தங்களை விளைப்பதனாலும் சில ஸம்பந்தங்களை நீக்குவதனாலும் சுத்தி ஏற்படுகின்றது. பார்த்திவமான அன்னத்திற்குக் கேசம் முதலியவற்றின் ஸம்பந்தத்தை நீக்குவதனாலும் நெய் முதலியவற்றின் ஸம்பந்தத்தை விளைப்பதனாலும் சுத்தி உண்டாகின்றது. தாம்ரம் வஸ்த்ரம் முதலியவை அசுத்தஸம்பந்தம் பெறுமாயின், அதனாலுண்டான அழுக்கும் துர்கந்தமும் எந்த வஸ்துவினால் போகுமோ, அந்த வஸ்துவினால் அந்த அழுக்கு நீங்கித் தன் ஸ்வரூபத்தை அடையும்வரையில் அவைகளுக்குச் சுத்தியை நடத்தவேண்டும். ஸ்னானம் தானம் தவம் கார்யஞ் செய்வதற்குரிய வயது சக்தி உபநயனாதிஸம்ஸ்காரம் ஸந்த்யோபாஸனாதி கர்மம் என்னை த்யானஞ்செய்கை இவைகளால் தனக்குச் சுத்தி ஏற்படுகின்றது. இங்ஙனம் சுத்தனாகித் தன்னதிகாரத்திற்குரிய கர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும். ஆசார்யமுகமாய் உள்ளபடி அறிகையும் அதன் ப்ரயோகங்களை அறிகையும் மந்த்ரத்திற்குச் சுத்தி. கர்மங்களுக்கு என்னிடத்தில் அர்ப்பணஞ் செய்கையே சுத்தியாம். (அர்ப்பணமாவது பகவதாராதனமென்று அனுஸந்திக்கை).

தேசம் காலம் த்ரவ்யம் கர்த்தா மந்த்ரம் கர்மம் இவையாவும் சுத்தமாயிருந்தால்தான் தன்னுடைய அதிகார ரூபமான தர்மம் கைகூடும். இவை அசுத்தமாயிருக்குமாயின் அதர்மமே கைகூடும். சில இடத்தில் குணமென்று சொல்லப்படுகிற சுத்தியும் விசேஷ விதியைப்பற்றித் தோஷமேயாம். (எப்படியென்றால், வியாதிக்ரஸ்தன் ஸ்னானஞ் செய்யலாகாதென்று சாஸ்த்ரம் நிஷேதிக்கிறதாகையால் அவனுக்கு ஸ்னானம் தோஷமேயாமன்றி குணமாகாது). அங்ஙனம் சில இடத்தில் தோஷமும் விசேஷ விதியைப்பற்றிக் குணமாகும். (அது எப்படியென்றால் ப்ராணி ஹிம்ஸை செய்யலாகாதென்று சாஸ்த்ரம் நிஷேதிக்கிறதாகையால் ஹிம்ஸை தோஷமேயாயினும் யாகஞ்செய்ய விரும்புகிறவனுக்கு அது குணமேயாகின்றது). ஆகையால் விசேஷ சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட குணதோஷங்களைப் பற்றிய நியமம் ஸாமான்யசாஸ்த்ரத்தினால் ஏற்பட்ட குணதோஷ விபாகத்தைத் தடுக்குமேயன்றி வேறில்லை. (விசேஷவிதி விஷயத்தில் ஸாமான்ய சாஸ்த்ரத்திற்கு ஸங்கோசமாத்ரமேயன்றி அதற்கு முதலே பாதை இல்லை. யாகத்தில் பசுஹிம்ஸை செய்யலாமென்று சாஸ்த்ரத்தில் விசேஷவிதி உண்டாகையால் ப்ராணி ஹிம்ஸை செய்யலாகாதென்கிற ஸாமான்ய சாஸ்த்ரம் அந்த யாகவிஷயந்தவிர மற்ற விஷயங்களில் ப்ரவர்த்திக்கிறதே யன்றி அது முதலே ப்ரவர்த்திக்கிறதில்லை யென்கிறதில்லை). பதிதர்கள் ஒருவர்க்கொருவர் ஸம்பாஷணம் முதலியன செய்யில் அது தோஷமாகாது. பதிதனல்லாதவன் பதிதர்களோடு ஸம்பாஷணாதிகள் செய்யில் அது தோஷமேயாம். க்ருஹஸ்தனுக்குச் சப்தாதி விஷயங்களில் பற்று ஸ்வாபாவிகமாகை

யால் அது அவர்களுக்குத் தோஷமன்று. அதுவே ஸந்நியாஸிக்குத் தோஷமாம். நடக்கிறவனுக்குக் கால் தடுக்கிக் கீழ்விழ யோக்யதை உண்டேயன்றி முன்னமே படுத்துக் கொண்டிருக்கிறவனுக்கு விழ ப்ரஸக்தியே யில்லை யல்லவா? தனக்கு எந்தெந்த விஷயத்தினின்று பிரிவு நேரிடுகிறதோ அந்தந்த விஷயத்தை மீளவும் நெஞ்சிலும் நினையாதபடி துறக்கவேண்டும். இங்ஙனம் விஷயங்களில் பற்றற்றிருக்கையாகிற இது மனுஷ்யர்களுக்கு மிகவும் மேலான தர்மமாம். இது அவர்களுக்கு மிகவும் ஸுகத்தை விளைக்கும்; சோகம் மோஹம் பயம் இவை முதலிய அனர்த்தங்களையும் போக்கும். சப்தாதி விஷயங்களில், 'இது நல்ல குணமுடையது. இது நமக்கு வேணும்' என்னும் அபிநிவேசம் உண்டாகுமாயின், அதனால் அவ்விஷயங்களில் மனப்பற்று உண்டாகும்; அதனால் 'இவற்றை நாம் அனுபவியாதிருக்க முடியாது' என்னும்படியான காமமென்கிற மனவிகாரம் உண்டாகும். அதனால் ப்ராணிகளுக்கு ஒருவரோடொருவர்க்குக் கலஹம் உண்டாகும். அதனால் பொறுக்கமுடியாத கோபம் உண்டாகும். அதனால் 'இதைச் செய்யலாம். இதைச் செய்யலாகாது' என்கிற விவேகமற்றிருக்கையாகிற தமோகுணம் உண்டாகும். அந்தத் தமோகுணம் எங்கும் பரந்து எல்லாவற்றையும் அறியவல்லதான புருஷனுடைய ஜ்ஞானத்தைச் சீக்ரத்தில் விழுங்கிவிடும். நல்லியற்கையுடையவரே! அந்தஜ்ஞானம் அழியப்பெற்ற ஜீவன் ஸ்தாவராதி ஜன்மத்தை அடைந்து அஸத்ப்ராயனாய் விடுவான். மூர்ச்சித்தாற்போலவும் மரணம் அடைந்தாற்போலவும் அறிவற்றிருக்கிற இந்த ஜீவனுக்குப் புருஷார்த்தம் நழுவிப்போம். (சப்தாதிவிஷயங்களில் அபிநிவேசங் கொள்வானாயின்,

இங்ஙனம் அனர்த்த பரம்பரைகள் வருமாகையால் அதைக் கொள்ளலாகாது)சப்தாதி விஷயங்களில் அபி நிவேசங் கொள்வானாயின், அவன் தன்ஸ்வரூபத்தை யாவது பிறன் ஸ்வரூபத்தையாவது ஒன்றையும் அறிய மாட்டான். இவ்வறிவின்மையே புருஷார்த்த ப்ரம்ச மாம். இங்ஙனம் புருஷார்த்தப்ரம்சத்திற்கு முயன்று வ்ருக்ஷம்போல் ஸ்வ பர விவேகமில்லாத பிழைப்புப் பிழைக்கின்றவன் தோல்பைபோல் வெறுமெனே மூச்சு விடுகிறவனாவானன்றிப் பிழைக்கிறவர்களில் சேரமாட்டான். (இங்ஙனம் சப்தாதி விஷயங்களில் பற்று அனர்த்தத்தை விளைக்குமாயின், பலவாயிரம் மாதாபிதாக்களைக் காட்டிலும் மிகுந்த அன்புடைய வேதம் ஸ்வர்க்காதி விஷய ஸுகங்களுக்கு ஸாதன மான யஜ்ஞாதி கர்மங்களைச் செய்யவேண்டுமென்று ஏன் விதிக்கிறதென்று சங்கிக்கக் கூடும். அதற்குச் சொல்லுகிறேன்; கேட்பீராக). 'ஸ்வர்க்கத்தை விரும்பு கிறவன் யாகஞ் செய்யவேண்டும்' என்று வேதம் யாகாதி கர்மங்களுக்கு ஸ்வர்க்காதி பலன்களைச் சொல்லுகிற தென்பது வாஸ்தவமே. ஆயினும் ஸ்வர்க்காதிகள் புருஷார்த்த மென்கிற எண்ணத்துடன் சொல்லுகிற தில்லை. பின்னையோ வென்றால், கேட்கிறவர்களுக்கு யஜ்ஞாதி கர்மங்களில் ருசியை விளைக்கும்பொருட்டுச் சொன்னதேயன்றி வேறன்று. இஹலோக ஸுகங் களைக்காட்டிலும் ஸ்வர்க்காதி பரலோக ஸுகம் மேற் பட்டது. அதைக்காட்டிலும் மோக்ஷஸுகம் மேற்பட்ட தென்று படிப்படியாக மோக்ஷமே புருஷார்த்தமென்று தெரிவிக்கும்பொருட்டு ஸ்வர்க்காதிகளைப் பலமாகச் சொல்லுகிறது. பிள்ளைகளுக்குக் கடுமையான மருந்து களைக் கொடுக்கும் பொழுது 'பிள்ளாய்! இந்த மருந்

தைச் சாப்பிடுவாயாயின் உனக்கு வெல்லம் கொடுப்பேன்' என்றும் 'சர்க்கரை கொடுப்பேன்' என்றும் 'பக்ஷணம் கொடுப்பேன்' என்றும் சொல்லிக் கொடுப்பது வழக்கம். அவ்வளவில் அந்த மருந்துக்கு வெல்லம் முதலிய அவை யே பலனென்று சொல்ல முடியாதல்லவா. ஆரோக்ய மன்றோ அதற்குப் பலனும். வெல்லம் முதலியன கொடுக்கிறேனென்று சொல்லுவது மருந்தில் அவர்களுக்கு ருசி விளைகைக்காகவே. அங்ஙனமே இங்கும் மோக்ஷமே புருஷார்த்தமன்றி ஸ்வர்க்காதிகள் புருஷார்த்தமாக மாட்டா. ஸ்வர்க்காதிகளைப் பலனாகச் சொல்லுவது அவர்களுக்கு யஜ்ஞாதி கர்மங்களில் ருசி விளைகைக்காகவே. தமக்கு ஸம்ஸார பந்தமாகிற அனர்த்தத்தையே விளைவிப்பவைகளான சப்தாதி விஷயங்களிலும் ப்ராணன்களிலும் (ஆயுள் இந்த்ரியபலம் முதலியவைகளிலும்) பந்துக்களிடத்திலும் ஜன்மம் முதல் இயற்கையாகவே மனம் பற்றி அவற்றில் கால்தாழ்ந்திருப்பவர்களும் உண்மையான தங்கள் ப்ரயோஜனத்தை அறியாமல் அவற்றையே முக்யப்ரயோஜனமாக ப்ரமித்திருப்பவர்களும் துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரமார்க்கத்தில் சுழன்றுகொண்டு கடைசியில் ஸ்தாவர ஜன்மத்தை அடையப் போகிறவர்களுமான மனுஷ்யர்களை ஹிதஞ் சொல்ல முயன்ற வேதம் மீளவும் அனர்த்தங்களுக்கிடமான அந்தக் காமாதிகளில் எங்ஙனம் மூட்டுவிக்கும்? (ஜனங்கள் வேதத்தில் சொன்னதெல்லாம் ஹிதமென்று நம்பியிருப்பவர். வேதமோவென்றால் மிகுந்த அன்புடன் ப்ராணிகளுக்கு ஹிதத்தையே அறிவிக்குந் தன்மையுடையது. அத்தகைய வேதம் ப்ராணிகளுக்கு அஹிதத்தை அனுஷ்டிக்கும்படி சொல்லுமோ? சொல்லாது. ஆகையால் யாகாதி கர்மங்களுக்கு ஸ்வர்க்காதிகளைப்

பலனைச் சொன்னது ருசியை விளைக்கும்பொருட்டே யன்றி அதுவே புருஷார்த்தமென்கிற எண்ணத்தினா லன்று). ஆனதுபற்றியே வேததாத்பர்யங்களை அறிந்த பெரியோர்கள் காயில்லாத கேவலம் பூபோன்று, காதுக்கு மாத்ரம் ப்ரீதியை விளைத்து ஆபாதரமணீய மாயிருப்பதுமான ஸ்வர்க்காதி பலஸ்ருதியை முக்ய பலஸ்ருதியாக உபதேசிக்கமாட்டார்கள். (காதுக்கினி தாக ஸ்வர்க்கஸுகம் அழியாததென்று சொல்லு கிறதேயொழிய அனுபவத்தில் நஸ்வரமாகையாலும் முன்னும் பின்னும் நடுவிலும் துக்கமிஸ்ரமாகையா லும் அது காயில்லாத பூபோன்றதேயாம். யஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டித்துப் பெறவேண்டுமாகையால் அவை மிகவும் ப்ரமஸாத்யங்களாகையால் முன்பு துக்க ரூபமாயிருக்குமென்பது வெளிச்சமாம். அனுபவதசை யில் 'இன்னும் நான்குநாளன்றோ நாம் இந்த ஸுகம் அனுபவிக்கப்போகிறோம். அதன்பிறகு விழவேண்டுமே" என்று அதன் முடிவு நெஞ்சில் தோற்றிக்கொண்டே யிருக்குமாகையால் இடையில் துக்க ரூபமாயிருக்கை யும் வெளிச்சமாம். அதினின்று நழுவின பின்பு இந்த லோகத்தில் பிறந்து முன்போலவே ஸம்ஸார துக்கங் களை அனுபவிக்கவேண்டுமாகையால் பின்னும் துக்க ரூபமாயிருக்குமென்பதைப் பற்றி விவரித்துச் சொல்ல வேண்டிய அவஸ்யமே இல்லை. இங்ஙனம் பலவிதத் திலும் துக்கரூபமான ஸ்வர்க்காதிஸுகத்தைப் புரு ஷார்த்தமென்று வேதத்தின் கருத்தறிந்த பெரியோர் கள் எங்ஙனம் சொல்லுவார்கள்?) வேதங்களின் கருத் தை அறியாத மூடர்களே இத்தகைய ஸ்வர்க்காதிபல ஸ்ருதியை முக்யமென்று கருதுவார்கள். ஏனென்றால், அவர்கள் சப்தாதி விஷய ஸுகங்களையே விரும்புந்தன்

மையர்; அவற்றில் பேராசையால் மனவியாகுல முற்றிரு ப்பவர்; ஆனதுபற்றியே 'ஐயோ! இப்படியும் சில மூடர் கள் இருப்பதே!' என்று பெரியோர்களால் மனஇரக்கஞ் செய்யத்தக்கவர்: புஷ்பம்போன்ற ஸ்வர்க்காதி ஸுகங் களில் பலனென்னும் புத்தியுடையவர்; அக்னிஸாத்ய மான கர்மங்களில் அபிநிவேசத்தினால் விவேகம் அழி யப் பெற்றவர்கள்; இடைவீடின்றி ஹோமதூமத்தினால் வாட்ட முற்றிருப்பவர். ஆகையால் அவர்கள் ஆத்மஸ் வரூபத்தையுங்கூட அறிந்தவர்களல்லர். ஓ உத்தவரே! எவன் இந்த ஜகத்திற்கு நிமித்தகாரணமும் உபாதான காரணமுமாயிருக்கிறானோ, ஆனதுபற்றியே இது எவ னைக் காட்டிலும் வேறுபட்டதாகாமல் அவனே இது வென்று சொல்லக் கூடியதாயிருக்கின்றதோ, அத்தகை யனும் ஹ்ருதயத்தில் நிலைநின்றிருப்பவனுமாகிய என் னையும் அவர்கள் அறியார்கள். ஏனென்றால் அவர் கள் கர்மவிதிகளால் தூண்டப் பட்டவர்கள்; இந்த்ரியங் களுக்கு த்ருப்தியை விளைத்துக்கொள்வதில் ஊக்க முற்றவர்கள். ஆகையால், இருட்டில் கண்பார்வை தடைபடப்பெற்றவர்கள் ஸமீபத்திலுள்ள வஸ்துவையும் எங்ஙனம் அறியமாட்டார்களோ, அங்ஙனமே இந்த மூடர்கள் ஹ்ருதயத்தில் தம்மோடுகூடவே இருக்கின்ற என்னை அறியமாட்டார்கள். மற்றும், அவர்கள் ஸூக்ஷ்ம புத்தியினால் ஆராய்ந்து வருந்தியறியக்கூடியதான என் னுடைய அபிப்ராயத்தை அறியாமல் சப்தாதி விஷயங் களில் தாழ்ந்த மனமுடையவர்களாகி யாகமென்னும் வியாஜத்தினால் மாம்ஸபக்ஷணத்திற்காகப் பசுக்களை வீணுக்கு ஹிம்ஸிக்கிறார்கள். (ஆகையால் அவர்கள் நாஸ்திகர்களேயன்றி ஆஸ்திகர்களல்லர்.) மற்றும், அவர்கள் மரணம் அடைந்து பரலோகஞ் சென்று

அங்கு ஸாலாவ்ருகம் முதலிய க்ரூரஜந்துக்களாயிருக்கின்ற அந்தப் பசுக்களால் ஹிம்ஸிக்கப் படுகிறார்கள். பசுக்களைக் கொன்று மாம்ஸபக்ஷணஞ் செய்யவேண்டுமென்னும் அபேக்ஷை உண்டாகும்பொழுது யாகத்தில் தான் விதியென்று சொல்லிக் கொண்டு பசுக்களை ஹிம்ஸிக்கிறார்கள். (அதன் பலனையும் பரலோகத்தில் அனுபவிக்கிறார்கள்.) அவர்களுக்குப் பசுஹிம்ஸை விளையாட்டாயிருக்கிறதேயன்றி ஹிம்ஸையாகத் தோற்றுகிறதில்லை. ஆகையால் தங்களுடைய ஸுகத்திற்காக (மாம்ஸபக்ஷண ஸுகத்திற்காகப்) பசுக்களைக் கொன்று செய்கிற யாகங்களால் பித்ருக்கள் பூதபதிகள் முதலிய தேவதைகளை ஆராதிக்கிறார்கள். தங்கள் ஸுகத்திற்காக யாகத்தை வியாஜமாக எடுத்துக்கொள்கிறார்களாகையால் அவர்கள் துஷ்டர்களேயன்றி நல்லியற்கையுடையவர்களாகமாட்டார்கள். ஸ்வர்க்காதி பரலோகங்களும் ப்ரக்ருதியின் பரிணமங்களாகையால் நிலையற்றவைகளே, நிலையாயிருப்பவைகளன்று; ஆனதுபற்றியே ஸ்வப்னம் போன்றவை. காதில் கேட்பதற்கு மாத்ரம் ப்ரியமாயிருக்குமே யன்றி அனுபவத்தில் துக்கரூபமாகவேயிருக்கும். இத்தகையதான பரலோகத்தையும் இஹலோகத்தில் சில விருப்பங்களையும் மனத்தில் ஸங்கல்பித்துக்கொண்டு வர்த்தகனைப்போல் பணத்தைச் செலவழிக்கிறார்கள். ப்ராணிகள் ரஜஸ்ஸு தமஸ்ஸு மிச்ரஸத்வம் இவையடியாகவுள்ள கர்மங்களில் நிலைநின்று ரஜஸ்ஸு தமஸ்ஸு மிச்ரஸத்வம் இக்குணங்களை வளர்க்கும்படியான ஆஹாரங்களை உட்கொள்ளுபவர்களாகி ரஜஸ்ஸு முதலிய தங்கள் குணங்களுக்கு அனுரூபர்களான இந்த்ரன் முதலிய தேவதைகளை உபாஸிக்கிறார்கள். அதையும் உள்ளபடி நடத்து

கிறதில்லை. (இந்த்ராதிகளை உள்ளபடி உபாஸிக்கையாவது 'இவர்களெல்லோரும் பகவத் ஸ்வரூபர்களே' என்னும் புத்தியுடன் உபாஸிக்கை). நேரே என்னையும் உள்ளபடி உபாஸிக்கிறதில்லை. 'இஹலோகத்தில் யஜ்ஞங்களால் தேவதைகளை ஆராதித்து ஸ்வர்க்கலோகஞ் சென்று அங்கு விளையாடிக்கொண்டிருக்கப் போகிறோம். அந்த ஸ்வர்க்கலோகம் முடிந்த பின்பு மீளவும் இஹலோகத்தில் பெரிய க்ருஹஸ்தர்களும் மஹாகுலமுடையவர்களுமாகப் பிறக்கப் போகிறோம்' என்று புஷ்பம்போல் மனோஹரமான வேதத்தின் பூர்வபாக வாக்யங்களால் மனம் கலங்கப்பெற்று துரஹங்காரமுற்றுத் தங்களை மிகவும் நிறைவாளர்களாக நினைத்துக் கொண்டு திரிகிறவர்களுக்கு என்னுடைய ப்ரஸ்தாவமுங்கூட ருசிக்காது. (ஆகையால் அவர்கள் நித்யஸம்ஸாரிகளாவார்களே யன்றி ஒருகாலும் இந்த ஸம்ஸாரத்தினின்று மீளமாட்டார்கள்). (இங்ஙனம் வேத தாத்பர்யத்தை அறியாத மூடர்களின் முயற்சியையும் அதன் பலனையும் சொன்னேன். இனி வேததாத்பர்யமென்ன வென்றால் அதை நிரூபித்துச் சொல்லுகிறேன்; கேட்பீராக). வேதங்களெல்லாம் கர்மகாண்டமென்றும் தேவதாகாண்டமென்றும் ஜ்ஞானகாண்டமென்றும் மூன்றுவகையாகப் பிரிந்திருக்கின்றன. அவையெல்லாம் ஸர்வாந்தராத்மாவான பரப்ரஹ்மத்தையே முக்யமாகச் சொல்லுகின்றன. (வேதங்களில் சில பரமாத்ம ஸ்வரூபத்தையும், சில அவன் குணங்களையும், சில அவன் விபூதிகளையும், சில அவனைப் பெறுதற்குரிய உபாயங்களையும், சில அவனுடைய ப்ராப்ய வேஷத்தையும், சில ப்ராப்தாவான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும் நிரூபித்துச் சொல்லுகின்றன. ஆனால் இந்த வேத

தாத்பர்யம் எல்லார்க்கும் ஏன் தெரிகிறதில்லை யென்றால் சொல்லுகிறேன்.) வேதங்கள் தமது அபிப்ராயத்தை மறைத்துச் சொல்லுந் தன்மையுடையவைகளே யன்றி ஸ்பஷ்டமாகச் சொல்லமாட்டா. ஆகையால் அவ்வேதங்களின் தாத்பர்யத்தை எல்லாரும் எளிதில் அறிய முடியாது. ('லோகோஜ்ஜீவனத்திற்காக வன்றோ நீ வேதங்களை வெளியிட்டது. அப்படியிருக்க அவற்றின் தாத்பர்யத்தை நீ ஏன் ஸ்பஷ்டமாக வெளியிடலாகாது?' என்றால் சொல்லுகிறேன்). அங்ஙனம் மறைத்துச் சொல்லுவதே எனக்கும் ப்ரியமாயிருக்கும். (தெளிந்த மனமுடையவர்களே இதன் கருத்தை அறிய வேண்டுமென்றி அங்ஙனமல்லாத அனதிகாரிகள் அறியலாகாது. ஏனென்றால், அனதிகாரிகள் வீணாகக் கர்மங்களைத் துறந்து ப்ரஷ்டராய் விடுவார்கள்). மற்றும் பெரிய விஸ்தாரமுள்ள வேதம் மிகவும் வருந்தி அறியக் கூடியது; ப்ராணவாயுவால் உதவி செய்யப்பெற்ற வாகிந்த்ரியத்தினால் உச்சரிக்கத்தக்கது; கேவலம் மனத்தினால் தரிக்கத்தக்கது. இதன் முடிவை அறியமுடியாது. ஸமுத்ரம் தாண்ட முடியாமல் ஆழமுமாயிருப்பது போல், இதுவும் பொருளறிய முடியாமல் யுக்திகளால் நிரூபிக்க முடியாததுமா யிருக்கும். ஜ்ஞானவீர்யாதியான அளவற்ற சக்திகளை யுடையவனும் பரப்ரஹ்மமென்று கூறப்படுபவனும் அளவற்ற மஹிமையுடையவனுமாகிய என்னால் விஸ்தரிக்கப்பட்ட வேதம் தாமரைத் தண்டுகளில் நூல்போல் மனுஷ்யர்களிடத்தில் ப்ராணகோஷ ரூபமாயிருக்கின்றது. (காதுகளை மூடிக்கொண்டால் கேட்குங் கோஷமே ப்ராணகோஷமென்று கூறப்படும்.) நூல்பூச்சி ஹ்ருதயத்தினின்று வாய் வழியாய் நூலைக் கக்குவதுபோல் கோஷத்தையுடைய ப்ராண

வாயு நாபிமுதல் மார்பு வரையிலுள்ள த்வாரத்தின்வழியாய் 1 ஸ்பர்சரூபியான மனத்தின் உதவியைக்கொண்டு வேதத்தை வெளியிடுகின்றது. சந்தஸ்ஸென்று கூறப்படுகிற வேதத்தை வெளியிடுகிறதாகையால் சந்தோமயமென்று கூறப்படுவதும் நிலைநின்றிருப்பதும் தேஹம் இந்த்ரியம் முதலியவற்றைத் தரிக்கவல்லதுமாகிய ப்ராணவாயு ஓங்காரத்தினின்று வெளியான ஸ்பர்சம் ஸ்வரம் ஊஷ்மம் அந்தஸ்தம் என்னும் அக்ஷரங்களால் அலங்கரிக்கப்பட்டது. விசித்ரமான பலவகையுள்ள சப்தங்களால் விரிந்திருப்பதும் எல்லையில்லாததும், ஒன்றைவிட ஒன்று நான்கு நான்கு அக்ஷரங்கள் அதிகமாயிருக்கப்பெற்ற காயத்ரி, உஷ்ணிக்கு, அனுஷ்டுப்பு, ப்ருஹதி, பங்க்தி, த்ரிஷ்டுப்பு, ஜகதி, அதிச்சந்தஸ்ஸு, அத்யஷ்டி, அதிஜகதி, விராட்டு என்னுமிவை முதலிய சந்தஸ்ஸுக்களோடு கூடியதும் அநேகமாயிரம் பதவிகளையுடையதும் விரிந்திருப்பதுமாகிய வேதரூபமான வாக்கை வாகிந்த்ரியத்தின் மூலமாய் வெளியிடுவதும் உள்ளடக்குவதும் செய்கின்றது. 'எதை விதிக்கிறது? எந்த தத்வத்தைச் சொல்லுகிறது? எதை அனுவதித்து எதை விகல்பிக்கிறது? இதுவும் அதுவும் இரண்டு. இவற்றில் இதையாவது செய்யலாம். அதையாவது செய்யலாம்' என்று விகல்பித்துச் சொல்லுகிறதா? 'இதையும் செய்யலாம். அதையும் செய்யலாம்' என்று ஸமுச்சயித்து (சேர்த்துச்) சொல்லுகிறதா? ஸாமான்யமாய் விதிக்கிறதா? விசேஷித்து விதிக்கிறதா?' என்று இவ்வேதத்தின் தாத்பர்யத்தை என்னைத் தவிர மற்ற எவன் தான் அறியவல்ல

1 ஸ்பர்சரூபியான-தன்னோடு ஸம்பந்தப்பட்ட. அல்லது-ஹ்ருதயம் மார்பு முதலிய இடங்களின் ஸ்பர்சமுடைய.

ணுவான்? ஆனால் அந்த வேதத்தின் கருத்தை நீயே வெளியிடுவாயாகவென்றால் சொல்லுகிறேன். என்னுடைய ஆராதனரூபமான தர்மத்தையே விதிக்கின்றது. ஸர்வத்தையும் சரீரமாகவுடைய என்னையே முக்யமாக நிரூபித்துச் சொல்லுகின்றது. 'இதையாவது செய்யலாம். அதையாவது செய்யலாம்' என்று விகல்பித்துச் சொல்லப்படும் பொருள்களும் நானே. 'இது கூடாது. அதையே செய்யவேண்டும்' என்று அபவதித்துச் சொல்லப்படும் பொருளும் நானே. ஸமஸ்த வேதங்களின் கருத்தும் இவ்வளவே. அதாவது, வேதமென்னும் சப்தம் என்னையே முக்யமாகக் கருதித் தேவமனுஷ்யாதிபேதம் ப்ரக்ருதியினிடத்தில்மாத்ரமே உள்ளதென்று நிரூபித்து, அது ஜீவாத்மஸ்வரூபத்தில் இல்லையென்றும் அந்த ஜீவாத்மாக்களுக்குள்ள ஆகாரம் எல்லையான என்னிடத்தில் இல்லையென்றும் நிஷேதித்து எல்லாத் தத்வங்களைக்காட்டிலும் விலக்ஷணனான என்னை நிரூபித்துச் சொல்லுவதில் முடிகின்றதென்னுமிவ்வளவே. இருபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

தத்வஸங்க்யைகளின் விரோதபரிஹாரமும். ப்ரக்ருதிபுருஷர்களின் விசாரமும்,ஜன்மமரணாதி ஸ்வரூபநிரூபணமும்.

உத்தவர் சொல்லுகிறார்.— ஜகதீசனே! ப்ரபூ! தத்வங்கள் எத்தனை? சில ரிஷிகள் தத்வங்கள் ஒன்பதென்றும், சிலர் பதினொன்றென்றும், சிலர் ஐந்தென்றும் கணக்கிடுகிறார்கள். நீயோவென்றால், மூன்று தத்வங்களென்று மொழிகின்றனை. இவ்விஷயத்தில் மற்றும் பலவாறு கேட்டிருக்கின்றோம். சிலர் இருபத்தாறென்

றும், சிலர் இருபத்தைந்தென்றும், சிலர் ஏழென்றும், சிலர் ஒன்பதென்றும், சிலர் ஆறென்றும், சிலர் நான் கென்றும் சிலர் பதினொன்றென்றும், சிலர் பதினேழென் றும், சிலர் பதினாறென்றும், சிலர் பதின்மூன்றென் றும் சொல்லுகிறார்கள். வளர்ந்த ஆயுளையுடையவனே! ரிஷிகள் எந்த அபிப்ராயத்தைப் பற்றி வெவ்வேறாகக் கணக்கிடுகிறார்களோ, அதை நீ எமக்குச் சொல்ல வேண்டும்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—ப்ராஹ்மணர்கள் எவ்வெவ்விதம் சொல்லுகிறார்களோ அவையெல்லாவற் றிற்கும் யுக்திகள் இருக்கின்றன. என்னுடைய மாயை யைத் தத்வங்களுக்குக் காரணமாக அங்கீகரித்து அவ ற்றைக் கணக்கிடுகிறவர்களுக்கு எதுதான் பொருந் தாது. (எல்லாம் பொருந்தும்). எந்தக் கணக்கு விருத்தமாயிருக்கிறதென்று சொல்லினையோ, அது விருத்தமன்று. அந்தக் கணக்கு இங்ஙனம் பார்த்தால் விரோதமில்லாமல் பொருந்தும். அதெல்லாம் விரோ தமில்லாமல் பொருந்தும்படி நான் சொல்லுகிறேன், கேட்பாயாக. ரிஷிகள் இங்ஙனம் பலவாறு சொல்லுவ தற்குக் காரணம் என்னவென்றால், ஒருவராலும் இல் லையென்று சொல்லி அதிக்ரமிக்க முடியாத ப்ரக்ருதி புருஷ மஹத்து அஹங்காராதி ரூபமான என் சக்தி களே. ரிஷிகள் என்சக்திகளான இந்த ப்ரக்ருதிபுரு ஷாதிகளைத் தனித்தனியே பிரித்துச் சொல்லுவதும், ஒன்றில் ஒன்றை உள்ளடக்கிச் சொல்லுவதும் செய்கை யால் தத்வங்களின் கணக்கில் ஏற்றக்குறைவுகள் உண் டாகின்றனவன்றி வேறில்லை. சமதமாதிகுணங்கள் கை கூடுமாயின் சேதனாசேதன ரூபமான ஜகத்தெல்லாம் எனக்குச் சரீரமாகி ஏகரூபமாகத் தோற்றும். அப்

பொழுது தத்வங்களின் ஏற்றக்குறைவுகள் தோற்ற மாட்டா. அவை தோற்றமல் மறைந்தவுடனே மூன் றென்றும் நான்கென்றும் சொல்லுகிற வாதமும் தொலை ந்துபோம். புருஷஶ்ரேஷ்டனே! தத்வங்கள் ஒன்றில் ஒன்று உள்ளடங்கியிருப்பதைப் பற்றி அதை உள்ளபடி ஆராய்ந்து பார்க்கிறவர்கள் எங்ஙனம் சொல்ல விரும்பு கிறர்களோ அங்ஙனம் தத்வங்களைக் குறைவாகவும் அதிகமாகவும் கணக்கிடுகிறர்கள். எல்லாத் தத்வங் களும் தமக்குக் காரணமான முற்பட்ட தத்வத்திலா வது கார்யமான பிற்பட்ட தத்வத்திலாவது ஏதேனு மொரு தத்வத்தில் உள்ளடங்கி யிருக்கின்றன. (கடம் முதலிய கார்ய வஸ்துக்கள் தமக்குக் காரணமான மண் ணில் ஸூக்ஷ்மரூபமாய் உள்ளடங்கி யிருக்கின்றன. கார்யமான கடாதி வஸ்துக்களில் மண் முதலிய கார ணவஸ்துக்களும் தொடர்ந்திருக்கின்றன. உலகத்தில் ஒரு கட்டையில் அக்னி ஜலம் முதலிய பல வஸ்துக் கள் அடங்கியிருப்பதைக் காண்கிறேமல்லவா? அங்ங னமே தத்வங்கள் தம்முடைய காரண தத்வத்திலாவது கார்யதத்வத்திலாவது உள்ளடங்கியிருப்பது யுக்தமே. ஆகையால் இந்தத் தத்வங்களில் ஏற்றக்குறைவுகள் வருமாறு கணக்கிடுகிறவர்களுக்குள் எவனுடைய வாய் எங்ஙனம் சொல்ல நினைத்து முயற்சி கொள்கிறதோ, அவனவன் சொல்லுகிற அவற்றையெல்லாம் நாம் ஒப் புக்கொள்வோம். ஏனென்றல், அங்ஙனம் சொல்லுவ தற்குத் தத்வங்கள் ஒன்றில் ஒன்று உள்ளடங்கியிருப் பது தனியே பிரிந்திருப்பதாகிய யுக்திகள் ஸம்பவிக் கின்றனவல்லவா? ஆகையால் எவன் எப்படி சொல்லி லும் அதையெல்லாம் நாம் நிச்சயமாகவே கொள்ள வேண்டும். தேஹாத்மப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ரமம்

முதலியவற்றிற்குக் காரணமாகிய அனாதியான அஜ்ஞானம் தொடரப்பெற்ற ஜீவனுக்கு ஆத்ம பரமாத்மாக்களைப்பற்றின அறிவு ஸ்வயமாக உண்டாகாது. பின்னையோ வென்றால், இயற்கையாகவே எல்லாமறிந்த மற்றொருவனே இவனுக்கு ஆத்ம பரமாத்மாக்களைப் பற்றின அறிவை விளைவிக்க வேண்டும். இருவர் வெவ்வேறாயிருப்பதற்குக் காரணம் ஒருவனிடத்திலுள்ள குணம் மற்றொருவனிடத்தில் இல்லாமையே. இங்ஙனமே ஜீவபரமாத்மாக்களிருவரும் குணவைஷம்யத்தைப்பற்றி வெவ்வேறாயிருப்பார்கள். அவ்விருவரில் ஜீவனுக்கு அனாதியான அவித்யா ஸம்பந்தமும் அதைப்பற்றின ஸம்ஸாரமும் உள்ளவை. பரமாத்மாவுக்கோ வென்றால் ஸ்வயமாகவே எல்லாம்அறிந்திருக்கையும் பிறனுக்கு அவ்வறிவை விளைவிக்கையும் உள்ளவை. இங்ஙனம் அவ்விருவரும் விலக்ஷணராகையால் ஒரே தத்வமாக மாட்டார்கள். ப்ராக்ருதமான தத்வங்கள் இருபத்து நான்கு. ஜீவாத்ம பரமாத்மாக்கள் இரண்டு. ஆகத் தத்வங்கள் இருபத்தாறு. ஆனால் இருபத்தைந்து தத்வங்களென்கிற பக்ஷத்திற்கு என்ன யுக்தி யென்றால், சொல்லுகிறேன். இங்ஙனம் ஜீவாத்ம பரமாத்மாக்கள் விலக்ஷணகுண முடையவர்களாயினும் அவர்களுக்கு ஸ்வரூபத்திலாவது ஸ்வபாவத்திலாவது சிறிதும் பேதமில்லை; இருவரும் ஜ்ஞானத்தையே வடிவாகவுடையவர்கள்; ஜ்ஞானத்தையே குணமாகவு முடையவர்கள். மற்றும், ஜீவாத்மாவுக்கு முக்திதசையில் பரமாத்மாவோடு பரமஸாம்யம் விளைகிறதாகையாலும் ஜீவன் பரமாத்மாவின் அம்சமாகையால் அவனை விட்டுப் பிரிந்திருக்கமாட்டானாகையாலும் அவ்விருவரும் ஒரே தத்வமென்னும் அபிப்ராயத்தைக் கொண்டு இரு

பத்தைந்து தத்துவங்களென்று கணக்கிடுகிறார்கள். ஆனால் ஜீவன் அஜ்ஞனென்றும ஈஶ்வரன ஸர்வஜ்ஞனென்றும் பேதம் கல்பித்துச் சொல்லுவதும், ஜீவாத்மாக்கள் ஸ்வதந்த்ரர்களென்று சொல்லுவதும் உண்மையன்று. ஜீவன் அஜ்ஞனாயிருப்பது அவனுக்கு ஸ்வபாவமன்று. அவ்வஜ்ஞானம் ப்ரக்ருதி ஸம்பந்தரூபகாரணத்தினால் வந்தது. அந்த ப்ரக்ருதிஸம்பந்தம் நிவர்த்திக்கையில் அவ்வஜ்ஞானமும் தானே நிவர்த்திக்கின்றது. அஜ்ஞானம் நிவர்த்தித்து ஜீவன் மோக்ஷத்தை அடைகையில், 'ஜீவன் அஜ்ஞன்.பரமாத்மா ஸர்வஜ்ஞன்' என்கிற வைஷம்யம் இல்லாமையாலும் ஜ்ஞானமே ஸ்வரூபமும் ஸ்வபாவமுமாயிருக்கை இருவர்க்கும் ஒத்திருக்கையாலும் இருவரும் ஒரே தத்வமென்னும் அபிப்ராயத்தினால் இருபத்தைந்து தத்வங்களென்பதுவும் யுக்தமேயென்றுணர்க. ஆயினும் ஸத்வாதிகுணங்களையும் கூட்டிக்கொண்டு கணக்கிடவேண்டாமோ? அப்பொழுது இருபத்தாறென்பதும் இருபத்தைந்தென்பதும் எங்ஙனம் பொருந்துமென்றால், சொல்லுகிறேன். ஸத்வ ரஜஸ்தமோ குணங்கள் ஏற்றக் குறைவின்றி ஒருவாறாயிருக்கப்பெற்ற அசித்தே ப்ரக்ருதியென்று கூறப்படுகின்றது. ஆகையால் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணங்களான ஸத்வாதிகள் ப்ரக்ருதியின் குணங்களேயன்றி ஆத்மாவின் குணங்களன்று. ஸத்வாதி குணங்கள் ப்ரக்ருதியில் அடங்கினவையாகையால் தத்வங்கள் இருபத்தைந்தென்றும் இருபத்தாறென்றும் சொல்லுவதில் யாதொருவிரோதமும் இல்லை. ஸத்வம் ஜ்ஞானத்தை விளக்கும். ரஜஸ்ஸு கர்மத்தை விளக்கும். தமஸ்ஸு அஜ்ஞானத்தை விளக்கும். ஸத்வாதி குணங்களின் மாறுபாட்டை விளக்

கும் தத்வம் காலமென்று கூறப்படும். அதையே ஸ்வ பாவமென்றும் ஸூத்ரமென்றும் சொல்லுவார்கள். ஸமஸ்த பதார்த்தங்களுக்கும் காலஸம்பந்தம் நியத மாகையாலும் ஸ்திதிஹேதுவாகையாலும் அதை ஸ்வபாவமென்பதும் ஸூத்ரமென்பதும் கூடும். (இந்தக் காலதத்வத்தையுங் கூட்டிக்கொண்டு சிலர் இருபத்தேழு தத்வங்களென்று சொல்லுகிறார்கள்.) புருஷன், ஸத்வாதி குணங்கள் ஏற்றக் குறைவுகளின்றி ஒருவாறாயிருக்குந் தன்மையதான ப்ரக்ருதி, வ்யக்தமென்கிற மஹத்தத்வம், அஹங்காரம், ஆகாசம், காற்று, அக்னி, ஜலம், பூமி ஆகிய இவையே ஒன்பது தத்வங்களென்று கூறப்படுகின்றன. அஹங்கார தத்வத்தில் அதன் கார்யமான இந்த்ரியங்களையும் ஆகாசாதிகளில் சப்தாதிகுணங்களையும் உள்ளடக்கி ஜீவாத்மபரமாத்மாக்களிருவரையும் புருஷனென்று ஒரு தத்வமாகக் கொண்டு ஒன்பது தத்வங்களென்று சொல்லுகிறார்களென்றுணர்க. கர்மேந்த்ரியங்களைந்தும் ஜ்ஞானேந்த்ரியங்களைந்தும் மனஇந்த்ரியமொன்றும் ஆகப் பதினொரு இந்த்ரியங்களையும் சப்தாதி குணங்களையும் கூட்டிக்கொண்டால் இருபத்தைந்து தத்வங்களாகின்றன. ஜீவாத்ம பரமாத்மாக்களிருவரையும் தனித்தனியே இரண்டு தத்வங்களாகக் கொண்டால் இருபத்தாறு தத்வங்களாகின்றன. காது, உடல், கண், மூக்கு, நாக்கு என்னும் இவை யைந்தும் ஜ்ஞானேந்த்ரியங்கள். வாக்கு, பாணி, உபஸ்தம், பாயு, பாதம் என்னுமிவை கர்மேந்த்ரியங்கள். இவ்விருவகை இந்த்ரியங்களுக்கும் உதவி செய்வது மனஇந்த்ரியம். சப்தம், ஸ்பர்சம், ரஸம், கந்தம், ரூபம் ஆகிய இவை யைந்தும் ஜ்ஞானேந்த்ரியங்களின் விஷயங்கள். கதி, உக்தி, உத்

ஸர்க்கம், சில்பம் இவை நான்கும் கர்மேந்த்ரியங்களின் விஷயங்கள். காதுக்கு விஷயம் சப்தம். உடலுக்கு விஷயம் ஸ்பர்சம் கண்ணுக்கு விஷயம் ரூபம். மூக்குக்கு விஷயம் கந்தம். நாக்குக்கு விஷயம் ரஸம். வாக்குக்கு விஷயம் உக்தி (பேச்சு). பாணிக்கு விஷயம் சில்பம் (வேலை செய்கை). உபஸ்தம் பாயு ஆகிய இரண்டிந்த்ரியங்களுக்கும் உத்ஸர்க்கமே விஷயம். உத்ஸர்க்கமாவது விடுதல். உபஸ்தத்தின் உத்ஸர்க்கமாவது ரேதஸ்ஸு மூத்ரம் இவைகளை விடுதல். பாயுவின் உத்ஸர்க்கமாவது மலத்தை விடுதல். இந்த வ்யஷ்டி ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஆகாசம் முதல் மனம் வரையிலுள்ள கார்யங்களும் ப்ரக்ருதி மஹத்து அஹங்காரம் என்கிற காரணங்களும் ஆகிய இருவகையுமாயிருக்கிற ப்ரக்ருதி ஸத்வாதிகுணங்களுடன்கூடி ப்ரபஞ்சத்தைப் படைக்கின்றது. இந்த்ரியங்களுக்கு விஷயமாகாதவனும் கேவலம் வேதாந்தங்களால் அறியத் தகுந்தவனும் ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வாதி குணங்களுடையவனுமாகிய பரமபுருஷன் 'ஸூக்ஷ்ம சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடைய நான் ஸ்தூல சேதனாசேதனரூபமான ப்ரபஞ்சமாய் விரியவேண்டும்' என்று ஸங்கல்பிக்கிறான். இங்ஙனம் பரமபுருஷஸங்கல்பத்தினால் உண்டான மஹத்து முதலிய தத்வங்கள் அந்தப் பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தினாலேயே ஒன்றோடொன்று கலந்து ஸ்ருஷ்டிஸாமர்த்யமும் உண்டாகப்பெற்று விகாரத்தை அடைபவைகளாகித் தமக்குக் காரணமான ப்ரக்ருதியின் பலத்தினால் ப்ரஹ்மாண்டத்தைப் படைக்கின்றன. சிலர் தத்வங்கள் ஏழே உள்ளவையென்று சொல்லுகிறார்கள். அதுவும் யுக்தமே. எப்படியென்றால், ஆகாசாதி பூதங்கள் ஐந்து, ஜ்ஞானஸ்வரூபனான ஜீவன், அந்த

ஆகாசாதி பூதங்களுக்கும் ஜீவனுக்கும் ஆதாரனான பரமாத்மா ஆகிய இவையே தத்வங்களென்றுகொண்டு ஏழே தத்வங்களென்று சொல்லுகிறார்கள். அவ்வேழு தத்வங்களினின்று தேஹம் இந்த்ரியங்கள் ப்ராணன்கள் ஆகிய இவை உண்டாகின்றன. இந்த்ரியங்களும் ப்ராணன்களும் தேஹத்தில் அடங்கினவை. தேஹம் தனக்குக் காரணமான பஞ்சபூதங்களில் அடங்கினது. ப்ரக்ருதி முதலிய காரணங்களும் தமது கார்யங்களான ஆகாசாதி பூதங்களிலேயே அடங்கினவையென்னும் அபிப்ராயத்தினால் தத்வங்களேழென்று சொல்லுவதும் யுக்தமேயென்றுணர்க. தேஹம் இந்த்ரியம் முதலிய தத்வங்களுக்குள் எதுவாயினும் ஆகாசாதி தத்வங்களுக்குள் எதையாயினும் விட்டுப் பிரிந்து புலப்படுகிறதில்லை. ஆகையால் தேஹாதிகளுக்கு ஆகாசாதிகளில் உள்ளடக்கஞ் சொல்லுவது யுக்தமேயாம். ஒன்றில் ஒன்று உள்ளடங்கினதாகக் கருத்தேயன்றி மற்றவை முதலேயில்லையென்று கருத்தன்று. ஆறே தத்வங்களென்கிற பக்ஷத்திலும் பஞ்சபூதங்களும் ஆறுவன் பரமபுருஷனுமாம். ஜீவனுக்குப் பரமபுருஷனிடத்திலும், தேஹாதிகளுக்கு ஆகாசாதி பஞ்சபூதங்களிலும் உள்ளடக்கமென்னும் அபிப்ராயத்தினால் ஆறு தத்வங்களென்பதும் கூடும். அப்பரமபுருஷன் தன்னிடத்தினின்றும் உண்டான பூதங்களோடு கூடி இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் படைத்து அதன் ஸ்திதிக்காக அதில் அந்தராத்மாவாய் நுழைந்திருக்கின்றான். நான்கே தத்வங்களென்கிற பக்ஷத்திலும் யுக்திசொல்லுகிறேன், பரமாத்மாவினிடத்தினின்று அக்னி ஜலம் பூமி என்னும் இம்மூன்று தத்வங்கள் உண்டாயின. பரமாத்மாவோடுகூட நான்கே தத்வங்களென்றுணர்க. பர

மாத்மாவினால் உதவி செய்யப்பெற்ற அக்னி ஜலம் பூமி ஆகிய இம்மூன்று தத்வங்களால் இந்த ப்ரபஞ்சமெல்லாம் உண்டாயிற்று. கண்ணுக்குப் புலப்படுகிற அவயவங்களையுடைய ஸ்தூலகார்யவஸ்து ஸூக்ஷ்மத்தினின்று உண்டாயிருக்கவேண்டுமல்லவா? ஆகையால் மற்றவைகளுக்கு அவ்வக்னி முதலிய மூன்று பூதங்களிலும் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவினிடத்திலும் அந்தர்ப்பாவமென்று கருத்து. பதினொரு தத்வங்களென்கிற பக்ஷத்தில், இப்பரம புருஷன் பஞ்சமஹாபூதங்கள் காது முதலிய ஜ்ஞானேந்த்ரியங்கள் ஆக இப்பதினொன்றை மாத்ரமே தத்வங்களாக எடுத்துக் கொள்ளவேண்டும். இதிலும் முன்போலவே மற்றவை சொன்னவற்றில் உள்ளடங்கினவையென்று கருத்து. பதினேழுதத்வங்களென்கிற பக்ஷத்தில் ஆகாசாதி பூதங்களைந்தும் சப்தம் முதலிய தன்மாத்ரங்களைந்தும் ஶ்ரோத்ரம் முதலிய ஜ்ஞானேந்த்ரியங்களைந்தும் மனம் ஒன்றும் ஆக இப்பதினாறையும் பதினேழாவனான பரமாத்மாவையும் தத்வங்களாகக் கொள்ள வேண்டும். பதினாறு தத்வங்களென்கிற பக்ஷத்தில், பஞ்ச பூதங்கள் பஞ்சதன்மாத்ரங்கள் பஞ்சஜ்ஞானேந்த்ரியங்கள் பரமாத்மா ஆக இப்பதினாறையும் தத்வங்களாகக் கொள்ளவேண்டும். இந்தப் பக்ஷத்தில் பரமாத்மாவே மனமென்று கூறப்படுகிறான். ஆகையால் மனத்திற்குப் பரமாத்மாவினிடத்தில் உள்ளடக்கமென்று கருத்து. பதின்மூன்று தத்வங்களென்கிற பக்ஷத்தில், பஞ்சபூதங்கள் பஞ்சஜ்ஞானேந்த்ரியங்கள் ப்ராணன் மனம் பரமாத்மா ஆகிய இப்பதின்மூன்றையும் தத்வங்களாகக் கொள்ளவேண்டும். (இங்ஙனமே மூன்று தத்வங்களென்கிற பக்ஷத்தையும் ஐந்து தத்வங்களென்கி-

பக்ஷத்தையும் ஆராய்ந்தறியவேண்டும். மூன்றென்கிற பக்ஷத்தில் ப்ரக்ருதி புருஷன் ஈஸ்வரன் இம்மூன்று தத்வங்களை எடுத்துக்கொள்ள வேண்டும். ஐந்தென்கிற பக்ஷத்தில், நான்கு தத்வங்களென்கிற பக்ஷத்தில் சொல்லப்பட்ட தத்வங்கள் நான்கும் அவற்றோடு வாயுவையும் சேர்த்து ஐந்து தத்வங்களென்று கொள்ளவேண்டும்). இங்ஙனம் ரிஷிகள் தத்வங்களைப் பலவாறு கணக்கிட்டிருக்கிறார்கள். அவையெல்லாம் யுக்தி அமைந்தவையாகையால் நியாயத்திற்கிணங்கினவைகளே. அறிஞர்கள் சொல்லுவது எதுதான் அழகாயிராது? எல்லாம் அழகாகவே யிருக்கும்.

உத்தவர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணா! ப்ரக்ருதியும் புருஷனும் விலக்ஷணஸ்வரூபமுடையவையாகையால் வெவ்வேறு தத்வங்களென்பது வாஸ்தவமே. ஆயினும் ஒன்றைவிட்டு மற்றொன்று பிரிந்து தோற்றாமையால் அவ்விரண்டுக்கும் பேதம் தெரிகிறதில்லை. ஜீவாத்மா ப்ரக்ருதியின் பரிணாமமான தேஹத்தில் புலப்படுகிறான். ப்ரக்ருதியும் ஆத்மாவினிடத்தில் புலப்படுகின்றது. ஒன்றை விட்டொன்று பிரிந்து தோற்றாமையாலும் 'நான் தேவன், நான் மனுஷ்யன்' என்று அபேதமாய்த் தோற்றுகையாலும் தேஹாத்மாக்களுக்குப் பேதம் தெரிகிறதில்லை. இப்படியிருக்க ப்ரக்ருதிபுருஷர்களை வெவ்வேறு தத்வங்களென்று எங்ஙனம் நிச்சயிக்கக்கூடுமென்று என்மனத்தில் ஸந்தேஹமாயிருக்கின்றது. ஸர்வஜ்ஞனே! யுக்தியில் தேர்ந்திருக்கிற உன்வசனங்களால் அந்த ஸம்சயத்தை அறுக்கவேண்டும். ஜீவாத்மாக்களுக்கு அந்த வஸ்துக்களை உள்ளபடி அறிகையாகிற ஜ்ஞானம் உன்னுடைய அனுக்ரஹத்தினால் தான் உண்டாகின்றது. அந்த ஜ்ஞானத்தினுடைய

மறைதலும் உன்னுடைய சக்தியாகிய அவித்யையினால் தான் உண்டாகின்றது. உன்னுடைய மாயையின் உண்மை உனக்கே தெரியுமன்றி மற்றெவனுக்கும் தெரியாது. உன்னையொழிய மற்றவர்களெல்லாரும் உன் மாயையினால் மதிமயங்கினவர்களே. ஆகையால் நீயே இந்த ஸம்சயத்தைப் போக்கவேண்டும்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—புருஷஶ்ரேஷ்டனே! ப்ரக்ருதியும் புருஷனும் ஆகிய இவையிரண்டும் வெவ்வேறு தத்வங்களே. இந்த ப்ரபஞ்சம் முழுவதும் ப்ரக்ருதியின் பரிணாமமான அஹங்காரத்தினால் ஏற்பட்டது. ஆகையால் இதற்கு வைகாரிகமென்று பெயர்; இது இச்சை த்வேஷம் முதலிய ஆத்மகுணங்களையும் பருமன் இளைப்பு முதலிய தேஹகுணங்களையும் ஒரே வஸ்துவில் இருப்பதாகத் தோற்றுவிக்குந்தன்மையுள்ளது. உத்தவரே! ஸத்தாதிகுணமயமான என்னுடைய மாயை தன் குணங்களால் தேஹாத்மப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ரமம் முதலிய மற்றும் பல விபரீதபுத்திகளை விளைக்குந்தன்மையுடையது. ப்ரக்ருதியின் விகாரமான அஹங்காரத்தின் கார்யமாகையால் வைகாரிகமென்று சொல்லப்படுகிற இந்த ப்ரபஞ்சம் மூன்றுவிதமாயிருக்கும். அவற்றில் ஒன்று அத்யாத்மமென்றும், மற்றொன்று அதிதைவமென்றும், மற்றொன்று அதிபூதமென்றும் கூறப்படும். சக்ஷுரிந்த்ரியத்தை அத்யாத்மமென்றும் அதனால் அறியப்படும் ரூபத்தை அதிபூதமென்றும், நேத்ரத்வாரத்திலுள்ள ஸூர்யசரீரத்தை அதிதைவமென்றும் சொல்லுகிறார்கள். அத்யாத்மம் முதலிய இம்மூன்றும் ஒன்றால் ஒன்று உதவி செய்யப்பெற்றே தங்கள் கார்யத்தை நடத்த வல்லவையாகின்றன. சக்ஷுரிந்த்ரியமும் அதன்விஷயமான ரூபமும் நேத்ரத்வாரத்

திலுள்ள ஸூர்ய சரீரத்தின் தேஜஸ்ஸினால் அதிஷ்டானஞ் செய்யப்பெற்றே ஒன்று தன் விஷயத்தை க்ரஹிப்பதும் ஒன்று தன்னிந்த்ரியத்திற்கு விஷயமாவதுமாகிய தங்கள் கார்யத்தைச் செய்கின்றன. ரூபமும் வெகுதூரத்திலாவது வெகு ஸமீபத்திலாவது இல்லாமல் நடுத்தரமான நிலையில் இருந்தால்தான் சக்ஷுரிந்த்ரியத்திற்கு விஷயமாம். ஆகையால் ரூபம் சக்ஷுரிந்த்ரியத்திற்கு நடுத்தரமான நிலையில் இருந்து உதவி செய்கின்றது. இங்ஙனம் இம்மூன்றும் ஒன்றை விட்டு மற்றொன்று ஜ்ஞானத்தை உண்டாக்காதாகையால் இம்மூன்றும் ஒன்றுக்கொன்று உபகாரங்களாயிருக்குமென்பதை உணர்க. இங்ஙனம் அத்யாத்மாதிகளின் பரஸ்பரோபகாரத்தினால் ரூபாதிப்ரகாசம் உண்டாகிறதாயின், ஆத்மா எதனால் ப்ரகாசிக்கிறானென்றால், சொல்லுகிறேன். ஆத்மா ஹ்ருதயத்தில் இருக்கின்றான். அவன் தானே ப்ரகாசிக்குந்தன்மையனேயன்றி மற்றொன்றின் உதவியை எதிர்பார்ப்பவனல்லன். ஏனென்றால், அவன் சக்ஷுரிந்த்ரியம் முதலிய மூன்றுக்கும் முதன்மையானவன்; சக்ஷுரிந்த்ரியம் முதலியவை ஒழிந்த போதிலும் நிலைநின்றிருப்பவன். ஆனது பற்றியே அவன் இம் மூன்றைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். அவன் தனக்கு அஸாதாரணமான ஜ்ஞானத்தினால் ஸமஸ்த ப்ரகாஸ்ய வஸ்துக்களுக்கும் ப்ரகாஸகனாயிருப்பவன். சக்ஷுரிந்த்ரியம்போலவே த்வக்கு முதலிய மற்றை இந்த்ரியங்களும் பரஸ்பரோபகாரத்தினால்தான் ஜ்ஞானத்தை விளைவிக்கின்றன. அத்யாத்மமான த்வகிந்த்ரியத்திற்கு ஸ்பர்சம் அதிபூதம். வாயு அதிதைவம். ஸ்ரோத்ரேந்த்ரியத்திற்குச் சப்தம் அதிபூதம்; திசைகள் அதிதைவம். சக்ஷுரிந்த்ரியமும் அப்படியே.

ரஸனேந்த்ரியத்திற்கு ரஸம் அதிபூதம்; ப்ரசேதஸ்ஸு அதிதைவம். க்ராணேந்த்ரியத்திற்குக் கந்தம் அதிபூதம்; அஸ்விதேவதைகள் அதிதைவம். சக்ஷுஸ்ஸு முதலிய இவையெல்லாம் மனத்தினால் உதவி செய்யப் பெற்றே தங்கள் கார்யத்தை நடத்துகின்றன. (மனத்திற்கு நினைக்கப்படும் விஷயம் அதிபூதம்; சந்த்ரன் அதிதைவம். ஸத்வரஜஸ்தமோகுணங்களின் வைஷம்யத்தினாலுண்டான விகாரமும் ப்ரக்ருதியின் கார்யமான மஹத்தத்வத்தினின்று உண்டானதுமாகிய அஹங்கார தத்வம் வைகாரிகமென்றும் தாமஸமென்றும் ஐந்த்ரியமென்றும் மூன்றுவகைப்பட்டிருக்கும். அவ்வஹங்காரமே தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும் பேதம் தெரியாமையாகிற மோஹத்தை விளைவிக்கின்றது. ஸாத்விகாரஹங்காரத்திற்கு வைகாரிகாஹங்காரமென்றும் பெயர். ராஜஸாஹங்காரம் தைஜஸமென்றும் இந்த்ரியோத்பத்திற்கு உதவி செய்கின்றதாகையால் ஐந்த்ரியமென்றும் கூறப்படுகின்றது.) ஆத்மா முழுவதும் ஜ்ஞானத்தையே வடிவாகவுடையவன். தேஹமோவென்றால், முழுவதும் ஜடமாயிருக்கும். ஆத்மா நானென்று தோற்றுகையால் எல்லார்க்கும் ஒப்புக்கொள்ளத்தகுந்தவனேயன்றி அம்தப்படியென்று ஆக்ஷேபிக்கத் தகுந்தவனன்று. அவன் எப்பொழுதும் ஒருவாறாயிருப்பவனாகையால் உளனென்றே கூறப்படுபவன். தேஹமோவென்றால் எப்பொழுதும் மாறிக்கொண்டேயிருக்குமாகையால் இல்லையென்று கூறப்படுகின்றது. தேஹமும் பால்யாதி அவஸ்தைகளைப்பற்றி உளதென்று கூறப்படுகிறதாயினும் ஆத்மாவைப்போல்எப்பொழுதும் ஒருவாறாயிருப்பதன்றாகையால் உளதென்றே கூறப்படுவதன்று. தேவமனுஷ்யாதி பேதம் அங்ஙனம் இல்லதென்று கூறப்படுகிற தேஹத்

தைப்பற்றினதேயன்றி ஆத்மாவைப் பற்றினதன்று. உண்டு இல்லையென்கிற இரண்டு வியவஹாரமும் வெவ்வேருகத் தோற்றுகிற தேவமனுஷ்யாதிதேஹங்களுக்கு உண்டு. ஆத்மாவுக்கு உண்டென்கிற வியவஹாரமே யொழிய இல்லையென்கிற வியவஹாரம் கிடையாது. தேவமனுஷ்யாதி பேதம் ஆத்மாவினிடத்தில் உண்மையாக இல்லையாயினும் தமக்கு ஆத்மஸாக்ஷாத்காரத்தை விளைப்பவனுகிய என்னிடத்தினின்று மீண்ட மதியுடை'யவர்களுக்கு அந்த ப்ரமம் நீங்காது. அவர்கள் தேவமனுஷ்யாதி பேதம் ஆத்மாவினிடத்தில் உள்ளதென்றே நினைப்பார்கள்.

உத்தவர் சொல்லுகிருர்:—ப்ரபூ! தாங்கள் செய்த பாபகர்மங்களால் உன்னிடத்தினின்று மீண்ட மதியுடையவர்கள் மேன்மையும் தாழ்மையுமான பலவித தேஹங்களைப் பெறுவதும் விடுவது மாயிருக்கிருர்களே. அவர்கள் தேஹங்களை விடும்பொழுது அத்தேஹங்களிலுள்ள இந்த்ரியங்களையும் துறந்து வேறுதேஹங்களைப் போல் வேறு இந்த்ரியங்களையும் பெறுகின்றுர்களா? அல்லது அவ்விந்த்ரியங்களோடுகூடவே வேறு தேஹங்களைப் பெறுகின்றுர்களா? இவ்விஷயத்தில் எது நிச்சயமோ, அதை எனக்குச் சொல்வாயாக இவ்விஷயம் மந்தபுத்தியர்களுக்கு நிச்சயிக்க முடியாது. கோவிந்தனே! மற்றும், இவ்விஷயத்தை அறிந்தவர்கள் இவ்வுலகத்தில் பெரும்பாலும் இல்லையென்றே சொல்ல வேண்டும். ஏனென்றுல், எல்லோரும் உன்னுடைய மாயையினுல் வஞ்சிக்கப் பட்டவர்களே யல்லவா?

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:—கர்மவாஸனை மிகுந்திருக்கப்பெற்ற மனம் ஜ்ஞானேந்த்ரியங்களைந்தோடும்

ஸூக்ஷ்மங்களோடுங்கூடி ஒரு சரீரத்தினின்று மற்றொரு சரீரத்தைத் தொடர்ந்து செல்கின்றது. அந்த மனத்தைக்காட்டிலும் வேறுபட்டவனான ஆத்மா அம்மனத்தைத் தொடர்ந்து செல்கின்றான். (கர்மேந்த்ரியங்கள் அந்தந்த தேஹங்களிலேயே கிடைக்கின்றனவாகையால் அவை ஒரு தேஹத்தினின்று மற்றொரு தேஹத்தைத் தொடர்ந்து போகிறதில்லை.) பூர்வதேஹத்திலுள்ள ஜ்ஞானேந்த்ரியங்களே தேஹாந்தரத்தில் அனுவர்த்திக்கின்றனவாயின், ஜீவனுக்குப் பூர்வஜன்ம ஸ்மரணம் ஏன் உண்டாகிறதில்லையென்றால், சொல்லுகிறேன். கர்மவாஸனைக்குட்பட்டிருக்கின்ற மனம் கண்ணால் பார்த்தவைகளும் காதால் கேட்டவைகளுமான விஷயங்களை த்யானித்துக்கொண்டேயிருக்கின்றது; பிறகு அவ்விஷயங்கள் ஸமீபிக்கும்பொழுது ஸந்தோஷிப்பதும் அவை மறையும்பொழுது வருந்துவதுமாயிருக்கின்றது. அதன் பிறகு முன்புள்ள நினைவு மறந்து போகின்றது. ஒரு ஜன்மத்திலேயே இங்ஙனம் மறப்பு உண்டாகிறதாயின் மிகவும் மறப்பிற்கிடமான தேஹவியோகத்தில் பூர்வஜன்மஸ்மரணம் எப்படி உண்டாகும்? எவனுடைய மனம் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவைப் பற்றின நினைவு இல்லாதிருக்கின்றதோ, அவனுக்கு ஏதோ ஒரு காரணத்தினால் மரணம் அடையும்பொழுது மிகவும் மறப்பு (ஜ்ஞானலோபம்) உண்டாகிறன்து. மரணகாலத்தில் அத்யந்த ஜ்ஞானலோபம் உண்டாயினும் தேஹாந்தரஸம்பந்த ரூபமான ஜன்மாந்தரத்தில் மனஸ்ஸும் ஜ்ஞானேந்த்ரியங்களும் முன் தேஹத்திலிருந்தவைகளே தொடர்ந்து வருகின்றனவாகையால் பூர்வஜன்மத்தைப்பற்றின நினைவு உண்டாகலாமேயென்றால், சொல்லுகிறேன். பூரிதானஞ் செய்யுந் தன்

மையரே! புருஷன் ஸர்வவித மனோபாவத்தினாலும் தேஹத்தை ஆத்மாவாக அபிமானிக்கையே ஜன்மமென்று சொல்லுகிறார்கள் (ஜன்ம காலம் முதல் ஜீவனுக்கு தேஹாத்மாபிமானம் உண்டாகின்றது). தேஹத்தையே ஆத்மாவாக அபிமானித்திருக்கும் ஜீவனுக்கு தேஹத்தைக் காட்டில் விலக்ஷணனும் பூர்வ உத்தர ஜன்மங்களை அனுஸந்திப்பவனுமாகிய ஆத்மாவின் ஸ்வரூபம் தோற்றுகிறதில்லையாகையால் தேஹவியோகரூபமான மரணத்தைப் பற்றின நினைவாவது தேஹாந்தரஸ்வீகாரரூபமான ஜன்மாந்தரத்தைப் பற்றின நினைவாவது வருகிறதில்லை. 'ஸ்வப்னத்தில் தன்னை விழித்துக்கொண்டிருக்கிறதாக நினைப்பதும் மனோரதத்தில் அனுபவிக்கிற வஸ்துவும் தேஹாத்மாபிமானமும் ப்ராந்தியேயன்றி உண்மையன்று. ஸ்வப்னம் காண்கிறவன் தனக்கு முன்புள்ள ஆகாரத்தை மறக்கின்றான். ஆசை வளர்க்கிறவன் தனக்குள்ள நிலைமையை மறந்து விடுகிறான். அங்ஙனமே ஜன்மாந்தரத்தில் பூர்வஜன்மத்தை மறக்கின்றான். மற்றும், முன் ஜன்மத்திலுள்ள தன்னை முன்பில்லாமல் அப்பொழுது புதிதாகப் பிறந்ததுபோல் நினைத்துக்கொள்கின்றான். ஆத்மாவுக்கு தேஹஸம்பந்தம் உண்டாவதனால் அவ்வாத்மாவினிடத்தில் சரீரம் இந்த்ரியங்கள் * அந்தக்கரணம் ஆகிய இம்மூன்றுவிதமாயிருக்கை தோற்றுகின்றது. ஒருவன் அனர்த்தங்களுக்கிடமான அஸத் புத்ரனைப் பெறுவதுபோல், அவை வெளித்தோற்றுகிற தேவ மனுஷ்யாதி பேதங்களையும் பால்ய யௌவனாதி பேதங்களையும் லோபம் பயம் முதலிய வெளித்தோற்றாத பேதங்களையும் விளைக்கின்றன. (ஆத்மா

---

* அந்தக்கரணம்—மனம்.

வுக்கு தேஹஸம்பந்தம் உண்டானவுடனே தேஹமே ஆத்மாவென்றும் இந்த்ரியங்களே ஆத்மாவென்றும் அந்தக்கரணமே ஆத்மாவென்றும் பல ப்ரமங்கள் உண்டாகின்றன. அதனால் ஆத்மாவினிடத்தில் தேவ மனுஷ்யாதி பேதபுத்தியும் பால்ய யௌவனாதி அவஸ்தாபேதங்கள் ஆத்மாவுக்குள்ளவை யென்னும் புத்தியும் லோபம் பயம் முதலியவை ஆத்மகுணங்களென்னும் புத்தியும் உண்டாகின்றன. ஆகையால் தேஹஸம்பந்தம் பூர்வஜன்மஸ்மரணத்தைப் போக்குவது மாத்ரமே யல்லாமல் மற்றும் பல அனர்த்தங்களையும் விளைக்கின்றது). உத்தவரே! பஞ்சபூதங்களின் பரிணாமரூபமான சரீரங்கள் ஸர்வகாலமும் மாறுபாட்டை அடைந்துகொண்டே யிருக்கின்றன. காலம் ஸூக்ஷ்மமாகையால் அம்மாறுபாடு தெரிகிறதில்லை. காலத்தின் வேகம் கண்டறிய முடியாது எப்படி தீபஜ்வாலைகள் க்ஷணந்தோறும் வெவ்வேறாயிருப்பினும் பேதம் தெரிகிறதில்லையோ, அதுபோலவும், எப்படி ப்ரவாஹத்தில் ஜலம் வெவ்வேறாயிருப்பினும் பேதம் தெரிகிறதில்லையோ, அதுபோலவும், எப்படி வ்ருக்ஷங்களின் பலன்களில் க்ஷணந்தோறுமுள்ள பரிணாமம் தெரிகிறதில்லையோ, அதுபோலவும் காலத்தினால் உண்டாகிற தேஹபரிணாமங்கள் தெரிகிறதில்லை. தீபஜ்வாலை க்ஷணந்தோறும் மாறிக்கொண்டிருப்பினும் ஜனங்கள் அதை அதே ஜ்வாலையென்று நினைத்து அங்ஙனமே வழங்குகிறார்கள். ப்ரவாஹத்தில் வெவ்வேறு ஜலம் வந்துகொண்டிருப்பினும் அதே ஜலமென்று நினைத்து அங்ஙனம் வழங்குகிறார்கள். அதுபோலவே தேஹங்கள் க்ஷணந்தோறும் மாறிக்கொண்டிருப்பினும் அது தெரியாமல் அவனே இவனென்று நினைத்து அங்ஙனம் சொல்லுகிறார்கள். நிலை

யற்ற ஆயுளையுடைய அம்மனிதர்கள் அங்ஙனம் நினைப்பது ப்ரமமேயன்றி உண்மையன்று. தேஹாபிமானமுடைய ஜீவன் தேஹோத்பத்திக்குக் காரணமான கர்மத்தினால் தேஹத்தைப்போல் ஸர்வகாலமும் மாறுந் தன்மையுடையவனல்லனாயினும் ப்ராந்தியினால் பிறப்பதும் சாவதுமாய்த் தோற்றுகிறானன்றி வேறில்லை. அவன் பிறவியற்றவனாகையால் பிறக்கிறதுமில்லை; மரணமற்றவனாகையால் மரணம் அடைவதுமில்லை. கட்டையில் மறைந்திருக்கிற அக்னி கடைவதனால் வெளித் தோற்றுகிறது. அவ்வளவு மாத்ரத்தினால் அவ்வக்னிக்குக் கட்டையோடு கூடவே உத்பத்தியும் விநாசமும் உண்டாகின்றனவென்று சொல்லக்கூடுமோ? அங்ஙனமே ஜீவனும் தேஹ ஸம்பந்த வியோகங்களைப் பெறுவது மாத்ரத்தினால் அவனுக்கு ஜன்ம மரணங்கள் உண்டென்று சொல்ல முடியாது. ஆனால் அங்ஙனம் தோற்றுவது ப்ராந்தியே யன்றி உண்மையன்று. ஜீவன், ரேதஸ்ஸின் மூலமாக யோனித்வாரத்தில் ப்ரவேசிக்கையாகிற நிஷேகம், கர்ப்பத்தில் வளருகை, யோனித்வாரத்தினால் வெளி வருகையாகிற ஜன்மம், பால்யம், (ஐந்து வயது வரையிலுள்ள நிலைமை), கௌமாரம் (பதினாறு வயது வரையிலுமுள்ள நிலைமை), யௌவனம் (அது முதல் இருபத்துநான்கு வயது வரையிலுமுள்ள நிலைமை), வயோமத்யம் (அதுமுதல் அறுபது வயது வரையிலுமுள்ள நிலைமை), கிழத்தனம், மரணம் ஆகிய இவ்வொன்பது அவஸ்தைகளும் சரீரத்திற்கே யுள்ளவை; மனோரதத்தினால் விளைகின்ற பலவகையான இச் சரீரங்களையும் மற்றும் பல சரீரங்களையும் அவற்றைத் தொடர்ந்திருக்கின்ற நிஷேகம் முதலிய நானாவித அவஸ்தைகளையும் பசி தாஹம் முதலிய மற்றும் பல அவஸ்

தைகளையும் ஸத்வாதிகுணபரிணாமங்களான சப்தாதி விஷயங்களின் ஸங்கத்தினால் ஒருகால் ஏற்றுக் கொள்வதும் ஒருகால் விடுவதுமாயிருக்கின்றான். (ஜீவன் சரீரத்தை விடும்பொழுது எந்த அபிப்ராயத்தோடு அதை விடுகிறானோ, அந்த அபிப்ராயமே அவனுக்கு மேன்மேலும் தொடர்ந்து வருகின்றது. அவ்வபிப்ராயத்திற்கு அனுகுணமாகவே மற்றொரு சரீரத்தையும் ஏற்றுக் கொள்கின்றான். ஜீவன் சரீரங்களை விடுவதும் ஏற்றுக்கொள்வதுமாயிருக்கிறானேயன்றி, அவற்றை இவன் ஸாக்ஷாத்கரிக்கிறதில்லை. ஆனால் விவேகமுடையவன் தனக்குப் பிள்ளை பிறப்பதையும் தன்தந்தை மரணம் அடைவதையும் கண்டு தனக்கும் தேஹ ஸம்பந்த தேஹவியோகங்களாகிற ஜன்ம மரணங்களை ஊஹிக்கின்றான். ஜன்மகாலத்திலும் மரணகாலத்திலும் ஜீவன் மோஹித்துக் கிடக்கிறானுகையால் அவற்றை அறிகிறதில்லை. ஆயினும் அந்த ஜன்ம மரணங்கள் தேஹத்திற்கே யன்றி ஜீவனுக்குக் கிடையா. விதையினால் மரம் முளைப்பதையும் கால பரிணாமத்தினால் அது நசிப்பதையும் காண்கிற புருஷன் அந்த மரத்தைக்காட்டிலும் விலக்ஷணனென்பது நமக்குத் தெரிந்த விஷயமே. இங்ஙனமே தேஹம் பஞ்சபூத ஸமுதாயரூபமான காரணத்தினால் உண்டாவதையும் காலபரிணாமத்தினால் நசிப்பதையும் காண்கிற ஜீவன் அந்த தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனே. இங்ஙனம் ஆத்மா ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவனென்று உள்ளபடி பிரித்தறியாதவன் சப்தாதி விஷயானுபவத்தினால் தேஹாத்மாக்கள் இரண்டும் ஒன்றேயென்னும் துரபிமானமாகிற மோஹத்தில் அழுந்தி ஜன்ம ஜராமரணாதி ரூபமான ஸம்ஸாரத்தை மேன்மே

லும் அனுபவிக்கின்றான். ஸத்வகுணத்தின் கார்யமான சமதமாதிகளில் அபிநிவேசம் உளதாயின், அவற்றிற்குரிய கர்மங்களைச் செய்து தேவயோனியிலும் ரிஷியோனியிலும் பிறக்கின்றான். ரஜோகுணத்தின் கார்யமான காமாதிகளில் அபிநிவேசம் உளதாயின் அவற்றிற்குரிய கர்மங்களைச் செய்து அஸுரயோனியிலும் மனுஷ்யயோனியிலும் பிறக்கின்றான். தமோகுணத்தின் கார்யமான சோகமோஹாதிகளால் அவற்றிற்குரிய கர்மங்களைச் செய்து பூதப்ரேத பிசாசாதியோனிகளிலும் பசுபக்ஷ்யாதியோனிகளிலும் பிறக்கின்றான். இங்ஙனம் கர்மங்களால் பலவாறு சுழலமிடுகின்றான். ஒரு புருஷன் கூத்தாடுகிறவர்களையும் பாட்டுப் பாடுகிறவர்களையும் பார்த்துத் தானும் புத்தியினால் கூத்தாடுவதுபோலும் பாட்டுப் பாடுவதுபோலும் இருப்பதுபோல், ஆத்மா இயற்கையில் செயலற்றவனாயினும் ப்ரக்ருதியின் குணங்களான சேஷ்டை முதலிய தர்மங்களைப் புத்தியினால் தன்னிடத்தில் இருப்பதாக நினைத்துக்கொண்டு அந்தச் சேஷ்டாதி தர்மங்களைத் தான் செய்வதுபோல் தோற்றுகிறான். ப்ரவாஹத்தில் ஜலம் அசையும்பொழுது அதில் ப்ரதிபலிக்கிற வ்ருக்ஷங்களும் அசைவதுபோல் தோற்றுகின்றன. கண் சுழலும்பொழுது பூமியும் சுழலுவதுபோல் தோற்றுகிறது. அங்ஙனமே தேஹாத்மாக்கள் இரண்டும் ஒன்றேயென்று ப்ரமிக்கின்ற புத்தியினால் தேஹ தர்மங்கள் ஆத்மாவினிடத்தில் இருப்பதுபோல் தோற்றுகின்றன. தாசார்ஹனே! மனோரதத்தில் அனுபவிக்கும் பதார்த்தங்களும் ஸ்வப்னத்தில் அனுபவிக்கும் பதார்த்தங்களும்போல் ஆத்மாவினிடத்தில் தேஹதர்மங்களை இருப்பதாக நினைப்பது ப்ரமமேயன்றி உண்மையன்று.

சப்தாதி விஷயங்கள் கிட்டியிராமற்போயினும் அவ் விஷயங்களை நினைத்துக் கொண்டிருக்கும் ஜீவனுக்கு ஸம்ஸாரம் நிவர்த்திக்கிறதில்லை. (விஷயங்களை த்யாணித்துக்கொண்டிருந்தால் ஸம்ஸாரம் மேன்மேலும் வளர்ந்து வரும்.) ஸ்வப்னம் தொடர்ந்து வருமளவும் தேசாந்தரம் போதல் தலையறுப்புண்ணுதல் முதலிய அனர்த்தானுபவங்களும் தொடர்ந்து வருமேயன்றி நிவர்த்திக்கா. ஸ்வப்னம் நிவர்த்தித்தவுடனே அவ் வனுபவங்களும் நிவர்த்திக்கின்றன. அங்ஙனமே சப்தாதி விஷயங்களின் நினைவு மாறாதிருக்கும் வரையில் ஸம்ஸாரமும் மாறாது. உத்தவரே! இங்ஙனம் சப்தாதி விஷயங்களின் நினைவு ஸம்ஸாரத்தை வளர்க்குமாகையால் அனர்த்த ஹேதுவான விஷயங்களில் தாழ்ந்தன்மையுள்ள இந்த்ரியங்களால் சப்தாதி விஷயங்களை அனுபவிக்க வேண்டாம். அவற்றை அனுபவித்தால் அவற்றின் நினைவு மாறாமல் தொடர்ந்து கொண்டே வரும். நினைவு மாறாதிருக்குமாயின் ஸம்ஸாரம் நிவர்த்திக்காது. தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணர்களான ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறியாமையால் தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமம் உண்டாகிறதென்றும், அந்த ப்ரமமே ஜன்ம மரணாதி அவஸ்தைகள் ஆத்மாவினிடத்தில் இருப்பதாக நினைப்பதற்குக் காரணமாகிறதென்றும் நிச்சயிப்பாயாக. ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மை தெரியுமாயின் இந்த ப்ரமம் உண்டாகிறதில்லை. எவர் என்ன ஆக்ஷேபம் செய்யினும், நிந்திக்கினும், அஸத்துக்கள் பரிஹாஸம் செய்யினும், குணங்களில் தோஷத்தை ஆரோபிக்கினும், அடிக்கினும், பிடித்திழுத்துத் தடைசெய்யினும், ஜீவனத்திற்கு விக்னஞ் செய்யினும், தன்மேல்

காரி எச்சில் உமியினும், மூத்ரம் பெய்யினும், இங்ஙனம் தெரியாத மூடர்கள் பலவாறு நழுவச்செய்யினும், நன்மையில் விருப்பம் உளதாயின் இத்தகைய ஆபத்தை அடைந்தும் ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை ஆராய்ந்தறிவதற்குக் காரணமான தன்னால் தன்னைக் கரையேற்றவேண்டும்.

உத்தவர் சொல்லுகிறார்:—பேசுகிறவர்களில் சிறந்தவனே! பிறர் செய்யும் ஆக்ஷேபம் முதலியவைகளைப் பொறுத்துக்கொண்டு ஆத்ம பரமாத்ம ஸ்வரூபங்களை உள்ளபடி எங்ஙனம் அறிவேனோ அவ்விதத்தை எனக்குச் சொல்லவேண்டும். தன்மேல் அஸத்துக்கள் செய்கிற ஆக்ஷேபம் முதலிய அதிக்ரமங்களைப் பொறுப்பது மிகவும் அஸாத்யமென்று எனக்குத் தோற்றுகிறது. ஏனென்றால், வைஷ்ணவதர்மங்களில் நிலைநின்று தத்தம் தர்மங்களைத் தவறாமல் அனுஷ்டித்துக்கொண்டு வருபவர்களும் உன்பாதாரவிந்தங்களையே பற்றினவர்களும் அந்தக்கரணத்தை வென்றவர்களுமான சில பெரியோர்களைத் தவிர மற்ற எத்தகைய அறிஞர்களுக்கும் ப்ரக்ருதிஸம்பந்தத்தால் வருகிற தேஹாத்ம ப்ரமம் ராகத்வேஷாதிகள் முதலியவைகளைக் கடக்க முடியாது. ஸர்வாந்தராத்மனே! இவ்விஷயம் உனக்குத் தெரியாததோ? நான் சொல்ல வேண்டுமோ? இருபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

(மனத்தை அடக்குவதற்கு உபாயஞ்சொல்ல முடன்று அதற்கு நிதர்சனமாகப் பிக்ஷுகீதத்தைக் கூறுதல்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பகவத்பக்தர்களில் முக்யராகிய உத்தவர் இங்ஙனம் வினவுகையில், செவிக்கினிய வீரச்செயல்களையுடையவனும் மோக்ஷபூமியைக் கொடுக்க வல்லவனாகையால் முகுந்தனென்று கூறப்படுகின்றவனும் தாசார்ஹர்களில் சிறந்தவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் தன் பக்தராகிய உத்தவருடைய வசனத்தைக் கேட்டு அவரை வெகுமதித்துக் கொண்டு மேல்வருமாறு கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— ப்ருஹஸ்பதியின் சிஷ்யரே! எவன் துர்ஜனங்களுடைய துர்ப்பாஷணங்களால் கலங்கின மனத்தை மீளவும் ஸமாதானப்படுத்திக் கொண்டு நிலைநின்றிருக்க வல்லவனோ, அத்தகைய அறிஞன் இவ்வுலகத்தில் எவனும் இல்லவேயில்லை. துர்ஜனங்களுடைய பருஷவாக்யங்களாகிற பாணங்கள் மர்மஸ்தானங்களில் நிலைநின்று வருத்துவது போல், மர்மஸ்தானங்களில் பாயும்படி நாட்டின பாணங்களுங் கூட வருத்த மாட்டா. (ஆயினும் ஸுகதுக்கங்களின் அஸாதாரணகாரணத்தை ஆலோசிப்பானாயின், மனத்தை மெல்லமெல்ல ஸமாதானப்படுத்திக் கொள்ளலாம்). உத்தவரே! இவ்விஷயத்தில் ஒரு இதிஹாஸஞ் சொல்லுகிறார்கள். இவ்விதிஹாஸம் கேட்போர்களுக்கு மிகவும் புண்யத்தை விளைக்கும். இதுவே உம்முடைய கேள்விக்கும் உத்தரமாம். ஆகையால் இதைச் சொல்லுகிறேன். மிக்க மனவூக்கத்துடன் கேட்பீராக. இவ்விதிஹாஸம் துர்ஜனங்களால் அவமதிக்கப்பட்ட ஒரு ஸந்நியாஸியால் பாடப்பட்டது. அந்த ஸந்நியாஸி எத்

தனை விக்னங்கள் நேரினும் நினைத்த கார்யத்தை நிறைவேற்றுந் திறமையாகிற தைர்யமுடையவர்; தனக்கு வருகிற ஸுகதுக்கங்களெல்லாம் தான் செய்த புண்யபாப கர்மங்களின் பரிபாகமேயென்று உறுதியாக நினைத்திருப்பவர். அவந்தி தேசத்தில் செல்வத்தினால் மிகவும் ஸம்ருத்தனான ஓர் அந்தணன் இருந்தான். அவன் பயிர் வர்த்தகம் முதலிய தொழில்களால் ஜீவிக்குந் தன்மையன்; தன்னுடைய உதரபோஷணத்தையுங்கூட உரியபடி நடத்துந் தன்மையனல்லன்; பணத்தில் விருப்பமுடையவன்; அதை ஆர்ஜனஞ் செய்வதில் பேராசை யுற்றவன்; மிகவும் கோபஸ்வபாவமுடையவன். அவன் ஜ்ஞாதிகளையாவது அதிதிகளையாவது வாக்குமாத்ரத்தினாலுங்கூட ஆராதிக்க மாட்டான். ஆகையால் இவனுடைய க்ருஹம் நுழைபவர் ஒருவருமின்றி எப்பொழுதும் சூன்யமாயிருக்கும். தன் தேஹத்தையுங்கூட உரிய காலத்தில் வேண்டிய போகங்களால் உபலாலனஞ் செய்வதில்லை. துர்நடத்தை யுடையவனும் தன் வயிற்றிற்குங்கூட உரிய உணவை உட்கொள்ளப்பொறாத லோபியுமான அவ்வந்தணனுடைய பிள்ளைகளும் பந்துக்களும் அவனுக்கு த்ரோஹஞ் செய்தார்கள். பார்யையும் புதல்விகளும் ப்ருத்யர்களும் வருந்தி அவனுக்குச் சிறிதும் ப்ரியஞ் செய்யவில்லை. அவன் யக்ஷாதிகளைப்போல் பணத்தைக் காத்துக் கொண்டிருந்தானன்றி அந்தப் பணத்தின்மேல் படிந்த தூசியையுங்கூட அநுபவித்தறியான். ஆனதுபற்றியே அவன் இஹலோகஸுகம் பரலோகஸுகம் ஆகிய இரண்டினின்றும் நழுவலுற்றிருந்தான். ஏனென்றால், அவன் தர்மம் காமம் ஆகிய இவையிரண்டையும் பாராட்டாமலே இருந்தான். ஸம்பாதித்த பணத்திற்

குப் பஞ்சமஹாயஜ்ஞங்களால் அவற்றின் தேவதைகளை ஆராதிக்கையன்றோ ப்ரயோஜனம். அவ்வந்தணன் அவற்றில் எதையும் செய்யாமையால் பணத்தின் பாகஸ்தர்களான தேவதைகள் ரிஷிகள் பித்ருக்கள் மனுஷ்யர்கள் பூதங்கள் ஆகிய பஞ்சமஹாயஜ்ஞதேவதைகள் அவன் மேல் கோபமுற்றனர். பூரிதானஞ் செய்பவரே! அவ்வந்தணன், பாகஸ்தர்களான அந்தப் பஞ்சமஹாயஜ்ஞதேவதைகளை அவமதித்தமையால் தனலாபத்திற்கு ஹேதுவான புண்யம் க்ஷீணிக்கப் பெற்றான். ஆகையால் பல வருத்தங்களுக்கிடமான க்ருஷி முதலிய வியாபாரங்களைச் செய்து மிகவும் ச்ரமப்பட்டு ஸம்பாதித்த அவனுடைய பணமெல்லாம் தொலைந்து போயிற்று. உத்தவரே! இவனுடைய பணத்தில் ஜ்ஞாதிகள் சிலவற்றையும், திருடர்கள் சிலவற்றையும் கொண்டுபோனார்கள். வீடு எரிந்துபோவது முதலிய தெய்வச்செயலால் சில பணங்கள் பாழாயின. பூமியில் புதைத்து வைத்து நெடுநாளாகையில் இன்ன இடத்தில் புதைத்து வைத்தோமென்று தெரியாமையால் சில பணங்கள் பாழாயின. மற்றும் அவனைச் சார்ந்த மனுஷ்யர்கள் சில பணங்களைக் கொண்டு போனார்கள். அன்றியும், மன்னவர்கள் சில பணங்களைக் கொண்டுபோனார்கள். இங்ஙனம் ஜ்ஞாதிகள் திருடர் தெய்வம் காலம் ஸம்பந்திகள் மன்னவர் ஆகிய பல வழிகளில் பணமெல்லாம் பாழாகையில் தர்மகாமங்களையும் கைவிட்டு பந்துக்களாலும் உபேக்ஷிக்கப்பட்ட அவ்வந்தணன் பணமெல்லாம் பாழாகையால் அளவற்ற சிந்தையில் அழுந்தினான். பணத்தையெல்லாம் இழந்து நெடுஞ்சிந்தையில் அழுந்தி மனம் பரிதபித்துக் களிப்பற்றுக் கண்டத்தில் கண்ணீர் தடைபட்டுப் பேசவும் முடியாதிருக்கின்ற அவ்வந்தண

னுக்குப் பெரிய மனவெறுப்பு உண்டாயிற்று. அவ்வந்தணன் இங்ஙனம் மொழிந்தான்:—'ஆ! எனக்கு இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்ததே! நான் என்னுடைய தேஹத்தை வீணுக்கு வருத்தினேன். ஏனென்றால், இங்ஙனம் நான் பணம் ஸம்பாதிப்பதற்காகப் பட்ட ஆயாஸமெல்லாம் தர்மத்திற்காகவாவது காமத்திற்காகவாவது உபயோகப்படாமல் போய்விட்டதே. பெரும்பாலும் என்னைப்போன்ற க்ருபணர்களுடைய பணம் ஒருகாலும் ஸுகத்தை விளைக்கிறதில்லை. பின்னையோவென்றால் இவ்வுலகத்தில் ஜீவித்திருக்கும்பொழுது தேஹஶ்ரமத்தையும் மரணம் அடைந்த பின்பு பரலோகத்தில் நரகத்தையுமே விளைக்கின்றது. புகழுடையவர்களுடைய நிர்மலமான புகழையும் குணமுடையவர்களுடைய சிறந்த குணங்களையும், லோபமென்னும் துர்க்குணம் சிறிதுளதாயினும், அது குஷ்டரோகம் அழகான உருவத்தைப்பாழாக்குவதுபோல் பாழாக்கிவிடும். பணம் ஸம்பாதிக்கும்பொழுதும், ஸம்பாதித்த பின்பு அதை வட்டிக்குக் கொடுப்பது முதலிய உபாயங்களால் வளர்க்கும்பொழுதும் உள்ள ஆயாஸம் அளவற்றது. பிறகு அதைப் பாதுகாக்கும்பொழுது 'இதை எவனேனும் திருடிக்கொண்டு போனால் என்ன செய்வோம்?' என்னும் பயம் ஓயாமல் தொடர்ந்துகொண்டேயிருக்கும். பணத்தைப் பிறர்க்கு உபயோகப் படுத்துவதனால் செலவாகும்பொழுதும் பணத்தைத் தன்னுடைய போகத்திற்காக உபயோகப்படுத்தும்பொழுதும் 'ஐயோ! பணம் குறைந்துபோய் விடுகிறதே' என்னும் சிந்தை ஓயாதிருக்கும். பணம் அழிந்துபோகும்பொழுது அதை ப்ராணன்களைப்போல் [illegible]ாக நினைத்திருப்பாராகையால் 'ஐயோ! ப்ராண[illegible]கின்றதே' என்னும்

ப்ரமம் உண்டாகும். இங்ஙனம் பணம் எக்காலத்திலும் ப்ராணிகளுக்கு துக்கத்தையே விளைக்கும். திருட்டுத் தனம், பிறரை ஹிம்ஸித்தல், பொய் பேசுதல், தம்பம், பிறர் ஸொத்தை எப்படியாயினும் பறித்துக்கொண்டு போகவேண்டுமென்னும் பேராசை, அதற்குத் தடை செய்பவரிடத்தில் கோபம் ஆகிய இவ்வாறு துர்க்குணங்களும் பணம ஸம்பாதிக்க முயலும் பொழுது நேரிடுகின்றன. பணம் கிடைத்த பின்பு பெரியோர்களிடத்தில் அவர்கள் பெருமையைப் பாராட்டாமல் தாழ்வாக நினைப்பதற்குக் காரணமான கர்வம், 'சாஸ்த்ரங்களில் இது விதிக்கப்பட்டது. இதைச் செய்யலாம். இது சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப் பட்டது. இதைச் செய்யலாகாது' என்னும் விவேகமற்றிருக்கையாகிற மதம், தேஹானுபந்திகளுக்குங்கூட அப்ரியஞ் செய்கையாகிற பேதம், அகாரணவிரோதமாகிற வைரம், கலஹம், ஸ்த்ரீகள் சூது சதுரங்கம் மத்யபானம் இவைகளில் விருப்பம் ஆகிய இவ்வனர்த்தங்கள் உண்டாகின்றன. இவ்வனர்த்தங்கள் பதினைந்தும் பணத்திற்குக் காரணங்களும் பணத்தைக் காரணமாகவுடையவைகளுமாயிருக்கும். இங்ஙனம் அனர்த்தங்களுக்கிடமாகையால் அனர்த்தமென்னும் பேருடைய [1] அர்த்தத்தை நன்மையில் விருப்பமுடையவன் தூரத்தில் துறக்க வேண்டும். ஒருவனுடைய ஆபத்து ஸம்பத்துக்களையே தனக்கும் ஆபத்து ஸம்பத்துக்களாக நினைத்து ஒருமித்திருப்பவர்களும் ஒருவர்க்கொருவர் மிகுந்த ஸ்னேஹமுடையவர்களுமான உடன்பிறந்தவர்களும் பார்யைகளும் தந்தைகளும் மற்றவர்களும் ஒரு [2] காக

[1] பணத்தை. [2] காகணிகை-மிகவும் அற்பமான ஓர் நாணயம்.

ணிகைமாத்ரம் வியத்யாஸப்படுமாயின் அவ்வளவில் மனம் பேதித்து முன்புள்ள ஸ்னேஹமெல்லாம் பாழாகி ஒருவர்க்கொருவர் சத்ருக்களாய் விடுகிறார்கள். பணத்தில் மிகவும் அற்பமான அம்சத்தில் சிறிது வியத்யாஸம் நேரிடுகையால் இந்த உடன்பிறந்தவர் முதலியவர்கள் அனைவரும் கோபமுற்று அந்தக் கோபம் ஆயுள்வரையிலும் தொடரப்பெற்றுப் பொறாமையும் வளர்ந்து நெடுநாளாயிருந்த ஸ்னேஹத்தையெல்லாம் சீக்ரத்தில் துறந்து ஒருவர்க்கொருவர் ப்ராணன்களை விடுவதும் ஒருவரை யொருவர் வதிப்பதும் செய்கிறார்கள். தேவர்களுங்கூட ஆசைப்படும்படியான மனுஷ்ய ஜன்மத்தைப் பெற்று அதிலும் ப்ராஹ்மணோத்தமனாகப் பிறந்தும் அவற்றால் ஸாதிக்கக்கூடிய நன்மையைச் சிறிதும் பாராட்டாமல் கேவலம் பணத்திலேயே விருப்பங்கொண்டு தங்கள் ஹிதத்தைப் பாழ்செய்கிறவர்கள் அசுபகதியாகிய நரகத்தையே அடைவார்கள். இந்த மனுஷ்யதேஹம் ஸ்வர்க்கத்தையும் [1] அபவர்க்கத்தையும் ஸாதித்துக் கொடுக்க வல்லது. (ஆனது பற்றியே இதைத் தேவர்களும் விரும்புகிறார்கள்.) இத்தகைய மனுஷ்யதேஹத்தைப் பெற்றும் விவேகமுடையவன் எவன்தான் அனர்த்தங்களுக்கிடமான பணத்தில் மனப்பற்று செய்வான்? பணத்திற்கு பாகஸ்தர்களான தேவதைகள் ரிஷிகள் பித்ருக்கள் பூதங்கள் ஜ்ஞாதிகள் பந்துக்கள் தன்தேஹம் ஆகிய இவற்றிற்குப் பணத்தைப் பங்கிட்டு உபயோகப்படுத்தாமல் எவன் அதைப் பூதம்போல் பாதுகாத்துக்கொண்டிருக்கிறானோ, அவன் நரகத்தில் விழுவானன்றி நன்மையை அடையமாட்டான். (பணம் அனர்த்தங்களுக்கிட மாகை

1 மோக்ஷத்தையும்.

யால் அதைத் தேடலாகாது. தேடினும் பஞ்சமஹா யஜ்ஞாதி கர்மங்களுக்குப் 'போதுமானவளவு பெற லாமன்றி அதற்குமேல் அதைப் பெறலாகாது. மேன் மேலெனப் பெறினும் கீழ்ச்சொன்ன தேவாதிகளுக்குப் பங்கிட்டு உபயோகப்படுத்திக் கொண்டு வருவானாயின், அதனால் கெடுதியை அடையமாட்டான். இல்லையாயின் கெடுதியை அடைவது நிச்சயம்). நான் இங்ஙனம் பணத்தாசையால் இழுக்கப்பட்டு நன்மையில் மனமுக்க மற்றிருக்கையில் தர்ம காம மோக்ஷங்களை நிறைவேற் றிக் கொடுக்க வல்லவைகளான என்னுடைய பணம் வயது பலம் இவை யெல்லாம் பாழாய்விட்டன. இப் பொழுது கிழத்தன்மையை அடைந்த நான் எதைச் சாதிப்பேன்? இங்ஙனம் அனர்த்தங்களுக்கிடமென் பதை அறிந்தும் இவ்வுலகத்திலுள்ள ஜனம் வீணை. அந்தப் பணத்தாசையால் இழுக்கப்பட்டு அடிக்கடி வருந்துகின்றது. ஆகையால் இவ்வுலகம் முழுவதும் ஒருவனுடைய மாயையினால் மதிமயங்கி இங்ஙனம் பணத்தாசையால் இழுக்கப்படுகின்றதென்பது நிச்ச யம். இல்லையாயின், அர்த்தம் அனர்த்தங்களுக்கிட மென்பது தெரிந்தும் அதற்காக ஒருவன் முயற்சி கொள் வானோ? பணத்தைச் சம்பாதித் துஅதை உரியபடிஉப யோகப்படுத்தானாயின், அது அனர்த்தங்களை விளைக்கு மென்பது உண்மையேயாயினும், தானபோகங்களுக்கு உபயோகப்படுமாயின் அது புருஷார்த்தமன்றோ வென் றால், அதுவும் புருஷார்த்தமாக மாட்டாது. தான போகங்களுக்காகவுங்கூடப் பணத்தைச் சம்பாதிக்க வேண்டிய அவஸ்யமில்லை. ஏனென்றால், பிறர்க்கு தானஞ் செய்வானாயின் அவனுக்குப் பணம் அழியாமல் மேன்மேலும் வளர்ந்து வரும்; மற்றும், விரும்பின

போகங்களையும் நிறைவேற்றிக் கொடுக்கும். ஆயினும், அந்தப் பணங்களாலாவது அந்தக் காமபோகங்களாலாவது என்ன புருஷார்த்தம் கைகூடும். 'காமபோகமே புருஷார்த்தம். அவற்றை நிறைவேற்றுவதற்காகப் பணங்களும் வேண்டு'மென்றால், அதுவும் சரியன்று. அந்தக் காமபோகங்கள் புருஷார்த்தமாகிலன்றோ அவற்றிற்காகப் பணம் வேண்டும். அவையே புருஷார்த்தமாக மாட்டாவாயின், அவற்றிற்காக ஒருவன் பணத்தை விரும்பலாகுமோ? புண்யகர்மங்களை அனுஷ்டிப்பதற்காகப் பணம் வேண்டுமன்றோ வென்றால், அவற்றிற்காகவும் அது வேண்டியதில்லை. பலன்களை விரும்பிச் செய்யும் புண்யகர்மங்கள் மேன்மேலும் ஜன்மங்களை விளைக்குமேயன்றி மோக்ஷத்தை விளைக்க மாட்டா. அந்த ஜன்மங்களில் போகம் ஸித்திக்குமல்லவாவென்றால், எந்த ஜன்மத்திலும் விரும்பினவளவு போகங்கள் ஸித்திக்கமாட்டா. போகங்களில் மனத்தைச் செலுத்துவானாயின், மேன்மேலும் அவற்றை அனுபவிக்க வேண்டுமென்று தோன்றுமேயன்றி அனுபவித்தது போதுமென்று தோன்றாது. இன்னம் அனுபவிக்க வேண்டுமென்று இவன் விரும்பிக்கொண்டேயிருக்கையில் திடீரென்று மரணம் அடைவான். மரணமென்பது தவறாமல் வந்தே தீருந்தர்மமன்றோ? எந்த ஜன்மத்திலும் போகங்களில் விருப்பமுடையவன் அனுபவித்தது போதுமென்னும் த்ருப்தி உண்டாகப் பெறமாட்டான். விரும்பிக்கொண்டே யிருக்கையில் திடீரென்று மரணத்தையும் அடைவானாகையால் போகங்களை விரும்புகிறவனுக்கு எந்த ஜன்மத்திலும் விரும்பினவளவு போகம் உண்டாகாது. ஆகையால் ம்ருத்யுவினிடம் அகப்பட்டு அதினின்று தன்னை விடுவித்துக் கொள்ள

முடியாமல் வருந்தும் புருஷனுக்கு தானபோகங்களால் மேன்மேலும் பணத்தை வளர்ப்பவைகளும் காமபோகங்களை நிறைவேற்றிக் கொடுப்பவைகளுமான பணங்களாலாவது காமபோகங்களாலாவது மேன்மேலும் ஜன்மங்களை விளைக்கின்ற புண்யகர்மங்களாலாவது என்ன ப்ரயோஜனம். ஒரு ப்ரயோஜனமும் இல்லை. ஷாட்குண்ய பூர்ணனும் ஸமஸ்த தேவதாஸ்வரூபனும் தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குந்தன்மையனுமாகிய ஸர்வேஶ்வரன் என்விஷயத்தில் அனுக்ரஹஞ்செய்தான். இது நிச்சயம். இல்லையாயின், எனக்கு இந்த அவஸ்தையும், ஸம்ஸாரஸாகரத்தினின்று என்னைக் கரையேற்றும் ஓடம்போன்ற இந்த மனவெறுப்பும் எப்படி உண்டாகும்? அந்த ஸர்வேஶ்வரனே என்னிடத்தில் அருள்புரிந்து இந்த துரவஸ்தையையும் இந்த மனவெறுப்பையும் எனக்கு விளைவித்தானன்றி வேறில்லை. இங்ஙனம் மனவெறுப்புண்டாகப் பெற்ற நான் மேலுள்ள ஆயுள் முழுவதும் தவத்தினால் என் சரீரத்தை உலர்த்தப் போகிறேன். ஸமஸ்த ப்ராணிகளுக்கும் சிறந்த புருஷார்த்தமாயிருப்பவனும் அந்தராத்மாவுமாகிய பரமாத்மாவினிடத்தில் பக்தி உண்டாகப் பெற்று மற்றொன்றிலும் மனஞ் செல்லாமல் அவனிடத்திலேயே ஊக்க முற்றிருப்பேனாயின், மோக்ஷமாகிற ஸித்தியைப் பெறுவேன். மற்றும், அவனிடத்தில் பக்தி உண்டாகப் பெறுவேனாயின், அப்பொழுது மூன்று லோகங்களுக்கும் ப்ரபுக்களாகிய தேவதைகள் அனைவரும் என்னிடத்தில் ஸந்தோஷம் அடைவார்கள். என்னுடைய துர்தசையைக் கண்டு என்மனத்தில் இப்பொழுதுண்டாயிருக்கும் கருத்தை அறியப்பெறாத உலகத்தவர் ஸந்தோஷம் அடையார்களாயினும், தேவதை

களுக்கு என்மனக்கருத்து நன்ருகத் தெரியுமாகையால் அவர்கள் என் விஷயத்தில் ஸந்தோஷம் அடைவார்க ளென்பது நிச்சயம். நெடுநாள் துர்ப்புத்தியாயிருந்த நீ மேலுள்ள அற்பகாலத்தில் எப்படி ஸித்தியைப் பெறு வாயென்று சங்கிக்க இடமில்லை. கட்வாங்கமன்னவன் ஒரு முஹூர்த்த காலத்தில் பரப்ரஹ்மமென்று கூறப்படு கிற பரமபுருஷனுடைய லோகத்தைப் பெறுகையாகிற மோக்ஷத்தை ஸாதித்துக்கொண்டானல்லவா? அங் ஙனமே நானும் ஸாதிப்பேன்.

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:—அவந்திதேசத்தில் பிறந்தவனுகிய அந்த ப்ராஹ்மணோத்தமன் இங்ஙனம் நிச்சயித்துக் கொண்டு ஹ்ருதயக்ரந்திகளான ராகத் வேஷாதிகளைத் துறந்து தெளிந்த மனமுடையவனுகி ஸந்நியாஸாஸ்ரமத்தைக் கைப்பற்றினன். அவ்வந்த ணன் மனத்தையும் இந்த்ரியங்களையும ப்ராணன்களை யும் அடக்கிக்கொண்டு பூமியில் திரிந்துகொண்டிருந் தான். எங்கும் பற்றின்றி இவன் இன்னவனென்று தெரி யாதபடி பட்டணங்களிலும் க்ராமங்களிலும் பிக்ஷைக் காக நுழைந்துகொண்டிருந்தான். மங்களஸ்வபாவ முடையவரே! வயது சென்றவனும் எண்ணெய் தேய்த்துக் கொள்வது அழுக்கைத் தேய்த்துக் குளிப் பது முதலிய ஸம்ஸ்காரங்களெவையு மில்லாமையால் உடம்பெல்லாம் அழுக்கடைந்து பித்தம் பிடித்தவன் போன்றிருப்பவனுமாகிய அந்தத் துறவியந்தணனைக் கண்டு துஷ்டஜனங்கள் இவன் இன்னவனென்று அடையாளங்களால் தெரிந்துகொண்டு பலவாறு பரி பவஞ் செய்தார்கள். சிலர் அவனுடைய த்ரிதண்டத் தையும், சிலர் ஜலபாத்ரத்தையும், சிலர் கமண்டலுவை

யும், சிலர் 1 பீடத்தையும், சிலர் 2 அக்ஷமாலையையும், சிலர் கந்தல்துணிகளையும் பிடுங்கிக்கொண்டார்கள். அவர்கள் அவற்றை அவனுக்குக் கொடுத்து விடுபவர் போல் 'ஓ பிக்ஷுவே! இதோ உன் ஸொத்துக்களை எடுத்துக்கொண்டுபோ' என்று சொல்லிக் காட்டி, அபிநயஞ்செய்து மீளவும் அவற்றை எடுத்துக்கொண்டார்கள். மற்றும், பாபிஷ்டர்களான சிலர் அவன் பிக்ஷையெடுத்த அன்னத்தைப் புசித்துக் கொண்டிருக்கையில் அவ்வன்னத்தில் மூத்ரம் பெய்வதும் அவன் தலைமேல் எச்சில் உமிவதும் செய்தார்கள். மற்றும், அவன் பேசாமல் மௌனமாயிருக்கையில், அவனைப் பேசும்படி தூண்டுவதும், தூண்டியும் பேசாதிருப்பானாயின் அடிப்பதும் செய்தார்கள். சிலர் 'இவன் திருடன்' என்று சொல்லிக்கொண்டு வாக்குக்களால் விரட்டினார்கள். சிலர் 'இவனைக் கொல்லுங்கள். கொல்லுங்கள்' என்று சொல்லிக்கொண்டு கயிறுகளால் கட்டினார்கள். சிலர் சீயென்று நிந்தித்தார்கள். 'இவன் உண்மையில துஷ்டஸ்வபாவன். மேலுக்கு தார்மிகவேஷம் பூண்டு ஸந்நியாஸாஶ்ரமத்திற்கு அடையாளமான த்ரிதண்டத்தை ஏந்திக் கொண்டிருக்கின்றான். ஆகையால் இவன் வஞ்சகனேயன்றி உண்மையில் தார்மிகனல்லன். இவனுடைய பணமெல்லாம் பாழாய்விட்டது. ஆகையால் இவனுடைய பந்துக்கள் அனைவரும் இவனைக் கைவிட்டார்கள். அதனால் இவன் இந்த வ்ருத்தியை ஏற்றுக்கொண்டான். இவன் மஹாபலமுடையவன். இவனுடைய ஹ்ருதயம் கல்லைக்காட்டிலும் உறுதியுள்ளது. இவன் பர்வதராஜன்போல் மிகுந்த பொறுமையுடையவன். இவன் கொக்குப்போல் தன்மனோநிச்சயத்தை

1 பீடம் - மணை. 2. அக்ஷமாலை, ஜபமாலை.

இவ்வேஷத்தினால் மறைத்துக்கொண்டு மௌனத்தினால் அன்னம் முதலிய தன்ப்ரயோஜனத்தை நிறைவேற்றிக்கொள்கிறான்' என்று, இங்ஙனம் மொழிந்து கொண்டு சிலர் அவனை அவமதித்துப் பரிஹாஸஞ் செய்தார்கள். சிலர் அவன்மேல் அபானவாயுவை விட்டார்கள். சிலர் அவ்வந்தணனைக் கயிறு முதலியவற்றால் கட்டுவதும், சிலர் அவன் போகும்பொழுது அவனை வழி மடக்குவதும் செய்து பொம்மையைப்போல் அவமதித்தார்கள். அவ்வந்தணன் இங்ஙனம் துர்ஜனங்களால் ஏற்படுகிற பௌதிகம், சீதம் உஷ்ணம் முதலியவற்றால் உண்டாகிற தெய்விகம், கிழத்தனம் முதலியவற்றால் உண்டாகிற தைஹிகம் ஆகிய அவ்வப்பொழுது நேரிடுகிற துக்கங்களையெல்லாம் 'இவையெல்லாம் நம்முடைய பூர்வகர்மத்தின் பலமாக ஏற்பட்டவை' யென்றும் 'இவற்றை நாம் அவஶ்யம் அனுபவித்தே தீரவேண்டும்' என்றும் நிச்சயித்துக்கொண்டு அவற்றில் சிறிதும் மனவிகாரமற்றிருந்தான். அவ்வந்தணன் தம்மைப் படுகுழியில் விழச் செய்யும் பாபிஷ்டர்களான மனுஷ்யாதமர்களால் பரிபவிக்கப்பட்டும் ஸத்வகுணத்தினால் உண்டாகும் தைர்யத்தை ஏற்றுக்கொண்டு தன்னுடைய தர்மத்தினின்றும் நழுவாது நிலைநின்று தனக்குள் இங்ஙனம் சொல்லிக்கொண்டான்.

பிக்ஷு சொல்லுகிறான்:— இவ்வுலகத்திலுள்ள ஜனங்களில் சிலர் என்னை ஆதரித்து ஸுகத்தையும் சிலர் பரிபவித்து துக்கத்தையும் விளைக்கின்றார்கள். ஆயினும் அவர்கள் என்னுடைய ஸுகதுக்கங்களுக்குக் காரணமல்லர். மற்றும், ஈஶ்வரன் ஆத்மா ஸூர்யன் முதலிய க்ரஹங்கள் புண்யபாபகர்மங்கள் காலம்

ஆகிய இவற்றில் ஏதேனுமொன்று காரணமாகலாமோ வென்றால், அதுவுமில்லை. பின்னையோ வென்றால் ஸம்ஸார சக்ரத்தைச் சுழற்றுகிற மனமே காரணமென்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள். ஒருவராலும் அடக்க முடியாததாகிய மனம் ராகம் த்வேஷம் முதலிய குணங்களை விளைக்கின்றது. அவற்றினின்று புண்யகர்மங்களும் பாபகர்மங்களும் மிச்ரகர்மங்களும் உண்டாகின்றன. விலக்ஷணமான அக்கர்மங்களால் அவ்வவற்றிற்குரிய தேவ திர்யக்கு மனுஷ்யாதி ஜன்மங்கள் உண்டாகின்றன. (அவற்றில் ஸத்வகுணமூலமான புண்யகர்மங்களால் தேவாதிஜன்மங்களும் தமோகுண மூலமான பாபகர்மங்களால் திர்யக்கு ஜன்மங்களும், ரஜோகுண மூலமான மிச்ரகர்மங்களால் மனுஷ்யஜன்மங்களும் உண்டாகின்றன வென்றுணர்க). (ஆனால் ஜீவனுடைய ஸுகதுக்கங்களுக்கு மனம் காரணமாகிறது தேஹ மூலமாகவென்றே கொள்ள வேண்டும். அந்தத் தேஹ ஸம்பந்தம் ஈச்வரனுக்கும் உண்டாகையால் அவனுக்கும் அந்த ஸுகதுக்கங்கள் உண்டாகவேண்டுமே யென்றால், அப்படியில்லை): ஏனென்றால், ஈச்வரன் ஸங்கல்ப விகல்பங்களுக்கிடமான மனத்தினாலுண்டாகக்கூடிய அஹங்கார மமகாரங்களாகிற சேஷ்டையற்றவன்; சேதன அசேதனங்களுக்குள் நுழைந்து தரித்துக் கொண்டிருக்குந் தன்மையன்; ஸ்வர்ணம்போல் பளபளவென்று ப்ரகாசித்துக் கொண்டிருப்பவன்; எப்பொழுதும் என்னை விட்டுப் பிரியாமல் என்னுடைய ஸுகதுக்கங்களைத் தன்னுடைய ஸுகதுக்கங்களாகப் பாவித்து என்னுடைய ஹிதத்தையே நோக்குந் தன்மையன். அவன் மனத்தை ஸாக்ஷாத்கரிக்கிறான். இந்த ஜீவனோவென்றால், தன்னுடைய

தேஹத்தையே ஆத்மாவாக அபிமானித்துச் சப்தாதி விஷயங்களை அனுபவித்துக்கொண்டு மேன்மேலும் அவற்றில் பற்றுடையவனாகி தேஹபந்தத்தை அடைகின்றான். ஆகையால் ஸுகதுக்கங்கள் அந்த ஜீவாத்மாவுக்கேயன்றிப் பரமாத்மாவுக்கு அவை கிடையா. கேவல சரீரஸம்பந்தமே ஸுகதுக்கங்களுக்குக் காரணமாகாது. பின்னையோவென்றால் குண கர்மங்களுக்குட்பட்டிருக்கையே அவற்றிற்குக் காரணமாம். குணங்களாவன ஸத்வாதி குணங்களின் பரிணாமங்களான சப்தாதி விஷயங்கள். கர்மங்களாவன அவற்றைப் பெறுதற்காகச் செய்யும் புண்யபாப கர்மங்கள். அவற்றிற்குட்பட்டிருக்கையாவது சப்தாதி விஷயங்களில் விருப்பமுற்று அவற்றைப் பெறுதற்காகப் புண்யபாப கர்மங்களைச் செய்கை. பரமாத்மாவுக்கு அத்தன்மையில்லாமையால் அவ்வழியால் வரும் ஸுகதுக்கங்களும் கிடையா. ஜீவனோவென்றால், குணகர்மங்களுக்குட்பட்டவனாகையால் அவனுக்கே அவை உள்ளவை. இங்ஙனம் மனமே ஸுகதுக்கங்களுக்குக் காரணமாகையால் அதை அடக்கினால்தான் அந்த ஸுகதுக்கங்கள் நிவர்த்திக்கும். தானம் தத்தமது வர்ணாஸ்ரமங்களுக்குரிய தர்மங்களை அனுஷ்டிக்கை, யம நியமங்கள், அத்யயனஞ்செய்கை, மற்றுமுள்ள நற்செய்கைகள், ஏகாதச்யுபவாஸம் முதலிய ஸாத்விகவ்ரதங்கள் ஆகிய இவையெல்லாம் மனஅடக்கத்தையே முக்ய பலமாகவுடையவை. யஜ்ஞதானாதிகளெல்லாம் வேதனமென்னும் பேருடைய யோகத்திற்கு அங்கமென்று ஸ்ருதிகளில் சொல்லியிருக்க, அவையெல்லாம் மனோநிக்ரஹத்திற்கே அங்கங்களென்று சொல்லுவது எங்ஙனம் சேருமென்றால், அந்த மனோநிக்ரஹமே ஸ்ருதிகளில் சொல்லப்படு

கிற வேதனமென்னும் பேருடைய மேலான யோகமா மன்றி வேறொன்றுமன்று. யோகமாவது மனத்தை விஷயாந்தரங்களில் போகவொட்டாமல் தடுத்துப் பரமாத்மாவினிடத்திலேயே நிலைநிறுத்துகை. இதுவே மனோநிக்ரஹம். ஆகையால் ஸ்ருதியில் சொன்னதோடு விரோதமில்லையென்றுணர்க. எவனுடைய மனம் ராகத்வேஷாதிகள் தீண்டப்பெறாமல் சாந்தமாயிருக்கின்றதோ, அவனுக்கு தானாதிகளால் ஸாதிக்கவேண்டிய ப்ரயோஜனம் என்னஇருக்கின்றது?[1] நிரூபித்துப் பார்த்துச் சொல்லுவாயாக. நிரூபித்துப் பார்க்கில் ஒன்றுமே இல்லையென்று நன்றாகத் தெரியவரும். எவனுடைய மனம் கட்டுக்கடங்காமல் ராகத்வேஷாதிகளுக்குட்பட்டுச் சோம்பல் முதலியவைகளால்தெளிவற்றுமழுங்கிக் கிடக்குமோ, அவனுக்கு இந்த தானாதிகளால்ஆக வேண்டிய வேறு ப்ரயோஜனம் என்ன இருக்கின்றது? மோக்ஷத்தில் விருப்பமுடையவனுக்கு ஸமாதியென்றும் யோகமென்றும் சொல்லப்படுகிற மனோநிக்ரஹமே முக்ய ஸாதனமாகையால் அவன் செய்யும் தானாதிகளுக்குப் பலன் அந்த மனோநிக்ரஹமே. தானாதிகளுக்குச் சொன்ன அந்தந்தப் பலன்கள் முமுக்ஷுவுக்கு அனிஷ்டங்களாகையால், அவன் அந்தப் பலன்களைக் குறித்து அவற்றை அனுஷ்டிப்பவனல்லன். ஆகையால் முமுக்ஷு அனுஷ்டிக்கிற தானாதிகளுக்குப் பலன் மனோநிக்ரஹமேயன்றி மற்றொன்றுமன்று. ஆனால் முமுக்ஷு அனுஷ்டிக்கிற தானாதிகளுக்கு மனோநிக்ரஹமாத்ரந்தான் பலனோ? மற்ற இந்த்ரியங்களின் நிக்ரஹமும் பலனாக மாட்டாதோ வென்றால், ஆகமாட்டாது; ஏனென்றால்,

1. பிறனுக்கு உபதேசிப்பதுபோல் தன்னைக்குறித்துத் தானே சொல்லிக்கொள்கிறான்.

மற்ற இந்த்ரியங்களும் அவற்றின் அதிஷ்ட்டான தேவதைகளும் மனத்திற் குட்பட்டவை. மனமோவென்றால் ஒன்றுக்கும் உட்பட்டதன்று. அப்படியாயின், அம்மனம் தானதிகளால்தான் எப்படி வசப்படுமென்றால், குணகர்மங்களுக்குட்படாமல் தன்னுடைய தேஜஸ்ஸினால் 'ப்ரகாசித்துக் கொண்டிருக்குந் தன்மையனான பரமபுருஷன் தானதிகளால் ஆராதிக்கப்பட்டு ஸந்தோஷமுற்று ஒன்றுக்கும் வசப்படாத அம்மனத்தையும் வசப்படுத்தித் தன்னிடத்தில் ஊக்கமுறச் செய்வான். அப்பரமபுருஷன் பலமுள்ள வஸ்துக்களைக் காட்டிலும் மிகுந்த பலமுடையவன்; மற்றும், மனம் முதலிய இந்த்ரியங்களை அதிஷ்ட்டானஞ் செய்யுந் தேவர்களுக்குந் தேவன்; அந்த தேவர்களும் நாம் நம்முடைய அதிகாரத்தைக் குறைவற நடத்தாது போவோமாயின் நமக்கு என்ன தண்டனை நேருமோவென்று பயமுறும்படி பயங்கரனா யிருப்பவன். ஆகையால் மனத்தை வசப்படுத்துவது அவனுக்கு ஒரு பொருளன்று. சிலர் பரமபுருஷனுடைய அனுக்ரஹந் தவிர மற்ற உபாயங்களால் வெல்லமுடியாததும் பொறுக்க முடியாத ராகத்வேஷாதி ரூபமான வேகமுடையதும் வருத்தங்களை விளைப்பதுமாகிய மனமாகிற சத்ருவை ஜயிக்காமல் மனுஷ்யர்களோடு வீண்வைரத்தை ஏற்றுக்கொண்டு சிலரை உதாஸீனர்களாகவும், சிலரைச் சத்ருக்களாகவும் கற்பிக்கிறார்கள். மனத்தையே முக்ய காரணமாகவுடைய இந்த தேவ மனுஷ்யாதி தேஹங்களில் ஏதேனுமொன்றைப் பெற்று அத்தேஹத்தில் ஆத்மாபிமானமும் தேஹானுபந்திகளிடத்தில் என்னுடையவர்களென்னும் அபிமானமும் உண்டாகி அவைகளால் மதிமயங்கி 'நான் இன்னவன், இவன்

வேறுபட்டவன்' என்னும் இவை முதலிய ப்ரமங்களால் அபாரமான ஸம்ஸார ஸாகரத்தில் விழுந்து சுழன்று கொண்டிருக்கிறார்கள். ஸுகதுக்கங்களுக்கு மனமே காரணமென்று கொள்ளாமல் ஒரு ப்ராணி மற்றொரு ப்ராணியின் ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்று கொள்ளும் பக்ஷத்தில், 'ப்ராணி யென்பது ஆத்மாவா? தேஹமா? இரண்டுமா?' என்று விசாரிக்க வேண்டும். ஆத்மாவென்கிற பக்ஷத்தை மேல் விசாரிப்போம். ப்ராணியென்பது தேஹமென்றால், ஒரு தேஹம் மற்றொரு தேஹத்தின் ஸுகதுக்கங்களுக்குக்காரணமென்பதாம். ஒரு தேஹம் ஸுகதுக்கங்களை விளைப்பதும் மற்றொரு தேஹம் அவற்றை அனுபவிப்பதுமாயிருந்தால், அதில் ஆத்மாவுக்கு என்ன ஸம்பந்தம் இருக்கிறது? ஒன்றும் இல்லை. ப்ருதிவி முதலிய பூதங்களின் பரிணமமான தேஹங்களன்றோ ஸுகதுக்கங்களை விளைப்பதும் அனுபவிப்பதுமா யிருக்கின்றன? ஆகையால் அவை ஆத்மாவுக்கு ஸம்பந்தப்பட்டவையாக மாட்டா. மற்றும், தேஹம் அசேதனமான ப்ருதிவி முதலிய பூதங்களின் பரிணமமாகையால் அசேதனமே. ஸுகதுக்கங்களை விளைக்கைக்குரிய யத்னமும் ஸுகதுக்கங்களுக் கிடமாகையும்ஆத்மாவின் தர்மங்களேயன்றி தேஹத்தின்தர்மமன்று. ஆகையால் அப்படி நினைப்பதும் ஸரியன்று. அனைவரும் தம்முடைய ஸுகத்திற்காகவும் துக்கத்தைப் போக்குவதற்காகவும் ப்ரயத்னிக்கிறார்கள். ஆத்மாவுக்கு ஸுகதுக்கங்களின் ஸம்பந்தமில்லையாகில் ஒருவரும் ப்ரயத்னிக்கவே மாட்டார்கள். தேஹம் ஆத்மா இவ்விரண்டுமே காரணமென்று சொல்லுவதும் ஸரியன்று. ஒருவன தன்பற்களால் தன் நாக்கைக் கடித்துக் கொள்வானாயின், வேதனை உண்டாகிறது.

அப்பொழுது அவன் யார்மேல் கோபித்துக்கொள்ளலாம்? ஆத்மாவால் அதிஷ்டானஞ் செய்யப்பெற்ற ஒரு சரீரத்தின் அவயவங்களில் ஒன்று துக்கத்தை விளைப்பதும் மற்றொன்று அதை அனுபவிப்பதுமாயிருக்கின்றது. ஆகையால் ஒரு ப்ராணி மற்றொரு ப்ராணியின் ஸுக துக்கங்களுக்குக் காரணமென்று நியமித்துச் சொல்லமுடியாது. மனவூக்கமற்றுப் பல்லால் நாக்கைக் கடித்துக்கொள்கிறானாகையால் அது ப்ரமாணமன்றென்றால். அப்படி சொல்லுவதை விட ஊக்கமற்ற மனமே ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்று ஒப்புக்கொண்டால் எல்லாம் பொருந்தி வரும். ஸுகதுக்கங்களுக்குக் காரணம் தேஹமும் அன்று; ஆத்மாவும் அன்று; அவ்விரண்டும் அன்று. பின்னையோ வென்றால், அவ்விரண்டுக்கும் அந்தராத்மாவான ஈஶ்வரனே ஒரு தேஹத்திலுள்ள ஆத்மாமூலமாய் மற்றொரு தேஹத்திலுள்ள ஆத்மாவுக்கு ஸுகதுக்கங்களை விளைப்பதும் அவ்வாத்மாமூலமாய் அவற்றைத் தான் அனுபவிப்பதுமாயிருக்கிறானென்று கொள்ளலாமேயென்றால், அதுவும் ஸரியன்று. அவற்றில் அந்தராத்மாவுக்கு என்ன ஸம்பந்தம் உள்ளது? பக்ஷபாதம் கருணையற்றிருக்கை ஸுகதுக்கங்களை அனுபவிக்கை முதலிய விகாரங்களுக்கிடமான வஸ்துக்களே ஸுக துக்கங்களுக்குக் காரணமாமன்றி அத்தகைய விகாரங்கள் தீண்டப் பெறாத அந்தராத்மா ஸுகதுக்கங்களுக்குக் காரணமாகமாட்டான். ஒரு தேஹத்திலுள்ள அந்தராத்மா மற்றொரு தேஹத்திலுள்ள அந்தராத்மாவான தனக்கு ஸுகதுக்கங்களை விளைக்கிறானென்பது வேண்டாம்; ஒரு தேஹத்திலுள்ள அந்தராத்மா தானே தனக்கு ஸுகதுக்கங்களை விளைத்துக்கொண்டு

அனுபவிக்கிருனென்று சொல்லலாமே யென்றால், அது வும் ஸரியன்று. ஒருகால் ஈஸ்வரனால் தூண்டப்பட்ட ஒரு அங்கம் மற்றொரு அங்கத்தை அடிக்கின்றது. வேதனையும் உண்டாகின்றது. அப்பொழுது அவன் தனக்குட்பட்டவைகளான தன்னுடைய அங்கங்களில் எதன்மேல் கோபித்துக் கொள்ளலாம்? எதன்மேலும் கோபித்துக் கொள்ளமுடியாது. தன்மேல்தான் கோபித்துக்கொள்ள வேண்டும். அது யுக்தமன்று. பித்தம் பிடிக்காதவன் எவனேனும் தனக்குத் தானே துக்கத்தை விளைத்துக்கொண்டு தன்மேல் கோபித்துக் கொள்வானு? மற்றும், ஒருவகை விகாரமும் ஒருகாலும் தீண்டப்பெருத ஈஸ்வரனுக்கு ஸுகதுக்காதி விகாரங்களுக்கிடமாகையும் ஸம்பவிக்காது. ஆகையால் ஈஸ்வரனே ஸுகதுக்கங்களுக்குக் காரணனென்று சொல்ல முடியாது. விகாரங்களுக்கிடமாகாத பரமாத்மா ஸுகதுக்கங்களுக்குக் காரணமாகாமற்போயினும், விகாரங்களுக்கிடமான ஜீவாத்மா காரணமாகட்டுமே யென்றால், அதுவும் ஸரியன்று. 'ஒரு ஆத்மா மற்றொரு ஆத்மாவுக்கு ஸுகதுக்கங்களை விளைக்கிருன். மற்றொரு ஆத்மா அவற்றை அனுபவிக்கிருன்' என்றுவது, 'ஒரு ஆத்மா தானே தனக்கு ஸுகதுக்கங்களை விளைத்துக் கொண்டு அனுபவிக்கிருன்' என்றுவது சொல்ல வேண்டும். ஒரு ஆத்மா மற்றொரு ஆத்மாவுக்கு ஸுகதுக்கங்களை விளைக்கிருன். மற்றொரு ஆத்மா அவற்றை அனுபவிக்கிருனென்று நினைப்பது வீண்ப்ரமமேயன்றி உண்மையன்று. ஏனென்றால், விகாரங்களுக்கிடமாயிருக்கை அவரவர்க்கு ஸ்வபாவமாக ஏற்பட்டதேயன்றி மற்றொருவரால் வருகிறதன்று. ஸ்வபாவம் அத்தகையதாகையால் ஸுகதுக்கங்களும் அதைப்பற்றி வந்தவை

கனே. ஆகையால் இயற்கையில் ஏற்பட்ட விஷயத்தைப்பற்றிப் பிறர்மேல் கோபித்துக்கொண்டு என்ன உபயோகம்? 'ஆத்மா தவிர மற்றொன்றும் காரணமன்று; ஆத்மாவே காரண'மென்று சொல்லுவதும் உண்மையன்று. ஆத்மாவுக்கு இயற்கையில் ஸுகதுக்கங்களே கிடையா. ஜீவாத்ம ஸ்வரூபம் கேவலஜ்ஞானாநந்த ரஸமாயிருக்கும்; விகாரங்களையும் தீண்டப்பெறாதது. அத்தகைய ஆத்மாவுக்கு விகாரங்களுக்கிடமாயிருக்கை எங்ஙனம் பொருந்தும்? பொருந்தாது. ஸூர்யன் முதலிய நவக்ரஹங்கள் காரணமென்று சொல்லலாமே யென்றால், அதுவும் ஸரியன்று. ஜனனகாலத்தில் ஜன்மராசிக்குப் பன்னிரண்டு எட்டு முதலிய இடங்களிலிருக்கிற ஸூர்யாதிகள் காரணமென்று சொல்லவேண்டும். ஆத்மாவுக்கு ஜன்மமே கிடையாதாகையால் அவனுக்கு ஸுகமாவது துக்கமாவது எதுதான் உண்டென்று சொல்ல முடியும்? எதுவும் உண்டென்று சொல்ல முடியாது. ஆத்மாவுக்கு ஜன்மம் உண்டானாலன்றோ ஜன்மலக்னம் ஏற்படும்? ஜன்மலக்னம் ஏற்பட்டாலன்றோ அதற்கு எட்டு பன்னிரண்டு முதலிய இடங்களிலிருக்கிற ஸூர்யாதிக்ரஹங்கள் ஆத்மாவுக்கு ஸுகதுக்கங்களை விளைக்க வல்லவையாம்? ஆகையால் ஸூர்யாதி க்ரஹங்கள் ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்று சொல்லுவது யுக்தமன்று. ஜன்ம மரணாதிகள் தேஹத்திற்கே யாகையால் அதன் ஜன்மலக்னத்திற்கு எட்டு பன்னிரண்டு முதலிய இடங்களிலிருக்கிற ஸூர்யாதி க்ரஹங்கள் ஸுகதுக்கங்களுக்குக் காரணமாகவேண்டும். அந்த க்ரஹங்களுக்குள்ளேயே சில க்ரஹங்கள் சில க்ரஹங்களுக்குப் பாதத்ருஷ்டி அர்த்தத்ருஷ்டி முதலிய த்ருஷ்டிபேதங்களால் பீடையை விளைக்கின்

றனவென்று ஜோதிஷ பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். அந்த க்ரஹங்களுடைய அபிமானத்திற்கு விஷயமான தேஹங்களுக்கு அந்தப் பீடை உண்டாகிறதென்று சொல்லுகிறார்கள். அந்த க்ரஹங்களிலும் தேஹங்களிலும் வேறுபட்ட ஆத்மா யார்மேல் கோபிக்கலாம்? ஒருவர்மேலும் கோபிக்க இடமில்லை. ஆனால் அவரவருடைய புண்ய பாப கர்மமே அவரவருடைய ஸுக துக்கங்களுக்குக் காரணமென்று சொல்லலாமே யென்றால், நிர்விகாரனும் ஸ்வயம்ப்ரகாசனுமான ஆத்மாவுக்கு அவற்றில் என்ன ஸம்பந்தம்? ஆத்மாவுக்குப் புண்ய பாப கர்மங்களாவது அவற்றால் விளையும் ஸுக துக்கங்களாவது எவையும் கிடையாவென்று முன்னமே நிரூபித்துச் சொன்னோமல்லவா? அசேதனமான தேஹத்திற்குச் செயல் கூடாதாகையால் அதற்கும் ஸுக துக்கங்களாவது அவற்றிற்குக் காரணமான புண்யபாப கர்மங்களாவது எவையும் கிடையா. ஜடமான தேஹத்திற்கு அஜடமான ஆத்மாவாயிருக்குந் தன்மை உண்டானாலன்றோ அதற்கு ஸுகதுக்கங்கள் உண்டாகக்கூடும். ஜடமாயிருக்கையும் அஜடமாயிருக்கையும் ஒன்றோடொன்று பொருந்தாதவை. இப்படி விருத்தஸ்வபாவமுடைய தேஹாத்மாக்களுக்கு அபேதம் எப்படி உண்டாகும்? தேஹம் அசேதனம். ஆத்மா ஜ்ஞானஸ்வரூபனாகையால் ஸ்வயம்ப்ரகாசன். இவ்விரண்டிற்கும் கர்மப்ரஸக்தி இல்லையாகையால் கர்மம் ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்று சொல்லுவது சேராது. ஆகையால் யார்மேல் கோபித்துக் கொள்ளலாம்? ஆனால் காலம் ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்று சொல்லுவோமென்றால், ஆயினும், இயற்கையில் ஸுகதுக்கங்கள் தீண்டப் பெறாதவனும் ஜ்ஞானத்

தையே வடிவாகவுடையவனுமாகிய ஆத்மாவுக்கு ஸுக துக்கங்களில் ஸம்பந்தமே இல்லையென்பதற்கு என்ன ஸமாதானம் வந்தது? அது வொன்றுமில்லை யாகை யால் அதுவும் ஸரியன்று. ஆத்மா ஜ்ஞானஸ்வரூப னென்றும் நிர்விகாரனென்றும் உத்பத்திவிநாசங்க ளற்றவனென்றும் ஸ்வயம்ப்ரகாசனென்றும் முன்னமே மொழிந்தோம். அத்தகைய ஆத்மாவுக்குக் காலம் எப் படி ஸுகதுக்கங்களை விளைக்கவல்லதாம்? ஆத்மா இயற்கையில் ஸுகதுக்கங்கள் தீண்டப்பெறுதவனுயி னும் காலவஸ்யனுகையால் ஸுகதுக்க ஸம்பந்தம் உண் டாகிறதென்று சொல்லுகிறுமென்ருல், அதுவும் ஸரி யன்று. காலவசத்தினுல் வஸ்துக்களுக்கு இயற்கையில் ஏற்பட்ட குணங்கள் மாறக்கூடுமோ? அப்படி மாறுமா யின், காலவசத்தினுல் அக்னிக்கு வெம்மை மாறிப் போய்க் குளிர்மை உண்டாகவேண்டும். பனிக்குக் குளி ர்மை மாறிப்போய் வெம்மை உண்டாகவேண்டும். கால வசத்தினுல் இப்படி ஒருகாலும் உண்டாக நாம் கண்ட தில்லை. ஆகையால காலம் ஸுகதுக்கங்களுக்குக் கார ணமென்று சொல்லுவது யுக்தமன்று. இங்ஙனம் கீழ்ச் சொன்ன ஜனம் முதலிய ஆறு வஸ்துக்களில் எதுவும் ஒருவனுடைய ஸுகதுக்கங்களுக்குக் காரணமாக மாட் டாது. தேஹ விலக்ஷணனுன ஆத்மாவின் ஸுகதுக் கங்களுக்குக் கீழ்ச்சொன்னவற்றில் எதுவேனுமாவது மற்ற எதுவேனுமாவது காரணமன்றென்று ஏற்பட்ட பின்பு மற்ற எதுதான் காரணமாமென்ருல், ஊக்கமற்ற மனமே காரணம். அப்பொழுதும் ஆத்மாவுக்கு உள்ள ஸ்வபாவம் மாறி இல்லாத ஸ்வபாவம் வருகையாகிற கீழ்ச்சொன்ன தோஷம் அப்படியே ஸம்பவிக்குமல்லவா வென்ருல், ஸம்பவிக்காது. ஜன்ம ஜரா மரணுதி ரூப

மான ஸம்ஸாரத்தை விளைக்கின்ற மனம் ஜீவனுக்கு தேஹாத்மாபிமானத்தை விளைக்கின்றது. அதனால் தன்னியற்கை மறையப்பெற்று ஸுகதுக்கங்களை அனுபவிக்கின்றான். அக்னி ஸ்தம்பன ஜலஸ்தம்பனாதிகளில் அவற்றின் சக்தி மறைந்திருப்பதுபோல் ஜீவனுடைய தன்மையும் தேஹாத்மாபிமானத்தினால் மறைகின்றது. ஆனால் அது வந்தேறியே யன்றி இயற்கையாக மாட்டாதல்லவா? ஸங்கல்ப விகல்பரூபமான மனம் ஊக்கமற்று அஹங்கார மமகாரங்களை விளைக்கின்றது. அஹங்காரமாவது ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவென்று அபிமானிக்கை. மமகாரமாவது தன்னுடையதல்லாத புத்ரகளத்ராதிகளைத் தன்னுடையதென்று அபிமானிக்கை. அவ்வஹங்கார மமகாரங்களால் ராகத்வேஷாதிகள் உண்டாகின்றன. அவற்றால் புண்யபாப கர்மங்களைச் செய்கின்றான். அவற்றால் தேஹ ஸம்பந்தரூபமான ஜன்மங்களையும் தேஹவியோக ரூபமான மரணங்களையும் பெறுகின்றான். அவற்றால் ஸுகதுக்கங்களை அனுபவிக்கின்றான். இவ்வுண்மையை அறிவானாயின், அவன் ப்ராணிகளால் பீடிக்கப்படினும் மனக்கலக்கம் உண்டாகப் பெறமாட்டான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— அவ்வந்தணன் முதலில் பணம் அழியப்பெற்று அதனால் மனவெறுப்புற்று ஸம்பந்தங்களை யெல்லாந் துறந்து வருத்தமின்றிப் பூமியில் ஸஞ்சரித்துக் கொண்டு முன்புள்ள அறிஞர்கள் ஆதரித்த வண்ணமே ஸுகதுக்கங்களுக்குக் காரணம் இன்னதென்று நன்றாக நிச்சயித்துப் பரமாத்மாவினிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகி 'நான் அஸத்துக்களால் பரிபவிக்கப்படினும் என்னுடைய தர்

மத்தினின்று சிறிதும் நழுவாமல் மோக்ஷ பூமியைக் கொடுக்கவல்லவனாகிய பரமபுருஷனுடைய பாதாரவிந்தங்களைப் பணிந்து தமோகுணத்தின் கார்யமும் கரை கண்டறிய முடியாததுமாகிய ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைக் கடக்க வேண்டும்' என்னும் மனவுறுதி யுடையவனாகி [1] இவ்வண்ணம் மொழிந்தான். ஆகையால் ஜீவனுக்கு ஸுகதுக்கங்களை விளைக்கிறவன் மற்றொருவனுமல்லன். தேஹாத்மாபிமானமே அதற்குக் காரணம். மற்றும், நண்பர்கள் உதாஸீனர்கள் சத்ருக்களென்னும் பிரிவினைக்கும் ஜன்ம ஜரா மரணாதி ரூபமான ஸம்ஸாரத்திற்கும் அதுவே காரணம். அப்பனே! ஆகையால் என்னிடத்தில் புத்தியை நுழைத்து அதனால் மனத்தை மற்றெல்லா விஷயங்களினின்றும் அடக்குவீராக. சாஸ்த்ரங்களில் நிரூபிக்கப்படுகிற யோகத்தின் சுருக்கம் மனத்தை மற்ற விஷயங்களினின்றும் இழுத்து என்னிடத்தில் நிலைநிறுத்துகையாகிற இவ்வளவே. பிக்ஷு மொழிந்த இந்த ப்ரஹ்மநிஷ்டையை நெஞ்சில் தரிக்கிறவனும் பிறர்க்குக் கேட்பிக்கிறவனும் விஷயாந்தரங்களினின்று மனம் மீளப்பெற்று ப்ரஹ்மநிஷ்டனாகி ஸுகதுக்கங்களால் வருங்கலக்கங்களைக் கடந்து மோக்ஷம் பெறுவான். இருபத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ருஷ்டி ஸம்ஹார க்ரமங்களை நிரூபித்தல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—அப்பனே! முன்புள்ள முனிவர்களால் நிச்சயிக்கப்பட்ட ஸாங்க்ய தத்வத்தை உமக்குச் சொல்லுகிறேன்; கேட்பீராக. இதை

---

1 கீழ்ச்சொன்ன வண்ணம்.

அறிந்தால் 'நான் வேறு, இவன் வேறு' என்னும் பேத புத்தியை விளைக்கும்படியான தேஹாத்ம ப்ரமத்தையும் ஸ்வதந்த்ராத்ம ப்ரமத்தையும் உடனே துறக்கலாம். ஸாங்க்யமாவது, ப்ரக்ருதி ப்ராக்ருதம் புருஷன் ஈச்வரன் ஆகிய இத்தத்வங்களின் பிரிவினை. ஸ்ருஷ்டிக்கு முன்பு பரமாத்மஸ்வரூபமொன்றே இருந்தது. ப்ரக்ருதியும் புருஷனும் நாமரூபங்களுக்கிடமாகாமல் ஒன்றாகிப் பரமாத்மாவினிடத்தில் மறைந்திருந்தன. முன்பு க்ருத யுகத்தில் ஸத்வகுணம் தலையெடுத்து ப்ரக்ருதி புருஷ ஈச்வர தத்வங்களின் ஸ்வரூபங்களை உள்ளபடி அறிந்த பெரியோர்கள் நாமரூபங்களின்றி ஸூக்ஷ்ம தசையை அடைந்த சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடைய ஜகத்காரணமான இந்தப் பரப்ரஹ்மத்தையே உபாஸித்துக்கொண்டிருந்தார்கள். ஆனதுபற்றியே அந்த க்ருதயுகம் யுகங்களில் முதன்மை பெற்று நிகரற்றதாயிற்று. ஸத்வாதி குணங்களின் ஏற்றக்குறைவின்றி ஜாதி குண க்ரியைகளென்கிற விகல்பங்களற்று வாக்காலும் மனத்தாலும் அளவிடமுடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களுடையதும் காலபரிச்சேத மற்றதும் விகாரங்கள் தீண்டப் பெறாததுமாகிய அந்தப் பரப்ரஹ்மம் ப்ரளய தசையிலும் மாயையென்றும் பலனென்றும் இரண்டு விதமாயிருந்தது. மாயை பலன் என்னும் அவ்விரண்டு வஸ்துக்களில் மாயையாவது ப்ரக்ருதி. அது கார்யமென்றும் காரணமென்றும் இரண்டு வகைப்பட்டிருக்கும். (ஸமஷ்டியென்றும் வ்யஷ்டியென்றும் இரண்டு வகைப்பட்டிருக்குமென்றும் சொல்லுவார்கள். ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு யோக்யமான ஸ்வரூபமுடையதாகையால் இரண்டு விதமாயிருக்குமென்றும் சொல்லுவார்கள்). பலனென்று சொல்லப்படுகிற மற்றொன்று

ஜ்ஞானரூபமான ஜீவஸ்வரூபம். அந்த ஜீவனையே புருஷ னென்றும் ப்ரதயகாத்மாவென்றும் சொல்லுவார்கள். விசித்ரமானகார்யங்களை விளைக்கின்றதாகையால் ப்ரக்ருதி மாயையென்று கூறப்படுகின்றது. ஜீவன் அனுகூல ஜ்ஞானரூபமான ஆநந்தத்தையேஸ்வரூபமாகவுடையவனாகையால் ஆநந்தமே புருஷார்த்தமாகையால் பலனென்று கூறப்படுகிறான். என்னை ஆராதிப்பதற்கு வேண்டிய கரணகளேபராதிகளைக் கொடுத்து ஜீவாத்மாக்களை அனுக்ரஹிக்க விரும்பி நான் காலஸ்வரூபனாகி ப்ரக்ருதியைக் கலக்குகையில் ஏற்றக் குறைவின்றி ஸாம்ய தசையை அடைந்த அந்த ப்ரக்ருதியின் குணங்களாகிய ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் ஏற்றக் குறைவுகளை அடைந்தன. அங்ஙனம் கலக்கமுற்ற குணங்களினின்று ஸூத்ரம் உண்டாயிற்று. இதுவே மஹத்தத்வமென்று கூறப்படுகின்றது. ஸூத்ரம் பற்பல ரத்னங்களுக்கு ஆதாரமாயிருப்பதுபோல் பல கார்யங்களுக்கு ஆதாரமாயிருக்கையால் இது ஸூத்ரமென்னும் பேர் பெறுகின்றது. என்னுடைய ஸங்கல்பத்தினால் விகாரத்தை அடைகின்ற அந்த மஹத்தத்வத்தினின்று தேஹாத்ம ப்ரமாதிகளுக்குக் காரணமான அஹங்கார தத்வம் உண்டாயிற்று. அது வைகாரிகமென்றும் தைஜஸமென்றும் தாமஸமென்றும் மூன்று வகைப்பட்டிருக்கும். மற்றும், சப்ததன்மாத்ரம் முதலிய தன்மாத்ரங்கள் இந்த்ரியங்கள் மனஸ்ஸு இவற்றின் காரணமும் சேதனா சேதன ஸ்வரூபமுமாயிருக்கும். அசேதன தத்வங்களெல்லாம் திலதைலந்யாயத்தினால் சேதன கர்ப்பங்களே யென்பதை அறிவிக்கும்பொருட்டு அஹங்காரதத்வத்தைச் சேதன அசேதனஸ்வரூபமென்று சொல்லிற்றேயன்றி, அத்தன்மை இதற்கு

மாத்ரம் அஸாதாரணமன்று; எல்லா அசேதன தத்வங்களுக்கும் பொதுவான ஆகாரமே யென்றுணர்க. சப்ததன்மாத்ரம் முதலிய தன்மாத்ரங்களுக்குக் காரணமான தாமஸாஹங்காரத்தினின்று ஆகாசம் முதலிய பஞ்ச பூதங்கள் உண்டாயின. தேவதைகளின் அதிஷ்டானமுடையவைகளாகையால் தேவதைகளென்று கூறப்படுகின்ற இந்த்ரியங்கள் பதினொன்றும் ராஜஸாஹங்காரத்தினால் உதவி செய்யப்பெற்ற ஸாத்விகாஹங்காரத்தினின்று உண்டாயின. மஹத்து முதலிய தத்வங்களெல்லாம் அந்தராத்மாவாய்ப் புகுந்திருக்கிற என்னால் தூண்டப்பட்டு ஒன்றோடொன்று கலந்து கார்யங்களை விளைக்கவல்லவைகளாகி எனக்குச் சிறந்த வாஸஸ்தானமாகிய அண்டத்தை உண்டாக்கின. மஹாஜலத்தின்மேல் மிதந்து கொண்டிருக்கிற அந்த அண்டத்தில் நான் சயனித்துக்கொண்டிருக்கிறேன். என்னுடைய நாபியில் ஜகத்தாகிற தாமரை மலர் தோற்றியது. அதில் ப்ரஹ்மதேவன் உண்டானான். அவன் ரஜோகுணம் தலையெடுக்கப் பெற்றுத் தவஞ்செய்து என்னுடைய அனுக்ரஹம் பெற்று அதனால் இவ்வுலகங்களையும் இவற்றிற்கு ரக்ஷகர்களையும் படைத்தான். அவ்வுலகங்கள் பூர்லோகமென்றும் புவர்லோகமென்றும் ஸ்வர்லோகமென்றும் பெயருடையவைகளாகி மூன்றுவகையாயிருந்தன. அவற்றில் ஸ்வர்லோகம் தேவதைகளுக்கு வாஸஸ்தானமாயிற்று. புவர்லோக மென்கிற அந்தரிக்ஷலோகம் பூதங்களுக்கு வாஸஸ்தானமாயிற்று. பூர்லோகம் மனுஷ்யாதிகளுக்கு வாஸஸ்தானமாயிற்று. இம்மூன்று லோகங்களுக்கும் மேற்பட்ட மஹர்ஜனாதி லோகங்கள் ப்ருகு முதலிய ப்ரஹ்மர்ஷிகளுக்கு வாஸஸ்தானமாயின. அஸுரர்

களுக்கும் நாகர்களுக்கும் வாஸஸ்தானமாக பூமிக்குக் கீழ் அதலாதி லோகங்களைப் படைத்தான். அந்த அதலாதி லோகங்கள் பூலோகத்தினுடைய விவரங்களாகையால் அந்த பூலோகத்தில் அடங்கினவைகளே. மஹராதி லோகங்கள் ஸுகத்தையே முக்யமாகவுடையவைகளாகையால் ஸ்வர்லோகத்தில் அடங்கினவைகளே. ஆனதுபற்றியே மூன்று லோகங்களென்று சொல்லுகிறார்கள். அவாந்தரலோகங்களையும் சேர்த்துச் சொன்னால் பதினான்கு லோகங்களாகின்றன. ஸத்வரஜஸ்தமோ குணங்களை ஸ்வபாவமாகவுடைய ஜீவாத்மாக்களின் கர்மங்களுக்குப் பலனான லோக ப்ராப்திகளெல்லாம் மூன்று லோகங்களடங்கின ப்ரஹ்மாண்டத்திற்கு உட்பட்டவைகளே. ப்ராணாயாமாதி ரூபமான யோகம், தவம், ஸந்ந்யாஸாஸ்ரமம், ஆகிய இவற்றின் பலனான லோகங்கள் ஸத்வகுணமயங்களாகிப் பரிசுத்தங்களாயிருக்கும். அவை மஹர்லோக மென்றும் ஜனர்லோகமென்றும் தபோலோகமென்றும் ஸத்ய லோகமென்றும் பெயருடையவை. என்னிடத்தில் செய்யப்படும் பக்தியோகத்திற்கு என்னுடைய வாஸஸ்தானமாகிய பரமபதமே பலன். அந்தராத்மாவாய் உள் புகுந்து நியமித்துக்கொண்டிருப்பவனும் வெளியில் கால ஸ்வரூபனுமாகிய என்னால் புண்யபாபகர்மங்களோடு கூடிய இந்த ஜகத்தெல்லாம் ஸத்வாதிகுண பரிணாமமான ப்ரக்ருதிமண்டலத்தில் பிறப்பதும் சாவதுமாயிருக்கின்றது. சிறியதும் பெரியதும் இளைத்தும் பருத்துமிருக்கிற வஸ்து எதுவெது உண்டோ அதுவெல்லாம் ப்ரக்ருதி புருஷன் இவை யிரண்டோடுங் கூடியதே யன்றித் தனியே யிருப்பதன்று. ஆதியிலும் அந்தத்திலும் எந்த வஸ்து உள்ளதோ அதுவே, மத்

யத்திலும் உள்ளது. ஸ்வர்ணத்தினால் செய்யப்பட்ட கைவளை கிரீடம் முதலியவற்றையும், மண்ணால் செய்யப் பட்ட குடம் மடக்கு முதலியவற்றையும் இவ்விஷயத்தில் த்ருஷ்டாந்தமாகக் காணலாம். குடம் மடக்கு முதலி யவை செய்வதற்கு முன்பும் அவை உடைந்த பின்பும் மண்ணே உள்ளது. குடம் மடக்கு முதலியவை யிருக் கிற மத்யாவஸ்தையிலும் அவை மண்ணேயன்றி வேற ன்று. கைவளை கிரீடம் முதலியவை செய்வதற்கு முன் பும் அவை அழிந்த பின்பும் ஸ்வர்ணமே உள்ளது. கைவளை கிரீடம் முதலியவை யிருக்கிற மத்யாவஸ்தை யிலும் ஸ்வர்ணமே உள்ளதன்றி வேறன்று. குடம் முதலியவற்றிலும் கைவளை முதலியவற்றிலும் மண் ணும் ஸ்வர்ணமே உள்ளதாயின் குடம் முதலிய விகா ரங்களும் பெயர்களும் கைவளை முதலிய விகாரங்களும் பெயர்களும் ஏதுக்காக வென்றால், வ்யவஹாரத்திற்காக வும் ஜலம் கொண்டு வருவது கை முதலிய இடங்களில் ஆபரணமாக அணிவது முதலிய ப்ரயோஜனத்திற்காக வும். எந்த வஸ்து எந்த உபாதான காரணத்தினின் றும் உண்டாயிற்றோ, அந்த வஸ்து அந்த உபாதான காரணத்தைக் காட்டிலும் வேறுபட்டதன்று. மற்றும், அவ்வஸ்து தன்னுருவம் அழிந்தபின்பு அவ்வுபாதான காரணத்தின் தன்மையை அடையும். ஆகையால் ஒரு வஸ்துவில் எந்த உபாதான காரணத்தின் ஆதியும் அந் தமும் புலப்படுகின்றனவோ, அவ்வுபாதான காரண வஸ்துவே நிலைநின்றதாம். குடத்திற்கு ஆதியும் அந்த மும் மண்ணே யல்லவா? அம்மண்ணே குடம் முதலிய வஸ்துக்களில் நிலைநின்றதாம். தேவமனுஷ்யாதி ரூப மான நானாவித சரீரங்களுக்கெல்லாம் ப்ரக்ருதியே உபாதான காரணம். ப்ரக்ருதியைக்காட்டிலும் வில

க்ஷணனான ஜீவன் அவற்றிற்கு ஆதாரமாயிருக்கின்றான். (ஜீவன் தேவமனுஷ்யாதி சரீரங்களுக்குள் புகுந்து தரித்துக் கொண்டிருக்கிறான்). ஜீவன் ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் என்றும் மாறாமல் ஒருவாறாயிருப்பவன். அவனுடைய ஜ்ஞானத்திற்குக் காலம் அபிவ்யஞ்சகமாயிருக்கின்றது. ஸ்ருஷ்டிதசையிலன்றோ ஜீவாத்மாக்களுக்கு ஜ்ஞானவிகாஸம் உண்டாகின்றது. ப்ரளயதசையில் ஆத்மாக்கள் ப்ரக்ருதியில் அழுந்தி ப்ரகாச மற்றிருப்பார்கள். பரப்ரஹ்மம் அந்த ப்ரக்ருதி புருஷன் காலம் ஆகிய மூன்றையும் சரீரமாகவுடையதாகையால் அம்மூன்றும் பரப்ரஹ்மமே. அத்தகைய பரப்ரஹ்மம் நானேயன்றி வேறன்று. ஸத்வாதி குணங்களால் விளையும் ஸ்ருஷ்டியையுடைய, சேதநா சேதன ரூபமான வஸ்துக்களின் ஸ்திதி ஸம்ஹாரங்களையுடைய மஹத்து முதலிய ப்ரபஞ்சம் பகவானுடைய ஸங்கல்பம் உள்ளவரையில் ஓயாமல் முன்னும் பின்னுமாய் நடந்துகொண்டே யிருக்கும். ப்ருதிவி முதலிய லோகங்களின் பிரிவினைகளையுடையதும் ஜனங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் நடக்குமிடமுமாகிய ப்ரஹ்மாண்டத்தைக் காலஸ்வரூபனாகிய நான் ஸம்ஹரிக்க நினைக்கையில், அது லோகங்களோடு நாசம் அடைகின்றது. சரீரங்கள் அன்னத்தில் மறைகின்றன. (அன்னமில்லாமையில் சரீரங்கள் நாச மடைகின்றன). அன்னம் தான்யங்களில் மறைகின்றது. (தான்யங்கள் மறைகின்றமையில் அன்னமும் மறைகின்றது.) தான்யங்கள் பூமியில் மறைகின்றன (பூமியில் விதைத்த தான்யங்கள் முளைக்கிறதில்லை). பூமி கந்ததன்மாத்ரத்தில் மறைகின்றது. கந்ததன்மாத்ரம் ஜலத்தில் மறைகின்றது. ஜலம் தன்குணமான ரஸதன்மாத்ரத்தில் மறைகின்

றது. ரஸதன்மாத்ரம் அக்னியில் மறைகின்றது. அக்னி ரூபதன்மாத்ரத்தில் மறைகின்றது. ரூபதன்மாத்ரம் வாயுவில் மறைகின்றது. வாயு ஸ்பர்சதன்மாத்ரத்தில் மறைகின்றது. ஸ்பர்சதன்மாத்ரம் ஆகாசத்தில் மறைகின்றது. ஆகாசம் சப்ததன்மாத்ரத்தில் மறைகின்றது. இந்த்ரியங்கள் தங்கள்காரணமான வைகாரிகாஹங்காரத்தின் அவயவங்களில் மறைகின்றன. ஸெளம்யரே! வைகாரிகத்தின் அவயவங்கள் மன இந்த்ரியத்துடன் காரணமான வைகாரிகாஹங்காரத்தில் மறைகின்றன. சப்ததன்மாத்ரம் தன் காரணமான தாமஸாஹங்காரத்தில் மறைகின்றது. தேஹாத்மாபிமானம் முதலிய மோஹங்களை விளைக்க வல்லதாகிய மூன்று வகைப்பட்ட அஹங்காரதத்வம் மஹத்தத்வத்தில் மறைகின்றது. அத்யவஸாயத்திற்குக் காரணமாகையால் சிறந்த குணமுடைய மஹத்தத்வம் தன் காரணமாகிய ஸத்வாதி குணங்களில் மறைகின்றது. ஸத்வாதி குணங்கள் அவ்யக்தத்தில் மறைகின்றன. (மஹத்தத்வத்திற்கு குணங்களில் மறைகையாவது குணங்கள் ஏற்றக்குறைவின்றி ஸாம்யாவஸ்தையை அடைகையில் மஹத்தத்வம் மறைகையேயாம். ஸாம்யாவஸ்தையை அடைந்த ஸத்வாதி குணங்கள் அவ்யக்தத்தில் இருக்கின்றன.) அவ்யக்தம் காலத்தில் மறைகின்றது. (காலத்தில் மறைகையாவது காலத்தோடு ஸம்பந்தித்திருக்கையேயாம்.) காலம் என்றும் நித்யமாயிருப்பது. அதற்கு மற்றொன்றிலும் மறைதல் கிடையாது. காலம் ப்ரக்ருதியில் மழுங்கிக் கிடக்கிற ஜீவனோடு ஸம்பந்தித்திருக்கின்றது. ஜீவன் அந்தராத்மாவும் கர்மத்தினால் விளையும் பிறவி யற்றவனுமாகிய என்னிடத்தில் மறைகின்றான். ஸர்வாந்தராத்மாவாகிய நான்

என்னிடத்திலேயே இருப்பவனன்றி மற்றொன்றில் மறையுந்தன்மையனல்லேன். தேவாதி சரீரங்களின் ஸம்பந்தமாகிற உத்பத்தியும் அவற்றின் வியோகமாகிற விநாசமும் எனக்குக் கிடையா. இங்ஙனம் ப்ரக்ருதி புருஷன் ஈச்வரன் காலம் இவற்றின் உண்மையை ஆராய்ந்தறியும் புருஷனுடைய ஹ்ருதயத்தில் மனோதோஷத்தினாலுண்டாவதும் 'நான் இளைத்திருக்கிறேன்; பருத்திருக்கிறேன்' என்னும் இவை முதலிய விகற்பங்களுக்கிடமுமாகிய ப்ரமம் எப்படி நிலை நிற்கும்? ஸூர்யோதயம் ஆனபின்பு இருள் போகாதிருக்குமோ? ஸூர்யோதயம் ஆனபின்பு இருள் நிலைநிற்க மாட்டாததுபோல், இங்ஙனம் தத்வங்களை ஆராய்ந்தறியும் புருஷனுக்கு தேஹாத்ம ப்ரமம் முதலிய ப்ரமங்கள் நிலைநிற்க மாட்டா. ஸமஷ்டி வ்யஷ்டி தத்வங்களின் உண்மையை அறிந்த நான் தேஹாத்மாக்களுக்கும் ஜீவேச்வரர்களுக்கும் பேதம் உண்டா இல்லையா என்னும் ஸந்தேஹமாகிற முடிச்சை அவிழ்ப்பதாகிய ப்ரக்ருதி புருஷ கால ஈச்வர தத்வங்களின் பிரிவினையாகிற ஸாங்க்ய விதியை ஸ்ருஷ்டிக்ரமம் ஸம்ஹாரக்ரமம் ஆகிய இரண்டு க்ரமங்களாலும் உமக்கு விரிவாக மொழிந்தேன். இருபத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸத்வாதிகுண வ்ருத்திகளையும் குணயுக்த வஸ்துக்களையும் குணாதீத வஸ்துக்களையும் நிரூபித்தல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்.—தனித்தனியே யிருப்பவைகளும் ஒன்றோடொன்று கலந்திருப்பவைகளுமான ஸத்வாதி குணங்களுக்குள் எந்தெந்த குணத்தினால் புரு

ஷன் எங்ஙனம் அபிநிவேசமுடையவனாயிருப்பானோ, அதை யெல்லாம், புருஷ ஸ்ரேஷ்டரே! உமக்குச் சொல்லுகிறேன்; ஊக்கத்துடன் கேட்டுணர்வீராக. ஶமம், தமம், திதிக்ஷை, ஈக்ஷை, தவம், ஸத்யம், தயை ஸ்ம்ருதி, துஷ்டி, த்யாகம், அஸ்ப்ருஹை, ஶ்ரத்தை, லஜ்ஜை, தானம், ஆர்ஜவம், விநயம் முதலியவைகளும், ஆத்மானுபவஸுகமும் ஸத்வ குணத்தின் வ்ருத்திகள். (ஸத்வ குணத்தின் கார்யங்கள்). சமமாவது உள்ளிந்த்ரியத்தின் அடக்கம். தமமாவது வெளி யிந்த்ரியங்களின் அடக்கம். திதிக்ஷையாவது ஸுகம் துக்கம் முதலிய த்வந்த்வங்களைப் பொறுத்தல். ஈக்ஷையாவது தத்வங்களை ஆராய்ந்தறிதல். ஸ்ம்ருதியாவது அனுபவித்த விஷயங்களை மறவாமை. துஷ்டியாவது தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருக்கை. த்யாகமாவது செலவழிக்குந் தன்மை. அஸ்ப்ருஹையாவது விஷயங்களில் விருப்பமில்லாமை. ஶ்ரத்தையாவது ஆஸ்திக்யம். அதாவது தெய்வம் உண்டென்னும் நினைவு. ஆர்ஜவமாவது நேர்மை. விநயமாவது வணக்கம். விஷயங்களை அனுபவியாதிருக்க முடியாமையாகிற காமம், சேஷ்டை, மதம், எவ்வளவு பெறினும் ஸந்தோஷமுறாமை, கர்வம், பொருளாசை, வைஷம்யம், விஷயபோகம், ஸாஹஸகார்யங்களில் அபிநிவேசம், புகழில் ப்ரீதி (தன்னைப் பிறர் ஸ்தோத்ரஞ் செய்கையில் ஸந்தோஷம் அடையுந்தன்மை), பரிஹாஸஞ் செய்கை, தன்ப்ரபாவத்தை வெளியிடுகை, பலம் உள்ளளவளவும் முயற்சி செய்கை, ஆகிய இவை யெல்லாம் ரஜோகுண வ்ருத்திகள். (ரஜோகுணத்தின் கார்யங்கள்). பொறுமையாகிற க்ரோதம், சிலவென்றால் மனஞ் செல்லாமையாகிற லோபம், அசாஸ்த்ரீய

மானவற்றை ப்ரமாணமென்று கூறுகையாகிற அன்ருதம், பிறர்க்கு த்ரோஹஞ் செய்தல், யாசித்தல், வஞ்சித்தல், சோர்வுறுதல், கலஹம், சோகம், மோஹம், துக்கம், தைன்யம், ஆசை, பயம், முயற்சியற்றிருக்கை ஆகிய இவையெல்லாம் தமோகுண வ்ருத்திகள் (தமோ குணத்தின் கார்யங்கள்). இங்ஙனம் தனித்தனியே யிருக்கின்ற ஸத்வகுணம் ரஜோகுணம் தமோகுணம் ஆகிய மூன்று குணங்களின் வ்ருத்திகளை நிரூபித்துச் சொன்னேன். இனி ஒன்றோடொன்று கலந்திருக்கின்ற அக்குணங்களின் வ்ருத்திகளைச் சொல்லுகிறேன்; கேட்பீராக. ஓ உத்தவரே! அஹங்கார மமகாரங்கள் மிஶ்ர குண வ்ருத்திகள். (ஒன்றோடொன்று கலந்த குணத்தின் கார்யங்கள்). அஹங்காரமாவது ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மாவென்னும் புத்தி. மமகாரமாவது தன்னுடையதல்லாத வஸ்துவில் தன்னுடையதென்னும் புத்தி. மற்றும், அஹங்கார மமகார மூலமாய் விளைபவைகளும் மனம் தன்மாத்ரங்களின் கார்யமான ஆகாசாதி பூதங்களின் பரிணாமமாகிய தேஹம் இந்த்ரியங்கள் இவற்றைக் காரணமாக வுடையவைகளுமான வ்யவஹாரங்களெல்லாம் மிஶ்ரகுண வ்ருத்திகளேயாம். இந்த ஜீவன் எப்பொழுது அர்த்தம் தர்மம் காமம் இவைகளில் ஊக்கமுற்றிருக்கிறானோ, அப்பொழுது அவ்வர்த்த தர்ம காமங்களின் ஆர்ஜனத்திற்காகச் செய்யும் வ்யாபாரமெல்லாம் மிஶ்ரகுணகார்யமேயாம். அது ஶ்ரத்தை ப்ரீதி தனம் இவைகளை விளைக்கும். ப்ரவ்ருத்திரூபமான தர்ம அர்த்த காமங்களைப் பெறுதற்குரிய செயலில் புருஷனுக்கு எப்பொழுது நிஷ்டை உண்டாகிறதோ, அப்பொழுது க்ருஹஸ்தாஶ்ரம தர்மத்திலும் தன்னுடைய வர்ணதர்மத்திலும் அவன் ஊக்கமுற்

றிருப்பான். தர்ம அர்த்த காமங்களைப் பெறுதற்காகச் செய்யும் செயலாகிய அந்த ப்ரவ்ருத்திலக்ஷண தர்மத்தில் நிஷ்டை மிஸ்ரகுண கார்யமாம். ஸமாதி குணங்களால் புருஷன் ஸத்வகுணம் தலையெடுத்தவனென்றும், காமாதிகுணங்களால் ரஜோகுணம் தலையெடுத்தவனென்றும், க்ரோதாதி குணங்களால் தமோகுணம் தலையெடுத்தவனென்றும் ஊஹிக்கவேண்டும். பலாபிஸந்தியின்றித் தன் வர்ணாஸ்ரம கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு பக்தியுடன் புருஷனாவது ஸ்த்ரீயாவது என்னைப் பணிவார்களாயின் அப்பொழுது அவர்கள் ஸத்வகுணம் தலையெடுத்தவர்களென்று ஊஹிக்கலாம். இஹலோகத்திலுள்ள பற்பல விருப்பங்களை விரும்பித் தன் வர்ணாஸ்ரம தர்மங்களைக் குறைவற அனுஷ்டித்துக் கொண்டு என்னைப் பணிகிறவன் ரஜோகுணம் தலையெடுத்தவனென்று ஊஹிக்கலாம். பிறருடைய ஹிம்ஸையை உத்தேசித்து என்னைப் பணிவானாயின், அவன் தமோகுணம் தலையெடுத்தவனென்று ஊஹிக்கலாம். 'ஜீவாத்மாக்கள் ஸத்வாதிகுணங்கள் தலையெடுத்து உன்னைப் பணிவதும், நீ அவர்களுக்குப் பலன் கொடுப்பதும் வாஸ்தவமே. பலன்களை அனுபவிக்கிற ஜீவாத்மாக்களுக்கு ஸத்வாதிகுணஸம்பந்தம் உள்ளதுபோல் பலப்ரதானஞ் செய்கிற உனக்கும் ஸத்வாதிகுண ஸம்பந்தம் உண்டென்று கொள்ளவேண்டும். குணங்கள் உளவாயின் அவை பந்தத்தையும் விளைக்க வேண்டுமே' என்றால், அதுவில்லை. ஸத்வரஜஸ்தமோ குணங்கள் ஜீவனுக்கு பந்தங்களேயன்றி, எனக்கு அவை பந்தங்களாகமாட்டா. ஏனென்றால், அவை ஜீவனுடைய சித்தத்தில் தங்கள் தங்கள் கார்ய ரூபமாய் உண்டாகின்றன. ஆகையால் ஜீவனே பஞ்ச பூதங்களின் பரி

ணுமமான தேஹம் தேஹானுபந்திகள் விஷயங்கள் ஆகிய இவற்றுள் ஏதேனு மொன்றில் பற்றுற்று பந்தத்தை அடைகின்றான். ஸத்வாதி குணங்கள் எவனுடைய சித்தத்தில் உண்டாகின்றனவோ, அவனுக்கே அவை தங்கள் கார்யமான பந்தத்தை விளைக்கும். ஆகையால் அவை எனக்கு பந்தங்களாகமாட்டா. எப்பொழுது ஸத்வகுணம் ரஜஸ்தமஸ்ஸுக்களாகிற மற்ற குணங்களை அடக்கித் தலை யெடுக்குமோ, அப்பொழுது மனம் நுண் பொருள்களை அறியுந்திறமை யுடையதும் அவ்வறிவுக்கு ப்ரதிபந்தகமான மலங்களெல்லாம் தீரப்பெற்றதும் ராகம் முதலிய தோஷங்களால் வருங் கலக்கமற்றுச் சாந்தமுமாயிருக்கும். அங்ஙனம் ஸத்வகுணம் தலையெடுத்த புருஷன் ஆத்மானுபவஸுகம் ஸாத்விக தேவதாராதன ரூபமான தர்மம் ஸாத்விகதேவதோபாஸன ரூபமான ஜ்ஞானம் இவையும் மற்றும் சமாதி குணங்களும் உண்டாகப்பெறுவான். எப்பொழுது ரஜோகுணம் ஸத்வ குணத்தையும் தமோகுணத்தையும் அடக்கித் தலை யெடுக்குமோ, அப்பொழுது மனம் சப்தாதி விஷயங்களில் விருப்பமுற்றுப் பற்பலவான அவ்விஷயங்களைப் பெறுதற்கு முயற்சி யுடையதுமாம். அங்ஙனம் ரஜோ குணம் தலையெடுத்த புருஷன் துக்கம் ராஜஸதேவதாராதன ரூபமான கர்மம் தனம் முதலிய ஸம்பத்து அதன் மூலமாய் வரும்புகழ் இவைகளைப் பெறுவான். தமோகுணம் ஸத்வ குணத்தையும் ரஜோ குணத்தையும் அடக்கித் தலையெடுக்குமாயின், அப்பொழுது மனம் விவேகமின்றிப் பரவுதலற்று முயற்சியையும் இழந்திருக்கும். அங்ஙனம் தமோகுணம் தலையெடுத்த புருஷன் சோகம் மோஹம் நித்ரை ஹிம்ஸை ஆசை ஆகிய இக்குணங்கள் உண்டாகப் பெறுவான். சோக

மாவது புத்ராதி மரணம் முதலியவற்றை நினைக்கையா லுண்டாகும் வருத்தம். மோஹமாவது அதனால் மெய்ம் மறந்திருக்கை. ஆசையாவது சப்தாதி விஷயங்களில் விருப்பம். எப்பொழுது மனம் தெளிவுற்றிருக்குமோ, அப்பொழுது இந்த்ரியங்கள் விஷயாபிநிவேசமற்று ஸுகமாயிருக்கும். மற்றும், ரோகாதி பயமும் உண் டாகாது. பயத்திற்கிடமான ரோகாதிகளை விளைக்க வல்ல வஸ்துக்களில் மனவிருப்பமும் உண்டாகாது. எத் தகைய விஷயத்திலும் பற்று உண்டாகாது. இவை களால் ஸத்வகுணம் தலையெடுத்திருக்கிற தென்பதைத் தெரிந்து கொள்ளலாம். அத்தகைய ஸத்வகுணம் என் னைக் கண்டறிவதற்குக் காரணமாயிருக்கும். எப்பொழு து நல்லதோ கெட்டதோ ஆன ஏதேனுமொரு கார்யத் தைச் செய்துகொண்டு அதன் பலனை ஹர்ஷசோகா திகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறானோ, அப்பொ ழுது சித்தவிக்ஷேபமும் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங் களுக்கு ஓய்ச்சலில்லாமையும் கைகால் முதலிய அங்கங் களுக்குப் பீடையும் மனோப்ராந்தியும் உண்டாகும். இவைகளால் ரஜோகுணம் தலையெடுத்திருக்கிறதென்று தெரிந்து கொள்ளலாம். சித்தம் ஜ்ஞானேந்த்ரியத் திற்கு விஷயமான ரூபாதிகளை க்ரஹிப்பதில் வல்லமை யற்றிருக்குமாயின், அப்பொழுது ஸங்கல்ப விகல்ப ரூப மான மனமும் மறைந்தாற்போலிருக்கும். மற்றும், அப்பொழுது அஜ்ஞானமும் வருத்தமும் உண்டாகும். இவ்வடையாளங்களால் தமோகுணம் தலையெடுத்திருக் கிறதென்று நிச்சயிப்பீராக. ஸத்வகுணம் தலையெடுக் குமாயின், தேவதைகளுக்கு பலம் வளர்ந்து வரும். ரஜோகுணம் தலையெடுக்குமாயின், அஸுரர்களுக்கு பலம் வளர்ந்து வரும். தமோகுணம் தலையெடுக்குமா

யின், ராக்ஷஸர்களுக்கு பலம் வளர்ந்து வரும். ஜனன மரணாதிகளை ஸ்வபாவமாகவுடைய தேஹத்தோடு ஸம்பந்தித்திருக்கிற இந்த ஜீவனுக்கு ஸத்வகுணம் தலையெடுத்திருக்கும்பொழுது ஜாகராவஸ்தை உண்டாம். ரஜோகுணம் தலையெடுத்திருக்கும் பொழுது ஸ்வப்னாவஸ்தை உண்டாம். தமோகுணம் தலையெடுத்திருக்கும் பொழுது ஸுஷுப்தியவஸ்தை உண்டாம். ஜாகரம் முதலிய இம்மூன்று அவஸ்தைகளிலும் வியாபித்து இம்மூன்று அவஸ்தைகளுமுடையதுபோல் தோற்றுகிற ஆத்மஸ்வரூபம் இயற்கையில் இம்மூன்று அவஸ்தைகளினின்றும் விடுபட்டிருக்கையாகிற நான்காமவஸ்தையிலிருப்பது. ஜீவனுக்கு இந்த ஜாகராதி அவஸ்தைகள் மூன்றும் ஸத்வாதிகுண பரிணாமமான தேஹஸம்பந்தத்தினால் வந்ததேயன்றி இயற்கையில் உண்டானதன்று. ஜனங்கள் ஸத்வகுணத்தின் தாரதம்யத்தினால் ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள மேன்மேலுலகங்களுக்குப் போகின்றார்கள். தமோகுணத்தின் தாரதம்யத்தினால் அதிநிஹீனமான லோகம் வரையிலுள்ள கீழ் கீழுலகங்களுக்குப் போகின்றார்கள். தமோகுணம் மிகவும் தலையெடுத்திருந்தால், ஸ்தாவர ஜன்மத்தைப் பெறுகின்றார்கள். ரஜோகுணத்தின் தாரதம்யத்தினால் இடையிலுள்ள உலகங்களைப் பெறுகின்றார்கள். ஸத்வகுணம் தலை யெடுத்திருக்கும்பொழுது மரணம் அடைகிறவர்கள் ஸ்வர்க்க லோகத்திற்குப் போகின்றார்கள். ரஜோகுணம் தலை யெடுத்திருக்கும்பொழுது மரணம் அடைகிறவர்கள் மனுஷ்ய லோகத்திற்குப் போகின்றார்கள். தமோகுணம் தலை யெடுத்திருக்கும்பொழுது மரணம் அடைகிறவர்கள் நரகத்திற்குப் போகின்றார்கள். ரஜஸ்தமோகுணங்கள் சிறிதும் தீண்டப்பெறாத சுத்த ஸத்வ

குணத்தில் தேஹஸம்யோகம பெறுகிறவர்கள் என்னையே அடைவார்கள். என்னிடத்தில் அர்ப்பணஞ் செய்து என்னுடைய ஆராதனமென்னும் புத்தியுடன் செய்த நிஜகர்மமும் பலாபிஸந்தியில்லாத கர்மமும் ஸாத்விக கர்மமாம். (நிஜகர்மமாவது அவனவனுடைய வர்ணாஸ்ரமங்களுக்கேற்பட்ட கர்மமாம்). பலாபிஸந்தியோடு செய்யுங் கர்மம் ராஜஸகர்மமாம். சத்ருஹிம்ஸாதி அபிஸந்தியோடு செய்யுங் கர்மம் தாமஸகர்மமாம். உள்ள விஷயத்தை உள்ளபடி அறியும் ஜ்ஞானம் ஸாத்விகஜ்ஞானமாம். உள்ள ஆகாரத்தை விட்டு ஆரோபிதாகாரத்தைப் பற்றின ஜ்ஞானம் ராஜஸஜ்ஞானமாம். விஷயவிபாக மில்லாத ஜ்ஞானம் தாமஸஜ்ஞானமாம். என்னையொழிய மற்றொன்றிலும் செல்லாமல் என்னையே விஷயீகரிக்கும் ஜ்ஞானம் சுத்த ஸாத்விகஜ்ஞானமாம். வனத்தில் வஸிப்பது ஸத்வகுண வ்ருத்திக்கு ஹேதுவாகையால் ஸாத்விகவாஸமாம். க்ராமவாஸம் ரஜோகுண வ்ருத்திக்கு ஹேதுவாகையால் ராஜஸவாஸமாம். சூது சதுரங்கம் மத்யபானம் முதலியவை நடக்குமிடம் தமோகுண வ்ருத்திக்கு ஹேதுவாகையால் தாமஸவாஸமாம். என்னுடைய கோவில்கள் அமைந்த ஸ்ரீரங்காதி திவ்யக்ஷேத்ரமோ வென்றால், மூன்று குணங்களையும் தடுத்துச் சுத்த ஸத்வகுணத்தை மேன்மேலென வளரச்செய்யுமாகையால் நிர்க்குணஸ்தானமாம். அர்த்தகாமங்களில் விருப்பமில்லாமல் கர்மங்களை அனுஷ்டிக்கிறவன் ஸாத்விககாரகனாவான். அர்த்தகாமங்களில் மிகுந்த அபிநிவேசத்தோடு கர்மங்களை அனுஷ்டிக்கிறவன் ராஜஸகாரகனாவான். விஷயங்கள் அனர்த்தங்களை விளைப்பவையென்று தெரிந்தும் அந்த நினைவேயில்லாமல் கேவலம்

விஷய போகங்களை விரும்பிக் கர்மங்களை அனுஷ்டிக்கிறவன் ராஜஸகாரகனுவான். (காரகன்-கர்த்தா-செய்கிறவன்). ஸத்வாதி குணங்களுக்கு உட்படாமல் சுத்த ஸத்வகுணம் தலையெடுத்து என்னை த்யானிப்பதும் அர்ச்சிப்பதும் செய்துகொண்டு கர்மங்களை அனுஷ்டிக்கிறவன் நிர்க்குணகாரகனுவான். அத்யாத்ம சாஸ்த்ரங்களி லுண்டாகும் ஶ்ரத்தை ஸாத்விகஶ்ரத்தையாம். கேவலகர்மானுஷ்டானத்தி லுண்டாகும் ஶ்ரத்தை ராஜஸஶ்ரத்தையாம். அதர்மத்திலுண்டாகும் ஶ்ரத்தை தாமஸஶ்ரத்தையாம். கேவலம் என்னைப் பணிவதிலேயே உண்டாகும் ஶ்ரத்தை இதரகுணங்களின் ஸம்பந்தமற்ற சுத்தமான ஸத்வகுணத்தின் உத்ரேகத்தினுலுண்டானதாகையால் நிர்க்குண ஶ்ரத்தையாம். ஹிதமாயிருப்பதும் ஜாதி ஆஶ்ரயம் நிமித்தம் இவைகளைப்பற்றி வருந்தோஷங்கள் எவையும் தீண்டப்பெருததுமான ஆஹாரம் ஸாத்விகாஹாரமாம். இந்த்ரிய ஸுகங்களை விளைப்பதும் ஆயாஸத்தினுல் கிடைத்ததுமான ஆஹாரம் ராஜஸாஹாரமாம். தேஹேந்த்ரியங்களுக்குப் பீடையை விளைப்பதும் சாஸ்த்ரநிஷித்தமாகையால் அசுத்தமுமான ஆஹாரம் தாமஸாஹாரமாம். ஆத்மானுபவத்தினுலுண்டாகும் ஸுகம் ஸாத்விகஸுகமாம். சப்தாதி விஷயங்களாலுண்டாகும் ஸுகம் ராஜஸஸுகமாம். மோஹம் தைன்யம் இவைகளாலுண்டாகும் ஸுகம் தாமஸஸுகமாம். மோஹமாவது மோஹகமான வஸ்துக்களின் அனுபவத்தினுலுண்டான மதிமயக்கம். தைன்யத்தினுலுண்டாகும் ஸுகமாவது புத்ரகளத்ராதிகளின் உபலாலனத்தினுலுண்டாகும் ஸுகம். என்னை த்யானிப்பது முதலியவற்றுலுண்டாகும் ஸுகம் நைர்க்குண்யத்தை விளைக்க

வல்ல ஸத்வகுணோத்ரேகத்தின் மிகுதியாலுண்டான தாகையால் நிர்க்குணஸுகமாம். ஆஹாரத்திற்குரியத்ரவ்யம், வனக்ராமாதிரூபமான வாஸத்திற்குரிய தேசம், ஸுகாதிரூபமான பலன், காலம், ஜ்ஞானம், கர்மம், காரணம், ப்ரத்தை, அவஸ்தை, ஆக்ருதி, நிஷ்டை இவையெல்லாம் ஸத்வம் முதலிய மூன்று வகைப்பட்ட குணங்களின் கார்யமாயிருப்பவை; மேன்மேலும் அக்குணங்களின் அபிவ்ருத்திக்குக் காரணங்களுமாயிருப்பவை. (இவற்றில் காலம் காரணம் ஆக்ருதி இவை தவிர மற்றவையெல்லாம் கூறப்பட்டன). நிஷ்டையாவது மரணம். அதுவும் கூறப்பட்டது. காலம் முதலியவை மூன்றில் ஒவ்வொன்றும் ஸாத்விகமென்றும் ராஜஸமென்றும் தாமஸமென்றும் மூன்று வகைப்பட்டிருக்கும். காலைமாலைகளும் உச்சிவேளையும் ஆகிய மூன்று ஸந்திகளும் ஸாத்விக காலமாம். இவை தவிர ராத்ரியில் ஒரு யாமம் வரையிலுள்ள மற்ற காலம் ராஜஸகாலமாம். அர்த்தராத்ரம் முதலிய மற்றகாலம் தாமஸகாலமாம். காரணமாவது இஷ்டம் அதன் ஸாதனம் ஆகிய இவற்றை நிறைவேற்றிக் கொடுக்குங் காரணம். மேலுலகங்களுக்குப் போகும் ஸாதனங்களை அறிவிக்குஞ் சாஸ்த்ரம் ஸாத்விககாரணமாம். தேஹஸுகங்களின் ஸாதனங்களை அறிவிக்கும் சாஸ்த்ரம் ராஜஸகாரணமாம். அபிசாரம் முதலியவற்றை அறிவிக்கும் சாஸ்த்ரம் தாமஸகாரணமாம். பகவத்ப்ராப்திக்குரிய ஸாதனங்களை அறிவிக்கும் சாஸ்த்ரம் நிர்க்குணகாரணமாம். ஆக்ருதியாவது ஆகாரம். அதாவது வேஷம். வைதிகமான வேஷம் ஸாத்விகவேஷமாம். அர்த்த காமங்களை ஆர்ஜனஞ் செய்வதற்காக ஏற்றுக்கொண்ட வேஷம் ராஜஸவேஷமாம். பாசுபதா

தி ஆகமங்களில் சொல்லப்பட்ட வேஷம் தாமஸவேஷமாம். பாஞ்சராத்ர சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட வேஷம் நிர்க்குணவேஷமாம். எல்லா வஸ்துக்களும் ஸத்வாதி குணங்களினின்று வந்தவைகளே; ஒன்றோடொன்று ஸம்பந்தித்த ப்ரக்ருதி புருஷன் இவ்விரண்டோடு கூடினவை. இவ்வுலகத்திலுள்ளதும் பரலோகத்திலுள்ளதும் மனோரதமாத்ரத்திற்கு விஷயமாயிருப்பதுமாகிய எந்தெந்த ஸுகம் உண்டோ, அது வெல்லாம் ஸத்வாதி குணங்களினின்று வந்ததேயன்றி வேறன்று. ஸுகமெல்லாம் குணமயமென்கையால் அதற்கிடமான தேசாதிகளும் அந்தந்த குணஸம்பந்தமுடைய புருஷர்களின் ருசிக்கு விஷயமாயிருக்குமென்றுணர்க. இந்த த்ரவ்யாதி பதார்த்தங்களெல்லாம் ஸத்வாதி குணங்களுக்குட்பட்டுப் பூர்வஜன்மத்தில் செய்த புண்யபாப கர்மங்களால் விளைகின்ற ருசிக்கு விஷயங்களாயிருக்கும்; மற்றும், ஜன்மஜராமரணாதிரூபமான ஸம்ஸாரத்தை மேன்மேலென வளர்ப்பவைகளுமாயிருக்கும். எந்த ஜீவன் ரஜஸ்தமோ குணங்களும் அவை கலந்த ஸ்த்வகுணமும் தலைசாய்ந்து சுத்தஸத்வம் தலையெடுக்கையாகிற நிர்க்குணமென்னும் ஸாதனத்தினால் மனத்தில் கிளம்புபவைகளாகிய ஸத்வாதிகுணங்களை அடங்கச் செய்கிறானோ, அவன் அந்த நிர்க்குண ஸாதனத்தினால் மேன்மேலும் பக்தியோகம் வளர்ந்துவரப்பெற்று அதனால் நிலைநின்ற மனமுடையவனாகி என்னோடு ஸாரூப்யத்தை அடைவான். ஆகையால் பண்டிதர்கள் சாஸ்த்ராப்யாஸம் யோகாப்யாஸம் இவைகளாலுண்டாகும் ஜ்ஞானங்களுக்குக் காரணமாயிருக்கின்ற இம்மனுஷ்ய தேஹத்தைப் பெற்று ஸத்வாதி குணங்களின் பரிணாமமான சப்தாதிவிஷயங்களில் மனப்

பற்றைத் துறந்து என்னையே பணிகின்றார்கள். 'சப்தாதி விஷயங்களில் மனப்பற்றைத் துறந்த மாத்ரத்தினால் அவற்றிற்கு மூலமான ஸத்வாதிகுணங்களை எங்ஙனம் வெல்ல முடியுமென்றால் சொல்லுகிறேன்; கேட்பீராக.' முதலில் சப்தாதி விஷயங்களினின்றும் இந்த்ரியங்களை இழுத்து வசப்படுத்திக் கொள்ளவேண்டும். அனந்தரமும் இந்த்ரியங்களை வசப்படுத்திக் கொண்டோமென்று அவற்றை நம்பியிருக்கலாகாது; ஊக்கத்துடன் அவற்றைக் காத்துக்கொண்டே யிருக்கவேண்டும். இவை இனி விஷயாந்தரங்களில் செல்லமாட்டாவென்று நம்பும்படி அவை படிந்திருப்பினும், மீளவும் அவைவிஷயாந்தரங்களில் அபிநிவேசத்தைஉண்டாக்கி அவ்வழியால்அனர்த்தங்களைவிளைக்குமென்பதை அறிந்து எப்பொழுதும் அவைகளை அடக்கிக்கொண்டேயிருக்கவேண்டும். இவ்வளவு ஏற்பாட்டுடன் எவன் என்னைப் பணிகிறானோ,அவன் ஸத்வோத்ரேகத்தை விளைக்கவல்ல த்ரவ்யாதிகளை அடர உபயோகிப்பதினால் ரஜஸ்தமோ குணங்களை வெல்லுவான்; சிறந்த ஸத்வோத்ரேகமும் உண்டாகப் பெறுவான். அவன் என்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை நன்குணர்ந்து மனனஞ்செய்வானாகையால் அவனே முனிவனாவான். 'இவ்வளவு செய்யினும் ப்ராக்ருதமான ஸத்வோத்ரேகம் தொடர்ந்து வருகின்றதாகையால் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினின்று எங்ஙனம் விடுபட முடியும்?'' என்றால், சொல்லுகிறேன். ஸத்வோத்ரேகத்தினால் அனன்ய ப்ரயோஜனமான உபாஸனரூபஜ்ஞானம் உண்டாகும். அப்பொழுது ராகாதிகளால் விளையும் மனக்கலக்கம் தீரப்பெறுவான். அவ்வுபாஸன ஜ்ஞானத்தினால் ஸத்வகுணத்தையும் ஜயிக்கலாம். இங்ஙனம் குணங்களால் விடுபட்ட ஜீவன் தேஹத்தைத்

துறந்து என்னைப் பெறுவான். இங்ஙனம் மனத்தில் தோற்றுபவைகளான ஸத்வாதிகுணங்களாலும் தேஹத்தினுலும் விடுபட்ட ஜீவன் பரப்ரஹ்மமாகிய என்னுல் வியாபிக்கப்பட்டு (அந்தர்யாமியான என்னை ஸாக்ஷாத்கரித்தவனுகி) ஸம்ஸாரத்திற்கு ஹேதுவான கர்மத்தைச் செய்யமாட்டான்; மோக்ஷஸாதனமான ஜ்ஞானயோகத்தையும் அனுஷ்டிக்கமாட்டான. (முக்திதசையில் சாஸ்த்ரவச்யனுகமாட்டான்). இருபத்தைந்தாவது அத்யாயம்

---

துஷ்ட ஸஹவாஸத்தினுல் யோகநிஷ்டைக்கு விக்னம் வருமென்றும் சிஷ்டஸஹவாஸத்தினுல் அந்த யோகநிஷ்ட்டை வளர்ந்து வருமென்றும் நிரூபித்துக்கொண்டுஸங்கத்தினுல் யோகப்ரஷ்டனுவானென்பதற்கு உதாஹரணமாக ஐலவருத்தாந்தத்தைக் கூறுதல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:—என்னைக் காண்பதற்குக் காரணமாகிய இம்மனுஷ்யதேஹத்தைப் பெற்று ப்ரவ்ருத்தி தர்மத்தைத் துறந்து என்னுடைய ஆராதனரூபமான நிவ்ருத்திதர்மத்தை அனுஷ்டித்துக் கொண்டு வருவானுயின், ஆநந்தமயனுகையால் நிரதிசய புருஷார்த்த ஸ்வரூபனும் ஆத்மாவுக்கும் அந்தராத்மாவாகையால் பரமாத்மாவென்று ப்ரஸித்தி பெற்றவனுமாகிய என்னைப் பெறுவான். ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை ஆராய்ந்தறிகையாகிற ஜ்ஞான நிஷ்ட்டையில் இழிந்தவன் தேவாதிதேஹங்களுக்குக் காரணமாயிருப்பதும் ஸத்வாதி குணங்களையே வடிவாகவுடையதுமான ப்ரக்ருதியினுல் விடுபட்டிருப்பானன்றி அதற்கு உட்படமாட்டான். (தேவ மனுஷ்யாதி

தேஹங்களிலிருப்பினும் அவற்றில் அஹங்கார மமகாரங்களற்றிருப்பான்). அத்தகையன் ப்ரக்ருதியின் கார்யமான சப்தாதி விஷயங்களை அனுபவிப்பினும் தேஹானுபந்தி வஸ்துக்களில் என்னுடையவையென்னும் அபிமானம் உண்டாகப்பெறினும் அவ்வஸ்துக்களாலாவது அவ்விஷயங்களாலாவது பந்தத்தை அடைய மாட்டான். (இத்தகையன் ஜீவதசையில் சப்தாதி விஷயங்களை அனுபவிப்பினும் அபிநிவேசம் உண்டாகப் பெறமாட்டானாகையால் அவை அவனுக்கு பந்தகங்களாகமாட்டா.) ஶிஶ்னம் உதரம் இவற்றின் ஸுகங்களையே விரும்புந் தன்மையர்களான அஸத்புருஷர்களோடு ஒருகாலும் ஸஹவாஸஞ் செய்யலாகாது. அத்தன்மையுள்ள ஒருவனோடு ஸஹவாஸஞ்செய்யினும், குருடனைத் தொடர்ந்து செல்கிற குருடன் பள்ளத்தில் விழுவதுபோல், நரகத்தில் விழுவான். ஆகையால் அத்தகையர்களுடைய ஸஹவாஸத்தைத் துறந்து பகவத்தர்மத்தில் இழிந்து மோக்ஷத்தை அடையவேண்டும். பெரும்புகழுடைய ஐலனென்னும் புரூரவமன்னவன் ஊர்வசியால் இழுக்கப்பட்டமதியுடையவனாகி அவளுடன் கலந்திருக்கையில் பலவர்ஷங்களின் ராத்ரிகள் கடந்ததையும் மேல் வரப்போகிற பல ராத்ரிகளையும் அறியாமல் அற்பமான விஷயங்களையே அனுபவித்தும் அவற்றில் த்ருப்தி உண்டாகப்பெறாமல் மேன்மேலும் அவ்விஷயங்களையே அனுபவித்துக்கொண்டிருந்தான். இப்படியிருந்த அவ்வைலமஹீபதி ஒருகால் அவ்வூர்வசி தன்னைத் துறந்து போகையில் அவளைப் பிரிந்திருக்க முடியாமையால் பித்தம்பிடித்தவன்போன்று அரையிலாடையுமின்றி 'அடி! என்னின்பநாயகி! நில் நில், போகாதே' என்று புலம்பிக்கொண்டு தழதழத்து

அவளைப் பின்றொடர்ந்து சென்றான். (பிறகு குருக்ஷேத்ரத்தில் அவளுடைய ஸமாகமம் பெற்று கந்தர்வன் கொடுத்த அக்னியினால் யாகஞ் செய்து மீளவும் ஊர்வசிலோகஞ் சென்று வெகுகாலம் அவளோடு ஸம்போகித்திருந்தான்.) பிறகு அவளைப் பிரிந்த சோகம் தீருகையில் விஷயங்கள் அனர்த்த ஹேதுக்களென்னும் ஆலோசனை உண்டாகி அதனால் அவற்றில் வெறுப்புற்றுத் தனக்குள் மேல்வருமாறு மொழிந்துகொண்டான்.

ஐலன் சொல்லுகிறான்:—ஆ! என்னுடைய மோஹத்தின் பரப்பை என்னென்று சொல்லுவேன்? ஏனென்றால், நான் தேவஸ்த்ரீயாகிய ஊர்வசியால் கண்டாலிங்கனம் செய்யப்பெற்றுக் காமத்தினால் மனம் கலங்கி எனது ஆயுஸ்ஸின் கண்டங்கள் போன்ற பற்பல அஹோராத்ரங்கள் இங்ஙனம் கடந்ததையும் அறியாதிருக்கின்றேன். நான் இந்த ஊர்வசியால் விவேகம் பறியுண்டு 'இப்பொழுது ஸூர்யன் அஸ்தமித்தான்' என்றாவது, 'இப்பொழுது ஸூர்யன் உதயமானான்' என்றாவது ஒன்றையும் அறிந்திலேன். மற்றும், பற்பல வர்ஷங்களின் நாட்கள் கடந்ததையும் நான் அறிந்திலேன். ஆ! இதென்ன ஆச்சர்யம்! இதென்ன வருத்தம்! என்னுடைய மதிமயக்கத்தை என்னென்று சொல்லுவேன்? இந்த மதிமயக்கத்தினால் நான், என்னை ஸ்த்ரீகள் க்ரீடாம்ருகம் போல் உபயோகப்படுத்தும்படி அவர்களால் பறியுண்டேன். மன்னவர் சிகாமணியும் சக்ரவர்த்தியுமாகிய நான் என்னை இங்ஙனம் அழிப்பது யுக்தமோ? போக்ய போகோபகரண போகஸ்தானாதி ஸம்ருத்திகள் அமைந்த ஸார்வபௌமனாகிய என்னை த்ருணம்போல் அனாதரித்துப் (என்பெருமையைச் சிறிதும் பாராட்டாமல்) போகின்ற பெண்பிள்ளையை நான் காமமோஹத்தினால்

அரையில் ஆடையுமின்றிப் பித்தம் பிடித்தவன்போல் புலம்பிக் கொண்டு பின்றொடர்ந்தனன். ஆண்கழுதை பின்கால்களால் உதைக்கின்ற பெண்கழுதையைக் காம மோஹத்தினால் விவேகமற்றுப் பின்றொடர்வதுபோல், தன்னைப் பொருள்செய்யாமல் போகின்ற பெண்பிள்ளையை எவன் தொடர்ந்து செல்கின்றானோ, அவனுக்கு ப்ரபாவமாவது தேஜஸ்ஸாவது ஈஸ்வரத்வமாவது எங்கிருந்து வரும்? எவனுடைய மனம் ஸ்த்ரீகளால் பறியுண்டதோ, அவன் கற்ற கல்வியாலாவது அவன் செலுத்தின தவத்தினாலாவது அவன்செய்த த்யாகத்தினாலாவது அவன் செய்த வேதாத்யயனத்தினாலாவது அவன் செய்த ஏகாந்த வாஸத்தினாலாவது அவனுடைய மௌனத்தினாலாவது அவனுக்கு என்னப்ரயோஜனம்? எனக்கு எது நன்மையோ, அதை அறியாமல் எல்லாம் தெரிந்தவனாகப்பாவித்து மூர்க்கனாயிருக்கின்ற என்னைச் சுடவேண்டும். ஏனென்றால், நான் ஸமஸ்த பூமண்டலத்திற்கும் ப்ரபுவாயிருந்தும் எருதுபோலவும் கழுதை போலவும் பெண்ணாசையால் பறியுண்டேனல்லவா? நான் அனேகவர்ஷ ஸமூஹங்களாக ஊர்வசியின் கனிவாய முதத்தைப் பருகினும் என்னுடைய காமம் இன்னம் த்ருப்தி அடையவில்லை. அக்னி ஹோமங்களால் த்ருப்தி அடையாமல் மேன்மேலும் வளர்வதுபோல், என்னுடையகாமம் மேன்மேலும் வளர்ந்து வருகின்றது. சப்தாதி விஷயங்களில் விருப்பமின்றி ஆத்ம ஸ்வரூபத்தில் இழிந்து அதனாராய்ச்சியால் ஸந்தோஷ முற்றிருக்குந் தன்மையர்களான பெரியோர்களுக்கு அவ்வாத்மானுஸந்தானத்தை நிறைவேற்றிக் கொடுக்கும் ப்ரபுவும் இந்த்ரியங்களின் வியாபாரங்களை எதிர்பாராமல் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்குந் தன்மையனும் ஷாட்குண்ய பூர்ண

னுமாகிய பரம புருஷனைத் தவிர மற்ற எவன்தான் பர புருஷர்களைப் புணரவிரும்புந் தன்மையுள்ள மடந்தையர்களால் பறியுண்ட மனத்தை அவர்களிடத்தினின்று விடுவிக்க வல்லனுவான்? (அவனுடைய அனுக்ரஹம் இல்லாது போமாயின் எவனும் அவர்களால் பறியுண்ட மனத்தை விடுவிக்க வல்லனுகமாட்டான்). 'புரூரவ மன்னவனே! நீ என்னைப் பிரிந்திருக்கப் பொறுமல் மரணும் அடையாதே; பரிதாபத்தையும் ஏற்றுக் கொள்ளாதே. இந்த்ரியங்கள் செந்நாய்கள்போல் அமங்கள ஸ்வபாவமுடையவை. அவை உன்னைப் பக்ஷிக்கும்படி அவற்றிற்கு நீ இடங்கொடுக்க வேண்டாம். ஸ்த்ரீகளுடைய நட்புகள் நிலைநின்றிருப்பவையன்று. ஆகையால் அவர்களிடத்தில் விஶ்வாஸஞ் செய்யலாகாது. இந்த ஸ்த்ரீகளின் ஹ்ருதயங்கள் செந்நாய்களின் ஹ்ருதயங்கள்போல் புதிய புதியவைகளை விரும்புந் தன்மையுடையவை' என்று தெய்வ மடந்தையாகிய ஊர்வசி உண்மையான உரைகளை மொழிந்து எனக்கு விவேகத்தை விளைவிக்கப் பார்த்தாள். அவள் எனக்குத் தெரியும்படி பற்பல சொல்லியும், இந்த்ரியங்களை வெல்லமுடியாமல் காமங்களில் மனம் அழுந்தப்பெற்ற துர்ப்புத்தியாகிய என்னுடைய மதிமயக்கம் சிறிதும் தீரவில்லை; அப்படியே இருக்கின்றது. (காதலியிடத்தில் போக்யதாபுத்தி சிறிதும் மாறுதிருக்கின்றது.) இந்த ஊர்வசி எனக்கு என்ன அபகாரஞ் செய்தாள்? ஒரு அபகாரமுஞ் செய்யவில்லை. ஒருவன் கயிற்றைப் பார்த்து ஸர்ப்பமென்று ப்ரமிப்பானுயின், அந்தக் கயிறு அவனுக்கு என்ன அபகாரஞ் செய்ததாம்? கயிற்றைப் பார்க்கிறவன் அதன் ஸ்வரூபத்தை உள்ளபடி அறியானுயின், அவ்வறியாமை அறியாதவனுடைய குற்றமேயன்றிக்

கயிற்றின் குற்றமாகாதல்லவா? அங்ஙனமே நான் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து தேஹ ஸுகங்களை விரும்பி இந்த்ரியங்களை வெல்ல முடியாமல் அவற்றைத் தொடர்ந்து ஊர்வசியைக் கண்டு மோஹித்தமை என் குற்றமேயன்றி ஊர்வசியின் குற்றமாகுமாட்டாதல்லவா? மற்றும், அவள் உண்மையை அறிவித்தாளாகையால் எனக்கு உபகாரத்தையே செய்தாள். நான் இந்த்ரியங்களை அடக்கமுடியாமல் எனக்கே அபகாரஞ் செய்துகொண்டனன். மலங்கள் நிறைந்திருப்பதும் துர்க்கந்தம் முதலிய ஆபாஸங்களுடையதும் அசுத்தமுமாகிய இந்த தேஹம் எங்கே? ஸௌமனஸ்யம் முதலிய குணங்கள் எங்கே? துர்க்கந்தங்களுக்கிடமான தேஹத்தில் ஸுகந்தம் எங்கிருந்து வரும்? இதில் இக்குணங்களெல்லாம் அஜ்ஞானத்தினால் கற்பிக்கப் பட்டவைகளேயன்றி உண்மையன்று. இந்த தேஹம் தாய்தந்தைகளால் உண்டானதாகையால் இதை அவர்களுடையதென்று சொல்லலாமா? பார்யைக்கு போக்யமாகையால் அவளுடையதென்று சொல்லலாமா? எவனுடைய அன்னத்தைப் புசித்து ஜீவிக்கிறானோ அந்த ப்ரபுவினுடையதென்று சொல்லலாமா? கடைசியில் அக்னி ஸம்ஸ்காரஞ் செய்வார்களாயின், அது தஹிக்கிறதாகையால் அதனுடையதென்று சொல்லலாமா? அக்னி ஸம்ஸ்காரம் செய்யாமல் எறிந்து விடுவார்களாயின், அப்பொழுது நாயும் கழுகும் தின்னுமாகையால் அவைகளுடையதென்று சொல்லலாமா? தான் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்கிடமாயிருக்கின்றதாகையால் தன்னுடையதென்று சொல்லலாமா? நண்பர்களிடம் உபகாரம் பெறுகையால் அவர்களுடையதென்று சொல்லலாமா? என்று தேஹத்தைப்பற்றி

எவன் இங்ஙனம் ஆராய்ந்து பார்க்கிறானோ, அவன் இதைப்பற்றிச் சிறிதும் வருந்தமாட்டான். இதன் ஸ்வரூபத்தை அறியாதவன் மதிமயங்கி 'ஆ! காதலியின் முகம் மிகவும் ஆநந்தத்தை விளைக்கின்றது; அழகிய மூக்குடையது; புன்னகையுடன் திகழ்கின்றது. என்ன ஆச்சர்யம்' என்று கீழ்ச்சொன்ன பல துர்க்குணங்களுடையதும் அசுத்தமும் ஆபாஸத்தில் முடிவதுமாகிய தேஹத்தில் அழுந்திவிடுகிறான். தோல் மாம்ஸம் ரக்தம் நரம்பு மேதஸ்ஸு மஜ்ஜை எலும்பு இவற்றின் ஸமுதாயமும் மலமூத்ரங்களால் துர்க்கந்தமுமாகிய தேஹத்தில் ஸந்தோஷம் அடைகிறவர்களுக்கும் க்ரிமிகளுக்கும் என்ன பேதம்? ஒரு பேதமும் இல்லை. ஆத்மஹிதத்தை அறிந்தவன் இதைப்பற்றியும் ஸ்த்ரீகளிடத்திலாவது ஸ்த்ரீவஶ்யர்களிடத்திலாவது ஸங்கஞ் செய்யலாகாது. விஷயங்களுக்கும் இந்த்ரியங்களுக்கும் ஸம்பந்தம் உளதாயின் மனம் கலக்கமுறும். அது இல்லாதிருக்குமாயின் மனம் கலக்கமுறாது. ஆகையால் ஸ்த்ரீகளோடு ஸஹவாஸஞ் செய்யில் மனம் கலங்கி வருந்துமென்று அதைச் செய்யலாகாது. மற்றும், ஸ்த்ரீவஶ்யர்களோடு ஸஹவாஸஞ் செய்யினும் ஸ்த்ரீஸஹவாஸத்தில் கொண்டுபோய் மூட்டி விடுமாகையால் அதையும் செய்யலாகாது. கேளாததும் பாராததுமான விஷயத்தினால் மனக்கலக்கம் உண்டாகாது. (விஷயத்தைக் கேட்பினும் பார்ப்பினும் மனக்கலக்கம் உண்டாகும்) அங்ஙனமே இந்த்ரியங்களை விஷயங்களில் செலுத்தாதிருப்பானாயின், அவனுடைய மனம் நிச்சலமாகி ராகம் முதலிய தோஷங்களால் கலக்கமுறாதிருக்கும். ஆகையால் ஸ்த்ரீகளிடத்திலும் ஸ்த்ரீவஶ்யர்களிடத்திலும் இந்த்ரியங்களை விடுத்து ஸங்கம் செய்யலாகாது

இந்த்ரியவர்க்கம் அறிஞர்களுக்கும் கம்பத்தக்கதன்று. (நமக்கு வசப்பட்ட இந்த்ரியவர்க்கம் நமக்கு என்ன அபராதஞ் செய்யப்போகிறதென்று இந்த்ரியங்களை விஷயங்களோடு ஸம்பந்திக்கச் செய்யலாகாது. அப்படி நம்பியிருப்பின் அறிஞர்களையும் விஷயங்களில் அழுந்தச் செய்து அனர்த்தத்தையே விளைக்கும்). அறிஞர்களின் கதையே இதுவாயின், அறிவற்ற மூடர்களானஎன்னைப் போன்றவர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ?

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—இங்ஙனம் மொழிந்த ராஜாதிராஜனாகிய அப்புரூரவ மன்னவன் அனந்தரம் ஊர்வசிலோகத்தைத் துறந்து ஆத்மாவுக்கு அந்தராத்மாவான என்னை உபாஸனத்தினால் ஸாக்ஷாத்கரித்து அந்த உபாஸனஜ்ஞானத்தினால் தேஹாத்மாபிமானம் முதலிய மோஹத்தையெல்லாம் துறந்து மோக்ஷத்தை அடைந்தான். ஆகையால் புத்தியுடையவன் துஷ்டர்களின் ஸஹவாஸத்தைத் துறந்து ஸத்புருஷர்களிடத்தில் ஸஹவாஸஞ் செய்யவேண்டும். ஸத்புருஷர்கள் நன்மையை விரும்புகிற இப்புருஷனுக்குச் சப்தாதி விஷயங்களிலுண்டாகும் மனப்பற்றை விஷயங்கள் அனர்த்த ஹேதுக்களென்று நிரூபித்துச் சொல்லி வேரோடறுத்து விடுவார்கள். ஸத்புருஷர்கள் யாவரென்றால், சொல்லுகிறேன். நிரதிசய புருஷார்த்த ரூபனான என்னிடத்திலேயே நிலைநின்ற மனமுடையவர்களாகி மற்றொன்றையும் விரும்பாமல் ராகம் முதலிய தோஷங்களால் கலங்காத மனமுடையவர்களும் சேதனசேதன ரூபமான ஜகத்தெல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமென்றறிந்து எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந்தன்மையரும் தேஹத்திலும் தேஹானுபந்திகளிடத்திலும் அஹங்காரமமகாரங்களின்றிச் சீதோஷ்ணம் முதலிய த்வந்

த்வங்களால் விகாரமற்றவர்களும் சப்தாதி விஷயங்களை இவை நமக்கு அனுகூலங்களென்று அபிமானியாதவர்களும் எவரோ, அவரே ஸத்புருஷர்களாவார்கள். "அத்தகைய ஸத்புருஷர்களின் உரைகளால் மனோமோஹம் அறப் புண்ணுமாயினும், அதற்குக் காரணமான பாபம் அப்படியே இருக்கின்றதாகையால் அது மீளவும் முளைக்குமே' என்று சங்கிக்கவேண்டாம். மஹாபாக்யமுடையவனே! மிகுந்த மதியமைந்தவனே! உம்மைப்போன்ற மஹாபாக்யசாலிகளும் மஹாமதிகளுமான அந்தஸத்புருஷர்களிடத்தில் மனுஷ்யர்களுக்கு ஹிதத்தை விளைப்பவைகளான என்கதைகள் ஸம்பவித்துக்கொண்டேயிருக்குமாகையால், அவை கேட்கிறவர்களுடைய மனோமோஹத்திற்கு ஹேதுவான பாபத்தை அடியோடு போக்கிவிடும். அதனால் அவர்களுக்கு மீளவும் மனோமோஹம் தலையெடுப்பதற்கு இடமே இராது. அந்த என்கதைகளை எவர்கள் கேட்கிறார்களோ; எவர்கள் பாடுகிறார்களோ; எவர்கள் பாடுகிறவர்களை அனுமோதனஞ் செய்கிறார்களோ; எவர்கள் அவற்றைக் கேட்க ஆவலுறுகின்றார்களோ, அவர்கள் ஶ்ரத்தையுடன் என்னுடைய ஆராதனத்தையே முக்யமாகக்கொண்டு சப்தாதிவிஷயங்களில் மனஞ்செல்வதற்குக் காரணமான பாபந்தீரப்பெற்று என்னிடத்தில் பக்தியோகம் கைகூடப் பெறுவார்கள். அளவற்ற கல்யாண குணங்களுடையவனும் அளவிறந்த ஸ்வரூபஸ்வபாவங்களுடையவனாகையால் பரப்ரஹ்மமென்று கூறப்படுகின்றவனும் மஹாநந்தஸ்வரூபனுமாகிய என்னிடத்தில் பக்தியோகம் கைகூடப்பெற்ற ஸாதுவுக்குப் பெறக்கூடியது எதுதான் மிகுந்திருக்கின்றது? பக்தியோகம் கைகூடினவனுக்கு துர்லபமானது எதுவுமே இல்லை. ஆஹவனீயா

திருபனுகிப் பூஜிக்கத்தகுந்த அக்னியைப் பணியும் புரு ஷனுக்குக் குளிரும் இருட்டும் அவற்றால் விளையும் பய மும் பறந்துபோவதுபோல், ஸர்வகாலமும் ஸத்புருஷர் களைப் பணியும் புருஷனுக்கு அஜ்ஞானமும் அதனால் விளையும் ஸம்ஸாரபயமும் பறந்து போய்விடும். ஜலத் தில் விழுந்து முழுகுபவர்களுக்கு ஓடம் ரக்ஷகமாயிருப் பதுபோல், பயங்கரமான ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத் தில் முழுகி அதினின்றும் கரையேற விரும்புகிறவர்க ளுக்குப் பரப்ரஹ்மத்தை உள்ளபடி நன்கறிந்தவர்களும் ராகம் முதலிய தோஷங்களால் மனங்கலங்கப் பெருத வர்களுமான ஸத்புருஷர்களே மேலான சரணமாவார் கள். (ஸமுத்ரத்தில் விழுந்தவன் ஓடத்தைப் பெற்றுக் கரையேறுவதுபோல், ஸம்ஸாரஸமுத்ரத்தில் விழுந்த வன் ஸத்புருஷர்களைப் பணிவானுயின், கரையேறலாம். ஸம்ஸாரம் அஜ்ஞானத்தினுல் விளைகின்றதாகையால், அத்தகைய ஸத்புருஷர்கள் தம்மைப் பணிகிறவர்களின் அஜ்ஞானத்தைப் போக்கி பகவத்பக்தியை விளைப்பார் கள்.) அதனுல் மீளவும் ஸம்ஸாரத்திற்காளாகாமல் மோக்ஷத்தை அடையலாம். இவ்வுலகத்தில் ஜீவிக்க விரும்புகிறவர்களுக்கு ப்ராணதாரணஞ் செய்து ரக்ஷிப் பது அன்னமேயாம். ஆத்யாத்மிகம் முதலிய ஸம் ஸாரதாபங்களால் பீடிக்கப்பட்டு வெறுப்புற்றவர்களுக் கு ரக்ஷகன் ஸர்வேஶ்வரனை நானே. பரலோகத்தில் ரக்ஷகம் தர்மமேயாம். இஹலோகபோகங்களை விரும் பும் மனிதர்களுக்கு தனமே ரக்ஷகமாம். அங்ஙனமே, இந்த ஸம்ஸாரத்தினின்றும் பயப்படுகிற புருஷனுக்கு ஸத்புருஷர்களே ரக்ஷகராவார்கள். ஸத்புருஷர்கள் சித்து அசித்து ஈஶ்வரன் என்னும் தத்வங்களின் ஜ்ஞா னங்களாகிற கண்களைக் கொடுக்கின்ருர்கள். (தம்மைப்

பணியும் ஸம்ஸாரிகளைத் தத்வோபதேசத்தினால் பாது காக்கின்றார்கள்). ஸூர்யனோவென்றால், உதிக்கும்பொழு து வெளிக்கண்ணைக் கொடுக்கின்றான். ஆகையால் ஸத் புருஷர்களே தேவதைகளும் பந்துக்களுமாவார்கள். (தேவதைகளைப்போல் பூஜிக்கத் தகுந்தவர்களும், பந் துக்களைப்போல் உபகரிக்கத் தகுந்தவர்களுமாவார்கள்) பல படச் சொல்லி என்ன? ஸத்புருஷர்களே எனக்கு ஆத்மாவாயிருப்பவர். ஆகையால் நானே ஸத்புருஷர் கள். (பகவானே இவர்களென்னும் புத்தியோடு ஸத் புருஷர்களைப் பணியவேண்டும்). ஸுத்யும்னனென் னும் பெயருடைய வீரஸேனமஹாராஜனது குமாரனா கிய புரூரவ மன்னவன் தானாகவே சிறந்த சப்தாதி விஷ யபோகங்களுக்கிடமான ஊர்வசிலோகத்தில் விருப்ப மற்று ஸ்த்ரீஸஹவாஸத்தினின்றும் ஸ்த்ரீலோலர்களு டைய ஸஹவாஸத்தினின்றும் விடுபட்டு ஆத்மானுப வத்தினால் மனக்களிப்புற்று இந்தப் பூமண்டலத்தில் திரிந்து கொண்டிருந்தான். (இங்ஙனம் அதிஸங்கமுற் றவன் ஸங்கமறப் பெறுகையும் அதனால் அவன் முக்தி அடைந்ததும் ஆச்சர்யம்). இருபத்தாறாவது அத்யா யம் முற்றிற்று.

---

உத்தவர் கர்மயோகத்தைப்பற்றி வினவு தலும், ஸ்ரீ க்ருஷ்ணபகவான் அதை விரூபித்துச் சொல்லுதலும்.

உத்தவர் சொல்லுகிறார்:—ப்ரபூ! உன்னுடைய ஆராதனரூபமான கர்மயோகத்தைச் சொல்வாயாக. புருஷஶ்ரேஷ்டனே! உன் பக்தர்கள் உன்னை எந்த உப கரணங்களால் எந்த அதிகரணங்களில் எந்த விதமாக

ஆராதிக்கிருர்களோ, அதையும் சொல்வாயாக. நாரதர், மஹானுபாவரான வ்யாஸர், என்னுடைய ஆசார்யராகிய ப்ருஹஸ்பதி இவர்களும் மற்றும் பல முனிவர்களும் விடாமல் அனுஷ்டித்துக்கொண்டு வருகிற இந்தக் கர்மயோகமே மோக்ஷஸாதனங்களில் சிறந்ததென்று சொல்லுகிருர்கள். மற்றும், மஹானுபாவனுகிய ப்ரஹ்மதேவன் உன்னுடைய முகாரவிந்தத்தினின்றும் வெளிவந்த இந்தக் கர்மயோகத்தைத் தான் கேட்டுத் தரித்து ப்ருகு முதலிய தன்புதல்வர்களுக்கு உபதேசித்தான். மற்றும், மஹானுபாவனுகிய ருத்ரன் உன்னிடத்தினின்றும் கேட்ட இந்தக்கர்மயோகத்தைத் தன் பார்யையாகிய பார்வதிக்கு மொழிந்தான். பற்றினுர்க்கு வெகுமதியளிப்பவனே! பற்ருதார்களுடைய அபிமானத்தை வேரோடறுப்பவனே! ஆகையால் ஸம்ப்ரதாய உபதேச அனுஷ்டான பரம்பரைகளால் ப்ராப்தமான உன்னுடைய இந்த ஆராதனமே ஸமஸ்த வர்ணங்களுக்கும் ஸமஸ்த ஆஸ்ரமங்களுக்கும், ஆயிரஞ் சொல்லியென்? ஸ்த்ரீசூத்ரர்களுக்கும் புருஷார்த்தஸாதனங்களுக்குள் சிறந்ததென்று எனக்குத் தோற்றுகிறது. தாமரையிதழ் போன்ற கண்களுடையவனே! உன்னுடைய ஆராதனரூபமான இந்தக் கர்மயோகம் ஸம்ஸாரத்திற்குக் காரணமான புண்யபாப கர்மபந்தத்தை அடியோடு போக்கிவிடும். இதை உன்னுடைய பக்தனும் நண்பனுமாகிய எனக்கு மொழிவாயாக. 'இது ப்ரஹ்மாதிகளின் உபதேச பரம்பரையால் ப்ராப்தமாயிருக்கின்றதே. என்னை ஏன் கேட்கிருய்?' என்கிருயோ? சொல்லுகிறேன். கேள். நீ ஜகதீஸ்வரர்களான ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஸ்வரன். ஆகையால் நீயே ஸர்வஜ்ஞன். நீயே அதை எனக்கு மொழிவாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—உத்தவரே! என்னுடைய ஆராதனரூபமான கர்மத்தை அறிவிக்கும் ஶாஸ்த்ரத்திற்குக் கரை கிடையாது. ஆகையால் அந்தச் சாஸ்த்ரத்தை முழுவதும் அப்யஸிக்கவாவது அதில் சொன்ன கர்மயோகத்தை முழுவதும் அனுஷ்டிக்கவாவது முடியாது. ஆகையால் அதைச் சுருக்கி உள்ளபடி முறையே உமக்குச் சொல்லுகிறேன்; கேட்பீராக. உத்தவரே! என்னுடைய ஆராதனம் வைதிகமென்றும் தாந்த்ரிகமென்றும் மிஶ்ரமென்றும் (வைதிக தாந்த்ரிகமென்றும்) மூன்றுவகைப் பட்டிருக்கும். (அவற்றில் தாந்த்ரிகமாவது பாஞ்சராத்ராகமங்களில் சொல்லப்பட்ட கர்மம். ஆனால் அது ஏகாயனசாகையைத் தொடர்ந்ததாகையால் பரமவைதிகமாயிருக்க அதைக் கேவலதாந்த்ரிகமென்று எப்படி சொல்லலாமென்றால், இவ்விடத்தில் வைதிகமென்கிறது த்ரயியென்று சொல்லப்படுகிற மூன்று வேதங்களில் ஏற்பட்ட கர்மத்தை மாத்ரமே யாகையால் அதற்கு வெளியான பாஞ்சராத்ர கர்மத்தைத் தாந்த்ரிகமென்பது விருத்தமன்றென்றுணர்க.) இம்மூன்றில் அவரவர்க்கு இஷ்டமான ஏதேனுமொரு விதியினால் என்னை ஆராதிக்கலாம். புருஷன், கர்ப்பாஷ்டமம் கர்ப்பைகாதசம் கர்ப்பத்வாதசம் என்னும் காலங்களில் தந்தனக்கு ஏற்பட்ட வேதத்தில் சொல்லியபடி உபநயனஸம்ஸ்காரஞ் செய்யப்பெற்று அதனால் ப்ராஹ்மணத்தன்மையை அடைந்த பின்பு என்னை ஶ்ரத்தையுடன் எப்படி ஆராதிக்கவேண்டுமோ, அவ்விதத்தைச் சொல்லுகிறேன்; கேட்டுணர்வீராக. புருஷன் ப்ரதிமை சக்ராப்ஜ மண்டலம் முதலிய ஸ்தண்டிலம் அக்னி ஸூர்யன் ஜலம் ஹ்ருதயம் ப்ராஹ்மணன் ஆகிய இவற்றுள் ஏதேனுமோரிடத்தில் தன்

குருவாகிய என்னைக் கபடமின்றி பக்தியுடன் புஷ்பம் சந்தனம் முதலிய த்ரவ்யங்களால் ஆராதிக்கவேண்டும். ஆராதிக்க முயன்றவன் முதலில் தந்ததாவனஞ் செய்து சரீர சுத்திக்காக ஸ்னானஞ் செய்யவேண்டும். மீளவும் மண் கோமயம் முதலியவற்றை உடம்பில் பூசி வைதிகங்களும் தாந்த்ரிகங்களுமான இருவகை வருணமந்த்ரங்களை உச்சரித்துக் கொண்டு ஸ்னானஞ் செய்யவேண்டும். நான் வேதத்தின்மூலமாய் நியமித்திருக்கிற ஸந்த்யாவந்தனம் முதலிய கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டும். பிறகு ஒரு பலனையும் எதிர்பாராத சுத்த ஸங்கல்பமுடையவனாகி மோக்ஷவிரோதியான கர்மங்களெல்லாம் தீரும்படியான என்னுடைய ஆராதனத்தை நடத்தவேண்டும். சிலை தாரு பொன் வெள்ளி செம்பு முதலிய லோஹமும் மண் சந்தனம் முதலிய லேபனத்ரவ்யம் மணல் ரத்னம் இவைகளால் செய்யப்பட்டதும் சித்ரத்தில்எழுதப்பட்டதும் ஹ்ருதயாராதனத்தில் மனோமயமுமாகி ப்ரதிமை எட்டு விதமாயிருக்கும். மற்றும், பகவானுக்கு வாஸஸ்தானமாகிய அந்த ப்ரதிமை சலையென்றும் அசலையென்றும் இருவகைப் பட்டிருக்கும். அது மந்த்ரந்யாஸாதிரூபமான ப்ரதிஷ்டையினால் பகவானுக்கு வாஸஸ்தானமாகின்றது. சலையாவது அவ்வப்பொழுது ஆராதனத்திற்காக ஏற்படுத்திக்கொள்ளும் ப்ரதிமையாம். அசலையாவது நிலையான ஆராதனத்திற்காக ஏற்படுத்திக்கொள்ளும் ப்ரதிமையாம். உத்தவரே! அசலப்ரதிமையில் பகவானை ஆராதிக்கும் பொழுது ஆவாஹன விஸர்ஜனங்கள் கிடையா. சலப்ரதிமையில் ஆவாஹன விஸர்ஜனங்கள் செய்யவும் செய்யலாம்; செய்யாமலுமிருக்கலாம். (ஒருவன் வெளியில் சென்று நாலுநாள் தங்கி

அங்கு ஆராதனத்திற்காக ஏதேனும் ஒரு ப்ரதிமையை ஏற்படுத்திக்கொள்வானாயின், அதில் அவ்வப்பொழுது ஆவாஹன விஸர்ஜனங்கள் செய்தாலும் செய்யலாம். அல்லது முதலில் ஆவாஹனஞ் செய்து அவ்வளவோடு மற்ற நாட்களும் ஆராதனத்தை முடித்துக் கடைசியில் விஸர்ஜனஞ் செய்து விடலாம். நித்யாராதனத்திற்காக ஏற்பட்ட ஸ்திரப்ரதிமையில் தினந்தோறும் ஆவாஹனஞ் செய்ய வேண்டியதில்லை. ஆவாஹனமில்லாமையால் விஸர்ஜனத்திற்கு ப்ரஸக்தியே இல்லை). ஸ்தண்டிலத்தில் ஆவாஹன விஸர்ஜனங்களிரண்டும் அவ்வப்பொழுது பண்ணியே ஆகவேண்டும். சந்தனம் முதலிய பூச்சுக்களால் செய்ததும் சித்ரத்தில் எழுதினதும் மணலால் செய்ததும் ஆகிய இம்மூன்று ப்ரதிமைகள் தவிர மற்ற ப்ரதிமைகளில்தான் பகவானுக்கு ஸ்நானம் செய்விக்கலாம். மற்ற அம்மூன்று ப்ரதிமைகளிலும் ஜலத்தை ஸ்பர்சித்து ஸ்நானஞ் செய்விப்பதாக அபிநயமாத்ரஞ் செய்யலாமன்றி நேரே ஸ்நானஞ் செய்விக்கலாகாது. ஒரு பலனை உத்தேசித்து ஆராதிக்கிறவன் ஆராதனத்தை விதிக்கிற சாஸ்த்ரங்களில் ப்ரஸித்தங்களான எல்லா த்ரவ்யங்களையும் கொண்டே என்னை ஆராதிக்க வேண்டும். பலாபிஸந்தியில்லாத என் பக்தன் எவ்வளவு கிடைக்குமோ அவ்வளவைக் கொண்டே என்னை ஆராதிக்கலாம். கிடைக்காத வஸ்துக்களை மனத்தினால் ஸங்கல்பித்து ஸமர்ப்பிக்கலாம். ஹ்ருதயத்தில் ஆராதிக்கும்பொழுது உபசாரங்களையெல்லாம் மானஸிகமாக ஸமர்ப்பிக்கவேண்டும். ப்ரதிமையில் ஆராதிக்கும்பொழுது ஸ்நானமும் அலங்காரமும் எனக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும். ஆகையால் அவ்விரண்டு உபசாரங்களையும் அவஸ்யஞ் செய்யவேண்டும். ஸ்தண்

டிலத்தில் ஆராதிக்கும்பொழுது தத்வந்யாஸஞ் செய்ய வேண்டும். (தத்வந்யாஸமாவது அந்தந்த ஸ்தானங்களில் அங்க தேவதைகளையும் ப்ரதானதேவதைகளையும் ந்யாஸஞ் செய்தல். அல்லது ககரம் முதல் மகரம் வரையிலுள்ள அக்ஷரங்களால் அறிவிக்கப்படும் இருபத்தைந்து தத்வங்களையும் அந்தந்த அக்ஷரங்களை உச்சரித்துக்கொண்டு ந்யாஸஞ் செய்கை.) ஸ்தண்டிலாராதனத்தில் இங்ஙனம் ந்யாஸஞ்செய்வது எனக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும். அக்னியில் ஆராதிக்கும் பொழுது நெய்யில் நனைந்த ஹவிஸ்ஸை ஹோமஞ் செய்வது எனக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும். ஸூர்யமண்டலத்தில் என்னை ஆராதிக்கும்பொழுது ஸ்தோத்ரங்களால் ஆராதிப்பது மிகவும் சிறந்ததாம். ஜலத்தில் ஆராதிக்கும்பொழுது ஜலம் முதலியவைகளால் ஆராதிக்க வேண்டும். பக்தியுடையவன் ஶ்ரத்தையுடன் எனக்கு ஜலத்தை ஸமர்ப்பிக்கினும் அது எனக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும். அவன், சந்தனம் தூபம் புஷ்பம் தீபம் அன்னம் மற்றுமுள்ள பக்ஷ்யம் தாம்பூலம் முதலியவை ஆகிய இவைகளில் ஏதேனுமொன்றை ஸமர்ப்பிப்பானாயின், அது எனக்கு மிகவும் ப்ரியமாயிருக்குமென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? என்னிடத்தில் பக்தியில்லாதவன் பற்பல உபசாரங்கள் செய்யினும் அவை எனக்கு ஸந்தோஷத்தின்பொருட்டு ஆகமாட்டா. ஸ்னானநித்யகர்மங்களை முடித்துப் பரிசுத்தனாகி ஆராதனத்திற்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் ஸித்தப்படுத்திக்கொண்டு கிழக்கு நுனியாக தர்ப்பங்களைப் பரப்பி ஆஸனங் கல்பித்துக் கிழக்கு முகமாகவாவது வடக்கு முகமாகவாவது அல்லது ப்ரதிமைக்கு எதிர்முகமாகவாவது உட்கார்ந்து(அடக்கடி எழுந்திராமல்)

ஆராதிக்கவேண்டும். முதலில் ஆராதகன் தன்னு டைய அங்கங்களில் மாத்ருகாப்ரணவமூலமந்த்ரங்க ளால் ந்யாஸஞ் செய்துகொண்டு அங்ஙனமே ந்யாஸஞ் செய்யப்பெற்ற என் ப்ரதிமையைக் கையினால் துடைக்க வேண்டும். ப்ரோக்ஷண கலசத்தை விதிப்படி தனது இடப்பக்கத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அந்த ப்ரோக்ஷண கலசத்திலுள்ள ஜலத்தினால் யாகபூமியை யும் பூஜாத்ரவ்யங்களையும் தன்னுடைய தேஹத்தை யும் பாத்யம் முதலிய மூன்று பாத்ரங்களையும் ப்ரோ க்ஷித்து அந்தந்த பாத்ரங்களுக்கு ஏற்பட்ட துளஸி அருகன்புல் முதலிய அந்தந்த வஸ்துக்களைச் சேர் த்து அவற்றால் ப்ரதிமையில் ஸந்நிதானஞ் செய்திருக் கிற என்னை ஆராதிக்க வேண்டும். ஆராதனஞ் செய் கிறவன் பாத்யத்திற்காகவும் அர்க்யத்திற்காகவும் ஆச மனீயத்திற்காகவும் ஏற்பட்ட மூன்று பாத்ரங்களையும் ஹ்ருதயமந்த்ரம் ஶிரோமந்த்ரம் ஶிகாமந்த்ரம் இவைக ளாலும் ஸ்ரீவிஷ்ணுகாயத்ரியாலும் அபிமந்த்ரணஞ் செய்யவேண்டும். சரீரத்தை வாயு அக்னி ஜலம் இவை களால் சோஷண தாஹன ப்லாவனங்கள் செய்து சோ தித்து அச்சரீரத்தில் ஹ்ருதய கமலத்திலிருப்பதும் என்னுடைய அம்சமும் தேஹேந்த்ரியாதிகளைக் காட் டிலும் விலக்ஷணமாயிருப்பதும் அணுஸ்வரூபமும் நாத மென்று கூறப்படுகிற ப்ரணவத்தின் கடைசி அக்ஷர மான மகாரத்தில் யோகஸித்தர்களால் அதற்குப் பொ ருளாக பாவிக்கப்படுவதும் ஜ்ஞானமயமுமாகிய ஜீவ ஸ்வரூபத்தை த்யானிக்கவேண்டும். தீபத்தின் ஒளியால் க்ருஹம் முழுவதும் வியாபிக்கப்பட்டிருப்பதுபோல் அந்த ஆத்மஸ்வரூபத்தின் தர்மமான ஜ்ஞானத்தினால் சரீரம் முழுவதும் வியாபிக்கப்பட்டிருப்பதாக த்யா

னித்து இங்ஙனம் ஸம்ஸ்காரஞ் செய்யப்பெற்ற சரீரத்தின் ஹ்ருதயபத்மத்தில் என்னை மானஸோபசாரங்களால் ஆராதித்து அதனால் என்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகி ப்ரதிமை முதலிய இடங்களில் என்னை ஆவாஹனஞ்செய்து ஸ்தாபித்து அங்கந்யாஸாதிகள் செய்து ஆராதிக்கவேண்டும். தர்மம் ஜ்ஞானம் வைராக்யம் ஐஸ்வர்யம் அதர்மம் அஜ்ஞானம் அவைராக்யம் அனைஸ்வர்யம் என்னும் இவ்வெட்டுகளை எட்டுக்கால்களாகவுடைய பீடத்தில் விமலை உத்கர்ஷிணி ஜ்ஞானை க்ரியை யோகை ஹ்ரஸ்வை ஸத்யை ஈஸானை அனுக்ரஹை என்னும் ஒன்பது மூர்த்திகளோடு கூடியதும் இடையில் கர்ணிகையும் அதைச் சுற்றிக் கேஸரங்களும் அதைச் சுற்றி எட்டு தளங்களும் அமைந்த பத்மத்தை எனக்கு ஆஸனமாகக் கற்பித்து, ஸ்வர்க்கம் அபவர்க்கம் ஆகிய இரண்டு பலன்களும் ஸித்திக்கும் பொருட்டு வேதமந்த்ரங்களாலும் பாஞ்சராத்ரதந்த்ர மந்த்ரங்களாலும் பாத்யம் ஆசமனீயம் அர்க்யம் முதலிய உபசாரங்களைச் செய்யவேண்டும். அனந்தரம் ஸுதர்சனமென்னும் சக்ரம் பாஞ்சஜன்யமென்னும் சங்கம் கௌமோதகியென்னும் கதை நந்தகமென்னும் கத்தி பாணம் சார்ங்கமென்னும் தனுஸ்ஸு கலப்பை உலக்கை இவைகளையும் கௌஸ்துபமணி வனமாலை ஸ்ரீவத்ஸம் இவைகளையும் ஆராதிக்கவேண்டும். அனந்தரம், நந்தன் ஸுநந்தன் கருடன் ப்ரசண்டன் சண்டன் மஹாபலன் குமுதன் குமுதேக்ஷணன் இவர்களையும், துர்க்கை விநாயகன் வ்யாஸர் விஷ்வக்ஸேனர் இவர்களையும் ஆசார்யர்களையும் இந்த்ரன் முதலிய தேவதைகளையும் அவரவர்க்கு ஏற்பட்ட இடங்களில் எனக்கு எதிர்முகமாயிருப்பதாகப் பாவித்து ப்ரோக்ஷணம் முதலிய உபசாரங்

களால் ஆராதிக்கவேண்டும். (ஸுதர்சனாதி ஆயுதங்களைக் கிழக்கு முதலிய எட்டுத் திசைகளிலும், கௌஸ்துபம் வனமாலை ஸ்ரீவத்ஸம் இவைகளைத் திருமார்பிலும் நந்தாதிகளை எட்டுத் திசைகளிலும், கருடனை எதிரிலும், துர்க்காதிகளைக் கோணங்களிலும் ஆசார்யர்களைப் பகவானுடைய வலப்பக்கத்திலும், இந்த்ராதி தேவதைகளைக் கிழக்கு முதலிய எட்டுத்திசைகளிலும் ஆராதிக்கவேண்டும்). (துர்க்கை பகவன்மாயைக்கு அபிமானி தேவதையாகையாலும், விநாயகன் விஷ்வக்ஸேனருடைய பாரிஷதனாகையாலும், வ்யாஸர் வேதங்களைச் சாகைசாகையாகப் பிரித்து அவற்றை வெளிப்படுத்தினாரென்கிற உபகார ஸ்ம்ருதியாலும், தேவதைகள் பகவானுடைய விபூதியாகையாலும் பரிவாரங்களில் சேர்த்து அவர்களைப் பூஜிக்கும்படி விதிக்கிறது). பிறகு சந்தனம் வெட்டிவேர் கற்பூரம் குங்குமம் அகில் இவைகளின் வாஸனையிடப்பெற்ற ஜலங்களால் மந்த்ரங்களைப் படித்துக்கொண்டு ஸ்நானஞ் செய்விக்கவேண்டும். விபவம் உளதாயின் இங்ஙனமே தினந்தோறும் ஸ்நானஞ் செய்விக்கவேண்டும். இல்லையாயின் கிடைத்தவளவு நடத்தவேண்டும். ஸ்நானஸமயத்தில் [1] ஸ்வர்ணகர்மானுவாகத்தையும ஜிதந்தையென்கிற மஹாபுருஷவித்யையும் புருஷஸூக்தத்தையும் ஸாமஸ்வரம் ஏறிப்பெற்ற நீராஜன மந்த்ரங்களையும் மற்றும் ரௌஹிணாதி மந்த்ரங்களையும் படிக்கவேண்டும். வஸ்த்ரம் யஜ்ஞோபவீதம் ஆபரணம் துளஸிதளம் பூமாலை சந்தனம் குங்குமம கஸ்தூரி முதலிய பூச்சுக்கள் இவைகளால் என்னிடத்தில் பக்தியுடைய

1. ஸ்வர்ணகர்மானுவாகமாவது 'ஸுவர்ணம் வயர்மம் பரிவேஷகேஷ' என்னும் இது முதலிய அனுவாகம்.

வன் என்னை ப்ரீதியுடன் உரியபடி அலங்கரிக்க வேண்டும். அனந்தரம் அர்ச்சகன் எனக்கு ஶ்ரத்தையுடன் பாத்யம் ஆசமனீயம் இவைகளைக் கொடுத்துச் சந்தனம் புஷ்பம் அக்ஷதை தூபம் தீபம் இவைகளையும் நைவேத்யத்தையும் ஸமர்ப்பிக்கவேண்டும். விபவம் உள்ளதாயின் வெல்லம் பாயஸம் செய் முருக்கு வடை அப்பம் குழக்கட்டை கோதுமையப்பம் தயிர் பருப்பு இவை முதலியவற்றை நிவேதனஞ் செய்யவேண்டும். ஏகாதசி முதலிய பர்வகாலத்தில் எண்ணெய்தேய்த்தல் உடம்பைப்பிடித்தல் கண்ணாடி காண்பித்தல் தந்ததாவனஞ் செய்வித்தல் பஞ்சாம்ருதங்களால் ஸ்னானஞ் செய்வித்தல் அன்னம் முதலியவற்றை நிவேதனஞ் செய்தல் பாட்டு கூத்து நடப்பித்தல் செய்யவேண்டும். விபவம் உளதாயில் இவையெல்லாம் தினந்தோறும் நடத்த வேண்டும். (இனி அக்னியில் பூஜிக்கும் விதத்தைச் சொல்லுகிறேன்). தந்த்ரங்களில் சொல்லிய விதியின்படி உயரமும் அகலமும் ஒத்திருக்கிற நான்கு அங்குலமுள்ள மூன்று மேகலைகளும் ஒருமுழம் ஆழமுள்ள பள்ளமும் அருகில் திண்ணையும் அமைக்கப்பெற்றஹோமகுண்டத்தில் அக்னியைச் சேர்த்துப் பற்றவைத்து நாற்புறத்திலும் சிதறியெரிகின்ற அவ்வக்னியைக் கையால் ஒன்று சேர்க்கவேண்டும். பிறகு அவ்வக்னிகுண்டத்திற்கு நாற்புறத்திலும் தர்ப்பங்களைச் சேர்த்து ஜலத்தினால் வளையக்கட்டவேண்டும். அனந்தரம் விதிப்படி அக்னியில் ஸமித்துக்களைச் சேர்ப்பது முதலான அன்வாதானமென்னும் கர்மத்தை முடித்து ஆஜ்யஸ்தாலி முதலிய உபகரணங்களை அக்னிக்கு வடபாகத்தில் வைத்து ப்ரோக்ஷணபாத்ரத்திலுள்ள ஜலத்தினால் ப்ரோக்ஷித்து அக்னியில் என்னை த்யா

ணிக்கவேண்டும். உருக்கி அழுக்கெடுத்த பொன்னின் வர்ணமுடையவனும் சங்கு சக்ரம் கதை தாமரைமலர் இவைகளால் திகழ்கின்ற நான்கு புஜங்களுடையவனும், உக்ரமாயிராமல் சாந்தஸ்வரூபனும், தாமரைத்தாது போன்ற பீதாம்பரந்தரித்தவனும், கிரீடம் கைவளை அரைநாண்மாலை மேன்மையுள்ள தோள்வளை முதலிய திருவாபரணங்கள் விளங்கப் பெற்றவனும், திருமார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவும் கௌஸ்துபமணியும் வனமாலையும் அமைந்து விளங்குகின்ற என்னை அக்னியில் த்யானித்துக்கொண்டே எனக்கு அர்க்யம் பாத்யம் முதலிய உபசாரங்கள் ஸமர்ப்பித்துப் பூஜித்து ஸமித்துக்களையும் நெய்யில் நனைத்த ஹவிஸ்ஸுக்களையும் அக்னியில் சேர்த்து ஆகாரமென்னும் இரண்டு ஆஜ்யஹோமங்களைச் செய்து கடைசியில் ஸ்வாஹாசப்தம் சேர்க்கப்பெற்ற திருவஷ்டாக்ஷரமந்த்ரத்தினாலும் புருஷ ஸூக்தத்தினுடைய பதினாறு ருக்குக்களாலும் தனித்தனியே நெய்யில் நனைந்த ஹவிஸ்ஸை எடுத்து ஹோமஞ் செய்யவேண்டும். பிறகு விதிப்படி தர்மம் முதலிய அங்கதேவதைகளுக்கும் ஆவரணதேவதைகளுக்கும் அஸ்த்ரங்களுக்கும் பூஷணங்களுக்கும் பாரிஷதர்களுக்கும் அந்தந்த நாமமந்த்ரங்களைச் சொல்லி ஹோமஞ் செய்யவேண்டும். அப்பால் ஸ்விஷ்டக்ருத்து ஹோமஞ் செய்யவேண்டும். பிறகு அக்னியில் ஆவாஹனஞ் செய்த பகவானைப் பூஜித்து நமஸ்கரித்து நந்தன்முதலிய பாரிஷதர்களுக்கு எட்டுத்திசைகளிலும் பலி கொடுக்கவேண்டும். நாராயணனென என்னை நிரூபித்துச் சொல்லுகிறதாகையால் நாராயண ஸ்வரூபமான பெருமையுள்ள மூலமந்த்ரத்தை என்னை த்யானித்துக்கொண்டே ஜபிக்கவேண்டும். பிறகு விஷ்வக்ஸேனருக்கு

ஆசமனீயம் ஸமர்ப்பித்து பகவானுக்கு அமுதுசெய்யப் பண்ணின ப்ரஸாதத்தில் மிகுந்த பாகத்தை ஸமர்ப்பிக்கவேண்டும். அனந்தரம், பச்சைக்கற்பூரம் முதலிய வாஸனைகள் சேர்க்கப்பெற்ற தாம்பூலம் முதலிய முகவாஸங்கள் ஸமர்ப்பிக்கவேண்டும். பிறகு புஷ்பாஞ்சலியால் பூஜிக்கவேண்டும். பிறகு மனவூக்கத்துடன் என்னுடைய செயல்களைப் பாடுவதும் சொல்லுவதும் கீர்த்தனஞ் செய்வதும் அபிநயிப்பதும் என்கதைகளைப் பிறர்க்குக் கேட்பிப்பதும் பிறரைச்சொல்லவிட்டுத் தான் கேட்பதுமாகி ஒருமுஹூர்த்தகாலம் இப்படி மஹோத்ஸவமாய்ப் பொழுது போக்கவேண்டும். நானுவிதமான வைதிகஸ்தோத்ரங்களாலும் புராணஸ்தோத்ரங்களாலும் தமிழ் முதலிய ப்ராக்ருதபாஷாஸ்தோத்ரங்களாலும் என்னைத் துதித்து 'பகவானே! அருள்புரிவாயாக' என்று மொழிந்துகொண்டு தண்டம்போல் ஸாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரஞ் செய்யவேண்டும். சிரஸ்ஸை எனது பாதங்களில் சாய்த்து வலக்கையினால் எனது வலப்பாதத்தையும் இடக்கையினால் இடப்பாதத்தையும் பிடித்துக்கொண்டு (அங்ஙனம் பாவித்து) 'ம்ருத்யுபோலும் பிசாசம்போலும் கடக்கமுடியாமல் பயங்கரமாயிருக்கின்ற ஸம்ஸாரத்தினின்று பயந்து உன்திருவடிகளைச் சரணம் அடைந்த என்னை, ஜகதீசனே! காத்தருள்வாயாக'என்று மொழியவேண்டும். பிறகு நான் கொடுத்த பாவனையாக எனக்குச் சாத்தின துளஸிமுதலியவற்றை ப்ரஸாதமாக எடுத்துக்கொண்டு பெரிய ஆதரத்துடன் சென்னியிற்சூடி, உத்வாஸனஞ் செய்யவேண்டியதாயிருக்குமாயின், ஆவாஹனஞ் செய்யப்பட்ட பரஞ்சோதியாகிய என்னை அந்தராத்மாவினிடத்தில் உத்வாஸனஞ் செய்யவேண்டும். அர்ச்சை முதலிய இடங்

களில் எதில் ச்ரத்தை உண்டாகிறதோ, அவ்வவ்விடங் களில் என்னை ஆராதிக்கவேண்டும். 'எல்லாவற்றை யும் சரீரமாகவுடைய நான் ஸமஸ்தபூதங்களிலும் தன் னிடத்திலும் உட்புகுந்து தரித்துக்கொண்டிருக்கிறே' னென்று இங்ஙனம் பாவிக்கவேண்டும். புருஷன் வேதங் களிலும் பாஞ்சராத்ரதந்த்ரங்களிலும் சொல்லப்பட்ட கர்மயோகமார்க்கங்களால் இங்ஙனம் என்னை ஆராதிப் பானாயின் இஹலோகபரலோகங்களிரண்டிலும் தனக் கிஷ்டமான பலனை என்னிடத்தினின்றும் பெறுவான். சக்தியுள்ளவன் என்னுடைய ப்ரதிமையை ப்ரதிஷ்டிப் பித்துத் திடமான கோவிலைக் கட்டுவிக்கவேண்டும். மற்றும், அழகிய பூந்தோட்டங்களையும் ஏற்படுத்த வேண்டும். நித்யபூஜைகளும் மஹாபர்வோத்ஸவங்களும் யாத்ரோத்ஸவங்களும் வஸந்தாதிமஹோத்ஸவங்களும் குறைவற நீடித்து நடக்குமாறு க்ஷேத்ரங்களையும் கடை களையும் பட்டணங்களையும் க்ராமங்களையும் எனக்கா வது என்னை ஆதரிக்கிறவர்களுக்காவது தானஞ் செய் யவேண்டும். அப்படிச் செய்வானாயின், என்னோடொத்த ஐஸ்வர்யத்தை அடைவான். என்னுடைய ப்ரதிமையை ப்ரதிஷ்டிப்பானாயின், ஸமஸ்தபூமண்டலத்திற்கும் ப்ரபு வாயிருக்குந்தன்மையைப் பெறுவான். எனக்குக் கோ வில் கட்டுவிப்பானாயின், மூன்றுலோகங்களுக்கும் ப்ரபு வாயிருக்கும் பதவியைப் பெறுவான். எனக்குக் குறை வறப் பூஜாதிகளை நடத்துவானாயின், ப்ரஹ்மலோகத் தைப் பெறுவான். இம்மூன்றையும் ஒருவன் நடத்துவா னாயின், அவன் என்னுடைய ஸாரூப்யத்தைப்பெறு வான் பலாபி ஸந்தியில்லாமல் எவன் இங்ஙனம் என்னைப்பூஜிக் கிறானோ, அவன் என்னிடத்தில் பக்தியோகம் உண்டா கப்பெறுவான். அவன் அந்தப் பக்தியோகத்தினால்கடை

சியில் என்னையே பெறுவான். தேவதைகளுக்காவது ப்ராஹ்மணர்களுக்காவது தானுவது பிறராவது கொடுத்த வ்ருத்தியை எவன் பறிக்கிருனே, அவன் பற்பல பதினுயிரவர்ஷங்கள் அமேத்யத்தில் பிறந்து அமேத்யத்தையே புசிக்கும் க்ரிமியாய்ப் பிறப்பான். செய்கிறவனுக்கும் உதவியாயிருப்பவனுக்கும் தூண்டுகிறவனுக்கும் நன்று செய்தானென்று அனுமோதனஞ் செய்கிறவனுக்கும் தானபலனும் அதைப் பறிக்கும் பலனும், துல்யமாகவே விளையும். ஏனென்றுல் தானகர்மத்திலும் அதைப் பறிக்குங்கர்மத்திலும் அவர்களெல்லோரும் பாகஸ்தர்களேயல்லவா? ஆகையால் அவற்றின் பலத்திலும் பாகஸ்தர்களேயாவார்கள். அந்ததானபலனும் அபஹாரபலனும் பரலோகத்தில் மேன்மேலும் வளர்ந்துவரும். தானஞ் செய்தவர்களும் அதற்கு உதவினர்களும் ஸ்வர்க்காதிபுண்ய லோகங்களிற் சென்று நெடுங்காலம் ஸுகித்திருப்பார்கள். அதை அபஹரித்தவர்களும் அதற்கு உதவினவர்களும் நரகங்களிற் சென்று நெடுங்காலம் துக்கங்களை அனுபவிப்பார்கள். இருபத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ முன்பு விஸ்தரித்துச் சொன்ன ஜ்ஞான யோகத்தைச் சுருக்கிக் கூறுதல். }

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:— பிறனுடைய ஸ்வபாவங்களையும் அந்தஸ்வபாவங்களுக்கு அனுகுணமான தானுதிகர்மங்களையும் புகழ்தலும் அபஹாராதி கர்மங்களைப் பழித்தலும் செய்யலாகாது. சேதனுசேதனரூபமான ஜகத்தெல்லாம் என்னை அந்தராத்மாவாகவுடையதாகையால் ஒருவாருயிருப்பதேயென்று பாவிக்கவேண்டும். பிறனுடைய ஸ்வபாவங்களையும் கர்மங்

களையும் எவன் புகழ்தலும் பழித்தலும் செய்கிருனே, அவன் அசேதனமான தேஹத்தில் ஆத்மாபிமானம் வளரப்பெற்றுத் தான் அதிகரித்த ஜ்ஞானயோகமாகிற தன் ப்ரயோஜனத்தினின்று சீக்ரத்தில் நழுவப்பெறுவான். ராஜஸாஹங்கார கார்யமான இந்த்ரியங்கள் நித்ரையினுல் மழுங்கித் தங்கள் வியாபாரம் ஓயப் பெற்றிருக்கையில் தேஹத்திலிருக்கும் ஜீவன் அறிவற்று ம்ருத்யுவைப்போன்ற ஸ்வப்னமென்னும் ஸூக்ஷ்ம ப்ரக்ருதியை அடைகின்ருன்; ஜாக்ரதவஸ்தையிலுள்ள அனுபவங்களெல்லாம் மறையப் பெறுகின்ருன். அங்ஙனமே தேஹாத்மாபிமானமுடையவன் விழித்துக் கொண்டிருந்தபோதிலும் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணமான ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமையால் உறங்குகிறவன்போலவே யாவான். ஆத்மா தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனென்று தெரியாமையால் தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமம் உண்டாகின்றது. அப்போழுது தேஹத்திலிருக்கும் ஜீவன் அறிவு கெட்டு ம்ருத்யுவைப்போன்ற ஸூக்ஷ்மப்ரக்ருதியால் மறைக்கப்படுகின்ருன். அங்ஙனமே நானுவித தேஹங்களைப்பார்த்து அவற்றையே ஆத்மாக்களென்று ப்ரமிக்கும் புருஷன் தத்வஜ்ஞானமில்லாமையால் உறங்குகிறவனே டொத்தவனேயாவான். 'தேஹதர்மங்களை ஆத்மாவினிடத்தில் ஏறிட்டுப் புகழ்தலும் பழித்தலும் இங்ஙனம் அனர்த்தஹேதுவாமென்பது உண்மையே. அந்த தேஹதர்மங்களெல்லாம் அத்தேஹங்களைச் சேர்ந்தவைகளேயென்றறிந்து புகழ்வதும் பழிப்பதும் செய்வானுயின், அவனுக்கு ஒரு கெடுதியும் இல்லையே.' என்ருல் சொல்லுகிறேன். தேவ மனுஷ்யாதி தேஹங்களும் க்ரிமி முதலிய தேஹங்களும் அசேதனமான ப்ரக்

ருதியின் பரிணமங்களே யாகையால் ஒரு நிலையில் நிற்காமல் பற்பல அவஸ்தைகளை அடைந்துகொண்டேயிருப்பவை; ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவை. அவற்றில் எது நல்லது? எது கெட்டது? ஒன்று நல்லதென்றும் ஒன்று கெட்டதென்றும் சொல்ல இடமில்லை. தேவாதி தேஹங்களைக் காட்டிலும் மனுஷ்யாதி தேஹங்களும் மனுஷ்யாதி தேஹங்களைக் காட்டிலும் க்ரிமிகீடாதி தேஹங்களும் தாழ்வாயிருக்கின்றன. க்ரிமிகீடாதிதேஹங்களைக்காட்டிலும் மனுஷ்யாதி தேஹங்களும் மனுஷ்யாதி தேஹங்களைக் காட்டிலும் தேவாதிதேஹங்களும் மேன்மையாயிருக்கின்றன. இங்ஙனம் மேன்மையும் தாழ்மையும் ப்ரத்யக்ஷமாயிருக்க, எல்லாம் ஒருவகையேயன்றிப் பேதமேயில்லையென்று எங்ஙனம் சொல்லலாமென்றால், மேற்பார்வையில் பேதம் உளதாகத் தெரியினும் எல்லாம் ப்ரக்ருதியின் பரிணமங்களேயாகையாலும் நிஷேகம் கர்ப்பம் முதலிய அவஸ்தைகள் துல்யமாகையாலும் உண்மையில் பேதமில்லை. ஆகையால் நல்லதென்றும் கெட்டதென்றும் ஆராய்வதில் ப்ரயோஜனம் இல்லை. தேவாதிசப்தங்களால் சொல்லப்படுவதும் மனத்தினல் நானென்று அபிமானிக்கப்படுவதுமாகிய தேவாதிசரீரம் உண்மையன்று. தேஹங்களிலுள்ள தேவத்வாதிதர்மங்கள் ஆத்மாவினிடத்தில் கிடையா. ஆகையால் தேஹத்தைப்பற்றியும் ஸ்துதிநிந்தைகள் செய்வது யுக்தமன்று. 'ஆனல் ஆத்மாவினிடத்தில் தேவத்வாதிதர்மங்கள் உண்மையன்றாயின், அவை உளவென்னும் நினைவுமாத்ரத்தினல் எப்படி அனர்த்தம் உண்டாகுமென்றால், சொல்லுகிறேன். ஒருவன் ஒரு நிழலைப் பார்த்து 'இது ராக்ஷஸனுடைய நிழலென்று நினைப்பானாயின், அந்த நிழல் -ராக்ஷஸனுடைய

தன்றாயினும், அவனுக்குப் பயத்தை விளைக்கும். அதுவே தன்னுடைய நிழலென்று தோன்றுமாயின் பயத்தை விளைக்காது. ஒரு ப்ரதித்வனியைக் கேட்டுப் பர்வத குஹையிலிருக்கும் ஸிம்ஹாதி க்ரூரஜந்துவின் த்வனியென்று நினைப்பானாயின், அது உண்மையில் ஸிம்ஹாதிக்ரூர ஜந்துக்களின் த்வனியன்றாயினும் பயத்தை விளைக்கும். அதுவே தன்னுடைய ப்ரதித்வனியென்று தெரியுமாயின், பயத்தை விளைக்காது. ஸ்வப்னத்தில் பாம்பு புலி முதலிய பாதகவர்க்கங்களைக் கண்டு அது ஸ்வப்னமென்று நினையானாயின், அவை பயத்தை விளைக்கின்றன. ஸ்வப்னங்காண்கிறோமென்று தெரியுமாயின் அவை பயத்தை விளைக்கமாட்டா. இங்ஙனம் இவை பொய்யாயினும் பொய்யென்று தெரிந்துகொள்ளானாயின், தங்கள் கார்யத்தை விளைக்கின்றன. இங்ஙனமே தேஹாதிகள் உண்மையில் ஆத்மாவன்றாயினும், அவற்றையே ஆத்மாவென்று ப்ரமிப்பானாயின், அவை ப்ரளயம் வரையில் ஸம்ஸாரபயத்தை விளைத்துக்கொண்டேயிருக்கும். ஆத்மாவினிடத்தில் தேவத்வாதிதர்மங்கள் உண்மையில் இல்லையாயினும், அவை ஆத்மாவினிடத்தில் உளவென்று நினைத்தமாத்ரத்தினாலேயே அனர்த்தத்தை விளைக்குமென்பதைப் பற்றி ஸந்தேஹிக்க வேண்டாம். அனர்த்தத்தை விளைத்தே தீரும். சேதனாசேதன ரூபமான இந்த ஜகத்தெல்லாம் பரமாத்மாவேயன்றி, அவனைக் காட்டிலும் வேறுபட்டதன்று. அவன்தானே சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடைய ஆகாரத்தினால் ஸ்ருஷ்டிக்கப் படுகிறான். திறமையுள்ள அவனே ஸ்ருஷ்டிருக்கிறான். ரக்ஷிக்கப்படுவதும் ரக்ஷிப்பதும் அவனே. அவன் இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் சரீரமாக வுடையவன். கடைசியில் ஸம்ஹரிக்கப்படுவதும் ஸம்ஹரிப்பதும்

அவனே. அவன் ஸர்வேஶ்வரன். அவனுக்கு மேல் நியாமகன் ஒருவனும் இல்லை. அவனை விட்டுப் பிரிந்த ஸ்வதந்த்ர வஸ்து எதுவுமே இல்லை. இந்த ப்ரபஞ்சத்திற்கெல்லாம் அவனே உபாதான காரணம். ஸூக்ஷ்ம சேதநா சேதனங்களைச் சரீரமாகவுடைய அவனே ஸ்தூலசேதநா சேதனரூபமான இந்த ப்ரபஞ்சமாய் விரிகின்றான். ஆகையால் தனியே யிருக்கின்ற பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டுத் தனியே யிருப்பதான வஸ்து எதுவுமே இல்லை. 'இந்த வஸ்துவை விட்டு ஈஶ்வரன் தனியே யிருக்கின்றான். இந்த வஸ்து ஈஶ்வரனை விட்டுத் தனியேயிருக்கின்றது' என்று நிரூபித்துச் சொல்ல முடியாது. உலகத்தில் குடம் முதலியவைகளின் உத்பத்தியில் நிமித்தகாரணம் உபாதானகாரணம் ஸஹகாரி காரணம் ஆகிய மூன்று காரணங்களும் வெவ்வேறாயிருப்பதைக் கண்டு சிலர், 'பரமபுருஷன் ப்ரபஞ்சத்தைப் படைக்கிற விஷயத்திலும் அம்மூன்று காரணங்களும் வெவ்வேறாகவே இருக்க வேண்டும். பரம புருஷன் ப்ரபஞ்ச ஸ்ருஷ்டிக்கு நிமித்தகாரணமே யன்றி மற்ற காரணங்கள் அவனாகமாட்டான். அவை வேறே" யென்று சொல்லுகிறார்கள். அங்ஙனம் சொல்லுவதற்கு ப்ரமாணமில்லை யாகையால் அவர்களுடைய நினைவு நிர்மூலமே. மற்றும் சிலர் உலகத்தில் சில புகழத்தகுந்தவையென்றும், சில பழிக்கத் தகுந்தவையென்றும் சில இரண்டுக்கும் இடமாகாமல் உபேக்ஷிக்கத் தகுந்தவையென்றும் சொல்லுகிறார்கள். பரமபுருஷ ஸ்வரூபமல்லாத ஸ்வதந்த்ர வஸ்து எதுவுமே இல்லையாகையால் 'சில புகழத்தகுந்தவை, சில பழிக்கத் தகுந்தவை, சில உபேக்ஷிக்கத் தகுந்தவை' யென்று நினைப்பது ப்ரமமே. இது நிச்சயம். 'ப்ரபஞ்சத்திற்குப் பரம புருஷனே உபாதானகாரணமா

வானுயின், அவன் விகாரங்களுக்கிடமாக வேண்டியதாய் வருமே. நிர்விகாரனுன அப்பரம புருஷனுக்கு அது கூடாதே' யென்றால், சொல்லுகிறேன். பழி புகழ் உபேக்ஷை இவற்றிற்கு விஷயமாகி மூன்றுவிதமாகத் தோற்றுகிற இந்த ப்ரபஞ்சமெல்லாம் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களின் பரிணாமமென்றுணர்வாயாக. ஆகையால் விகாரங்களெல்லாம் ஸத்வாதி குணங்களைச் சேர்ந்தவைகளேயன்றிப் பரமபுருஷனைச் சேர்ந்தவைகளன்று. 'ஆனால் குணங்களே ப்ரபஞ்சத்திற்கு உபாதான காரணமாக வேண்டுமன்றிப் பரமபுருஷன் உபாதான காரணமாகக் கூடாதே' யென்றால், அஃதில்லை. பரமபுருஷன் தன் ஸங்கல்ப ஜ்ஞானத்தினுல் ஸத்வாதி குணங்களில் ப்ரவேசித்து ப்ரபஞ்சத்தைப் படைக்கின்றுனுகையால் பரம புருஷனே உபாதானகாரண மென்பதற்குத் தடையில்லை. ஒன்றுக்கொன்று விலக்ஷணமான ப்ரக்ருதி புருஷர்களின் ஸ்வரூபத்தையும், அவ்விரண்டிலும் விலக்ஷணமான பரம புருஷனுடைய ஸ்வரூபத்தையும் உள்ளபடி அறிந்து பரோபதேசாதிகளுக்குப் போதுமான' திறமையுமுடைய அறிஞன் பழித்தலாவது புகழ்தலாவது ஒன்றுஞ் செய்யமாட்டான். பின்னேயோவென்றால், ஸூர்யன் ப்ரபஞ்சத்தின் மேன்மை தாழ்மைகளையும் குணதோஷங்களையும் பாராமல் எல்லா விடங்களிலும் தன் கிரணங்களைப் பரப்பிக்கொண்டு திரிவது போல், குணதோஷங்களில் அபிநிவேசமின்றித் திரிந்துகொண்டிருப்பான். ப்ரத்யக்ஷம் அனுமானம் சப்தம் தன்னுடைய அனுபவம் இவைகளால் ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழு வரையிலுமுள்ள சரீரங்களெல்லாம் உத்பத்தி மரணங்களையுடையவைகளென்றும் என்றும் ஒருவாறுயிருக்குந் தன்மையனுன ஆத்மாவைக் காட்டி

லும் வேறுபட்டவையென்றும் தெரிந்துகொண்டு எங்கும் பற்றின்றி இவ்வுலகில் திரியவேண்டும்.

உத்தவர் சொல்லுகிறார்:—ஜகதீசனே! ஸம்ஸாரம் ஆத்மாவுக்கும் அன்று; தேஹத்திற்கும் அன்று. (ஸம்ஸாரமாவது ஜன்மமரணாதி ஸுகதுக்கானுபவம்). ஆத்மா ஜ்ஞானஸ்வரூபன்; எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்குந் தன்மையன். ஸம்ஸாரம் அஜ்ஞானத்தினால் விளையக்கூடியது. ஜ்ஞானஸ்வரூபனான ஆத்மாவுக்கு அத்தகைய ஸம்ஸாரம் எங்ஙனம் கூடும்? தேஹம் அசேதனமாகையால் அதற்கு ஸுகதுக்கானுபவம் சேராதாகையால் அதற்கும் ஸம்ஸாரமில்லை. ஆகையால் யாருக்கு ஸம்ஸாரம்? ஒருவர்க்கும் வேண்டியதில்லையே யென்று சொல்லமுடியாது. ஸுகதுக்கானுபவம் ப்ரத்யக்ஷஸித்தமாயிருக்க அதை எப்படி இல்லை என முடியும்? ஆகையால் இந்த ஸம்ஸாரம் யாரைச் சேர்ந்ததோ அதை எனக்கு விவரித்துச் சொல்லவேண்டும். ஆத்மா இயற்கையில் பரிசுத்தன் ஸ்வயம்ப்ரகாசன்; தனக்குத் தானே தோற்றுந்தன்மையன், புண்யபாப்ரூபகர்மங்களாகிற மறைவற்றவன்; ஸத்வாதிகுணங்களுக்கிடமாகாதவன; ஜன்மஜராமரணாதி விகாரங்கள் தீண்டப்பெறாதவன். தேஹமோ வென்றால் அசேதனம். அங்ஙனம் ஒன்றுக்கொன்று விலக்ஷணங்களான ஆத்மா தேஹம் இவையிரண்டும் அக்னியும் கட்டையும் ஒன்றைவிட்டு ஒன்று பிரித்தறிய முடியாமல் கலந்திருப்பதுபோல், ஒன்றோடொன்று கலந்திருக்கின்றன. இவற்றில் ஸம்ஸாரம் எதைச் சேர்ந்தது? தேஹத்தைச் சேர்ந்ததென்றாவது ஆத்மாவைச் சேர்ந்ததென்றாவது நிரூபிக்கமுடியாதிருக்கின்றதே. ஜ்ஞான ஸ்வரூபனான ஆத்மாவுக்கு ஸுகதுக்கானுபவயோக்யதை உளதா

யினும் அவன் இயற்கையில் பரிசுத்தனாகையால் அவனுக்கு அது கூடாது. தேஹமும் அசுத்தமாயினும் அசேதனமாகையால் ஸுகதுக்கானுபவரூபமான ஸம்ஸாரம் அதற்கும் கூடாது. ஆகையால் இதை நிரூபித்துச் சொல்வாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஆத்மாவுக்கு தேஹ இந்த்ரியாதிகளின் ஸம்பந்தம் எதுவரையில் மாறாதிருக்குமோ, அதுவரையில் ஆத்மாவினிடத்தில் ஸம்ஸாரம் உண்மையில் இல்லையாயினும் உள்ளது போலவேயாம். (ஸுகதுக்கங்களை விளைத்துக்கொண்டே யிருக்கும்.) ஏனென்றால், ஜீவன் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணமான ஆத்மஸ்வரூபத்தை அறியாமல் தேஹமே ஆத்மாவென்றுப்ரமிக்கிறானல்லவா! அதனால் அவனுக்கு தேஹாதிஸம்பந்தம் மாறுகிறதில்லை. அதனாலேயே அவனுக்கு அசுத்தி உண்டாகின்றது. ஆத்மாவினிடத்தில் தேவமனுஷ்யாதி ஆகாரங்கள் உண்மையில் இல்லையாயினும், 'நான் பருத்திருக்கிறேன். இளைத்திருக்கிறேன். இவர்கள் என்னுடைய களத்ராதிகள். இவை எனக்கு ப்ரதிகூல விஷயங்கள். இவை அனுகூலவிஷயங்கள்' என்று விஷயங்களையே த்யானித்துக் கொண்டிருக்கும் புருஷனுக்கு ஸம்ஸாரம் ஒருகாலும் நீங்காது. அங்ஙனம் அவன் விஷயங்களையே த்யானிக்கைக்குக் காரணம் ஆத்மாவினிடத்தில் இல்லாத தேவமனுஷ்யாதி ஆகாரங்களை உளவாக நினைத்தலே. ஸ்வப்னங்காண்கிறவன் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்துத் தலையறுப்புண்பது முதலிய துக்கங்களை அனுபவிக்கிறானல்லவா? அங்ஙனமே விழித்துக்கொண்டிருக்கும் பொழுதும் தேஹாத்ம ப்ரமத்தினால் ஜீவன் பற்பல துக்கங்களை அனுபவிக்கின்றான். ஸ்வப்னங்காண்கிறவன் விழித்

துக் கொள்ளாதிருக்கும் வரையில், அந்த ஸ்வப்னம் அவனுக்கு தேஹாத்மாபிமானத்தை விளைத்து அதன் மூலமாய்ப் பல அனர்த்தங்களுக்குக் காரணமாகின்றது. அவன் தூக்கத்தை விட்டு விழித்துக் கொள்வானுயின், அந்த ஸ்வப்னமே அவனுக்கு அந்த ஸ்வப்ன தேஹத்தில் ஆத்மாபிமானமாகிற மோஹத்தையும் அதன் மூலமாய் விளையும் துக்கங்களையும் விளைவிக்க வல்லதாகிறதில்லை. அங்ஙனமே, சோகம் ஹர்ஷம் பயம் கோபம் லோபம் மோஹம் ஆசை இவை முதலியவைகளும் ஜன்மமரணங்களும் தேஹாத்மாபிமானத்தை விளைப்பதாகிய அஹங்கார மென்னும் ப்ரக்ருதி பரிணாம விசேஷத்தின் ஸம்பந்தமுடைய ஜீவனுக்கு விளைகின்றனவன்றி அதன் ஸம்பந்த மற்றவனுக்கு அவை உண்டாகிறதில்லை. ஆகையால் அவை ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்டவையன்று; அஹங்கார ஸம்பந்தத்தினுல் ஏற்பட்டவை. ஸம்ஸார ஹேதுக்கள் பலவற்றில் அஹங்காரம் முக்யமானது. ஸம்ஸார ஹேதுக்களான மற்றவைகளையும் சொல்லுகிறேன். கேட்பீராக. தேஹம், இந்த்ரியங்கள், ப்ராணன்கள், மனம், ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மாவென்னும் புத்தியாகிற அபிமானம், ஜீவன், குணங்களும் கர்மங்களும் சரீரம்போல் தனக்கு ஸ்வாதீனமாயிருக்கப் பெற்றவனும் அந்தராத்மாவுமாகிய பரம புருஷன், ஸத்வாதி குணங்கள், புண்யபாப கர்மங்கள், தேவத்வமனுஷ்யத்வாதி ஜாதிகள், அஹங்காரம் முதலிய கார்ய தத்வங்களுக்கு ஆதாரமான மஹத்தத்வம் ஆகிய இப்பலவித காரணங்களினின்று ஸம்ஸாரம் உண்டாகிக் காலமும் காரணமாகப் பெற்று முழுவதும் சூழ்ந்து வருகின்றது. ஜீவன் புண்யபாப கர்மங்களை அனுஷ்டிக்கையால் ஸம்ஸாரத்திற்கு ஹேதுவாகிறுன்.

பரமபுருஷன் கர்மங்களுக்குப் பலன் கொடுக்கையால் ஸம்ஸாரத்திற்கு ஹேதுவாகிறான். ஆனால் இந்த ஸம்ஸாரம் நீங்குவதற்கு உபாயமென்னென்றால், சொல்லுகிறேன்; கேட்பீராக. தேஹம் முதலிய பல காரணங்களால் நிரூபிக்கப்படுவதும் மனம் வாக்கு ப்ராணன் சரீரம் இவைகளால் செய்யப்படுவதுமாகிய புண்யபாப கர்மமாகிற ஸம்ஸார மூலத்தை என்னுடைய உபாஸனத்தினால் எப்பொழுதும் இடைவிடின்றித் தொடர்ந்து வருகின்ற ஜ்ஞானமாகிற கூரான கத்தியினால் மறுபடியும் வேரூன்ற வொட்டாதபடி அறுக்க முயன்று சப்தாதி விஷயங்களில் விருப்பமின்றி என்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தையே மனனஞ் செய்யுந் தன்மையனாகி ஓரிடத்தில் தங்காமல் பூமியில் திரிந்து கொண்டிருக்க வேண்டும். அந்த ஜ்ஞான ஸ்வரூபத்தையும் அதன் ஸாதனங்களையும் சொல்லுகிறேன்; கேட்பீராக. விவேகம் நிகமம் தவம் ப்ரத்யக்ஷம் ஐதிஹ்யம் அனுமானம் இவைகளே அந்த ஜ்ஞானத்திற்கு ஸாதனங்கள். அவற்றில் விவேகமாவது 'தேஹம் அநித்யம். ஆத்மா நித்யன்' இவை முதலிய காரணங்களால் ஆத்மாவுக்கும் தேஹத்திற்கும் உள்ள விலக்ஷண தர்மங்களால் தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா விலக்ஷணனென்று நிரூபித்தல். நிகமமாவது சாஸ்த்ராத்யயனத்தினால் விளையும் ஜ்ஞானம். தவமாவது கர்மயோகம். ஆத்மா நானென்று தோற்றுகிறதென்றும், தேஹம் இதுவென்று தோற்றுகிறதென்றும் இவ்வனுபவமே ப்ரத்யக்ஷம். ஐதிஹ்யமாவது உபதேசம். அனுமானமாவது க்ருஷி முதலிய த்ருஷ்டாந்தத்தினால் கர்மபலன்கள் அநித்யங்களென்று ஊஹித்தல். இனி இந்த ஜ்ஞானத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன். கேட்பீராக. 'இந்த

தேஹஸம்பந்தம் உண்டாவதற்கு முன்பும் அது கழிந்த பின்பும் தேஹஸம்பந்த மற்ற யாதொரு ஆத்ம ஸ்வரூபம் உளதோ, அந்த ஆத்ம ஸ்வரூபமே தேஹ ஸம்பந்த முள்ள மத்யதசையிலும் உளது. தேஹமே ஆத்மா வென்பதில்லை.' என்னுமிவ்வளவே அந்த ஜ்ஞானத்தின் ஸ்வரூபம். இத்தகையனான ஆத்மாவின் தேஹ ஸம்பந்தத்திற்குக் காரணம் ஜகத்ஸ்ருஷ்டி செய்யவேண்டு மென்னும் பகவானுடைய ஸங்கல்பகாலமே. அக்னியில் உருக்கி அழுக்கெடுத்த பரிசுத்தமான பொன்னைக் கொண்டு கைவளை தோள்வளை கிரீடம் முதலிய ஆபரணங்கள் செய்யும்பொழுது வெள்ளி முதலியவற்றை அத்துடன் சேர்த்துச் செய்கிறார்கள். அங்ஙனம் வெள்ளி முதலியவை சேர்க்கப்பட்ட கைவளை முதலிய அவ்வாபரணங்களையும் பொன்னென்றே சொல்லுகிறார்கள். அதில் வெள்ளிமுதலியவைகளும் கலந்திருக்கின்றனவாகையால் முழுவதும் பொன்னென்று நினைப்பது ப்ரமமே யல்லவா? நிரூபகர்களோ வென்றால், வெள்ளி முதலியவைகளைக் கலப்பதற்கு முன்னும் அக்னியில் உருக்கி அவற்றைச் சோதித்த பின்பும் யாதொரு பரிசுத்தமான பொன்னுண்டோ, அவ்வளவுமாத்ரமே ஆபரணமாயிருக்கின்ற மத்ய தசையிலும் பொன்னென்று கூறப்படுமன்றி வெள்ளி முதலியவை பொன்னாகமாட்டா வென்கிறார்கள். அவர்கள் சொல்வது உண்மையே யன்றி ப்ராந்தியன்று. அங்ஙனமே நானென்று தோற்றுகிற ஆத்மாவும் தேஹ ஸம்பந்தத்திற்கு முன்னும் பின்னும் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனாயிருப்பதுபோல் தேஹஸம்பந்தமுள்ள மத்யகாலத்திலும் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனென்றே கொள்ள வேண்டும். தேஹத்தையும் சேர்த்து ஸமுதாயத்தை

ஆத்மாவென்று நினைப்பது ப்ராந்தியேயாம். இந்த்ரியவர்க்கமென்றும் சரீரமென்றும் மஹத்தத்வத்தின் கார்யமும் தேஹாத்மாபிமானத்தை விளைப்பதுமாகிய அஹங்கார தத்வமென்றும் மூன்று வகைப்பட்டிருப்பதும் உத்பத்தி ஸ்திதி நிதனங்களென்கிற மூன்று அவஸ்தைகளை யுடையதும் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களின் பரிணாமமுமாகிய அசேதனம் மூன்று அவஸ்தைகளையும் கடந்த எந்த தத்வத்தின் தொடர்ச்சியால் விளங்குவதும் அது இல்லையாயின் விளங்காததுமா யிருக்கின்றதோ, அதுவே ஆத்மதத்வமாம். அது என்றும் மாறுமல் ஒருவாறுகவேயிருக்கும் என்னுமிதுவும் அந்த ஜ்ஞானத்தின் ஸ்வரூபமேயாம். எது உத்பத்திக்கு முன்பும் அழிந்த பின்பும் ஆத்மாவாகிறதில்லையோ. அத்தகைய சரீரம் மத்யாவஸ்தையிலும் ஆத்மாவாக மாட்டாது. ஆனல் 'நான் பருத்திருக்கிறேன். நான் இளைத்திருக்கிறேன்' என்று உலகத்தவர் வழங்குகிறுர்களே. அந்தப் பருமன் முதலியவை தேஹதர்மங்களே யல்லவா? தேஹம் ஆத்மாவல்லாத பக்ஷத்தில் அவை ஸூக்ஷ்மஸ்வரூபனென்று சொல்லுகிற ஆத்மாவுக்கு எங்ஙனம் பொருந்துமென்றுல், உலகத்தவர் வழங்குவது ப்ராந்தியேயன்றி, அது உண்மையன்று. தேஹத்திற்கு முன்னும் பின்னும் எது இருக்கின்றதோ, அதுவே ஆத்மதத்வமாம்; மேலான ப்ரமாணத்தினுல் ப்ரஸித்தமாயிருப்பதும் அதுவே. அது என்றும் ஒருவாறுகவேயிருக்குந்தன்மையது. இங்ஙனம் அறிகையே அந்த ஜ்ஞானத்தின் ஸ்வரூபமாம். இதுவே என்னுடைய மதம். அன்றியும், ப்ரக்ருதியின் விகாரமும் ரஜோகுணம் தலையெடுத்திருக்கையால் முயற்சியையே இயற்கையாக வுடையது

மாகிய தேவமனுஷ்யாதி சரீரரூபமான ஸ்ருஷ்டிவர்க்கம், ஆத்மாவினிடத்தில் உண்மையில் இல்லையாயினும் இருப்பதுபோல் தோற்றுகின்றது. ஆத்மஸ்வரூபமோ வென்றால் பரிசுத்தமாயிருப்பது; இந்த சரீரஸ்ருஷ்டியைக் கடந்து மீளவும் திரும்பாமல் ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கும். ப்ரக்ருதியோவென்றால் இந்த்ரியங்களும் சப்தாதி விஷயங்களுமாகிற விகாரங்களால் பலவாறாயிருக்கும் என்னும் இவ்வுணர்வும் அந்த ஜ்ஞானத்தின் வடிவே. (சரீர ஸம்பந்தமுடையவன் சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டுத் தோற்றமாட்டானேயாகிலும் சரீர ஸம்பந்தமற்ற முக்தஜீவன் தனியே தோற்றுவானாகையால் சரீரமே ஆத்மாவென்று நினைக்கலாகாது. ஆத்மா சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவனே யென்று இங்ஙனம் அறிகையே கீழ்ச்சொன்ன ஜ்ஞானமாம்). பரமபுருஷன் இத்தகையரான ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனென்று ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கிற விசாரங்களாலும் 'தேஹம் இந்த்ரியம் ப்ராணன் இவைகளில் எதுவும் ஆத்மாவாகமாட்டாது. ஆத்மா இவற்றைக்காட்டிலும் விலக்ஷணனே' என்னும் திறமையுள்ள ஆராய்ச்சியாலும் தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமத்தையும் ஆத்மா ஸ்வதந்த்ரனென்னும் ப்ரமத்தையும் வேருடன் அறுத்துப் பரமாத்மாவுக்கு ஸர்வப்ரகாரத்தாலும் சேஷமான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அனுபவிக்கையாகிற ஆநந்தத்தினால் த்ருப்தி அடைந்து கர்மவாஸனையில் அழுந்தின மற்ற எவரோடும் ஸஹவாஸஞ் செய்யாமல் மீளவேண்டும். தேவனென்றும் மனுஷ்யனென்றும் பலவாறு சொல்லப்படுவதும் ப்ரக்ருதியின் பரிணாமமுமான தேஹம் ஆத்மாவன்று, தேவமென்று சொல்லப்படுகிற இந்த்ரியங்களும் ஆத்மாவன்

று. ப்ராணன் வாயு ஜலம் இவைகளும் ஆத்மாவன்று. அன்னத்தினால் த்ருப்தி அடைந்து அன்னமயமென்று சொல்லப்படுகிற மனமும் ஆத்வாவன்று. புத்தியும் ஆத்மாவன்று. அந்தக்கரணமும் ஆத்மாவன்று. ஆத்மாவல்லாத தேஹாதிகளில் ஆத்மாபிமானத்தை விளைக்கிற அஹங்காரமும் ஆத்மாவன்று. ஆகாசமும் ஆத்மாவன்று. ஏனென்றால் இவையெல்லாம் ப்ரக்ருதியின் பரிணாமங்களாகையால் துல்யமாயிருப்பவை. ப்ரக்ருதியைக்காட்டிலும் ஆத்மா வேறுபட்டவனென்று பலவாறு நிரூபிக்கப்பட்டதாகையால் ப்ரக்ருதியின் பரிணாமங்களான தேஹாதிகள் ஆத்மாவன்றென்பதைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லை யல்லவா? என்னுடைய ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவானாயின், அவனுக்கு ஸத்வாதி குணங்களின் பரிணாமமான இந்த்ரியங்களை அடக்குவதனால் என்ன குணம் ஸாதிக்கவேண்டும்? அவ்விந்த்ரியங்களை அடக்காமல் அவை போனவழியே விட்டிருப்பினும் என்ன தோஷம் உண்டாகும்? பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத் கரித்தவனுக்கு இந்த்ரிய நிக்ரஹத்தினால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. அஃதில்லாமையால் ஒரு தோஷமும் உண்டாகாது. ஸூர்யனை மேகங்கள் மூடினும்மூடாமல் விட்டிருப்பினும் அவற்றால் அவனுக்குஒரு தோஷமாவது குணமாவது கிடையாதல்லவா? 'ஸூர்யனுக்கும் மேகங்களுக்கும் உண்மையில் ஒருஸம்பந்தமும் இல்லையாகையால் அவைகளால் அவனுக்கு ஒருதோஷமும் உண்டாகாது. ஆத்மாவுக்கும் இந்தரியங்களுக்கும் அப்படியன்றே. ஆத்மாவுக்கு இந்த்ரிய நிக்ரஹத்தினால் குணமும் அஃதில்லாமையால்தோஷமும்உண்டே' என்கிறீரா? சொல்லுகிறேன்; கேட்பீராக. ஆகாயத்திற்குக் காற்று அக்னி ஜலம் பூமி இவற்றின் குணங்களால்

எவ்விதமான மாறுபாடும் உண்டாகிறதில்லை. ஆகாயம் காற்றினால் உலர்கிறதில்லை; அக்னியால் எரிகிறதில்லை; ஜலத்தினால் நனைகிறதில்லை; பூமியின் தூள்களால் அழுக்கடைவதுமில்லை. மற்றும் போவதும் வருவதுமான குளிர் வெப்பம் முதலிய ருதுகுணங்களாலும் அதற்கு ஒரு விகாரமும் உண்டாகிறதில்லை. அங்ஙனமே ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணமும் என்றும் ஒருவாறாயிருப்பதும் அஹமென்று கூறப்படுவதுமாகிய ஆத்மஸ்வரூபமும் ஸம்ஸாரஹேதுக்களென்று சொல்லப்படுகிற ஸத்வாதி குணங்களாலாவது அவற்றின் கார்யங்களாலாவது எவ்விதமான மாறுபாட்டையும் அடைகிறதில்லை. ஆகையால் பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமுடையவனுக்குக் கர்மவாஸனையுள்ளவர்களுடைய ஸஹவாஸம் எத்தகைய கெடுதியையும் விளைக்கவல்லதன்று. ஆயினும் ரஜோகுணத்தின் கார்யமான காமக்ரோதாதிகள் கஷாயராகம்போல் (காவிச்சாயம்போல்) வருந்தியும் போக்கமுடியாதவை. அவை பக்தியோகம் நிறைவேறினால் ஸுகமாகக்கழியும். ஆகையால் அந்த பக்தியோகம் நிறைவேறும் வரையில் அதைத் தடுக்கிற ரஜோகுணத்தை அழிக்கும்பொருட்டு ப்ரக்ருதியின் பரிணாமங்களான சப்தாதி விஷயங்களில் மனப்பற்றுச் செய்யலாகாது. மனுஷ்யர்களுக்கு வியாதி வரும்பொழுது அதற்கு நன்கு சிகித்ஸை செய்யாது விடுவார்களாயின், அது அடிக்கடி மேலெழுந்து தேஹங்களை வருத்துமல்லவா? அங்ஙனமே கஷாயராகம்போல் போக்கமுடியாத புண்ய பாபகர்மம் க்ஷீணிக்கப் பெறாத குயோகி மனத்தை அது போனவழியெல்லாம் போகவிடுவானாயின், அது சப்தாதிவிஷயங்களில் பற்றுடையதாகி அந்தயோகியை யோகத்தினின்று நழுவச்செய்யும். தேவதைகள் பிறர்

பெருமையைப் பொறுக்கமாட்டார்களாகையால் சப்தா திவிஷயங்களில் விருப்பமுற்று அவற்றிற்காகப் பற்பல உபாயங்களில் இழிந்து முயற்சிசெய்யுங்காமுகர்களிடத் தில் ஆவேசித்து, பக்தியோகத்தில் நுழைந்து, அது கைகூடப்பெறுமல் முயற்சி செய்யுங் குயோகிகளுக்கு அவர்களுடன் ஸஹவாஸத்தை மூட்டிக் கலைப்பார்கள். அத்தகைய காமுகர்களோடு ஸஹவாஸஞ் செய்வாரா யின், யோகாப்யாஸத்தில் முயன்றவர் விக்னங்கள் நே ரிடப்பெற்றுப் பழைய அப்யாஸபலத்தினுல் விஷயவா ஸனை மேலிட்டு மீளவும் பக்தியோகத்தை அனுஷ்டிக்க வல்லராகமாட்டார்கள்; கர்மமார்க்கத்திலேயே விழுந் து கெட்டுப்போவார்கள். ஆகையால் அவர்களோடு ஸஹவாஸஞ் செய்யலாகாது. ஜந்து, சரீரபாதம் வரை யில் ஸ்வயமாகவும் புண்யபாபரூபமான ஏதேனுமொரு கர்மத்தைச் செய்கின்றது; வேருெருஜந்துவால் தூண் டப்பட்டும் செய்கின்றது. (ஸமஸ்த ஜந்துவும் ஸ்வேச்சை யாலாவது பரேச்சையாலாவது ஏதேனுமொரு கர்மத் தைச் செய்துகொண்டேயிருக்குமன்றிச் செய்யாதிருக் காது). 'ஆனுல் கர்மத்திலிழிந்தவர்களுடைய ஸஹவா ஸத்தைத் துறந்தபோதிலும் ஏதேனுமொருகர்மத்தில் ப்ரவேசம் நேருமேயன்றி நேராமற்போகாதே. அதனுல் ஸம்ஸாரமும் உண்டாகுமே' என்றுல், சொல்லுகிறேன், கேட்பீராக. ஏதேனுமொருகர்மத்தைச்செய்வதுதவறு தென்பது உண்மையே. ஆயினும், கர்மத்தில் இழிந்தவர் களுடைய ஸஹவாஸம் அனர்த்தங்களுக்கிடமென்பதை அறிந்து ஜ்ஞானுநந்தஸ்வரூபனுன ஆத்மாவின் அனு பவத்தினுல் சப்தாதிவிஷயங்களில் அபிலாஷத்தையும் அவற்றில் பற்றையும் துறந்து ப்ரக்ருதியின் பரிணுமு மான தேஹத்தில் இருப்பினும் அதில் இராதவன்போ

லவே இருக்கவேண்டும். (ஏதேனுமொரு கர்மத்தைச் செய்யினும் செய்யாதவன்போலவே இருக்கவேண்டும். 'படுத்தல் இருத்தல் முதலியகர்மங்களைச்செய்துகொண்டிருப்பினும் எப்படி அவற்றைச் செய்யாதவனுவான்?' என்றால், சொல்லுகிறேன், கேளும். ஆத்மஸ்வரூபத்தை ஆராய்ந்தறிந்து அதில் நிலைநின்ற மதியுடையவன் நிற்றல் இருத்தல் பின்றொடர்ந்து செல்லுதல் படுத்தல் ஸ்த்ரீஸம்போகஞ்செய்தல் அன்னத்தைப் புசித்தல் இவைகளைச் செய்யினும், மற்றும் ப்ரக்ருதிஸ்வபாவத்தினுல் விளைகிற பார்த்தல் தொடுதல் முதலிய செயல்களைச் செய்யினும் அதை அறியமாட்டான். தேஹத்திலுண்டாகிற நிற்றல் இருத்தல் முதலிய இச்செயல்களை ஆத்மாவினிடத்தில் இருப்பதாக நினைக்கமாட்டான். அங்ஙனம் நினையாமையே அவற்றைச் செய்யாமையாம். அறிவுடையவன் ப்ரதிகூலமான சப்தாதி விஷயங்களையும் அனுகூலமான சப்தாதி விஷயங்களையும் சரீரத்தையும் வெவ்வேருகக் காண்பானுயினும் இவையெல்லாம் அநித்யமென்று ஊஹித்துத் தெரிந்துகொண்டிருப்பவனுகையால் அவற்றை நித்யமென்று நினைக்கமாட்டான். ஸ்வப்னத்தினின்றும் எழுந்தவன் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்கள் நிலைநின்றவையென்று நினைப்பனே? நினைக்கமாட்டானல்லவா? ஸத்வாதிகுணங்களுக்கு அனுகுணமான புண்ய பாபகர்மங்களால் பலவாருயிருக்கின்ற தேவமனுஷ்யாதி சரீரமும் தேஹாத்மாபிமானுதி அஜ்ஞானமும் ஜ்ஞானேத்பத்திக்கு முன்பு ஆத்மாவினிடத்தில் இருப்பதாகத் தோற்றும். ஜ்ஞானேத்பத்திக்குப் பின்பு அந்த ஜ்ஞானத்தினுல் அதெல்லாம் நிவர்த்திக்கின்றது. அந்த ஜ்ஞானம் உண்டான ஆத்மா 'நான் பருத்திருக்கிறேன்' என்று பருமன் முத

ஷியதேஹதர்மங்களுக்கிடமாக முன்போல் தோற்றமாட்டான்; மோக்ஷத்தை அடைந்து மீளவும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பமாட்டாளுகையால் ஸம்ஹாராதிகளுக்கும் இடமாகமாட்டான். ஸூர்யன் உதிப்பாளுயின் மனுஷ்யர்களுடைய கண்பார்வைக்குத் தடையான அந்தகாரத்தைப் போக்குவானன்றி அதை விளைவிக்கமாட்டானல்லவா? இங்ஙனமே என் ஸ்வரூபத்தைப்பற்றின அறிவு நன்கு விளையுமாயின், அது 'நான் பருத்திருக்கிறேன். இளைத்திருக்கிறேன்' என்னுமிவை முதலிய எண்ணங்களுக்கிடமான புருஷபுத்தியின் அந்தகாரத்தையும் அதனுல் விளையும் ஸம்ஸார பந்தத்தையும் போக்கிவிடும். அஜ்ஞானம் தொலைந்து பரிசுத்தனை ஜீவாத்மா ஸ்வயம்ப்ரகாசன்; ஜன்மாதிவிகாரங்களற்றவன்; ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறிய முடியாதவன்; அளவிடமுடியாத ஜ்ஞானமுடையவன்; எல்லாவற்றையும் அறியும்படியான அறிவுடையவன்; என்றும் ஒருவாருயிருப்பவன்; ப்ராக்ருத தேஹமற்றவன்; ஆனதுபற்றியே தேவமனுஷ்யாதி சப்தங்களுக்கு விஷயமாகாமல் தன்னிடத்தில் அவற்றின் ஸம்பந்தம் முடியப் பெற்றிருப்பவன். வாக்கும் ப்ராணன்களும் இவனுல் தூண்டப்பட்டவைகளாகியே தத்தங்கார்யங்களைச் செய்ய வல்லவைகளாகின்றன. ப்ரக்ருதியைப்பற்றிவருவதான தேவமனுஷ்யாதி ஆகாரபேதமற்ற ஆத்மஸ்வரூபத்தை மறந்து 'நான் தேவன். நான் மனுஷ்யன். நான் பருத்திருக்கிறேன். நான் இளைத்திருக்கிறேன்' என்னும் இவை முதலான தேஹதர்மங்களைக் கேவல ஜ்ஞானஸ்வரூபனுன அந்த ஆத்மாவினிடத்தில் இருப்பதாக அபிமானிக்கையாகிற, இவ்வளவே ஸம்ஸாரத்திற்கு ஹேதுவான ஆத்மஸம்மோஹமாம். இதையே ஆத்ம

ஜ்ஞானத்தினால் போக்கவேண்டுமென்று பலவாறு கூறப்பட்டது. நாமரூபங்களால் அறியத்தக்கதும் பஞ்சபூதங்களால் உண்டானதாகையால் பஞ்சவிதமாயிருப்பதுமாகிய சரீரமும் ஸ்வர்க்காதி புருஷார்த்தங்களும் நித்யமென்றும், 'நான் தேவன். நான் மனுஷ்யன். நான் இளைத்திருக்கிறேன். நான் பருத்திருக்கிறேன்' என்றும் நினைக்கையாகிற இவ்விரண்டு நினைவுகளும் தம்மைப் பண்டிதர்களாக நினைத்துக் கொண்டிருக்கிற மூடர்களின் அர்த்தவாதமே யன்றி (இல்லாத பொருளை ஏறிட்டுச் சொல்லும் வார்த்தையே யன்றி) உண்மையன்று. இவ்விரண்டு நினைவுகளும் ஆத்ம ஸம்மோஹமேயாம். (ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறியாமையால் விளைந்த பெரிய மோஹமேயாம்.) யோகத்தில் இழிந்து அது கைகூடப்பெறாத யோகி அதை நிறைவேற்றும்பொருட்டு மேன்மேலும் யோகத்தை அப்யஸித்துக் கொண்டிருக்கையில் தேஹம் ரோகம் முதலிய உபத்ரவங்களால் யோகாப்யாஸத்திற்கு உபயோகப்படாதபடி தடைபடுமாயின், அவ்விஷயத்தில் இங்ஙனம் சிகித்ஸை ஏற்பட்டிருக்கின்றது. ஸோமதாரணை ஸூர்யதாரணை அக்னிதாரணை முதலிய யோகதாரணையால் வெப்பம் குளிர் முதலிய சில உபத்ரவங்களையும், வாயுதாரணையோடு கூடிய ஆஸனங்களால் வாதரோகம் முதலிய சில உபத்ரவங்களையும், தவம் மந்த்ரம் ஓஷதி முதலிய உபாயங்களால் பாபக்ரஹம் ஸர்ப்பம் முதலியவற்றால் விளையும் சில உபத்ரவங்களையும், என்னுடைய த்யானத்தினாலும் என்னுடைய நாமஸங்கீர்த்தனாதிகளாலும் காமம் க்ரோதம் முதலிய சில உபத்ரவங்களையும், யோக நிஷ்டனான ஆசார்யனுடைய அனுவர்த்தனத்தினால் ஜம்பம் முதலிய சில உபத்ரவங்

களையும் போக்கவேண்டும். இங்ஙனம் சுபமான உபாயங்களால் அசுபங்களை விளைக்குபவைகளான உபத்ரவங்களையெல்லாம் தொலைத்து யோகத்தை நிறைவேற்றிக்கொள்ள வேண்டும். வேறு சில அறிஞர்கள் வயது முதிர்ந்த சரீரத்தையும் மந்த்ரம் ஔஷதம் முதலிய பல உபாயங்களால் திடமாக்கிக் கொண்டு குளிர் வெப்பம் முதலிய த்வந்த்வமற்றிருக்கை பரகாயப்ரவேசம் முதலிய ஸித்தியின் பொருட்டு ப்ரயத்னஞ் செய்கிறார்கள். அதைப் பெரியோர்கள் ஆதரிக்க மாட்டார்கள். ஏனென்றால், சரீரத்தின் உறுதிக்காகப் படும் ப்ரயத்னமெல்லாம் நிஷ்ப்பலமல்லவா? அச்சரீரம் வ்ருக்ஷத்தின் பலன்போல் அநித்யமே யன்றி நித்யமன்றல்லவா? மந்த்ர ஔஷதாதிகளால் இந்த்ரியங்களுக்குத் திறமையை விளைத்துக் கொள்ளினும் ஆயுளை வளர்த்திக் கொள்ள முடியாதல்லவா? ஆகையால் தேஹத்தின் உறுதிக்காகப்பொழுது போக்குவதைத் துறந்து அக்காலத்திலும் யோகாப்யாஸஞ் செய்வதே நலம். இடைவிடாமல் யோகாப்யாஸஞ் செய்து கொண்டுவரில் சரீரம் உறுதியுற்றுவரும்: மதியுடையவன் யோகாப்யாஸத்தை விட்டு 'இனி இச்சரீரத்திற்கு அழிவில்லை. இது உறுதியாய் விட்டது. இதைக்கொண்டு போகங்களை அனுபவிப்போம்' என்று அவ்வுறுதியை நம்பலாகாது. இந்த யோகாப்யாஸத்தை விடாமல் அனுஷ்டிக்கும் யோகி என்னையே அவலம்பமாகப்பற்றி அணிமாதி ஸித்திகளில் விருப்பமற்று எனக்குச் சேஷமாயிருக்கையையே முக்யரஸமாகவுடைய ஆத்மாவின் அனுபவத்தினால் த்ருப்தி அடைந்து எத்தகைய விக்னங்களாலும் தடைபடாமல் கடைத்தேறுவான். இருபத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

பகவான் உத்தவருக்கு மீளவும் பக்தி
யோகத்தைச்காட்டிலும் ஸுகர
மான உபாயத்தை உபதேசித்தல்.

உத்தவர் சொல்லுகிறார்:—அச்சுதனே! (பற்றின வர்களைக் கைவிடாது பாதுகாக்குந் தன்மையனே!) இந்த்ரியங்களை வெல்ல முடியாதவனுக்கு இந்த யோகாப்யாஸம் அனுஷ்டிக்க நிரம்ப வருத்தமாயிருக்குமென்று எனக்குத் தோற்றுகிறது. புருஷன் அனயாஸமாக எப்படி ஸித்தியைப் பெறுவானே அப்படி ஒரு உபாயத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லவேண்டும். செந்தாமரைக் கண்ணனே! மனத்தை வசப்படுத்த முயன்றயோகிகள் அதற்காகச் செய்யும் உபவாஸாதிகளால் இளைத்து அவ்வளவிலும் மனம் குதிரப் பெருமையால் பெரும்பாலும் வருந்துகிறார்கள். ஆகையால் 'இது நன்று. இது தீது' என்னும்விவேகமுடையவர்கள் ஆநந்தத்தைக் கறக்கின்றஉன் பாதாரவிந்தத்தையே உபாயமாகப் பற்றுகிறார்கள். ஜகதீசனே! இவர்கள் உன்னுடைய மாயையில் அகப்பட்டு ஏமாறுகிறதில்லை. ஏனென்றால், 'நாம் பக்தி யோகம் செய்கிறோம்' என்னும் கர்வமாவது, 'நாம் கர்மயோகஞ் செய்கிறோம்' என்னும் கர்வமாவது அவர்களுக்குக் கிடையாதல்லவா? மற்றவர்களோவென்றால் அங்ஙனம் கர்வப்படுவதற்கு இடமுண்டாகப் பெற்று அந்த துரபிமானத்தினால் உன்னுடைய மாயையில் அகப்பட்டு ஏமாறுகிறார்கள். அச்சுதனே! (ஆஸ்ரிதர்களைக் கைவிடாதவனே!) இன்னவன் இனையவனென்று தரம் பாராமல் அனைவர்க்கும் பந்துவாயிருப்பவனே! உன்னைப் பற்றின மாத்ரத்தினால் உன்னுடைய மாயையைத் தாண்டுவதென்னுமிதுவும், நீ உன்னை யொழிய வேறொரு சரணமறியாத உன் பக்தர்களிடத்தில் இட்ட

வழக்காயிருப்பதுவும் உன் தன்மையை உணர்ந்தவர்களுக்கு ஓராச்சர்யமன்று. ஜகதீஶ்வரர்களான ப்ரஹ்மாதிகளுடைய அழகிய கிரீடங்கள் உறையும்படியான பாதபீடத்தை யுடையவனாயினும் நீ ப்ருந்தாவனத்தில் பசுக்களை வேணுகானத்தினால் களிப்புறச் செய்துகொண்டு, அவைகளுடன் கலந்திருத்தலைப் பெரும்பேறாக விரும்பினை யல்லவா? மற்றும், ராமாவதாரத்தில் வானரங்களின் ஸ்னேஹத்தை விரும்பி அவைகளுடன் கலந்திருந்தனை யல்லவா? அத்தகைய பரத்வ ஸௌலப்ய வாத்ஸல்ய ஸௌஶீல்யாதி குணங்களுடையவனாகிப் பற்றியே ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் அன்பனும் ஸ்வாமியும் ஆஶ்ரிதர்களுடைய விருப்பங்களையெல்லாம் ஈடேற்றிக் கொடுப்பவனுமாகிய உன்னை நீ செய்யும் உபகாரங்களை அறிந்தவன் எவன்தான் கைவிடுவான். (க்ருதஜ்ஞர்களுக்கு நீயே பற்றத் தகுந்தவன். ஆத்ம ஸ்வரூபத்தை மறக்கடிக்கும்படியான ஐஶ்வர்யத்திற்காக எவன்தான் உன்னைத் தவிர வேறொரு தெய்வத்தைப் பணிவான்? ஆரோக்யம் பாக்யம் முதலியவற்றிற்காக ஸூர்யன் அக்னி முதலிய தேவதாந்தரத்தைப் பணிய வேண்டாமோ வென்றால், வேண்டியதே யில்லை. உன்னுடைய பாததூளியைப் பணிகிற எங்களுக்கு எந்த நன்மைதான் ஸித்திக்காது. நாங்கள் விரும்பமாட்டோமே யொழிய, விரும்பினால் எல்லாம் ஸுலபமேயாம். ஜகதீசனே! அறிவுடையவர்கள் நீ செய்த உபகாரத்தை நினைத்து மிகுந்த ஸந்தோஷம் அடைந்து ப்ரஹ்மாயுஸ்ஸினாலும் நீ செய்யும் உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரஞ் செய்ய முடியாதிருக்கிறார்கள். அவ்வுபகாரந்தான் யாதெனில், சொல்லுகிறேன். நீ அறியாதனை அறிவிக்கும் ஆசார்ய உருவத்தினாலும், த்யானிக்கு

மவர்களுடைய சிந்தையில் திகழும உருவத்தினுலும் ப்ராணிகளின் அசுபத்தைப் போக்கிக்கொண்டு உன்னு டைய உண்மையை வெளியிடுகிருயே, இதைக் காட்டி லும் வேறு உபகாரம் யாது வேண்டும்?

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—ஜகத்தை விளையாட்டுக் கருவியாகவுடையவனும் தனக்கு அஸாதாரணமான ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹார ஸாமர்த்யங்களாகிற சக்திக ளால் ப்ரஹ்ம விஷ்ணு சிவர்களென்கிற மூன்று உருவங் களை ஏற்றுக் கொள்பவனும் ஜகதீஸ்வரர்களென்று ப்ர ஸித்தர்களான ப்ரஹ்மாதிகளுக்குமீசுவரனுமாகிய பக வான் மிகவும் அனுராகம் நிறைந்த மனமுடைய உத்த வரால் இங்ஙனம் வினவப்பெற்று ப்ரேமவெள்ளம் நிறைந்த அழகிய புன்னகையுடையவனுகி மேல்வரு மாறு கூறினன்.

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:—ஓ உத்தவரே! மிக வும் மங்கலமான என்னுடைய தர்மங்களை உமக்குச் சொல்லுகிறேன்; கேட்பீராக. இந்த தர்மங்களை ஶ்ரத்தையுடன் அனுஷ்டிப்பானுயின், ஜயிக்க முடியாத ஸம்ஸாரத்தை ஜயித்து விடுவான். ஸங்கல்ப விகல்ப ரூபமான மனத்தையும் நிர்மலமாயிருக்கை விகா ரமற்றிருக்கை சாந்தமாயிருக்கை இத்தன்மைகளை யுடைய சித்தத்தையும் என்னிடத்தில் நிறுத்தி என்னு டைய தர்மங்களை அனுஷ்டிப்பதில் ஸங்கல்ப விகல்பரூப மான மனேவ்ருத்தியுடையவனுகி என்னுடைய ஆராத னங்களென்னுமெண்ணத்துடன் வர்ணுஶ்ரம கர்மங் களையெல்லாம் மெல்லமெல்ல அனுஷ்டிக்க வேண்டும். மற்றும், என்னிடத்தில் பக்தி செய்யும் பற்றற்ற ஸாதுக் கள் சுற்றிவாழும் புண்யதேசங்களைப் பூஜிக்க வேண்

டும். தேவதைகளிலும் அஸுரர்களிலும் மனுஷ்யர்களி லும் என்னிடத்தில் பக்தியுடைய பெரியோர்களின் நண்ணடத்தைகளை மனத்தாலும் வாயாலும் வெகுமதித்துக் காயத்தாலும் கூடுமானவரையில் அனுஷ்டிக்க வேண்டும். தான் தனியாகவாவது பலருடன் கலந்தாவது ந்ருத்தம் கீதம் முதலிய மஹாராஜோபசாரங்களுடன் ஸமஸ்த விதமான யாத்ராமஹோத்ஸவங்களையும் நடத்த வேண்டும். மனத்தூய்மை யுடையவனுகி ஆகாசமபோல் ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் தன்னிடத்திலும் உள்ளும் வெளியும் மறைவின்றி நிறைந்திருப்பவனும் உள்ளே புகுந்து நியமித்துத் தரித்துக்கொண்டிருப்பவனுமாகிய என்னை ஆராய்ந்தறிய வேண்டும். பேரொளியுடையவரே! நான் இப்படி ஸர்வாந்தராத்மாவாய் வியாபித்திருப்பவனுகையால் ஸமஸ்த பூதங்களும் என்னை விட்டுப் பிரிந்திருப்பவையன்றென்றும் எனக்குச் சரீரமாயிருப்பவையென்றும் நினைத்து அந்நினைவுடன் எல்லாவற்றையும் வெகுமதித்துக் கொண்டு வைஷம்யமில்லாத அறிவுடையவனுயிருக்க வேண்டும். ப்ராஹ்மணன் புலையன், ப்ராஹ்மணர் ஸொத்தைத் திருடினவன் ப்ராஹ்மணரிடத்தில் பக்திகொண்டு அவர்களுக்கு வேண்டுவன செய்பவன், ஸூர்யன் நெருப்புத்துணுக்கையின் கொடுந்தன்மை யில்லாதவன் கொடுந்தன்மையுடையவன் ஆகிய இவையெல்லா இடத்திலும் தாரதம்யமில்லாமல் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்ப்பவன் பண்டிதனுவான். ப்ராஹ்மணுதிகள் அனைவரிடத்திலும் சரீரங்கள் ப்ரக்ருதி பரிணமங்களாகையால் ஒரு படிப்பட்டவைகளே. ஆத்மாக்கள் ஜ்ஞானத்தையே வடிவாகவுடையவராகையால் ஒருபடிப்பட்டவர்களே. இவ்விரண்டும் பரம புருஷனுக்குச் சரீரமாகையால் ஒரு

படிப்பட்டவைகளே யென்று எல்லாவற்றையும் ஸமமாகப் பார்ப்பவனே பண்டிதனுவான். இந்த ஸமதர்சனத்தினுல் என்ன உபயோகமென்ருல் சொல்லுகிறேன்; கேட்பீராக. ஸமஸ்த வஸ்துக்களிலும் என்னுடைய பாவனையை மாருமல் நடத்திக்கொண்டு வருவானுயின், ('எல்லா வஸ்துக்களும் பகவானுக்குச் சரீரங்களாகையால் அவனைக் காட்டிலும் வேறுபட்டவை யல்ல. அவனே' என்னும் பாவனையோடிருப்பானுயின்) அப்புருஷனுக்கு அஹங்காரமும் ஸ்பர்த்தை அஸூயை திரஸ்காரம் இவைகளும் விரைவில் மறைந்துபோகின்றன. (அஹங்காரமாவது தேஹாத்மாபிமானம். ஸ்பர்த்தையாவது கலஹம். அஸூயையாது குணங்கள் இருப்பினும் தோஷத்தையே வெளியிடுந்தன்மையாம். குணங்களையே தோஷமாக நிரூபிக்குந்தன்மை அஸூயையென்றும் சொல்லுவதுண்டு. திரஸ்காரமாவது அவமானம். தன் விஷயத்திலும் பிறர்விஷயத்திலும் உள்ள இவை யெல்லாம் கீழ்ச்சொன்ன பாவனையுடையவனுக்கு மறைந்துபோம்) 'ஜகதீசனே! உன்னுடைய பாவனை திடமாயிருக்குமாயின் ஸ்பர்த்தை முதலியவை மறைந்து போம். அந்த பாவனை துர்லபமாயிருக்கின்றதே' என்ருல் அதற்கு உபாயஞ் சொல்லுகிறேன். மிருகங்களில் நாய் வரையிலும், மனுஷ்யர்களில் சண்டாளன் வரையிலும், பசுக்களில் கழுதை வரையிலுமுள்ள ஸமஸ்த ஜந்துக்களிடத்திலும் நிஹீன புத்தியில்லாமல் இவை யெல்லாம் ஈப்வரனுடைய சரீரங்களே' என்னும் பாவனையுடன் அவற்றை வணங்கவேண்டும். 'இவன் என்ன இப்படி செய்கிருனே! இவனுக்குப் பித்தம் பிடித்ததோ!' என்று தன் பந்துக்கள் பரிஹஸிக்கினும் அவர்களைப் பொருள் செய்யலாகாது; மற்றும் 'நான் மேம்பட்டவன். இவை

தாழ்ந்தவை' என்னுங் கர்வத்தையும் தேஹங்களில் தாரதம்யத்தைப்பற்றி வரும் வெட்கத்தையும் துறக்க வேண்டும். (ஜனங்களுடைய பரிஹாஸத்தையும் தன்னுடைய மேன்மையையும் தேஹதாரதம்யத்தைப்பற்றின லஜ்ஜையையும் பார்த்தால் இந்தபாவனை நிறைவேறாது. ஆகையால் அவற்றையெல்லாம் துறக்கவேண்டும்.) ஸமஸ்தபூதங்களிலும் என்னுடைய பாவனை எதுவரையில் உண்டாகாதிருக்குமோ, அதுவரையில் வாக்கு மனம் சரீரம் என்கிற மூன்றுகாரணங்களின் வ்யாபாரங்களாலும் இங்ஙனம் அப்யஸிக்கவேண்டும். வாக்கின் வ்யாபாரமாவது எந்த வஸ்துவைப்பார்க்கினும் 'பகவானுக்கு நமஸ்காரம்' என்று மொழிகை. மனதின் வ்யாபாரமாவது 'இது பகவானுடைய சரீரம்' என்று நினைக்கை. சரீரத்தின் வ்யாபாரமாவது தண்டம்போல் விழுந்து நமஸ்கரிக்கை). இப்படி உபாஸித்துக்கொண்டுவருவானாயின், அவனுக்கு எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமாகவே தோன்றும். எல்லாம் பரமாத்மஸ்வரூபமேயென்னும் பாவனையாகிற வித்யையால் எல்லாவற்றையும் அங்ஙனமே ஸாக்ஷாத்கரிக்கும் புருஷன் 'தேஹமே ஆத்மாவா? அல்லது தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனா? அவன் ஸ்வதந்த்ரனா? அல்லது பரமாத்மாவுக்குப் பரதந்த்ரனா?'' என்னும் இத்தகைய ஸம்சயங்களெல்லாம் தொலைந்து ஸமஸ்தவிதமான ஸம்ஸாரநிமித்தத்தினின்றும் விடுபடுவான். மனம் வாக்கு சரீரம் ஆகிய இம்மூன்று காரணங்களாலும் ஸமஸ்த பூதங்களும் பரமாத்ம ஸ்வரூபங்களேயென்று பாவிக்கையாகிற இதுவே மோக்ஷவுபாயங்களெல்லாவற்றிலும் சிறந்த உபாயமென்பது என்னுடைய அபிப்ராயம். உத்தவரே! எல்லாம்பரப்ரஹ்மஸ்வரூபமேயென்னும்பாவனையா

கிற இந்த என் தர்மத்தை அனுஷ்டிக்கத் தொடங்கு கையில் இது பலனைக் கொடாமல் வீணாகாது. இது நான் நிச்சயித்த விஷயம். வேறொரு ப்ரயோஜனத்தை யும் விரும்பாமற் செய்கிற என்னுடைய தர்மம் ஸத்வா திகுண மூலமான ஸம்ஸாரபந்தத்திற்கு ஹேதுவாகா தாகையால் அப்பொழுதாயினும் காலாந்தரத்திலாயி னும் பலித்தே தீரும். (இதை ஆரம்பித்து விடினும் பலிக்குமென்றால், இதைப் பூர்ணமாக அனுஷ்டிக்கில் இது வீணாகாதென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டு மோ?). உலகத்தில் சிந்தித்தல் கண் சிமிட்டல் முதலிய நிஷ்ப்ரயோஜன வ்யாபாரங்கள் எவ்வெவை உண்டு; மற் றும், கேவலம் ஆயாஸ ரூபமான வ்யாபாரங்கள் எவ் வெவை உண்டு; அவையெல்லாவற்றையும் பரமபுருஷனா கிய என்னிடத்தில் அனன்யப்ரயோஜனமாக அர்ப்ப ணஞ் செய்வானாயின், அதுவும் தர்மமேயாம். கம்ஸா திகளுடைய பயாதிகளும் தர்மமாயின வல்லவா? (கம் ஸாதிகள் பரமபுருஷனுடைய ஸாரூப்யம் பெற்றத ற்கு அவர்களுடைய பயாதிகளே காரணமாயின. அநித் யமாகிய மனுஷ்ய சரீரத்தினால் நித்யனும் நிர்விகாரனு மாகிய என்னைப் பெறுகையே புத்திமான்களுடைய புத் திக்கும் மனீஷிகளுடைய மனீஷைக்கும் பலன். (புத்தி யாவது அத்யவஸாயம். மனீஷையாவது ஹிதாஹிதங் களைப் பிரித்தறிகை.) வேதாந்த ஸித்தமான பொருளை யெல்லாம் இங்ஙனம் ஸங்க்ரஹமாகவும் விஸ்தரமாகவும் உமக்கு மொழிந்தேன். இது தேவதைகளுக்கும் கிடை க்க அரிது. சேதன அசேதன ஈச்வரர்களுடைய ஸ்வ ரூபஜ் ஞானத்தையும் ஈச்வரோபாஸனரூபமான ஜ்ஞா னத்தையும் ஸ்பஷ்டயுக்திகளுடன் உமக்குப் பலவாறு மொழிந்தேன். இதை அறிவானாயின், அப்புருஷன்

ஸந்தேஹந் தீர்ந்து ஸம்ஸாரத்தினின்று விடுபடுவாள். நீ கேட்ட விஷயத்தை நன்குவிவரித்து நிரூபித்துச் சொன்னேன். இதை அறிந்து மறவாதிருப்பவன் வேதாந்தரஹஸ்யமும் ஸநாதனமுமான பரப்ரஹ்மத்தை அடைவான். நான் விவரித்துச் சொன்ன இந்த ஜ்ஞானத்தை எவன் என்பக்தர்களுக்கு உபதேசிக்கிறானோ, ப்ரஹ்மோபதேசஞ்செய்த அப்புருஷனுக்கு ஆத்மாவுக்கும் அந்தராத்மாவான என்னைக் கொடுப்பேன். (அவனுக்கு நான் இஷ்டப்படி வஸ்யனுயிருப்பேன்). சொல்லுகிறவர்களுக்கும் கேட்கிறவர்களுக்கும் சுத்தியை விளைப்பதான இந்த ஜ்ஞானத்தை எவன் கற்கிறானோ, அவன் ஜ்ஞானமாகிற தீபம் நாள்தோறும் வளர்ந்து வரப்பெற்று அந்த ஜ்ஞானதீபத்தினால் என்னை ஸாக்ஷாத்கரித்து என்னைப் பெறுதற்குத் தடையான பாபங்கள் தீர்ந்து பரிசுத்தனுவான். இதை எவன் மனவூக்கமுற்று ஶ்ரத்தையுடன் தினந்தோறும் கேட்கிறானோ, அவன் என்னிடத்தில் மிகுந்தபக்தி விளையப்பெற்று என்னைப் பெறுதற்குத் தடையான பாபங்களால் தீண்டப்படமாட்டான். உத்தவரே! நண்பரே! நான் மொழிந்த ப்ரஹ்மஜ்ஞானத்தையும் அதன் ஸாதனுகி ஜ்ஞானத்தையும் நன்றாகக் கேட்டுத் தெரிந்துகொண்டீரா? (தெரியாதபக்ஷத்தில் மீளவும் உபதேசிக்கிறேன்). தேஹாத்ம ப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ரமம் முதலிய மோஹமும் அதனுலுண்டாகும் மனவருத்தமும் உமக்குத் தீர்ந்ததா? இதை நீர் டாம்பிகனுக்கும் சாஸ்த்ரார்த்தங்களில் விஸ்வாஸமில்லாதவனுக்கும் மூர்க்கனுக்கும் ஶுஶ்ரூஷை செய்யாதவனுக்கும் பக்தியில்லாதவனுக்கும் வணக்கமில்லாதவனுக்கும் உபதேசிக்கலாகாது. இந்த தோஷங்களெல்

லாம் தீண்டப்பெருதவனும் ப்ராஹ்மணர்களிடத்தில் நன்மையுடையவனும் ப்ரீதியுடையவனும் பரோபகாரஞ் செய்யுந்தன்மையனுமாகிய ஸாதுவுக்கு இதை உபதேசிக்கவேண்டும். சூத்ரர்களுக்கும் ஸ்த்ரீகளுக்கும் இதில் ஸ்ரத்தை உளதாயின், அவர்களுக்கும் இதை உபதேசிக்கலாம். தத்வத்தை அறியவேண்டுமென்னும் விருப்பமுடையவனுக்கு இதை அறிந்த பின்பு அறியவேண்டிய விஷயம் மற்றொன்று கிடையாது. அம்ருதபானஞ் செய்தவனுக்குப் பானஞ் செய்யவேண்டியது மற்றொன்று கிடையாதல்லவா? ஜ்ஞானம் கர்மம் யோகம் க்ருஷி தண்டநீதி இவைகளை நடத்தும்பொழுது மனுஷ்யர்கள் தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்னும் நான்கு புருஷார்த்தங்களையே உத்தேசித்து நடத்துகிருர்கள். உன்னைப்போன்ற பக்தனுக்கு அவையெல்லாம் நானேயன்றி வேறில்லை. (ஜ்ஞானத்திற்குப் பலன் மோக்ஷம். கர்மத்திற்குப் பலன் தர்மம். யோகத்திற்குப் பலன் அணிமாதி ஸித்திகள். க்ருஷி தண்டநீதி இவைகளுக்குப் பலன் அர்த்தம் (பணம்). அந்த அர்த்தத்திற்குப் பலன் காமம். அணிமாதிகளும் காமத்தில் அடங்கினவைகளே என்னிடத்தில் பக்தியுடையவர்கள் இப்புருஷார்த்தங்களில் எதையும் விரும்பாமல் என்னையே விரும்புவார்கள். என்னை யொழிய மற்றெதையும் விரும்பமாட்டார்கள்.) அனுக்ரஹிக்க விரும்புகின்ற என்னிடத்தில் ஆத்ம ஸமர்ப்பணஞ் செய்து என்னுடைய ஆராதந ரூபமான கர்மங்களைத் தவிர மற்ற கர்மங்களை யெல்லாம் துறந்திருப்பானாயின், அப்பொழுது என்னுடைய அனுக்ரஹத்தினால்ஸம்ஸாரத்தினின்று விடுபட்டு இயற்கையில் ஏற்பட்டிருக்கிற அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் அமைந்த ஸ்வரூபம் தோன்றப் பெற்று என்னுடைய ஸாரூப்யத்தைப் பெறுவான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அவ்வுத்தவர் இங்ஙனம் பகவானால் ஜ்ஞானயோக மார்க்கம் உபதேசிக்கப்பெற்று உத்தமஶ்லோகனான அந்த பகவான் மீளவும் மொழிந்த வசனங்களையும் கேட்டு ப்ரீதியினால் கண்டத்தில் கண்ணீர் வந்தடைக்கப்பெற்று ஆநந்தநீர் நிறைந்த கண்களுடையவருமாகி அப்பொழுது ஒன்றும் பேசாதிருந்தார். மன்னவனே! அனந்தரம் ப்ரணயத்தினால் கலங்கின மனத்தை மெல்ல மெல்ல தைர்யத்தினால் வசப்படுத்திக்கொண்டு தன்னை அப்பரம புருஷனுடைய அனுக்ரஹத்தினால் க்ருதக்ருத்யனாக (ப்ரயோஜனங்களெல்லாம் கைகூடப்பெற்றவனாக) நினைத்து யதுகுலமஹாவீரனான அன்னவனுடைய பாதாரவிந்தங்களைச் சிரத்தினால் பரிசித்துக் கைகுவித்துக்கொண்டு மேல்வருமாறு கூறினார்.

உத்தவர் சொல்லுகிறார்:—நான கைப்பற்றியிருந்த மோஹமாகிற பேரிருள் உன்னுடைய ஸந்நிதானத்தினாலேயே ஓடிப் போயிற்று. ப்ரஹ்மதேவனுக்கும் ஆதியாகிய மஹாதேவனே! ஸூர்யனுடைய அருகாமையில் சென்றவனுக்குக் குளிரும் இருட்டும் அவற்றைப்பற்றின பயமும் தலையெடுக்குமோ? தலையெடுக்க மாட்டாவல்லவா? அங்ஙனமே உன்னுடைய ஸந்நிதான மாத்ரத்தினால் என்னுடைய அஜ்ஞானம் பறந்தோடிப்போய் விட்டது. ஆயினும் கருணாநிதியாகிய நீ உன் ப்ருத்யனாகிய எனக்கு விஜ்ஞானமயமான தீபத்தைக் கொடுத்தனை. இங்ஙனம் நீ செய்த உபகாரத்தை அறிந்தவன் எவன்தான் உன்னுடைய பாதமூலத்தை விட்டு மற்றொன்றைச் சரணமடைவான்? பந்துக்களாகிய தாசார்ஹர் வ்ருஷ்ணிகள் அந்தகர் ஸாத்வதர் இவர்களிடத்தில் ஸம்ஸார வ்ருத்திக்காக (ஸம்ஸாரம் வளர்தற்காக) உன் மாயை

யால் எனக்கு ஸ்னேஹ பாசத்தைப் பரப்பி வைத்தனே. அதை நீயே இப்பொழுது ஆத்மஜ்ஞானோபதேச மாகிற ஆயுதத்தினால் அறுத்துவிட்டனே. அளவிறந்த ஆச்சர்ய சக்திகள் அமைந்தவனே! உனக்கு நமஸ்காரம். நான் உன் திருவடிகளையே சரணம் அடைந்தவன். ஆகையால் உன் திருவடித்தாமரைகளில் எனக்கு அழியாத அனுராகம் உண்டாகும்படி அனுக்ரஹிப்பாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—உத்தவரே! உமக்கு நான் அனுமதி கொடுக்கிறேன். நீர் பதரியென்று ப்ரஸித்தமான எனது ஆஸ்ரமத்திற்குப் போவீராக. அவ்விடத்தில் எனது பாதத்தினின்றும் உண்டான கங்கையென்னும் புண்ய தீர்த்தத்தில் ஸ்நானங்களாலும் ஆசமனங்களாலும் பரிசுத்தராகி அலகநந்தை யென்னும் பெயருடைய அக்கங்கையைக் காண்பதனால் பாபங்களை யெல்லாம் உதறி மரவுரிகளை உடுத்து, வனத்தில் உண்டாகிற காய் கிழங்கு முதலியவற்றைப் புசித்துக் கொண்டு ஆத்மானுபவ ஸுகத்தினால் மற்ற விஷயங்களில் விருப்பமற்றுக் குளிர் வெப்பம் முதலிய த்வந்த்வங்களைப் பொறுத்து நல்லொழுக்க முடையவராகி இந்த்ரியங்களை அடக்கி வெளியிந்த்ரியங்களையும் உள்ளிந்த்ரியத்தையும் வென்று தத்வத்ரயத்தின் (சித்து அசித்து ஈஶ்வரன் என்னும் மூன்று தத்வங்களின்) உண்மையைப் பற்றின ஜ்ஞானமும் ப்ரஹ்மோபாஸன ரூபமான விஜ்ஞானமும் அமையப்பெற்று, நீர் என்னிடத்தினின்றும் கேட்ட விஷயங்களை நன்காராய்ந்து அனுபவித்துக் கொண்டு வாக்கையும் மனத்தையும் என்னிடத்தில்

நிலைநிறுத்திச் சரீரத்தினால் என்னுடைய ஆராதன ரூபமான என்தர்மத்தை அனுஷ்டிப்பவராகி ஊர்த்வகதி மத்யகதி அதோகதியென்கிற மூன்று கதிகளையும் கடந்து அவற்றிற்கிடமான ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்புறத்திலிருக்கின்ற என்னைப் பெறுவீர்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— தன்னை நினைப்பவர்களின் ஸம்ஸார பந்தத்தைப் போக்குந் தன்மையனான பகவானால் இங்ஙனம் சொல்லப்பட்ட அவ்வுத்தவர் அந்தப் பகவானை ப்ரதக்ஷிணஞ் செய்து அவனுடைய பாதங்களில் தலையைச் சாய்த்து நமஸ்கரித்து, இஷ்டவஸ்துக்களின் ஸம்பந்தத்தினால் விளையுங்களிப்பு அவற்றைப் பிரிகையால் விளையும் வருத்தம் இவை முதலிய த்வந்த்வங்களற்றவராயினும் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மிகுந்த அன்புடையவராகையால் அவனை விட்டுப் பிரியும்பொழுது அதைப் பொறுக்க முடியாமல் மனமுருகி வருந்திக் கண்ணீர் பெருக்கினார். அவ்வுத்தவர் அழியாத அன்புள்ள அப்பகவானைப் பிரிய நேருகையால் மனம் தளர்ந்து வருந்தி அவனை விட்டுப் பிரிய முடியாமல் ஸங்கடம் அடைந்தார். அப்பால் அப்பகவானுடைய பாதுகைகளை அடிக்கடி தலையில் தரித்து நமஸ்கரித்துப் புறப்பட்டுப் போனார். அனந்தரம் மஹாபாகவதராகிய (பகவத் பக்தர்களில் சிறந்த) அவ்வுத்தவர் அப்பகவானை மனத்தில் தேக்கிக்கொண்டு பதரிகாச்ரமத்திற்குச் சென்றார். அங்கு ஜகத்திற்கெல்லாம் முக்ய பந்துவாகிய பகவான் உபதேசித்தபடி தவஞ்செலுத்தித் தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந்தன்மையனான பகவானுடைய கதியைப் [1] பெற்றார்.

1. என்னைப் பெறுவீரென்ற பகவானுடைய ஸங்கல்பத்தின் உறுதியைப்பற்ற 'கதியைப் பெற்றா'ரென்று கழிகாலமாய்ச் சொல்லு

யோகேஸ்வரர்களால் பணியப்பட்ட பாதாரவிந்தங்களை யுடைய பகவானால் மஹாநந்தமயமான பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறிவிக்கிற வேதாந்தமாகிற ஸமுத்ரத்தினின்று கடைந்தெடுக்கப் பட்டதும் பகவத்பக்தரான உத்தவருக்கு உபதேசித்ததுமாகிய இந்த ஜ்ஞானமாகிற அம்ருதத்தை எவன் உபயோகப்படுத்துகிறானோ, அவனோடு ஸம்பந்தப்பட்ட ஜகத்தெல்லாம் ஸம்ஸாரத்தினின்று விடுபடும். இனி அவன் ஸம்ஸாரத்தினின்று விடுபடுவானென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? வேதங்களை வெளியிடுபவனாகிய எந்தமஹானுபாவன் ஜ்ஞான விஜ்ஞானங்களை முக்யமாக உட்கொண்டிருப்பதும் வேதஸாரமுமாகிய தத்வஜ்ஞானமாகிற அம்ருதத்தை வேதாந்தமாகிற ஸமுத்ரத்தினின்று கடைந்தெடுத்துத் தன்ப்ருத்யவர்க்கங்கள் பருகி வாழும்படி செய்தானோ, அத்தகைய ஜகத்காரணனான விஷ்ணுவென்னும் பரமபுருஷனை வணங்குகிறேன்.

பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் மௌஸல வியாஜத்தினால் தன் குலத்தை ஸம்ஹரித்தல.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—அனந்தரம் மஹாபாகவதரான உத்தவர் பதரிவனம் போகையில் ஜகத்காரணனான பகவான் என்ன செய்தான்? அப்பகவான், தன்குலம் ப்ராஹ்மணசாபத்தினால் வருத்தமுற்றிருக்கையில் ஸமஸ்தப்ராணிகளுடைய நேத்ரங்களுக்கும் மிகவும் ப்ரியமான தன்சரீரத்தை எப்படி துறந்

---

கிறது இல்லையாயின் அப்பொழுதும் அவர் இருக்கிறாராகையால் அது கூடாது. 'உத்தவர் இருக்கட்டும்' என்று நான்காவது ஸ்கந்தத்தில் சொன்னதோடும் விரோதிக்கும்.

தான்? (தன் சரீரத்தைத் துறந்து சென்றுனு? அல்லது அந்தச் சரீரத்தோடு கூடவே தன்பதவிக்குச் சென்றுனு?) ஸ்த்ரீகள் இப்பகவானுடைய திருமேனியில் படிந்த தங்கண்களை இழுக்க முடியாதிருந்தார்களல்லவா? மற்றும், இத்திருமேனி ஸத்புருஷர்களின் காதுவழியாய் நுழைந்து ஹ்ருதயத்தில் சித்ரம் எழுதினுற்போல் படிந்து அதினின்று பேராமல் திகழ்ந்து கொண்டிருக்குமல்லவா? மற்றும், இத்திருமேனியின் சோபை தன்னைப் புகழ்கின்ற கவிகளின் வாக்குக்களுக்குப் பிறர் விரும்பும்படியான அழகை விளைத்துக் கொண்டிருக்குமல்லவா? அர்ஜுனனுடைய திருத்தேர் முன் வீற்றிருந்த இத்திருமேனியைக் கண்டு யுத்தத்தில் அடியுண்டவர்கள் அனைவரும் இப்பகவானுடைய ஸாம்யத்தை அடைந்தார்களல்லவா? (அத்தகைய திருமேனியை அப்பகவான் துறந்து போனுனு? அல்லது அத்திருமேனியோடு கூடவே போனுனு? அதையும் விவரித்துச் சொல்வீராக).

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—ஆகாசத்திலும் பூமியிலும் அந்தரிக்ஷத்திலும் மஹத்தான உத்பாதங்கள் பலவும் உண்டாவதைக் கண்டு, ஸுதர்மையென்னும் தன் ஸபையில் உட்காாந்திருக்கின்ற யதுக்களைக் குறித்து ஸ்ரீக்ருஷ்ணன் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறுன்:—த்வாரகையில் பயங்காமான பெரிய உத்பாதங்கள் பலவும் புலப்படுகின்றன. இவை நங்குலத்தின் விநாசத்திற்கு ஹேதுக்களாயிருக்கின்றன. ஓ! யதுகுலகுமாரர்களே! இனி ஒரு முஹூர்த்தகாலமும் நாம் இங்கிருக்கலாகாது. கிழவிகளும் குமரிகளுமான பெண்டிர்கள் அனைவரும் சங்கோத்தாரமென்னும் க்ஷேத்ரத்திற்குப் போவார்களாக. நாமோ

வென்றால், ஸரஸ்வதிநதி மேற்கு முகமாகப் பெருகி ஸமுத்ரத்தில் போய் விழும்படியான ப்ரபாஸ தீர்த்தத்திற்குப் போவோம். அங்கு ஸ்நானஞ் செய்து பரிசுத்தர்களாகி உபவாஸமிருந்து ஸ்நானஞ் செய்விப்பது சந்தனம் ஸமர்ப்பிப்பது புஷ்பம் அக்ஷதை முதலிய மற்றும் பூஜோபகரணங்களைக் கொடுப்பது இவைகளால் தேவதைகளை ஆராதிப்போம். அனந்தரம் மிகுந்த பாக்யமுடைய அந்தணர்களால் சாந்திகர்மம் செய்விக்கப்பெற்று, அவர்களுக்குப் பசுக்கள் பூமி ஸுவர்ணம் வஸ்த்ரம் இவைகளையும் யானை குதிரை தேர் வீடு இவைகளையும் கொடுத்துப் பூஜிப்போம். இங்ஙனஞ் செய்வது மிகவும் நன்மையான கார்யம்; மங்களத்தை விளைவிக்கும். தேவதைகளுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் கோக்களுக்கும் செய்யும் பூஜை ப்ராணிகளுக்கு மிகுந்த நன்மையை விளைக்கும். ஆகையால் நாம் இங்ஙனம் செய்வது நலம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—யதுவ்ருத்தர்கள் அனைவரும் இங்ஙனம் பகவான் மொழிந்த வசனத்தைக் கேட்டு 'நல்லது. அப்படியே செய்யலாம்' என்று அதை அபிநந்தித்து ஓடங்களால் ஸமுத்ரத்தைத் தாண்டி ரதங்களின் மேல் ஏறி ப்ரபாஸ தீர்த்தத்திற்குப் போனார்கள். அந்த யாதவர்கள் அந்த ப்ரபாஸ தீர்த்தஞ் சேர்ந்து யதுதேவனாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் மொழிந்த வசனம் ஸமஸ்த நன்மைகளுக்கும் இடமாயிருக்கையால் மிகுந்த பக்தியுடன் அங்ஙனமே நடத்தினார்கள். அந்த யாதவர்கள் தெய்வாதீனமாய் மதி மயங்கித் தன்ரஸம் பட்டமாத்ரத்தில் மதியை அழிக்கும்படியான மிகுந்த ருசியுள்ள மைரேயமென்னும் மத்யத்தைப் பானஞ் செய்தார்கள். வீரர்களாயினும் ஸ்ரீ

க்ருஷ்ணனுடைய மாயையினால் மதிமயங்கி நிரம்பவும் மத்யத்தைப் ப்ருகி மிகவும் மதித்துக் கர்வம் நிறைந்த மனமுடைய அந்த யாதவர்களுக்குப் பெரிய கலஹம் உண்டாயிற்று. அனந்தரம் கோபத்தினால் பரபரப்புற்று ஒருவரையொருவர் வதிக்க விரும்பித் தனுஸ்ஸுக்களாலும் கத்திகளாலும் பல்லபாணங்களாலும் கதைகளாலும் தோமரங்களாலும் ஸமுத்ரக்கரையில் யுத்தஞ் செய்தார்கள். அவர்கள் அசைகின்ற பதாகைகளையுடைய தேர்களிலும் யானை முதலியவற்றிலும் கழுதை ஒட்டகம் பசு இவைகள் மேலும் கிடாக்கள் மேலும் மனுஷ்யர் மேலும் கோவேறுகழுதைகள் மேலும் ஏறிக்கொண்டு ஒருவரோடொருவர் கலந்து கொடிய மதமுடையவர்களாகி, யானைகள் தந்தங்களால் வனத்தை அழிப்பதுபோல், ஒருவரை யொருவர் பாணங்களால் அடித்தார்கள். ப்ரத்யும்னன் ஸாம்பன் இவ்விருவரும், அக்ரூரன் போஜன் இவ்விருவரும், அநிருத்தன் ஸாத்யகி இவ்விருவரும், ஸுபத்ரன் ஸங்க்ராமஜித்து இவ்விருவரும், ஸுசாரு கதன் இவ்விருவரும், ஸுமித்ரன் ஸுரதன் இவ்விருவரும், ஒருவர்மேல் ஒருவர் த்வேஷம் உண்டாகி வளரப்பெற்று ஒருவரை யொருவர் எதிர்த்து வதித்தார்கள். மற்றுமுள்ள நிசடன் உல்முகன் முதலியவர்களும் ஸஹஸ்ரஜித்து சதஜித்து பானு முதலியவர்களும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய மாயையினால் மதிமயங்கி மதமென்னும் இருள் மூடப்பெற்று ஒருவரோடொருவர் கலந்து சண்டை செய்தார்கள். தாசார்ஹர், வ்ருஷ்ணிகள், அந்தகர், போஜர், ஸாத்வதர், மதுக்கள், அர்ப்புதர், மாதுரர், சூரஸேனர், விதர்ஜனர், குகுரர், குந்திகள் என்று பலவாறாகப் பிரிந்திருக்கிற யாதவர்கள் அனைவரும் ஸ்னேஹத்தைத்

விட்டு ஒருவரையொருவர் அடித்தார்கள். பிள்ளைகள் தந்தைகளோடும் உடன்பிறந்தவர்களோடும் பகினிகளின் பிள்ளைகளோடும் பெண்வயிற்றுப்பிள்ளைகளோடும் தந்தையின் உடன்பிறந்தவர்களோடும் [1] மாதுலர்களோடும் மித்ரர்கள் மித்ரர்களோடும் ஸுஹ்ருத்துக்கள் ஸுஹ்ருத்துக்களோடும் சண்டை செய்தார்கள். அங்ஙனமே ஜ்ஞாதிகள் ஜ்ஞாதிகளை வதித்தார்கள். அவர்கள் மத்யபானத்தினால் மதிகெட்டிருந்தார்களாகையால் 'இது செய்யலாம். இது செய்யலாகாது' என்னும்விவேகமில்லாமல்இங்ஙனம்வதித்தார்கள்; பாணங்களெல்லாம் முடிந்து தனுஸ்ஸுக்களும் முறிந்து ஆயுதங்களும் க்ஷீணிக்கையில், அவர்கள் ஆயுதமில்லாமையால் ஸமுத்ரக்கரையில் முளைத்திருக்கிற (முன்பு ப்ராஹ்மணசாபத்தினாலுண்டான இரும்புலக்கையின் சூர்ணங்களின் பரிணமங்களான) கோரைகளை முட்டிகளால் பிடுங்கிக்கொண்டார்கள். அவர்கள் கையால் பிடுங்கின மாத்ரத்தில் அந்தக் கோரைகள் வஜ்ரங்கள்போன்ற இரும்புத்தடிகளாயின. அனந்தரம் அந்த யாதவர்கள், ஸ்ரீக்ருஷ்ணன் 'வேண்டாம் வேண்டாம்' என்று தடுத்துக்கொண்டிருப்பினும், அதைப் பொருள் செய்யாமல் அந்தக் கோரைகளால் ஒருவரை யொருவர் அடித்துக் கொள்வதுமாத்ரமே யல்லாமல் அந்த ஸ்ரீக்ருஷ்ணனையும் அடித்தார்கள். அவர்கள் மத்யபானத்தினால்மதிகெட்டிருப்பதுபற்றிப் பலராமனையும் ஸ்ரீக்ருஷ்ணனையும் சத்ருவாக நினைத்து அவர்களை வதிக்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு அடிக்க எதிர்த்தோடி வந்தார்கள். கௌரவகுலத்தைக் களிக்கச் செய்பவனே! அப்பால் அந்த ராமக்ருஷ்ணர்களும் கோபித்து இரும்புத்தடி

1. மாதுலன்—அம்மான்.

கள் போன்ற கோரைகளை முட்டியில் பிடித்துக்கொண்டு யுத்தத்தில் திரிந்து வதித்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனுடைய மாயையினால் மனம் பறியுண்டவர்களும் ப்ராஹ்மணசாபத்தினால் பீடிக்கப்பட்டவர்களுமாகிய அந்த யாதவர்களுக்குப் ஒருவர்மேல் ஒருவர்க்கு பொறாமையினாலுண்டான கோபமானது, மூங்கிற்புதரில் ஒன்றோடொன்று உறைவதனாலுண்டான அக்னி வனத்தை அழிப்பதுபோல், வம்சத்தையெல்லாம் அழித்து விட்டது. இங்ஙனம் தன் குலத்திலுள்ளவர்கள் அனைவரும் பாழாகையில், ஸ்ரீக்ருஷ்ணன் தானொருவன்மாத்ரமே மிகுந்து 'பூமியின் பாரத்தை யெல்லாம் இறக்கியாய் விட்டது' என்று நினைத்தான். பலராமனோவென்றால், ஸமுத்ரக்கரையில் பரம புருஷத்யானமாகிற யோகத்தை அனுஷ்டித்து, தான் எவனுடைய அம்சமோ, அத்தகையனான ஸங்கர்ஷணனிடத்தில் தன்னை ஒருமித்ததாக த்யானித்து மானிட உருவத்தைத் துறந்தான். பலராமனுடைய அங்ஙனம் நிர்யாணமானதை (தன்னுடைய அஸாதாரணமான உருவத்தில் ஒருமித்ததை)க் கண்டு தேவகியின் குமாரனாகப் பிறந்த ஸ்ரீக்ருஷ்ண பகவான் ஒரு அரசமரத்தின் கீழ்ச் சென்று பேசாமல் தரையில் உட்கார்ந்தான். நான்கு புஜங்கள் அமைந்ததும் தன் காந்தியால் விளங்குவதுமான உருவத்தைத் தரித்து அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவான், புகையில்லாத அக்னிபோல் திசைகளையெல்லாம் இருளற்று விளங்கும்படி செய்துகொண்டிருந்தான். மற்றும், அவன் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவுடன்கூடி மேகம்போல் கறுத்து உருக்கின பொன்போல் விளங்குகின்ற இரண்டு பட்டு வஸ்த்ரங்களை அரையிலும் மேலும் தரித்து மிகவும் மங்களனாயிருந்தான்; மற்றும், அழகிய புன்னகை யமை

ந்த முகாரவிந்தமும் ஆபரணம் போன்ற கறுத்தழகிய குந்தலங்களும் புண்டரீகம்போல் ரமணீயமான திருக் கண்களும் ஜ்வலிக்கின்ற மகரகுண்டலங்களும் விளங்கப் பெற்று அரைநாண்மாலை யஜ்ஞோபவீதம் கிரீடம் கை வளை தோள்வளை முத்துமாலை சிலம்புதண்டை மோதி ரம் கௌஸ்துபமணி வனமாலை இவைகளை அணிந்து ப்ரகாசித்துக் கொண்டிருந்தான். அவனுடைய ஆயு தங்கள் மூர்த்திகரித்து அவனைச் சூழ்ந்துகொண்டி ருந்தன. அவன் வலத்துடையில் தாமரை மலர்போன்ற இடக்காலை வைத்து உட்கார்ந்திருந்தான். அங்கு ஜரையென்னும் பெயருடைய ஒரு வேடன் கோரைக ளாய் முளைத்து மிகுந்த இரும்புலக்கையின் துணுக்கை களால் செய்த தனுஸ்ஸை ஏந்திக்கொண்டு வந்து அத் தகைய உருவத்துடன் வீற்றிருக்கின்ற பகவானுடைய மிருகம்போல் தோற்றுகிற பாதத்தைக் கண்டு மிருக மென்னும் ப்ரமத்தினால் அந்த தனுஸ்ஸில் பாணத்தைத் தொடுத்துப் பாதத்தில் அடித்தான். அப்பால் அந்த வேடன் சதுர்ப்புஜனான அப்புருஷனைக் கண்டு, 'இவன் பரமபுருஷன்' என்றறிந்து அவனிடத்தில் தான் அப ராதப்பட்டதைப் பற்றி பயந்து அஸுரத்வேஷியான அந்தப் பகவானுடைய பாதங்களில் தலை சாய்த்து விழுந்தான்.

வேடன் சொல்லுகிறான்:—மதுசூதனனே! பாபிஷ் டனாகிய நான் தெரியாமல் இந்தக் கார்யம் செய்தனன். தோஷமற்றவனே! உத்தமஶ்லோகனே! பாபிஷ்டனான என்னுடைய அபராதத்தைப் பொறுத்தருளவேணும். எவனை நினைத்த மாத்ரத்தில் அஜ்ஞானமாகிற இரு ளெல்லாம் அழிந்துபோமென்று பெரியோர் சொல்லு கிறார்களோ, விஷ்ணுவே! ப்ரபூ! அத்தகையனான உன்

விஷயத்தில் நான் அபராதஞ் செய்தேன். வைகுண்டனே! ஆகையால் ம்ருகங்களை வஞ்சித்து அவற்றை வதிக்குந் தன்மையுள்ள பாபிஷ்டனான என்னை வதிப்பாயாக. அப்படியாயின், நான் பெரியோர்களிடத்தில் மர்யாதையைக் கடந்த கார்யத்தை மீளவும் இப்படி செய்யாதிருப்பேனல்லவா? ப்ரஹ்மருத்ராதிகளும் வேதார்த்தங்களை உணர்ந்த அவரது புதல்வர்களான ஸனகஸனந்தனாதிகளும் உன்னுடைய மாயையினால் மறைக்கப்பட்ட அறிவுடையவராகையால்உன் ஸங்கல்பத்தினால் ஏற்றுக்கொண்ட இவ்வுருவத்தின் உண்மையை அறியவல்லரல்லர். பாபிஷ்ட நடத்தையையுடைய நாங்கள் இத்தகைய உன்னுருவத்தை உள்ளபடி எங்ஙனம் வர்ணிப்போம்?

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஜரையென்னும் வேடனே! நீ பயப்படவேண்டாம். எழுந்திரு. நீ இங்ஙனம் என்னைப் பாணத்தினால் அடித்தது என் ஸங்கல்பத்தினால் ஏற்பட்டதேயன்றி வேறன்று. நீ என்னால் அனுமதி கொடுக்கப்பெற்று ஸுக்ருதிகள் பெறும்படியான ஸ்வர்க்கத்தைப் பெறுவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அவ்வேடன் தன் ஸங்கல்பத்தினால் மானிட உருவத்தை ஏற்றுக்கொண்ட மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனால் இங்ஙனம் ஆஜ்ஞை செய்யப்பெற்று அந்த ஸ்ரீக்ருஷ்ணனை மூன்றுதரம் ப்ரதக்ஷிணம் பண்ணி நமஸ்கரித்து அப்பொழுதே தேவதைகளால் அனுப்பப்பட்ட விமானத்தில் ஏறிக்கொண்டு ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தான். தாருகன் ஸ்ரீக்ருஷ்ணன் போனவிடம் தேடிப்பிடிக்க முயன்று துளஸியின் பரிமளத்தை ஏற்றுக்கொண்டு வருகிற காற்றை மோந்து அதனால் அவனிருக்குமிடந்தெரிந்து கொ

ண்டு அவனை எதிர்த்துச் சென்றான். அன்னவன் தீக்ஷ்ணமான ஒளியுடன் கூடி ஆயுதங்களால் சூழப்பட்டு அரசமரத்தடியில் வீற்றிருக்கின்ற தன் ப்ரபுவான ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு ஸ்னேஹத்தினால் மனம் நிரம்பக் கண்ணும் கண்ணீருமாய் ரதத்தினின்றும் இறங்கி அவனுடைய பாதங்களில் விழுந்து மொழிந்தான்.

தாருகன் சொல்லுகிறான்.—ப்ரபூ! உன் பாதாரவிந்தங்களைக் காணப்பெறாமையால் என் கண் இருள் மூடப்பெற்றது போன்று மிகவும் பாழாய்விட்டது. எனக்குத் திசைகள் எவையும் தெரியவில்லை. என்மனமும் தெளிவற்றிருக்கின்றது. ராத்ரியில் ப்ரகாசித்துக் கொண்டிருந்த சந்த்ரன் திடீரென்று மறைகையில் எவ்விதமாயிருக்குமோ, அவ்விதமாயிருக்கின்றது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸாரதியான தாருகன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில், ராஜஸ்ரேஷ்டனே! கருடக்கொடியுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ரதம் குதிரைகளோடும் த்வஜத்தோடும் கூட அவன் பார்த்துக்கொண்டேயிருக்கையில் ஆகாயத்தில் கிளம்பிச் சென்றது. அவ்விஷ்ணுவின் அஸ்த்ரங்களும் ஆயுதங்களும் அந்த ரதத்தைப் பின்றொடர்ந்தன. ஸ்ரீக்ருஷ்ணன், அதைக் கண்டு வியப்புற்று நிற்கின்ற ஸாரதியைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்.—ஸாரதி! நீ த்வாரகைக்குப் போய், ஜ்ஞாதிகளான யதுக்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு மாண்டதையும் ஸங்கர்ஷணன் நிர்யாணமானதையும் என்னுடைய நிலைமையையும் பந்துக்களுக்குத் தெரிவிப்பாயாக. இனி நீங்கள் பந்துக்களுடன் த்வாரகையில் இருக்கலாகாது. என்னால் துறக்கப்பட்ட அந்த யதுபுரியான த்வாரகையை

ஸமுத்ரம் தன் ப்ரவாஹத்தில் அமுழ்த்திவிடப்போகின்றது. நீங்கள் எல்லாரும் தங்கள் தங்கள் தேஹானுபந்திகளையும் நம் தாய்தந்தைகளையும் அழைத்துக்கொண்டு அர்ஜுனனால் பாதுகாக்கப் பெற்று இந்த்ரப்ரஸ்தத்திற்குப் போவீர்களாக. நீயோவென்றால், எனக்கிஷ்டமான பாகவததர்மத்தை அனுஷ்டிப்பவனாகி பக்தியோகத்தில் நிலைநின்று சப்தாதிவிஷயங்களை உபேக்ஷித்து இந்த ஜகத்தெல்லாம் என்னுடைய மாயையினால் செய்யப்பட்டதென்றறிந்து ராகாதிதோஷங்கள் நீண்டப்பெறுமையாகிற சாந்தியை அடைவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— தாருகன் இங்ஙனம் மொழியப்பெற்று அந்த ஸ்ரீக்ருஷ்ணனை அடிக்கடி ப்ரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து அங்ஙனமே அடிக்கடி அவனுடைய பாதங்களைச் சிரஸில் தரித்து மனவருத்தத்துடன் த்வாரகைக்குச் சென்றான். முப்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ஸ்ரீக்ருஷ்ண நிர்யாணமும், வஸுதேவாதிகள் பரலோகம் போதலும். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— அனந்தரம் (தாருகன் போன பின்பு) ப்ரஹ்மதேவனும் பத்னியாகிய பார்வதியோடு ருத்ரனும் மஹேந்த்ரன் முதலிய தேவதைகளும் மரீசிமுதலிய ப்ரஜாபதிகளோடு கூடிய முனிவர்களும் பித்ருதேவதைகளும் ஸித்தர்களும் கந்தர்வர்களும்வித்யாதரர்களும் மஹோரகர்களும் சாரணர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கின்னரர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் கருடலோகத்திலுள்ள பக்ஷிகளும் மைத்ரேயர் முதலிய ப்ராஹ்மணர்களும் பகவானுடைய நிர்யாணத்தைப் பார்க்க விரும்பி மிகுந்த ஆவலுடையவர்களாகி அவனுடைய செயல்களையும் பிறவிகளையும் பாடுவதும்

பிதற்றுவதுமாகி அவ்விடம் வந்தார்கள். அவர்கள் விமானங்களின் வரிசைகளால் ஆகாயத்தை நிரம்பச் செய்து மிகுந்த பக்தியுடன் பூமழைகளைப் பொழிந்தார்கள். ஸமர்த்தனுகிய ஸ்ரீக்ருஷ்ணபகவானும் தன் விபூதிகளாகிய ப்ரஹ்மாதிகளைப் பார்த்துத் தன்னுடைய அவதாரத்திற்குக் காரணமாகிய தன்னிடத்தில் தன்னை ஒருமித்ததாக த்யானித்துத் தாமரையிதழ்போன்ற தன் கண்களை மூடினன். அம்மஹானுபாவன் தாரணைக்கும் த்யானத்திற்கும் சுபாஶ்ரயமும் உலகங்கட்கெல்லாம் அழகியதுமான தன் திருமேனியை அக்னி ஸந்துக்ஷணஞ் செய்வதான (அக்கினியை வளர்த்தி எரியச் செய்வதான) யோகதாரணையால் தஹிக்காமல் அத்திருமேனியோடு கூடவே தன்வாஸஸ்தானமாகியவைகுண்டலோகத்திற்கு ஸுகமாகஎழுந்தருளினன். அப்பொழுது ஆகாயத்தில் தேவதுந்துபிவாத்யங்கள் முழங்கின. ஆகாயத்தினின்று பூமழைகளும் பொழிந்தன. ஸத்யம் தர்மம் தைர்யம் புகழ் செல்வம் இவையெல்லாம் பூமியை விட்டு அத்திருமேனியைத் தொடர்ந்து சென்றன. பிறரால் அறியமுடியாத கதியையுடைய ஸ்ரீக்ருஷ்ணபகவான் அங்ஙனம் தன்னுலகத்திற்குப் போகையில் ப்ரஹ்மதேவனை முன்னிட்டுக்கொண்டிருக்கிற தேவாதிகள் அனைவரும், அவன் போனவிதம் காணப் பெருமல் வியப்புற்றார்கள். ஆகாயத்தில் மேகமண்டலத்தில் மின்னல் மின்னி அது அம்மேகமண்டலத்தினின்று மறையும் பொழுது, 'அது இன்ன விதமாகப் போயிற்று' என்று அதன்போக்கு எங்ஙனம் மனுஷ்யர்களுக்குத் தெரிகிறதில்லையோ, அங்ஙனமே அந்த ஸ்ரீக்ருஷ்ணன் போன போக்கு தேவதைகளுக்குத் தெரியவில்லை. மன்னவனே! அந்த ப்ரஹ்மருத்ராதிகள் ஸ்ரீக்ருஷ்ணன் யோகமஹிமையால் பூமியைத் துறந்து போனதைக் கண்டு வியப்

புற்று அவனைப் புகழ்ந்துகொண்டே தங்கள் தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். ராஜனே! பரமபுருஷன் யாதவாதி குலங்களில் இதரப்ராணிகளைப்போல் ஜனிப்பது மரிப்பது முதலிய சேஷ்டைகள் செய்வதெல்லாம் அனுகரணமே யொழிய உண்மையன்று. கூத்தாடுகிற நடன் ராமாதிகளின் வேஷம் பூண்டு அவர்களின் சரித்ரங்களை அபிநயிப்பானாயின், அது அவன் ஏற்றுக்கொண்டதேயன்றி உண்மையாகாதல்லவா? இப்பரம புருஷன் சேதனுசேதன ரூபமான இவ்வுலகத்தையெல்லாம் படைத்து அதற்குள் புகுந்து தரித்துக்கொண்டு வெளியில் ராம க்ருஷ்ணாதி அவதாரங்களைச் செய்து கடைசியில் ஜகத்தையெல்லாம் ஸம்ஹரித்து அளவிறந்த ஜ்ஞானநந்தமயமான தன் ஸ்வரூபத்தைத் தானே அனுபவிக்கையாகிற பெருமையில் இழிந்து ஜகத்ஸ்ருஷ்டி முதலிய வியாபாரங்களெல்லாம் ஒழியப்பெற்று வெறுமெனே இருக்கின்றான். (இங்ஙனம் அளவற்றதாகிய அவனுடைய மஹிமஸமுத்ரத்தில் பிறர்க்குத் தெரியாதபடி இவன் தன்னுலகஞ் சேர்ந்தானென்கிற விது ஒருதிவலையேயாமன்றி வேறொன்றுமன்று.) இந்த ஸ்ரீக்ருஷ்ணன் யமலோகத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டகுருபுத்ரனை (ஆசார்யனான ஸாந்தீபினியின் பிள்ளையை) அம்மனுஷ்ய தேஹத்தோடு கூடவே திருப்பிக் கொண்டு வந்தான். மற்றும், இவன் தன்னைச் சரணம் அடைந்த உன்மாதாவுக்கு அபயங்கொடுத்து அஶ்வத்தாமாவின் ப்ரஹ்மாஸ்த்ரத்தினுல் தஹிக்கப்பட்ட உன்னைக் காப்பாற்றினான். அன்றியே, மிருத்யுவுக்கும் மிருத்யுவாகிய ருத்ரனை இவன் பாணஸமரயுத்தத்தில் ஜயித்தான். அன்றியே வேடனுக்குச் சரீரத்தோடு கூடவே ஸ்வர்க்கம் போகும்படி அனுக்ரஹஞ் செய்தான். அத்தகைய பகவான் பிறர்க்குத் தெரியாமல்

தன்னுலகம் போகையில் அஸமர்த்தனுவனே? ('ஆனால் இங்ஙனம் பலவகை விசித்ர சக்திகள் அமைந்த பகவான் அழகியதான தன் திருமேனியை இவ்விடத்திலேயே ஏன் நிலையாக வைக்கவில்லை?' என்றால், சொல்லுகிறேன்;கேள்.) இப்பகவான் எல்லாச் சக்திகளும் அமைந்தவனே; ப்ரபஞ்சத்தை யெல்லாம் காப்பது படைப்பது முடிப்பது இவைகளில் மற்றொன்றையும் எதிர்பாராமல் தானே நடத்துந்திறமை யுடையவன். ஆயினும், 'மனுஷ்ய சரீரம் எத்தனை காலம் இருப்பினும் கடைசியில் மரணம் அடையுந் தன்மையதே. அபார மஹிமையுள்ள ஸ்ரீக்ருஷ்ணனுங்கூட மரணம் அடைந்தான். ஆகையால் மனுஷ்ய சரீரத்தை நிலையென்று நம்பலாகாது. அதனால் என்ன ப்ரயோஜனம்? ஒரு ப்ரயோஜனமும் இல்லை' என்று யோகிகளின் புத்தியை ஜனங்களின் நெஞ்சில் படுத்துவதற்காகவே தன் திருமேனியை இங்கு நிலையாக நிறுத்தி வைக்கத் திருவுள்ளம் பற்றாமல் அத்தோடுகூடவே எழுந்தருளினனன்றி வேறில்லை. ஸ்ரீக்ருஷ்ணபகவான் திருநாட்டுக்கெழுந்தருளின விலக்ஷணமான இந்த வ்ருத்தாந்தத்தை எவன் பரிசுத்தனாகி பக்தியுடன் ஸங்கீர்த்தனஞ் செய்கிறானே, அவன் அந்த ஸங்கீர்த்தன மஹிமையால் கதிகளில் சிறந்த வைகுண்ட லோககதியையே பெறுவான். தாருகன் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து வருத்தத்துடன் த்வாரகைக்குச் சென்று வஸுதேவ உக்ரஸேனர்களின் முன்னிலையில் விழுந்து அவர்களுடைய பாதங்களைக் கண்ணீர்களால் நனைத்தான்; அவன், (மெல்லமெல்ல மனத்தை அடக்கிக் கொண்டு) மன்னவனே! வ்ருஷ்ணிகள் அனைவரும் மரணம் அடைந்த வ்ருத்தாந்தத்தை மொழிந்தான். அங்குள்ளவர்கள் அதைக் கேட்டு மனம் பயந்தவர்களாகிச் சோகத்தினால் மூர்ச்சித்தார்கள். அவர்கள் ஸ்ரீக்ருஷ்ண விரஹத்தினால் வருந்தித் தம்பந்துக்கள் ஒருவரையொருவர் அடித்து ப்ராணன்களை இழந்து எவ்விடத்தில் விழுந்திருக்கிறார்களோ அவ்விடத்திற்கு விரைவுடன்

சென்றார்கள். தேவகி ரோஹிணி வஸுதேவன் ஆஹுகன் இவர்கள் ஸ்ரீக்ருஷ்ண ராமர்களைக் காணாமையால் சோகஸாகரத்தில் மூழ்கி வருந்தி ப்ரஜ்ஞையைத் துறந்தார்கள். மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்தமையால் வருந்தி அவர்கள் ப்ராணன்களைத் துறந்தார்கள். மற்றுமுள்ள அந்தந்த மடந்தையர்களும் தந்தங் கணவர்களை அணைத்துக் கொண்டு சிதைகளில் ஏறினார்கள் (அனுமரணஞ் செய்தார்கள்). பலராமனுடைய பத்னிகள் அந்த பலராமனுடைய தேஹத்தையும், வஸுதேவனுடைய பத்னிகள் அவ்வஸுதேவனுடைய தேஹத்தையும், ஸ்ரீக்ருஷ்ணனுடைய நாட்டுப் பெண்கள் ப்ரத்யும்னன் முதலிய தந்தங்கணவர்களின் தேஹங்களையும் அணைத்துக்கொண்டு அக்னி ப்ரவேசஞ் செய்தார்கள். ருக்மிணி முதலிய ஸ்ரீக்ருஷ்ண பத்னிகள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களாகையால் அவனைப் பிரிந்திருக்கப் பொறாமல் அக்னிப்ரவேசஞ் செய்தார்கள். அர்ஜுனன் மிகவும் அன்புள்ள நண்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய விரஹத்தினால் வருந்தியும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய கீதோபதேசங்களாலும் பெரியோர்களுடைய நல்லுரைகளாலும் தன் மனத்தைத் தானே ஸமாதானப்படுத்திக்கொண்டான். ஸந்ததி முழுவதும் அழியப் பெற்றவர்களும் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு மாண்டவர்களுமான பந்துக்களுக்கு அவ்வர்ஜுனன் ஜலதர்ப்பணம் பிண்டப்ரதானம் முதலிய கர்மங்களை விதிப்படி முறையே நடப்பித்தான். மஹானுபாவனே! ஸமுத்ர ராஜன் ஸ்ரீக்ருஷ்ணன் துறந்த த்வாரகாபுரியை அழகிய ஸ்ரீக்ருஷ்ணன் திருமாளிகை தவிர முழுவதும் தன் ப்ரவாஹத்தில் ஒருக்ஷணத்திற்குள் முழுக்கிவிட்டான். தன்னை நினைத்தமாத்ரத்தில் ஸமஸ்த பாபங்களையும் போக்குந் திறமையுடையவனும் ஸமஸ்த மங்களங்களுக்கும் மங்களனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய மதுஸூதனன் அந்தத் திருமாளிகையில் எப்பொழுதும் ஸந்நிதி

கொண்டிருக்கிறனுகையால் அந்தத் திருமாளிகையைத் தவிர மற்ற த்வாரகாபுரிமுழுவதையும் ஸமுத்ரராஜன் அமிழ்த்திவிட்டான். அர்ஜுனன், அக்னிப்ரவேசஞ் செய்தவர் தவிரக் குமரிகளும் கிழவிகளுமான மற்ற பெண்டிர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு இந்த்ர ப்ரஸ்தஞ் சென்று, அவ்விடத்தில் பகவானுடைய ஸங்கல்பத்தினுல் மிகுத்தப்பட்ட வஜ்ரனென்னும் பெயருள்ள ஒரு யாதவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தான். ராஜனே! உன் பாட்டனுகிய யுதிஷ்டிரன் அர்ஜுனன் முகமாய் நண்பர்களான யாதவர்கள் அனைவரும் மாண்டதைக் கேட்டு உன்னை வம்சப்ரவர்த்தகனுக ஏற்படுத்தி எல்லாருடனும் மஹாப்ரஸ்தானஞ்செய்தான். தேவதேவனும் ஸ்ரீமஹாவிஷ்ணுவுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய செயல்களையும் பிறவியையும் உட்கொண்ட இந்த வ்ருத்தாந்தத்தை எவன் ஶ்ரத்தையுடன் கீர்த்தனஞ் செய்கிறனே, அவன் ஸமஸ்த பாபங்களாலும் விடுபடுவான். ஷாட்குண்ய பூர்ணனும் தன்னை நினைப்பவர்களின் பாபங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பரமபுருஷன் இங்ஙனம் அழகியதான இந்த ஸ்ரீக்ருஷ்ணுவதாரத்தில் செய்த வீரச்செயல்களையும் மிகவும் மங்களமான பால்ய சரிதங்களையும் பௌகண்ட யௌவன சரிதங்களையும் இந்தப் புராண மூலமாகவும் இதரபுராண மூலமாகவும் கேட்டு அவைகளைக் கீர்த்தனஞ் செய்வானுயின், பரமஹம்ஸர்களுக்குப் பரமகதியாகிய அப்பரமபுருஷனிடத்தில் மேலான பக்தி உண்டாகப் பெறுவான்.

முப்பத்தொன்றுவது அத்யாயம் முற்றிற்று.

ஏகாதச-ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது



ஸ்ரீக்ருஷ்ணாய நம:

# ஸ்ரீபாகவதம்.

## த்வாதச ஸ்கந்தம்.

---

{ மேல்வரப்போகிற ஸோமவம்ச பரம்பரையைக் கூறுதல். }

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—யதுவம்சத்திற்கு அலங்காரமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்வாஸஸ்தானமாகிய ஸ்ரீவைகுண்டலோகம் போகையில், கீழ்ச்சொன்ன யதுவம்ச ராஜர்களுக்குள் யாருடைய வம்சம் பரம்பரையாக வந்ததோ, மாமுனியே! அதை எனக்குச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! (பூருவின் வம்சத்தில் உபரிசரவஸுவும், அவன் பிள்ளை ப்ருஹத்ரதனும், அவன் பிள்ளை ஜராஸந்தனும், அவன் பிள்ளை ஸஹதேவனும், அவன் பிள்ளை மார்ஜாரியும், அவனுக்கு ஶ்ருதஶ்ரவன் முதலாகப் புரஞ்ஜயனீறாக இருபது பிள்ளைகளும் பிறக்கப் போகிறார்களென்று முன்னமே [ஒன்பதாவது ஸ்கந்தத்தில்] மொழிந்தேன். (அந்த ப்ருஹத்ரதனுடைய வம்சத்தில் புரஞ்சயனென்பவன் கடைசியில் பிறக்கப்போகிறான். அவனுடைய மந்த்ரியாகிய சுனகனென்பவன் தன் ப்ரபுவாகிய புரஞ்சயனைக் கொன்று அவனது புதல்வனை ப்ரத்யோதனென்பவனை அரச

ளுக்கப்போகிறுன். அவன் பிள்ளை அலகனென்பவன். அவன் பிள்ளை விசாகயூபன். அவன் பிள்ளை ராஜகன். அவன் பிள்ளை நந்திவர்த்தனன். அவனுக்கு ப்ரத்யோதனரென்னும் பெயருடைய ஐந்து பிள்ளைகள் பிறக்கப் போகிறுர்கள். இம்மன்னவர்கள் நூற்றுமுப்பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் பூமியைப் பாதுகாக்கப்போகிறுர்கள். அவர் பிள்ளை சிசுநாகன. அவன்பிள்ளை காகவாணன். அவன பிள்ளை க்ஷேமதாமன். அவன் பிள்ளை க்ஷேத்ரஜ்ஞன். அவன் பிள்ளை விதிஸாரன். அவன் பிள்ளை அஜாதசத்ரு. அவன்பிள்ளை தர்ப்பகன். அவன் பிள்ளை அஜயன். அவன்பிள்ளை நந்திவர்த்தனன். அவன் பிள்ளை மஹாநந்தி. கௌரவ மன்னவர்களில் சிறந்தவனே! சிசுநாகன் முதலிய இமமன்னவர்கள் கலியுகத்தில் முன்னூற்றுப [illegible] ஸம்வத்ஸரங்கள் பூமியை ஆளப்போகிறுர்கள். மஹாநந்தியின் பிள்ளை மஹாபத்மபதி. அவன் சூத்ரஸ்த்ரீகர்ப்பத்தில் பிறந்தவன்; மஹாபலமுடையவன; மிகவும் ப்ரஸித்தி பெற்றவன். அவனுக்கு நந்தனென்று மற்ெருரு பெயரும் உண்டு. அவன் க்ஷத்ரிய குலத்தையெல்லாம் பாழாக்கப் போகிறுன். (க்ஷத்ரியகுலம் முழுவதும் அவனேடு அற்றுப் போய்விடப்போகிறது) இந்த நந்தன் சூத்ரஸ்த்ரீகர்ப்பத்தில் பிறந்தவனுகையால் இவன் முதலாகவுள்ள மன்னவர்கள் சூத்ரப்ராயர்களும் அதர்மிஷ்டர்களுமாயிருக்கப்போகிறுர்கள். அந்த மஹாபத்மபதியென்னும் நந்தன் யாவராலும் தாண்டப்படாத சாஸனமுடையவனுகி இரண்டாவது பரசுராமன்போல் ஏகச்சத்ராதிபத்யத்துடன் (தன்னெதிரில் குடைநீழலில் வருகிறவன் மற்ெருருவனு மில்லாதபடி) பூமண்டலத்தை ஆளப்போகிறுன். அவனுக்கு ஸுமால்யன் முதலிய எட்டுப் பிள்ளைகள் பிறக்கப்போகிறுர்கள். இவர்கள் மன்ன

வர்களாய் நூறு ஸம்வத்ஸரங்கள் இப்பூமியை ஆளப்போகிறார்கள். அவர்கள் நந்தர்களென்று ப்ரஸித்தி பெறுவார்கள். நந்தனது பிள்ளைகளான ஸுமால்யன் முதலிய ஒன்பதின்மர்களும் ஒரு ப்ராஹ்மணனை நம்பியிருக்கையில், விஶ்வாஸகாதகனான அவ்வந்தணன் தன்னை நம்பியிருக்கிற அந்த நவநந்தர்களையும் அவர்களது தகப்பனையும் நாசஞ் செய்யப்போகிறான். அவர்கள் முடிகையில், கலியில் மௌர்யரென்னும் பெயருடைய சில மன்னவர்கள் பூமியை ஆளப்போகிறார்கள். அந்த ப்ராஹ்மணனே முதலில் நந்தர்களை முடித்து மௌர்யர்களில் முதன்மையான சந்த்ரகுப்தனென்பவனை ராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்யப்போகிறான். அவன் பிள்ளை வாரிஸாரன். அவன் பிள்ளை அசோகவர்த்தனன். அவன் பிள்ளை ஸுயசன். அவன் பிள்ளை ஸங்கதன். அவன் பிள்ளை சாலிசூகன். அவன் பிள்ளை ஸோமசர்மன். அவன் பிள்ளை சததன்வன். அவன் பிள்ளை ப்ருஹத்ரதன். கௌரவஶ்ரேஷ்டனே! இப்பதின்மரும் மௌர்யரென்று ப்ரஸித்தி பெற்றவர்கள். இவர்கள் கலியில் நூற்றுமுப்பத்தேழு ஸம்வத்ஸரங்கள் பூமியை ஆளப்போகிறார்கள். மௌர்யர்களில் கடைசியான ப்ருஹத்ரதனுடைய ஸேனாபதியாகிய புஷ்யமித்ரனென்பவன் தன்ப்ரபுவாகிய ப்ருஹத்ரதனைக் கொன்று ராஜ்யம் ஆளப்போகிறான். அவன் பிள்ளை அக்னிமித்ரன். அவன் பிள்ளை ஸுஜ்யேஷ்டன். அவன் பிள்ளை ஸுமித்ரன். அவன் பிள்ளை பத்ரகன். அவன் பிள்ளை புலிந்தன். அவன் பிள்ளை கோஷன். அவன் பிள்ளை வஜ்ரமித்ரன். அவன் பிள்ளை பாகவதன். அவன் பிள்ளை தேவபூதி. குருகுலாலங்காரனே! இப்பதின்மரும் சுங்கரென்னும் பெயருடையவர்கள். இவர்கள் இருநூற்றுப்பன்னிரண்டு வர்ஷங்

கள் பூமியை ஆளப்போகிறார்கள். மன்னவனே! அனந்தரம் இந்த பூமி குணஹீனர்களான காண்வரென்னும் மன்னவர்களை அடையப்போகின்றது. அதெப்படியென்றால், சொல்லுகிறேன். சுங்கர்களில் கடைசியான தேவபூதி ஸ்த்ரீலோலனாயிருக்கையில் அவனுடையமந்த்ரியும் காண்வனுமாகியவஸுதேவனென்பவன் அவனைக்கொன்று மிகுந்தமதியுடைய அவ்வஸுதேவன் தானே ராஜ்யஞ் செய்யப்போகிறான். அவன் பிள்ளை பூமித்ரன். அவன் பிள்ளை நாராயணன். அவன் பிள்ளை ஸுசர்மன். இந்த வஸுதேவாதிகள் காண்வரென்றும் காண்வாயனரென்றும் ப்ரஸித்தி பெற்றவர்கள். இவர்கள் கலியுகத்தில் மூந்நூற்று நாற்பத்தைந்து ஸம்வத்ஸரங்கள் பூமியை ஆளப்போகிறார்கள். காண்வர்களில் கடைசியான ஸுசர்மனை அவன் ப்ருத்யனாகிய பலீகனென்னும் சூத்ரன் கொன்று சிலகாலம் பூமியை ஆளப்போகிறான். அவன் அந்த்ரஜாதியில் பிறந்தவன்; துர்ப்புத்திகளில் முதன்மையானவன். பிறகு அவன் ப்ராதாவான க்ருஷ்ணனென்பவன் பூமியை ஆளப்போகிறான். அவன் பிள்ளை ஸ்ரீசாந்தகர்ணன். அவன் பிள்ளை பௌர்ணமாஸன். அவன் பிள்ளை லம்போதரன். மன்னவனே! அவன் பிள்ளை சிவிலகன். அவன் பிள்ளை மேகஸ்வாதி. அவன் பிள்ளை அடமானன். அவன் பிள்ளை அனிஷ்டகர்மன். அவன் பிள்ளை ஹாலேயன். அவன் பிள்ளை தலகன். அவன் பிள்ளை புரீஷபானு. அவன் பிள்ளை ஸுநந்தனன். அவன் பிள்ளை சகோரன். சத்ருக்களை அடக்குந்திறமையுடையவனே! அவன் பிள்ளை சிவஸ்வாதி. அவனுக்குக் கோமதியும், அவனுக்குப் புரீமானும், அவனுக்கு மேதசிரனும், அவனுக்கு சிவஸ்கந்தனும், அவனுக்கு யஜ்ஞஸ்ரீயும், அவனுக்கு விஜயனும், அவனுக்குச் சந்த்

ரவிஜ்ஞனும், அவனுக்கு ஸலோமதியும் பிறக்கப்போகிருர்கள். குருகுலாலங்காரனே! வலீகரென்று ப்ரஸித்தர்களான இவ்விருபத்தைந்து மன்னவர்களும் நானூற்றெண்பத்தாறு ஸம்வத்ஸரங்கள் பூமியை ஆளப்போகிருர்கள். ஆபீரஜாதியிற் பிறந்த ஆவப்ருத்யரென்கிற ஏழுமன்னவர்களும், குர்த்தபிகளென்கிற பத்து மன்னவர்களும், கங்கர்களென்கிற பதினறு மன்னவர்களும் பூமியை ஆளப்போகிருர்கள். இவர்கள் காமத்தில் கண்ணைவைத்திருப்பார்கள். பிறகு யவனர்களில் எட்டு மன்னவர்களும், துலுக்கர்களில் பதினன்கு மன்னவர்களும், முருண்டரென்று ப்ரஸித்தி பெற்ற பதின்மூன்று மன்னவர்களும், மௌனர்களென்கிற பதினொரு மன்னவர்களும் பூமியை ஆளப்போகிருர்கள். மௌனர் தவிர மற்ற இம்மன்னவர்கள் ஆயிரத்துத்தொண்ணூற்றென்பது ஸம்வத்ஸரங்கள் பூமியை ஆளப்போகிருர்கள். மௌனர்கள் பதினொருவரும் முன்னூறு ஸம்வத்ஸரங்கள் பூமியை ஆளப்போகிருர்கள். அவர்கள் மரணம் அடைகையில், பிறகு கிலிங்கிலையென்னும் பட்டணத்தில் பூதநந்தன், யவம்ஹரன், சிசுநந்தன், அவன் ப்ராதாவான யசோநந்தி [1]ப்ரவீரகன்என்னும் இம்மன்னவர்கள் நூற்றுறு ஸம்வத்ஸரங்கள் பூமியை ஆளப்போகிருர்கள். அந்த பூதநந்தன் முதலியவர்க்கு பாஹ்லிகரென்னும் பெயருடைய பதின்மூன்று பிள்ளைகள் பிறக்கப் போகிருர்கள். பிறகு புஷ்யமித்ரனென்பவன் ராஜனுகப்போகிருன். இவன் பிள்ளை துர்மித்ரன். அந்தரதேசாதிபதிகள் எழுவரும், கோஸலதேசாதிபதிகள் எழுவரும், வைதூர தேசாதிபதிகள் சிலரும், நிஷததேசாதிபதிகள் சிலரும், அந்த பாஹ்லிகரிடத்தினின்றுமே பிறக்கப் போகிருர்கள். இவர்கள் எல்லாரும் ஒரேகாலத்தில்

1. ப்ரமீரகன் என்று பாடாந்தரம்.

அந்த்ராதி தேசங்களை ஆளப்போகிறார்கள். பிறகு மாகத தேசங்களுக்கு விஸ்வஸ்பூர்ஜியென்பவன் ராஜனாகப் போகிறான். அவன் முன்சொன்ன புரஞ்சயனைக் காட்டிலும் மிகவும் ப்ரஸித்தனாகி ப்ராஹ்மணாதி வர்ணங்களைப் புலிந்தர் யதுக்கள் மத்ரகர் என்னும் பெயர் பெறும்படி செய்து ம்லேச்சப்ராயர்களாக்கப் போகிறான். துர்ப்புத்தியுடைய அம்மன்னவன் ப்ரஜைகளை ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களென்கிற மூன்று வர்ணங்களுமின்றிப் பெரும்பாலும் சூத்ரர்களாகவே ஆக்கி ஆளப்போகிறான். மற்றும், மஹாவீர்ய முடைய அம்மன்னவன் க்ஷத்ரியவர்ணத்தை வேரோடறுத்துப் பத்மவதியென்னும் பட்டணத்தில் வாஸஞ்செய்து கொண்டு கங்காத்வாரம் முதல் ப்ரயாகம் வரையிலுள்ள பூமியை ஆளப்போகிறான். ஸௌராஷ்ட்ரம் அவந்தி அபீரம் அர்ப்புதம் மாலவம் என்னும் இத்தேசங்களிலுள்ள ப்ராஹ்மணர்கள் உபநயனாதி ஸம்ஸ்காரங்களின்றிச் சூத்ரப்ராயர்களாயிருக்கப்போகிறார்கள். மன்னவனே! பெரும்பாலும் சூத்ரர்களே அரசர்களா யிருப்பார்கள். ஸிந்துநதிக் கரையிலுள்ள தேசங்களையும் சந்த்ரபாகாநதிக் கரையிலுள்ள தேசங்களையும் குந்திதேசங்களையும் காஸ்மீர மண்டலத்தையும் சூத்ரர்களும் ம்லேச்சர்களுமே ஆளப் போகிறார்கள். அங்குள்ள ப்ராஹ்மணர்கள் உபநயனாதி ஸம்ஸ்காரங்களின்றி ப்ரஹ்மதேஜஸ்ஸென்பது சிறிதும் இல்லாமல் கேவலம் சூத்ரர்களாயிருக்கப் போகிறார்கள். ராஜனே! ம்லேச்ச ப்ராயர்களான இம்மன்னவர்கள் அனைவரும் ஒரே காலத்தில் பூமியை ஆளப் போகிறார்கள். இவர்கள் அதர்மத்திலும் பொய் பேசுவதிலும் நிலைநின்றிருப்பார்கள்; கொடுப்பது கொஞ்சமாயினும் பெருங்கோபஞ் செய்வார்கள்; ஸ்த்ரீகளையும்

இளைஞர்களையும் ப்ராஹ்மணுதி மூன்று வர்ணத்தவர்களையும் வதிக்குந்தன்மையராயிருப்பார்கள்; பிறருடைய தாரங்களையும் தனங்களையும் மிக்க ஆவலுடன் பறிப்பார்கள்; க்ஷணம் ஸந்தோஷமும் க்ஷணம் கோபமுமாயிருப்பார்கள்; அல்ப பலர்களும் அல்பாயுஸ்ஸுக்களுமாயிருப்பார்கள். மற்றும், இவர்கள் கர்ப்பாதாணுதி ஸம்ஸ்காரங்களின்றி நன்னடைத்தையு மின்றி ரஜோ குணமும்தமோகுணமும் நிரம்பப்பெற்று மிலேச்சர்களாயிருக்கச் செய்தேயும் சிறந்த ராஜர்களைப்போல் வேஷம் பூண்டு ப்ரஜைகளைப் பிடித்துக் கொண்டிருப்பார்கள். அந்த ம்லேச்சர்களின் ஆள்கைக்குட்பட்ட அத்தேசங்களிலுள்ளவர் அவர்களுடைய ஸ்வபாவமும் ஆசாரமும் பேச்சுமுடையவர்களாகி ஒருவரை யொருவர் பிடித்து ராஜர்களாலும் பிடிக்கப்பட்டு நாசம் அடையப்போகிறுர்கள். முதல் அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ சுகர் பரீக்ஷித்துமன்னவனுக்குக் கலியுக ப்ராதுர்ப்பாவத்தின் அடையாளங்களைக் கூறுதல.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—ராஜனே! பிறகு பலிஷ்டமான காலத்தினுல் தர்மம் ஸத்யம் சௌசம் பொறுமை தயை ஆயுள் பலம் நினைவு இவை நாளுக்குநாள் க்ஷீணிக்கப்போகின்றன. கலியில் பணமே மனுஷ்யர்களுக்கு ஆபிஜாத்யம் (நற்குலத்தில் பிறப்பு) ஆசாரம் குணம் இவற்றிற்குக் காரணமாம். தர்மவ்யவஸ்தைக்கும் ந்யாயவ்யவஸ்தைக்கும் தனபலமே காரணமாம். தம்பதிகளாயிருக்கைக்குக் காரணம் அவரவர்களின் அபிருசியே யன்றி ஆபிஜாத்யாதிகள் காரணமாக மாட்டா. க்ரயவிக்ரய வ்யவஹாரத்தில் வஞ்சனையே முக்

யமாயிருக்கு மன்றி நிஷ்கபடமென்பது சிறிதும் புலப் படாது. ஆண்மை பெண்மைகளின் மேன்மைக்குக் கலயின் திறமையே காரணமாயிருக்குமன்றி ஆண்மை பெண்மைகளுக்கு முக்யமான மற்ற குணங்கள் காரண மாக மாட்டா. ப்ராஹ்மண்யத்திற்கு நூல்மாத்ரமே (யஜ்ஞோப வீதமே) அடையாளமாயிருக்குமன்றி உப நயனுதி ஸம்ஸ்காரங்களும் மற்ற வித்யாதிகளும் புலப் படவே மாட்டா. ப்ரஹ்மசர்யாதி ஆஶ்ரமங்களுக்கு தண்டம் அஜினம் முதலியவைகளே அடையாளமா யிருக்குமன்றி ஆசாரவிசேஷம் புலப்படாது. ஒரு ஆஶ் ரமத்தினின்று ஆஶ்ரமாந்தர ப்ராப்திக்கும், ஒரு வர் ணத்தினின்று வர்ணாந்தர ப்ராப்திக்கும் நீச உத்தம பாவ ப்ராப்திக்கும் வேஷமே அடையாளமா யிருக்கு மன்றி ஆசாரவிசேஷம் அடையாளமாகாது. தாரித்ரி யத்தினால் நியாயம் தோற்றுப்போம். பலபடப் பேசுகை யே பாண்டித்யத்திற்கு அடையாளமாம். பணமில்லா மையே அஸாதுவென்பதற்குக் காரணமாம். ஸாதுவா யிருக்கைக்கு தம்பமே (தேஹாலங்காரமே)காரணமாம். விவாஹத்திற்கு ஸ்த்ரீபுருஷர்கள் ஒருவரை யொருவர் அங்கீகரிக்கை விதியாமன்றிச் சாஸ்த்ரவிதி சிறிதும் புலப்படாது. கேவலம் உடம்பழுக்குப் போகக் குளிக் கையே ஸ்னானமாமன்றிப் புண்யதீர்த்த ஸ்னானமாவது மந்த்ரானுஸந்தானமாவது தேவதாத்யானமாவது புலப்படாது. தூரத்திலிருக்கும் ஜலந்தேங்கு மிடமே புண்ய தீர்த்தமாமன்றி கங்காதிகள் புண்ய தீர்த்தமாக மாட்டா. மயிர்களைச் சுரைக்காமல் தரித்துக் கொண் டிருக்கை லாவண்யத்திற் கிடமென்று நினைத்துச் சாஸ் த்ரங்களில் விதித்தபடி மயிர்களைச் சுரைக்க மாட்டார் கள். வயிறு வளர்க்கையே எல்லாப் புருஷார்த்தங்களு

மாம். எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு தைர்யமாயிருப்பவன் ஸத்யவாதியென்று பெயர் பெறுவானன்றிப் பொய் பேசாதவன் ஸத்யவாதியென்று பெயர் பெற மாட்டான். குடும்பத்தைப் போஷிக்கையே ஸாமர்த்யமாமன்றி தர்மாதிபுருஷார்த்தங்களைப் பெறுகை ஸாமர்த்யமாக மாட்டாது. தர்மத்தை அனுஷ்டிக்கை புகழுக்காகவே யன்றிப் பரலோகத்திற்காக வன்று. பூமண்டலம் முழுவதிலும் இங்ஙனம் ப்ரஜைகள் வழியைத் தவிர்ந்து கெட்டுப்போகையில் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்ய சூத்ரர்களுக்குள் எவன் ஸமர்த்தனோ, அவனே மன்னவனாவான். ப்ரஜைகள் அர்த்தகாமங்களில் கண் வைத்த லுப்தர்களும் மனஇரக்கமற்றவர்களும் திருடர் புலி இவற்றின் செயலுடையவர்களுமான மன்னவர்களால் பெண்டிர்களும் பணங்களும் பறியுண்டு பர்வத வனங்களுக்குப் போய்ச் சேருவார்கள். அங்குக் கீரை கிழங்கு மாம்ஸம் தேன் பழம் பூ விதை இவைகளைப் புசித்துக்கொண்டு மழை யில்லாமையால் அவையும் கிடைக்காமல் துர்ப்பிக்ஷத்தினாலும் கப்பங்கொடுக்க முடியாமையாலும் வருந்துவார்கள். மற்றும், குளிர் காற்று வெய்யில் மழை பனி இவைகளாலும் பசி தாஹங்களாலும் வியாதிகளாலும் ஆத்யாத்மிகாதி ஸந்தாபங்களாலும் சிந்தையினாலும் பீடிக்கப்பட்டு ஒருவரையொருவர் பிடித்து நசித்துப் போவார்கள். கலியுகத்தில் இங்ஙனம் பீடிக்கப்படுகின்ற அம்மனிதர்களுக்கு இருபது முப்பது வருஷங்களே உத்தமமான ஆயுஸ்ஸாயிருக்கப் போகின்றது. ப்ராணிகளுடைய தேஹங்கள் கலி தோஷத்தினால் நாளுக்குநாள் க்ஷீணிக்கப் போகின்றன. வர்ணாஸ்ரமாசாரங்களுக்குரிய மனிதர்கள் வேத மார்க்கத்தையும் அவற்றில் சொன்ன தர்மத்தையும்

அனுஷ்டிக்காமையால் அவை அழியப்போகின்றன. தர்மமெல்லாம் பாஷண்டப்ராயமாய் விடப்போகின்றது. (அதாவது—கேவலம் ஜம்பத்திற்கு வைதிகவேஷம் பூண்டிருக்கையும், சாஸ்த்ரமர்யாதைகளைக் கடந்து ஆபாஸ தர்மங்களை அனுஷ்டிக்கையுமே). ராஜர்கள் பெரும்பாலும் திருடர்களாகவேயிருப்பார்கள். ப்ரஜைகளும் ராஜர்களைத் தொடர்ந்து திருடுதல், பொய் பேசுதல், வீணுக்குப் பிறரை ஹிம்ஸித்தல் முதலிய பல பாவச் செயல்களை நடத்துவார்கள். ப்ராஹ்மணாதிவர்ணங்களும் சூத்ரப்ராயமாகவே யிருக்கும். பசுக்கள் உருவத்திலும் பால்கொடுப்பதிலும் ஆடுகளைப்போன்றிருக்கும். மற்ற ஆஶ்ரமங்களும் க்ருஹஸ்தாஶ்ரமதர்மமான மைதுன தர்மத்தையே முக்யமாகக் கொண்டிருக்கும். யோனிஸம்பந்தமுடையவர்களே பந்துக்களாவார்களன்றி மற்றவர் பந்துக்களாகமாட்டார்கள். (அதாவது ஜனங்கள் பார்யையைச் சேர்ந்தவர்களையே பந்துக்களாக எடுத்துக் கொள்வார்களன்றி மற்றவர்களைப் பந்துக்களாகவே நினைக்கமாட்டார்கள்). தான்யங்களெல்லாம் அதிஸூக்ஷ்மங்களாயிருக்கும். வ்ருக்ஷங்கள் உருவத்திலும் நிழலிலும் பலத்திலும் சமீவ்ருக்ஷங்களை ஒத்திருக்கும். மேகங்கள் மின்னல் நிறைந்திருக்கும். வீடுகள் சூன்யமாயிருக்கும். (ஜனங்கள் பார்யையைச் சேர்ந்தவர்களைத் தவிர மற்றவர்களை அண்டவொட்டார்களாகையால் மற்ற பந்துக்கள் கிட்ட மாட்டார்கள். தான தர்மங்கள் செய்யார்களாகையால் அதிதிகளும் ஆகந்துகர்களும் தலைக்காட்ட வழியில்லை. இங்ஙனம் வருவார் செல்வார் எவரும் இல்லாமையால் வீடுகள் ஜனஸஞ்சாரமின்றிச் சூன்யமாயிருக்கும். அதர்மம் பலிஷ்டமாயிருக்கையால் ஸந்ததியும் விளங்காது. ஒருவர் இரு

வர் இருப்பினும் வீடுகள் களகளவென்றிராமல் சூன்ய மாயிருக்குமென்பதற்குத் தடையில்லை). இங்ஙனம் ஜனங்கள் விஷயத்தில் பொறுக்க முடியாத செயலுடைய கலியுகம் பெரும்பாலும் கடந்து செல்கையில், ஷாட்குண்ய பூர்ணனான பரமபுருஷன் தர்மத்தைப் பாதுகாக்கும்பொருட்டுச் சுத்தஸத்வமயமான திருமேனியுடன் அவதரிக்கப் போகிறான். பரமபுருஷன் மேன்மையுள்ள ப்ரஹ்மாதிகளுக்கும் தாழ்மையான மற்றவர்களுக்கும் ஹிதோபதேசஞ் செய்பவன்; சேதனாசேதனரூபமான ஸமஸ்தவஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாய்த் தரித்து நியமித்துக்கொண்டிருப்பவன்; ஆனதுபற்றியே 'விஷ்ணுவென்னும் பெயர்பெற்றவன், அத்தகையனான அப்பரமபுருஷனுடைய பிறவி ஸாதுக்களின் தர்மத்தைக் காப்பதற்கும், மோக்ஷத்திற்குத் தடையான அவர்களுடைய பாபகர்மங்களைப் போக்குவதற்கும், துஷ்டர்களை அழிப்பதற்குமே. அப்பகவான், சம்பல க்ராமத்தில் தலைவராகிய விஷ்ணு யசஸ்ஸென்னும் ப்ராஹ்மணருடைய க்ருஹத்தில் கல்கியென்னும் பெயருடன் அவதரிக்கப் போகிறான். ஜகந்நாதனாகிய அந்தக் கல்கிபகவான் மிகவும் வேகமுள்ள தேவதத்தமென்னும் குதிரையின்மேல் ஏறிக் கத்தியினால் துஷ்டர்களை அழிக்க முயன்று அணிமாதி அஷ்டைஶ்வர்யங்களும் வீர்ய தைர்யாதி குணங்களும் திகழப்பெற்று நிகரற்ற ஒளியுடையவனாகி மஹாவேகமுடைய அக்குதிரையினால் பூமியெங்கும் திரிந்து ராஜவேஷத்தினால் மறைந்திருக்கிற திருடர்களைக் கோடிகோடியாகக் கொல்லப்போகிறான். இங்ஙனம் கல்கிபகவானால் திருடர்களெல்லாரும் வதிக்கப்பட்டு முடிகையில், அக்காலத்திலுள்ள நகரத்து ஜனங்களும் நாட்டு ஜனங்களும் வாஸுதேவனுடைய

(ஸமஸ்தவஸ்துக்களிலும் நிறைந்து அவற்றின் தன்மைகள் சிறிதும் தன்மேல் தீண்டப்பெறுமல் திகழுந்தன்மையனுன பரம புருஷனுடைய) அவதாரமான கல்கிபகவானுடைய அங்கராகத்தின் சிறந்த புண்யகந்தத்தை உட்கொண்ட நற்காற்று மேல்வீசப் பெறுகையில், அவர்களுடைய மனங்கள் பரிசுத்தங்களாகப் போகின்றன. அங்ஙனம் மனம் தெளியப்பெற்ற அந்த ப்ரஜைகளின் புத்ரபௌத்ராதி ரூபமான ப்ரபஞ்சம் முழுவதும் மிகவும் தர்மிஷ்டமாகி நீண்டு வளரப்போகின்றது. சுத்த ஸத்வமயமான திருமேனியையுடைய கல்கிரூபனுன வாஸுதேவன் குடிகொண்டிருக்கப் பெற்ற அந்த ப்ரஜைகளின் மனம் ஸத்வகுணம் தலையெடுக்கப் பெற்றிருக்கும். பாபங்களைப் போக்குந் தன்மையனும் தர்மரக்ஷகனுமாகிய கல்கிபகவான் எப்பொழுது அவதரிக்கப் போகிருனே, அப்பொழுது மீளவும் க்ருதயுகம் ஆரம்பிக்கப் போகின்றது. அப்பொழுது பிறக்கும் ப்ரஜைகளெல்லாம் ஸத்வகுணம் தலையெடுக்கப்பெற்றிருக்கும். ப்ருஹஸ்பதி புஷ்ய நக்ஷத்ரத்தில் இருக்கும்பொழுது சந்த்ரஸூர்யர்கள் இருவரும் எப்பொழுது ஒருராசியில் ப்ரவேசிக்கிருர்களோ, அப்பொழுது க்ருதயுகம் துடங்கும். சந்த்ரவம்சத்திலும் ஸூர்யவம்சத்திலும் எந்தெந்த ராஜர்கள் உண்டானுர்களோ, எவரெவர் இப்பொழுது இருக்கின்றுர்களோ, எவரெவர் உண்டாகப் போகிறுர்களோ, அவர்களெல்லோரையும் உனக்குத் தொகுத்துச் சொன்னேன். மன்னவனே! நீ பிறந்தது முதல் நந்தாபிஷேகம் வரையில் இடையிலுள்ள காலம் ஆயிரத்து நூற்றுப் பதினைந்து வருஷங்களாம். (இந்த ஸங்க்யை ஒரு உத்தேசத்தைப்பற்றியது. உண்மையை ஆராய்கையில் பரீக்ஷித்துக்கும் நந்தனுக்கும் இடை

யிலுள்ள காலம் ஆயிரத்து நானூற்றுத்தொண்ணூற்றெட்டு வருஷங்களாகிறது. ஏனென்றால், பரீக்ஷித்துக்கு ஸமகாலத்திலுள்ள மாகதனான மார்ஜாரிமன்னவன் முதல் ரிபுஞ்சய மன்னவன் வரையில் இருபது மன்னவர்கள் ஆயிரம் வர்ஷங்கள் பூமியை ஆளப்போகிறார்களென்று ஒன்பதாவது ஸ்கந்தத்தில் கூறப்பட்டது. பிறகு ப்ரத்யோதன மன்னவர்கள் நூற்றுமுப்பத்தெட்டு வர்ஷங்களும், சிசுநாகர்கள் முன்னூற்றறுபது வர்ஷங்களும் பூமியை ஆளப்போகிறார்களென்று இந்த த்வாதசஸ்கந்தத்தின் ஆரம்பத்தில் கூறப்பட்டது. ஆகையால் ஆயிரத்து நானூற்றுத் தொண்ணூற்றெட்டு வருஷங்களென்பதே உண்மையாம்.) ஆனால் கலியுகம் எப்பொழுது ஆரம்பித்தது? என்கிறாயோ? சொல்லுகிறேன்; கேள். ஆகாயத்தில் கிழக்கு முகமாக விடப்பட்ட வண்டிபோல் சேர்ந்திருக்கின்ற ஏழு நக்ஷத்ரங்கள் ஸப்தரிஷிமண்டலமென்று கூறப்படுகின்றது. வண்டிபோன்ற அந்த ஸப்தரிஷிமண்டலத்தில் கொஞ்சம் உயர்ந்த ஏர்க்கால் நுனியின் ஸ்தானத்தில் இருப்பவர் மரீசி. அதற்குமேல் கொஞ்சம் வளைந்த நுகத்தடி நாட்டும் ஸ்தானத்தில் இருப்பவர் பார்யையாகிய அருந்ததியோடு கூடின வஸிஷ்டர். அதற்குமேல் கொஞ்சம் உயர்ந்த ஏர்க்காலின் அடிஸ்தானத்தில் இருப்பவர் அங்கிரஸ்ஸு. அதற்குமேல் நான்கு மூலையில் நான்கு நக்ஷத்ரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஈசான்ய மூலையில் இருப்பவர் அத்ரி. அவர்க்கு நேராகத் தென் மூலையில் இருப்பவர் புலஸ்த்யர். அவர்க்கு நேராக மேற்கு மூலையில் இருப்பவர் புலஹர். அவர்க்கு நேராக வடக்கு மூலையில் இருப்பவர் க்ரது). இங்ஙனம் ஆகாயத்தில் இருக்கின்ற ஸப்தரிஷிகள் உதிக்கும்பொழுது புலஹ

ரென்றும் க்ரது வென்றும் ப்ரஸித்தங்களான இரண்டு நக்ஷத்ரங்கள் முதலில் உதிக்கின்றன. அவ்விரண்டு நக்ஷத்ரங்களின் இடையில் அஶ்வினி முதலிய நக்ஷத்ரங்களில் ஏதேனுமொன்று அவற்ருேடு கூடவே ராத்ரியில் உதித்துப்புலப்பட்டுக்கொண்டிருக்கும். ஸப்தரிஷிநக்ஷத்ரங்கள் அந்த அஶ்வின்யாதி நக்ஷத்ரங்களில் ஒவ்வொன்ருேடு மனுஷ்யக்கணக்கில் நூறு வருஷங்கள் கூடவே இருப்பது வழக்கம். உன்னுடைய காலமாகிய இப்பொழுது அந்த ஸப்தரிஷி நக்ஷத்ரங்கள் மகாநக்ஷத்ரத்தோடு சேர்ந்திருக்கின்றன. (ஸப்தரிஷி நக்ஷத்ரங்களில் முதலில் உதிக்கின்ற புலஹாக்ரதுநக்ஷத்ரங்களோடு மகாநக்ஷத்ரம் எப்பொழுது கலந்து உதிக்க ஆரம்பித்ததோ, அதுவே கலியுகத்தின் ஆரம்பகாலமென்று உணர்வாயாக). ஷாட்குண்ய பூர்ணனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய பரமபுருஷனுடைய சுத்தஸத்வமயமாய் விளங்குகின்ற ஸ்ரீக்ருஷ்ணனென்னும்திருமேனி இப்பூலோகத்தைவிட்டு எப்பொழுது வைகுண்டலோகத்தை அடைந்ததோ, அப்பொழுது கலிபுருஷன் இவ்வுலகத்தில் ப்ரவேசித்தான். அதனுல் இவ்வுலகத்திலுள்ள ஜனமெல்லாம் பாபத்தில் மிகவும் விருப்ப முற்றிருக்கின்றது. ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனுகிய அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவான் தன்னுடைய பாதாரவிந்தங்களால் பூமியை எதுவரையில் ஸ்பர்சித்துக் கொண்டிருந்தானே, அதுவரையில் கலிபுருஷன் பூலோகத்தைப் பரிபவிக்க வல்லனுகவில்லை. (யுகஸந்தியிலன்றே ஸ்ரீக்ருஷ்ணனுடைய அவதாரம். கலியுகம் துடங்கின் பின்பும் அந்தப் பகவான் வைகுண்டலோகத்திற்கு எழுந்தருளுந்தனையும் கலிபுருஷன் தன் சக்தியை வெளியிட வல்லமையற்றிருந்தான்). எப்பொழுது ஆகாசத்தில் ஸப்தரிஷி நக்ஷத்ரங்கள் மகா

நக்ஷத்ரத்தோடு கூட ஸஞ்சரிக்கத் தொடங்கினவோ, தேவமானத்தினால் ஸந்த்யா ஸந்த்யாம்சங்களுடன் ஆயிரத்திருநூறு வருஷக் கணக்குடைய கலியுகம் அப்பொழுது ஆரம்பித்தது. எப்பொழுது ஸப்தரிஷி நக்ஷத்ரங்கள் மகா நக்ஷத்ரத்தை விட்டுப் பூராட நக்ஷத்ரத்துடன் கலந்து ஸஞ்சரிக்கப் போகின்றனவோ, அப்பொழுது நந்தராஜ்யம் தொடங்கப் போகின்றது. அது முதல் கலியுகம் வ்ருத்தி அடையப்போகின்றது. (கலிதர்மங்கள் வளரப் போகின்றன). என்றையதினம் ஸ்ரீக்ருஷ்ணன் தன்வைகுண்டலோகத்திற்கு எழுந்தருளினானோ, அன்றையதினம் அப்பொழுதே கலியுகம் தன் சக்தியை வெளியிடத்தொடங்கிற்றென்று பூர்வவ்ருத்தாந்தங்களை அறிந்த பெரியோர்கள் சொல்லுகிறார்கள். நான்காவதான கலியுகத்தில் தேவமானத்தினால் ஆயிரம் வர்ஷங்கள் செல்ல அதன் முடிவில் மீளவும் க்ருதயுகம் தொடங்கப் போகின்றது. அதற்கு என்ன அடையாளமென்றால், அப்பொழுது மனுஷ்யர்களின் மனம் ஆத்ம ஸ்வரூபத்தை ஆராய்ந்தறிவதில் திறமையுள்ளதாயிருக்கும். இந்த வைவஸ்வதமனுவின் வம்சம் ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு விதமான நிலைமையுடன் இருப்பதை இவ்வாறு விவரித்துச் சொன்னேனல்லவா? இங்ஙனமே வைஸ்யர் சூத்ரர் ப்ராஹ்மணர் ஆகிய இம்மூன்று வர்ணத்தவர்களின் வம்சங்களும் அந்தந்த யுகங்களில் அந்தந்த நிலைமையுடன் இருப்பதை ஊஹித்தறிய வேண்டும். இத்தகைய நாமரூபங்களை யுடையவர்களும் மஹானுபாவர்களுமான பூர்வ புருஷர்கள் அனைவரும் இப்பொழுது கதை மாத்ரத்தினால் மிகுந்திருக்கிறார்களன்றி அவர்கள் உருவத்துடன் இருப்பதில்லை. ஆயினும் அவர்களுடைய கீர்த்தி மாத்ரம் பூமண்டலத்தில் நிலை

நின்றிருக்கின்றது. ஆகையால் எவ்வளவு மேன்மை யோடிருப்பினும் இவ்வுலக வாழ்வு நிலையன்று. இதை நிலையென்று ப்ரமிக்கலாகாது. இதில் ஸுகபுத்தி கொண்டு இதில் மனந்தாழலும் ஆகாது. ஆனால் இருக்குந்தனையும் நல்ல புகழை விளைத்துக்கொள்ள வேண்டும். அப்படியாயின், அவர்கள் போனபினபும் அவர்களுடைய புகழ் மாறாது விளங்கிக் கொண்டிருக் கும். இம்மன்னவர்களில் பலரும் பகவத் பக்தர்களாகை யால் அவர்களுடைய சரித்ரங்களைச் சொல்லுவதும் கேட்பதும் புண்யமாம். ஆகையால் இச்சரித்ரங்களில் வீணாக ஏன் பொழுது போக்கவேண்டுமென்று நினைக்க லாகாது. சந்தனுவின் ப்ராதாவாகிய தேவாபியென்கிற சந்த்ர வம்சத்தரசனும், இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த மருவெனகிற ஸூர்யவம்சத்தரசனும் ஆகிய இவ்விரு வரும் மிகுந்த யோகபலத்துடன் கூடி இப்பொழுது கலாபமென்னும் க்ராமத்தில் வஸித்துக்கொண்டிருக் கிறார்கள். கலியுகம் முடிந்தபின்பு க்ருதயுகத்தின் ஆரம் பத்தில் அம்மன்னவர்கள் இருவரும் வாஸுதேவனால் வர்ணாஸ்ரம தர்மங்களெல்லாம் உபதேசிக்கப்பெற்று இவ்வுலகத்தில் வந்து வர்ணாஸ்ரமதர்மத்தை முன்போல் நடத்தப்போகிறார்கள். க்ருதயுகம் த்ரேதாயுகம் த்வா பரயுகம் கலியுகம் ஆகிய நான்கு யுகங்களும் இப்புவியில் ப்ராணிகளிடத்தில் இவ்வண்ணமாகவே இருக்குமன்றி இந்நிலைமைக்கு மாறுபாடில்லை. (இப்பொழுது க்ருதத் ரேதாதி சதுர்யுகத்தின் தர்மநிலைமை எங்ஙனம் இருக்கு மென்று நீ கேட்டுணர்ந்தனையோ, மேல்வரப்போகிற ஒவ் வொரு சதுர்யுகத்தின் தர்மநிலைமையும் இங்ஙனமே இருக்குமென்றுணர்வாயாக). (த்ரேதாத்வாபரயுகங்க ளின் நிலைமையை இங்கு நிரூபிக்கவில்லையாகையால்

இங்ஙனமே க்ருதத்ரேதாதி சதுர்யுகத்தின் நிலைமையும் இருக்குமென்பது சரியன்று. ஆயினும், ஆத்யந்தயுகங்களின் நிலைமை நிரூபித்தமையால் இடையிலுள்ள மற்ற இரண்டு யுகங்களின் நிலைமையும் நிரூபிக்கப்பட்டாற்போலவே யென்னும் அபிப்ராயத்தினால் இங்ஙனம் கூறப்பட்டது). ராஜனே! இப்பொழுது நான நிரூபித்துச் சொன்ன மன்னவர்களும் மற்றவர்களும் இந்தப் பூமியிடத்தில் மமதாபுத்தியை (என்னுடைய தென்னும் அபிமானத்தைப்) பண்ணிக் கடைசியில் (அந்தப் பூமியின் அனுபவத்திற்கு ஹேதுவான புண்யத்தின் முடிவில் அந்த மமதையோடுகூடவே) மரணம் அடைந்தார்கள். ராஜனென்னும் பேருடைய சரீரத்திற்கும் கடைசியில் புழுவெனறுவது விஷ்டை யெனறுவது பஸ்மமென்றுவது ஏதேனுமொருபெயர் உண்டாகும். (ராஜனுயிருப்பவன மரணம் அடைகையில், அந்த ராஜ சரீரத்தை அக்னி ஸம்ஸ்காராதிகள் செய்யாமல் பூமியில் எறிந்து விடுவார்களாயின், நரி முதலிய ஜந்துக்களும் பக்ஷிக்காது விடுமாயின், அது புழுத்துப்போம். அப்பொழுது ராஜனென்னும் பெயர் பெற்றிருந்த அந்தச் சரீரமே புழுவென்னும் பெயர் பெறும். நரி கழுகு முதலிய ஜந்துக்கள் பக்ஷிக்குமாயின், அப்பொழுது விஷ்டையென்னும் பெயர் பெறும். அக்னி ஸம்ஸ்காரஞ் செய்வார்களாயின், பஸ்மமென்னும் பெயர் பெறும், ஆகையால் ராஜசரீரத்திற்கும், புழு விஷ்டை பஸ்மம் என்னும் பெயர்களில் ஏதேனுமொருபெயர் நேருமேயன்றி நேராமற்போகாது) அத்தகைய தேஹத்திற்காக நரகத்திற்கிடமான பூதத்ரோஹத்தை நடத்துகிற அம்மன்னவன் தனக்கு ஹிதமான புருஷார்த்தம் இன்னதென்பதை எங்ஙனம் அறிந்தவனுவான. (அவன் தனக்கு ஹிதம் இன்ன

தென்று தெரிந்துகொண்டிருப்பானாயின், அங்ஙனம் ப்ராணிகளுக்கு த்ரோஹஞ் செய்வானா? செய்யமாட்டான். த்ரோஹஞ் செய்கிறவன் ஹிதத்தைச் சிறிதும் அறிந்தவனல்லனென்பதில் ஸந்தேஹமே இல்லை.) 'இந்தப் பூமண்டலம் முழுவதும் என்னுடைய பூர்வபுருஷர்களின் ஆதீனத்தில் இருந்தது. அங்ஙனமே இப்பொழுது என்னுடைய ஆதீனத்தில் இருக்கின்றது. இது என்பிள்ளைக்கும் என்பேரனுக்கும் மற்றும் என் வம்சத்தில் பிறந்த மற்றவர்களுக்குமே எப்படி அதீனமாயிருக்கும்? அதற்கு நான் என்ன உபாயஞ் செய்யவேண்டும்? என்ன உபாயஞ் செய்தால் இந்தப்பூமி என்வம்சத்தவர்களை விட்டு எப்பொழுதும் மாறாதிருக்கும்?' என்று இதில் மமதாபுத்தியை நெடுந்தூரம் வளர்த்திக்கொள்கிறான். 'ஆத்மா தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்டவன்' என்னும் அறிவில்லாத மூடர்கள் பலரும் அக்னி ஜலம் பூமி இவை முதலிய பஞ்ச பூதங்களின் பரிணாமமான தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்துப் பூமியை என்னுடையதென்று அபிமானித்து நானென்று (ஆத்மாவென்று) ப்ரமித்த தேஹத்தையும் என்னுடையதென்று ப்ரமித்த பூமியையும் ஆகிய அவ்விரண்டையும் துறந்து கடைசியில் (ப்ராரப்தகர்மாவஸானத்தில்) மரணம் அடைந்தார்கள். ராஜனே! எந்தெந்த ராஜர்கள் இப்பூமியைப் பௌருஷத்துடன் ஆண்டு வந்தார்களோ, அவர்கள் எல்லோரும் காலத்தினால் முடிக்கப்பட்டார்கள்; கதைகளில் தாங்கள் நடையாடும்படி கதையே உருவமாயிருக்கப்பெற்றவர்களாகவும் செய்யப்பட்டார்கள். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ பூமிகீதங்களால் ராஜ்யதோஷாதிகளை யும், தோஷ பூயிஷ்டமான கலியில் தோஷங் களைப் போக்குவது ஸ்ரீஹரி நமஸ்காரமே யென்பதையும் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இப்பூமி தன்னைப் பிற ரிடத்தினின்று ஜயித்து ஸ்வாதீனப் படுத்திக்கொள்வ தில் முயற்சியுடைய மன்னவர்களை நோக்கித் தனக்குள் பரிஹஸிக்கின்றது. 'ம்ருத்யுவுக்கு விளையாட்டு பொம் மைகள் போன்ற இம்மன்னவர்கள் என்னைப் பிறர்வசத் தில் போகாதபடி வென்று ஸ்வாதீனப் படுத்திக்கொண் டு புஜிக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள். தங்கள் தந்தை மரணம் அடைந்ததைக் கண்டவர்களாகையால் அவனைப்போல் தாமும் மரணம் அடைவது நிச்சயமென் பதை அறிந்தவர்களாயினும் இம்மன்னவர்கள் இங்ங னம் விரும்புவது வீணே. இவர்கள் இவ்விருப்பத்தினால் நீர்க்குமிழிபோல் நிலையற்றதாகிய சரீரத்தில் 'இது நிலை நின்றிருப்பது' என்னும் பெரிய விஸ்வாஸம் உண்டாகப் பெறுகிறார்கள். (இப்பூமி தமக்கே நிலைநின்றிருக்கவே ண்டுமென்னும் வீண்விருப்பத்தினால் சரீரம் நீர்க்குமி ழிபோல் நிலையற்றதென்பதையும் மறந்துவிடுகிறார்கள். இந்த்ரியஸுகங்களில் மனவிருப்பமுற்றிருப்பானாயின், ராஜ்யப்ராப்தி நேராதாகையால் முதலில் ஆறு இந்த்ரி யங்களையும் ஜயித்து (அவ்வழியால் தேவதைகளின் அனுக்ரஹத்தைப் பெற்று)க் கண்டகங்கள்போன்ற ரா ஜன் மந்த்ரி மற்று முள்ள ஸஹாயர்கள் பட்டணத்து ஜனங்கள் அவர்களுக்கு ஆப்தர்கள் யானைப்பாகர்கள் இவர்களை யெல்லாம் ஜயித்து இங்ஙனம் க்ரமமாக ஸமு த்ரங்களை அரைநாண்மாலையாகவுடைய (ஸமுத்ரங்க ளால் சூழப்பட்ட) பூமண்டலம் முழுவதையும் ஜயிக்க

வேண்டுமென்று மனத்தில் பேராசைகொண்டு ஸமீபித்திருக்கின்ற ம்ருத்யுவையும் ஆலோசிக்கிறதில்லை. இங்ஙனம் ஸமுத்ரங்களால் சூழப்பட்ட பூமண்டலத்தை ஜயித்து அனந்தரம் ஸமுத்ரத்தினிடையிலுள்ள த்வீபங்களையும் ஜயிக்க விரும்புகிறார்கள். பூமண்டலத்தையும் த்வீபாந்தரங்களையும் ஜயிப்பது இந்த்ரியஜயத்திற்கு எவ்வளவு பயன்? இது நச்வரமாகையால் இந்த்ரியஜயத்திற்கு இதைப் பயனாக நினைக்கவுங்கூடாது. ஆனால் அதற்குப் பலன் யாதெனில், இந்த்ரியஜயத்திற்கு மோக்ஷம் பெறுகையே பயனாம். குருகுலத்தை மேன்மைப் படுத்துந் தன்மையனே ! மனுக்களும் மனுபுத்ரர்களும் (தர்மமார்க்கத்தில் நிலைநின்று ஒருமயிரிழையும் பிசகாமல்) என்னை ஆண்டுவந்தும் கடைசியில் என்னை விட்டு மரணம் அடைந்தார்களேயன்றி என்னையும் தம்மோடு கூடக் கட்டிக்கொண்டு போகவில்லை. இப்பொழுதும் அவர்களே நிலையாயிருந்து ஆள்கின்றார்களென்பதும் இல்லை. புத்தியில்லாத இம்மூடர்கள் அப்படிப்பட்ட என்னை யுத்தத்தினால் ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளப் போகிறார்களாம். இவர்களும் அவர்களைப்போலவே என்னை விட்டுத் தனியே போகப் போகிறார்களன்றி என்னையும் தம்மோடுகூடக் கொண்டுபோகப் போகிறதுமில்லை; இங்கேயே நிலையாயிருந்து என்னை ஆளப்போகிறது மில்லை. இவர்களது விருப்பமெல்லாம் வீணேயன்றிச் சிறிதும் உண்மையன்று. துர்ப்புத்திகள் ராஜ்யத்தில் மமதாபிமானத்தினால் மனம் கட்டுண்டு என்னைத் தாங்களே ஆளவேண்டுமென்று பிள்ளைகளோடும் தந்தைகளோடும் சண்டை செய்கிறார்கள். மன்னவர்கள் 'இந்தப் பூமியெல்லாம் என்னுடையதே. உனக்குக் கிடையாது' என்று சொல்லிக்கொண்டு எனக்காக ஒருவர்மேல் ஒருவர் பொ

ருமையுறறு ஒருவரையொருவர் வதிக்கின்றூர்கள்; கடைசியில் அந்த அபிமானத்துடனே மரணம் அடைகின்றூர்களன்றித் தங்கள் விருப்பம் நிறைவேறப் பெறுகிறதில்லே. ப்ருது புரூரவன் காதி நஹுஷன் பரதன் அர்ஜுனன் மாந்தாதா ஸகரன் ராமன் கட்வாங்கன் துந்துமாரன் ரகு த்ருணபிந்து யயாதி சர்யாதி சந்தனுகயன் பகீரதன் குவலயாஸ்வன் ககுத்ஸ்தன் நைஷதன் (நலன்) ந்ருகன் ஹிரண்யகசிபு வ்ருத்ரன் உலகங்களை அழப்படுத்திக் கொண்டிருந்த ராவணன் நமுசி சம்பரன் பௌமன் ஹிரண்யாக்ஷன் தாரகன் இவர்களும் மற்றும் பல அஸுரர்களும் அரசர்களும் பூமண்டலத்தை ஆண்டு வந்தார்கள். அவர்கள் எல்லோரும் எல்லோரையும் ஜயித்தவர்களும் ஒருவராலும் ஜயிக்கப் படாதவர்களுமாயிருந்தார்கள். அவர்கள் எல்லாரும் என்னிடத்தில்,இப்பூமண்டலமெல்லாம் என்னுடையது' என்னும் பெரிய மமகாரத்தை ஏற்றுக்கொண்டிருந்தார்கள். மனுஷ்யர்களுக்கு மரணம் அடைகை பொதுவான தர்மமாகையால் அது தமக்கும் உள்ளதாயினும் அதை நினையாமல் தாங்கள் ஸ்திரமாயிருப்பதாகவும் பூமண்டலத்தையெல்லாம் தாமே ஆள்வதாகவும் அபிமானித்துச் சிலகாலம் இப்பூமண்டலத்தை ஆண்டுவந்தார்கள். ப்ரபூ! அவர்களும் தங்கள் போகாபிலாஷம் நிறைவேறப்பெருமலே காலத்தினுல் கதாசேஷர்களாகச் (கதையே மிகுந்திருக்கும்படி) செய்யப் பட்டார்கள். ('ப்ருது இருந்தான். புரூரவன் இருந்தான்; ஸகரன் இருந்தான். பகீரதன் இருந்தான்' என்று கதைசொல்லுகிறேமன்றி அவர்கள் இப்பொழுது இல்லேயல்லவா?) திறமையுள்ளவனே! உலகங்களில் புகழைப் பரப்பிப் பரலோகம் அடைந்த மஹானுபாவர்களான பெரியோர்

களின் இக்கதைகளை விஷயங்கள் அஸாரங்களென்றறிந்து அவற்றில வைராக்யம் உண்டாகும்பொருட்டு உனக்கு மொழிந்தேன். இவ்விஷயங்களெல்லாம் பேசுந்திறமையுடையவர்கள் தங்கள் திறமைக்குப் போக்குவீடாகப் பேசுபவைகளே யன்றிப் பரமபுருஷார்த்தத்திற்கு உபாயங்களாகமாட்டா. (ஆனால் பரமபுருஷார்த்தத்திற்கு உபாயம் எதுவென்றால், சொல்லுகிறேன்; கேட்பாயாக) வேதம் முதலியவைகளில் சொன்ன உத்தமஸ்லோகனான பகவானுடைய குணங்களை அனுவதித்துப் பெரியோர்கள் ஸர்வகாலமும் பாடுவார்கள். அப்பாட்டு ஸம்ஸாரத்திற்கு ஹேதுவான பாபங்களைப் போக்கும். ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பரிசுத்தமான பக்தியை விரும்புவானாயின், அப்பெரியோர்கள் பாடுகிற பகவத்குணங்களைத் தினந்தோறும் ஓயாமல் கேட்கவேண்டும்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—பகவத்குணங்களை மனனஞ்செய்யும் மஹானுபாவரே! கலியுகத்திலுள்ள ஜனங்கள் மேன்மேலும் வளர்ந்திருக்கின்ற கலிதோஷங்களை எந்த உபாயத்தினால் நசிப்பித்துக் கரையேற முடியுமோ, அந்த உபாயத்தை எனக்கு உள்ளபடி விவரித்துச் சொல்லவேண்டும். மற்றும், யுகங்களையும் யுகதர்மங்களையும் ப்ரளயம் ஸ்ருஷ்டி இவைகளின் பிரிவினைகளையும் ஸர்வாந்தராத்மாவும் ஸர்வநியாமகனும் மஹானுபாவனுமான ஈஸ்வரனுக்குச் சரீரமான காலத்தின் கதியையும் எனக்கு மொழிவீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—க்ருதயுகத்தில் தர்மம் அந்த யுகத்து ஜனங்களால் அனுஷ்டிக்கப்பட்டு நான்கு பாதங்களுடன் நடையாடிவருகின்றது. மன்னவனே!

பரிபூர்ணமான தர்மத்திற்கு ஸத்யம் தயை தவம் தானம் என்னும் இந்நான்கும் நான்கு பாதங்கள். அந்த க்ருத யுகத்து ஜனங்கள் தெய்வாதீனமாய்க் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷமுற்றிருப்பார்கள்; மற்றும், பிறர் துக்கம் பொறுமல் வருந்தி அதைப் போக்க வேண்டுமென்னும் விருப்பமுடையவர்களாயிருப்பார்கள்; ஸமஸ்த பூதங்களிடத்திலும் மைத்ரி (ஸ்னேஹம்) உண்டாகப்பெற்றிருப்பார்கள்; உள்ளிந்த்ரியமான மனத்தையும் வெளியிந்த்ரியங்களான கண் காது முதலியவைகளையும் அடக்கி ஆள்வார்கள்; குளிர் வெய்யில் ஸுகம் துக்கம் முதலிய த்வந்த்வங்களைப் பொருள் செய்யாமல் பொறுத்திருப்பார்கள்; ஆத்மானுபவத்தினுல் களித்திருப்பார்கள்; ஜாதி குணம் முதலிய தாரதம்யங்களைப் பாராமல் எல்லாம் பரமாத்மஸ்வரூபமேயென்று நினைத்திருப்பார்கள்; பெரும்பாலும் தவம் முதலியவற்றுல் சரீரத்தை வருத்துவார்களன்றிச் சரீர போகங்களை எதிர்பார்க்க மாட்டார்கள். (எல்லோரும் இப்படி இருப்பார்களாயின் மோக்ஷம் பெற்றுவிடுவார்களாகையால் மற்ற யுகங்களுக்கு ப்ரஸக்தியே நேரிடாதே யென்று சங்கிக்கவேண்டாம். பெரும்பாலும் அப்படி யிருப்பார்களன்றி எல்லோரும் அப்படியே இருப்பார்களென்று சொல்ல முடியாது. ஆகையால் எல்லாரும் மோக்ஷம் அடைகைக்கு ப்ரஸக்தி இல்லாமையால் மற்றயுகங்களுக்கு ப்ரஸக்தி இல்லையே யென்று சங்கிக்க இடமில்லை. மற்ற யுகங்களைப்போலல்லாமல் க்ருதயுகத்தில் ப்ரஜைகள் பெரும்பாலும் தர்மிஷ்டர்களாயிருப்பார்கள். பொய் பேசுகை பிறரை ஹிம்ஸிக்கை எவ்வளவு பெறினும் ஸந்தோஷமுறுமை நிஷ்காரணமாக ப்ராணிகளோடு விரோதிக்கை ஆகிய இந்நான்கும் அத

ர்மத்தின் பாதங்கள். த்ரேதாயுகத்தில் இவ்வ தர்மத்தின் பாதங்களால் தர்மத்தின் பாதங்களில் ஒவ்வொன்றிலும் நான்கில் ஒரு பாகம் மெல்லமெல்ல க்ஷீணிக்கின்றது. அந்த த்ரேதாயுகத்து ஜனங்கள் கர்மானுஷ்டானத்திலும் தவத்திலும் நிலைநின்றிருப்பார்கள்; பெரும்பாலும் ப்ராணிஹிம்ஸையில் ஊக்க முற்றிருக்கமாட்டார்கள்; சப்தாதி விஷயங்களிலும் அவ்வளவாக விருப்பங்கொள்ளமாட்டார்கள்; தர்ம அர்த்த காமங்களில் பெரும்பாலும் ஊக்கமுற்றிருப்பார்கள். வைதிக தர்மங்களை இடைவீடின்றி அனுஷ்டிக்கையால் முதிர்ந்திருப்பார்கள். மன்னவனே! ப்ராஹ்மணாதி நான்கு வர்ணங்களிலும் ப்ராஹ்மணவர்ணமே தலையெடுத்திருக்கும். த்வாபரயுகத்தில் பிறரை ஹிம்ஸிக்கை எவ்வளவு பெறினும் ஸந்துஷ்டியில்லாமை பொய் பேசுகை ப்ராணித்வேஷம் என்னும் அதர்மலக்ஷணங்களால் தவம் ஸத்யம் தயை தானம் என்கிற தர்மத்தின் பாதங்களில் ஒவ்வொன்றிலும் பாதி குறைகின்றது. (பொய் பேசுகையால் ஸத்யமும், ஹிம்ஸையினால் தயையும், அஸந்துஷ்டியால் தவமும், ப்ராணித்வேஷத்தினால் தானமும் குறைகின்றன). அந்த த்வாபரயுகத்து ஜனங்கள் பெரும்புகழுடையவர்களும் பஞ்ச மஹாயஜ்ஞங்களை அனுஷ்டிப்பவர்களும் வேதமோதுவதில் ஊக்கமுற்றவர்களும் பணக்காரர்களும் குடும்பிகளும் கர்வமுற்றவர்களுமாயிருப்பார்கள். மற்றவர்ணங்களைக்காட்டிலும் ப்ராஹ்மண க்ஷத்ரிய வர்ணங்களிரண்டும் ப்ரதானமாயிருக்கும். கலியுகத்தில் தர்மத்தின் பாதங்களாகிய ஸத்யம் தயை தவம் தானம் என்னும் இவைகளில் ஒவ்வொன்றிலும் நான்கில் ஒரு பாகமே மிகுந்திருக்கும். அதுவும் நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்ற அதர்மலக்ஷணங்க

ளான ஹிம்ஸாதிகளால் க்ஷீணித்துக் கடைசியில் அடி யோடு அழிந்து விடும். அந்தக் கலியுகத்தில் ஜனங் கள் லோபமே (பேராசையே) தலையெடுத்திருப்பார்கள். துராசாரம் தலை கொண்டிருக்கும். தயையென்கிற பேச்சும் புலப்படாது. ஜனங்கள் நிஷ்காரணமாக ஒரு வரோடொருவர் விரோதித்துக்கொள்வார்கள்; மற் றும், பாக்யஹீனர்களாயிருப்பார்கள். அவர்களுக்கு அர்த்த காமங்களில் விருப்பம் அளவற்றிருக்கும். சூத் ரர்களும் செம்படவர் முதலிய மற்ற ஹீனஜாதியர்களு மே தலையெடுத்திருப்பார்கள். (யுகங்கள் இப்படி விஷ மங்களாயிருப்பதற்குக் காரணம் என்னவென்றால், சொல்லுகிறேன்; கேள்). ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் குணங்கள் புருஷனிடத்தில் புலப்படுகின்றன. அவை காலத்தினால் தூண்டப்பட்டுப் புருஷனுடைய மனத்தில் ஒருகால் வளர்வதும் ஒருகால் குறைவதுமா யிருக்கின்றன. எப்பொழுது மனமும் அதைத் தொடர் ந்த புத்தியும் இந்த்ரியங்களும் ஸத்வகுணம் தலையெடுத் திருக்குமோ, அப்பொழுது க்ருதயுகமென்று அறிய வேண்டும். அப்பொழுது ஜனங்களுக்கு ஜ்ஞானத்தி லும் தவத்திலும் ருசி உண்டாயிருக்கும். சிறந்த மதி யுடையவனே! எப்பொழுது காம்ய கர்மங்களில் (பலனை விரும்பிச் செய்யுங் கார்யங்களில்) ப்ரஜைகளுக்கு மிக வும் ப்ரீதி உண்டாகின்றதோ, அப்பொழுது ரஜோகு ணம் தலையெடுக்கப் பெற்ற த்ரேதாயுகமென்று தெரிந் துகொள்வாயாக. எப்பொழுது லோபம் அஸந்துஷ்டி (ஸந்தோஷமில்லாமை) கர்வம் தம்பம் மத்ஸரம் (பிறரு டைய நன்மையில் த்வேஷம்) காம்ய கர்மங்களில் ப்ரீதி இவை ப்ரஜைகளுக்கு உண்டாகின்றனவோ, அப்பொ ழுது ரஜஸ்தமோ குணங்களின் கார்யங்கள் முக்யமா

யிருக்கப்பெற்ற த்வாபரயுகமென்று தெரிந்துகொள்வாயாக. எப்பொழுது கபடம் பொய்பேசுகை சோம்பல் நித்ரை ஹிம்ஸை மனவருத்தம் கண்ணீர் பெருக்குதல் முதலியவற்றிற்கிடமான சோகம் மோஹம் பயம் தைன்யம் இவை ப்ரஜைகளுக்குத் தலையெடுத்திருக்குமோ, அப்பொழுது தமோகுணத்தையே முக்யமாகவுடைய கலியுகமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். கலியுகத்தில் ஜனங்கள் மந்தமதிகளும் மந்தபாக்யர்களும் மிதமின்றிப் புசிப்பவர்களும் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கவேண்டுமென்னும் விருப்பம் தலையெடுத்தவர்களும் பணமற்றவர்களுமாயிருப்பார்கள். ஸ்த்ரீகள் பரபுருஷனைப் புணருந்தன்மையர்களும் மற்றும் பல கெடு நடத்தைகளுடையவர்களுமாயிருப்பார்கள்: கலியுகத்தில் தேசங்களெல்லாம் திருடர்களால் பீடிக்கப்பட்டிருக்கும். வேதங்கள் பாஷண்டர்களால் தூஷிக்கப்பட்டிருக்கும். (பாஷண்டிகள் வேதங்களுக்கு விபரீதமான பொருள்களைக் கூறி அவற்றைப் பாழ் செய்வார்கள்). அரசர்கள் ப்ரஜைகளைப் பீடிப்பதில் கண் வைத்திருப்பார்களன்றிப் பாதுகாப்பதில் சிறிதும் கண்வைக்கமாட்டார்கள். ப்ராஹ்மணர்கள் சிஸ்ன உதர போஷணத்தில் ஊக்கமுற்றிருப்பார்கள் (வயிறு நிரம்பப் புசிப்பதும் வனிதைகளைப் புணர்வதுமாயிருப்பார்களன்றித் தமக்கு ஏற்பட்ட கடமைகளைச் சிறிதும் அனுஷ்டிக்கமாட்டார்கள்). வடுக்கள் (ப்ரஹ்மசர்யாஸ்ரமத்திலிருக்கும் பிள்ளைகள்) தங்கள் ஆஸ்ரமத்திற்கு ஏற்பட்ட வ்ரதங்களைச் சிறிதும் பாராட்டாமல் சௌசஹீனர்களுமாயிருப்பார்கள். க்ருஹஸ்தர்கள் பிச்சைக்குப் போவார்களன்றிப் பிறர்க்குப் பிச்சையிடமாட்டார்கள். வானப்ரஸ்தர்கள் வனத்தைவிட்டு க்ராமத்திலேயே நியதவா

ஸஞ் செய்வார்கள். ஸந்யாஸிகள் பணத்தாசை பிடித்துத் தவிப்பார்கள். ஸ்த்ரீகள் சரீரம் குள்ளமாயிருக்கப் பெற்று அமிதமாகப் புசிப்பவர்களும் பல பிள்ளைகள் பெற்றவர்களும் சிறிதும் வெட்கமின்றி எப்பொழுதும் கடோரமாகப் பேசுந்தன்மையர்களும் திருட்டுத்தனம் கபடம் பெருப்பெரிய ஸாஹஸங்கள் இவையுடையவர்களுமாயிருப்பார்கள். வர்த்தகர்கள் அல்பத்தனமுடையவர்களும் தரித்ரர்களுமாகிக் கபடத்தையே முன்னிட்டுக்கொண்டு வியாபாரஞ் செய்வார்கள். ஜனங்கள் ஆபத்தில்லாத காலத்திலும் வட்டிவாங்கிப் பிழைப்பது முதலிய நிந்தைக்கிடமான வைஶ்யவ்ருத்தியை நல்லதென்று நினைப்பார்கள். ப்ரபு பணமற்றிருப்பானாயின் மற்ற விதங்களில் எல்லோரிலும் மேன்மையுற்றிருப்பினும் வேலைக்காரர்கள் அவனைத் துறந்துவிடுவார்கள். ப்ரபுக்களும் ரோகாதிகளால் கார்யஞ் செய்யவல்லமையற்ற வேலைக்காரனைத் துறப்பார்களன்றி அவனைப் போஷிக்கமாட்டார்கள். ஜனங்கள் குலபரம்பரையாக வந்த பாகவத தர்மத்தையும் நெடுநாள் பால் கறந்து முதிர்ந்தமையால் பால் கறவாதிருக்கின்ற பசுக்களையும் துறப்பார்களன்றிப் பாதுகாக்கமாட்டார்கள். ஜனங்கள் தந்தை உடன் பிறந்தவர் நண்பர் ஜ்ஞாதிகள் இவர்களைத் துறந்து *ஸுரதநிமித்தமான ஸ்நேஹத்தையே முக்யமாகக் கொண்டிருப்பார்கள். மைத்துனி மைத்துனன் இவர்களோடு கலந்தாலோசிப்பார்களன்றித் தந்தை உடன் பிறந்தவர் முதலியவர்களோடு கலந்தாலோசிக்கமாட்டார்கள். எவ்வளவு இருப்பினும் தம்வயிற்றை நிறைப்பதொழியப் பிறர்க்குச் சிறிதும் இட மனங்கொள்ள மாட்டார்கள். ஸ்த்ரீகளுக்கு உட்பட்டு நடப்

* ஸுரதம்—ஆணும் பெண்ணுமாய்க் கலக்குங்கலவி.

பார்களன்றித் தந்தை முதலியவர்களுக்கு உட்படமாட்டார்கள். கலியுகத்து ஜனங்கள் இத்தகையர்களாயிருப்பார்கள். சூத்ரர்கள் தவம் வித்யை இவைகளால் ஜீவிப்பவர்களாகி ப்ரதிக்ரஹஞ் செய்வார்கள் (தானம் வாங்குவார்கள்). தாங்கள் தர்மத்தை உணராதவர்களாயினும் உத்தமாஸனத்தின்மேல் ஏறிக்கொண்டு தெரிந்தவர்கள்போல் தர்மத்தை உபதேசிப்பார்கள். (தர்மந் தெரியாதவர்கள் தர்மத்தை எப்படி உபதேசிப்பார்களென்றால், தர்மோபதேசஞ் செய்வதுபோல் ஏதேனுமொன்றைப் பிதற்றிக் கொண்டிருப்பார்களன்றி வேறில்லை.) ஜனங்கள் எதிலும் மனம் நிலைநிற்கப் பெறமாட்டார்கள்; ஏதேனுமொன்றைக் குறித்து என்றும் பயப்பட்டுக்கொண்டிருப்பார்கள். மன்னவனே! பூமியில் எவ்வித ஆஹாரமும் கிடைக்கப் பெறாமல் துர்ப்பிக்ஷத்தினாலும் கப்பங் கொடுப்பதினாலும் பீடிக்கப்பட்டிருப்பார்கள்; மற்றும், மழை பெய்யாமையால் 'நாம் எப்படி ஜீவிப்போம்?'' என்று பயந்து வருந்துவார்கள். கலியுகத்தில் ப்ரஜைகள் ஆடை ஆஹாரம் பானம் படுக்கை ஸ்த்ரீ ஸம்போகம் ஸ்நானம் ஆபரணம் இவையின்றிப் பிசாசம் போன்றிருப்பார்கள். கலியில் ஒரு பலகரை மாத்ரத்திற்காகவும் ஒருவரோடொருவர் விரோதித்துக் கொண்டு ஸ்னேஹத்தைத் துறந்து ப்ரியமான ப்ராணன்களையும் இழப்பார்கள்; ஸ்வல்பத்திற்காக பந்துக்களையும் வதிப்பார்கள். மனுஷ்யர்கள் வ்ருத்தர்களான (வயது முதிர்ந்த) தாய்தந்தைகளையும் எல்லா விஷயங்களிலும் ஸமர்த்தர்களான பிள்ளைகளையும் (திறமையுள்ள பார்யையையும்) ரக்ஷிக்க மாட்டார்கள்; அற்பத்தனமுடையவர்களாகிச் சிச்னம் உதரம் இவற்றின் த்ருப்தியையே நிறைவேற்றிக் கொள்ள முயல்வார்கள். ராஜனே! கலி

யில் ஜனங்கள் பாஷண்டர்களால் மனம் கலங்கப்பெற்று உலகங்களுக்கு மேலான குருவும் மூன்று உலகங்களுக்கும் நாதனுன ப்ரஹ்மதேவனுல் வணங்கப்பட்ட பாதாரவிந்தங்களுடையவனும் ஷாட்குண்யபூர்ணனும் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாதவனுமாகிய பரம புருஷனைப் பெரும்பாலும் பூஜிக்க மாட்டார்கள். மரணம் அடைகிறவனும் ரோகாதிகளால் பீடிக்கப்பட்டவனும் பதிதனும் தன்னுடைய வர்ணாஸ்ரம தர்மங்களினின்று நழுவினவனும் புத்தி ஸ்வாதீனமற்றிருக்குந் தசையிலும் எவனுடைய நாமதேயத்தை உச்சரிப்பானுயின், கர்மங்களாகிற ப்ரதிபந்தகங்களெல்லாம் விடுபட்டுச் சிறந்த கதியைப் பெறுவானே, அத்தகைய பரம புருஷனைக் கலியுகத்து ஜனங்கள் ஆராதிக்க மாட்டார்கள். த்யானத்தினுல் ஹ்ருதயத்தில் நிறுத்தப்பட்ட ஷாட்குண்ய பூர்ணனுன புருஷோத்தமன், நிஷித்த வஸ்துக்களாலும் நிஷித்த தேசத்தினுலும் சப்தாதிவிஷயங்களில் தாழ்ந்த மனத்தினுலும் புருஷர்களுக்கு விளைகின்ற கலிதோஷங்களை யெல்லாம் போக்கி விடுவான். (அப்பரம புருஷனை எப்படி ஹ்ருதயத்தில் நிலைநிறுத்த முடியுமென்றுல், சொல்லுகிறேன்). பெரியோர்கள் பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை நிரூபிக்கும்பொழுது ப்ரீதியுடன் கேட்பது வாயால் அவனைக் கீர்த்தனஞ் செய்வது மனத்தில் த்யானிப்பது பூஜிப்பது அவனை ஆதரிப்பது இவைகளால் அப்பரம புருஷனை ஹ்ருதயத்தில் நிலைப்படுத்த வேண்டும். அங்ஙனம் நிலைநின்ற அப்பரம புருஷன் பதினுயிரம் ஜன்மங்களால் ஸம்பாதித்த பாபங்களை யெல்லாம் போக்கி விடுவான். ஸ்வர்ணத்தை அக்னியில் காய்ச்சினுல், அதில் ஸம்பந்தித்த அவ்வக்னி தாம்ரம் முதலிய இதர லோஹங்களின் ஸம்பந்தத்தினுலுண்

டான அந்த ஸ்வர்ணத்தின் துர்வர்ணமாகிற தோஷங்களை யெல்லாம் போக்குவதுபோல, எங்கும் நிறைந்த பரம புருஷன் த்யானஞ் செய்கிறவர்களுடைய மனத்தில் நிலைகொண்டு அம்மனமலங்களையெல்லாம் போக்கி விடுவான். பரம புருஷன் தேச கால வஸ்து பரிச்சேதங்களற்றவனாயினும் உபாஸகர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டு அவர்களுடைய ஹ்ருதயத்தில் அமைந்திருக்கையில் அவர்களுடைய மனம் எத்தகைய பரிசுத்தியை அடையுமோ, சாஸ்த்ரங்களை ஓதுகையாகிற வித்யாப்யாஸம் தவம் ப்ராணாயாமம் அஹிம்ஸை புண்யதீர்த்த ஸ்நானம் ஏகாதசி யுபவாஸம் முதலிய வ்ரதங்கள் தானம் மந்த்ர ஜபம் இவைகளால் அத்தகைய பரிசுத்தியை அடையாது. (த்யானத்தினால் ஹ்ருதயத்தில் நிலைகொண்ட பரம புருஷன் மனமலங்களைப் போக்குவதுபோல, வித்யை முதலியவை எல்லாம் ஒன்றுசேரினும் மனமலங்களைப் போக்கவல்லவை யாகமாட்டா). ஹ்ருதயத்தில் பரம புருஷனை நிலைபெறச் செய்வதனால் மரணம் அடையும்பொழுது அவனிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகி (அனாயாஸமாகவே தேஹத்தைத் துறந்து) அப் பரம புருஷனைப் பெறுவான். ராஜனே! ஆகையால் ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு நாதனும் சிறந்தழகிய குழற்கற்றை யுடையவனுமாகிய பரம புருஷனை எல்லா விதத்தினாலும் ஹ்ருதயத்தில் நிலைபெறும்படி செய்வாயாக. ப்ராணிகள் அனைவரும் மரணம் அடையுந் தன்மையர்களாகையால் 'நிலையாயிருந்து இஹலோக போகங்களையே அனுபவித்துக் கொண்டிருப்போம். நமக்குப் பரம புருஷ த்யானத்தினால் ஆகவேண்டியது ஒன்றும் இல்லை' என்று நிச்சிக்கையாயிருக்க முடியாது. சப்தாதி விஷயங்களும் நிலையற்றவை. தேஹமும் நிலையற்றது. அந்த

விஷயானுபவத்திற்கும் அவனையே வேண்டியாக வேண்டும். ஆகையால் அனைவரும் நச்வரமான தேஹத்திலும் சப்தாதி விஷயங்களிலும் விருப்பத்தைத் துறந்து பரம புருஷனை த்யானுதிகளால் ஹ்ருதயத்தில் நிலைபெறும்படி செய்யவேண்டும். அவன் ஷாட்குண்யபூர்ணன் (ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு ஆகிய ஆறு குணங்கள் அமைந்தவன்); ஈச்வரர்களென்று அபிமானித்துக்கொண்டிருக்கிற ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் மேலான ஈச்வரன். அவனுக்கு மேற்பட்ட ஈச்வரன் எவனும் கிடையாது. அவன் ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன்; அனைவர்க்கும் ஆச்ரயிக்கத் தகுந்தவன். (அவனைப் பற்றவேண்டுமென்றால் இடந்தேடிக் கொண்டு போகவேண்டியதில்லை). மன்னவனே! அவன் தன்னை த்யானிப்பவர்களுக்குத் தன்னுடைய ஸாரூப்யத்தைக் கொடுக்கின்றான். ராஜனே! கலியுகம் பற்பல தோஷங்களுக்கு விளைநிலமாயினும் அதற்கு ஓர் பெரிய குணம் உண்டு. என்னவென்றால், சொல்லுகிறேன்; கேள். ஸ்ரீக்ருஷ்ணனை வாயாற்சொன்ன மாத்ரத்தில் பற்றெல்லாம்விடப்பெற்று அப்பரமனைப் பெறுவான். க்ருதயுகத்தில் எங்கும் நிறைந்த மஹானுபாவனுகிய அப்பரம புருஷனை த்யானிப்பவர்களுக்கு எந்தப் புருஷார்த்தம் கைகூடுமோ, த்ரேதாயுகத்தில் யஜ்ஞங்களால் அவனை ஆராதிப்பவர்க்கு எந்தப் புருஷார்த்தம் கைகூடுமோ, த்வாபரயுகத்தில் புஷ்பாதிகளால் அவனைப் பூஜிப்பவர்களுக்கு எந்தப் புருஷார்த்தம் கைகூடுமோ, அந்தப் புருஷார்த்தம் கலியுகத்தில் அவனை வாயாற் சொன்ன மாத்ரத்தினுல் கைகூடும். அவன் தன்னை வாயால் சொன்ன மாத்ரத்தில் அவர்களுடைய பாபங்களைப் போக்கி விடுவான். மற்ற

யுகங்களுக்குக் கிடைக்க வரிதான இம்மஹாகுணம் கலியுகமொன்றுக்கு மாத்ரமே உள்ளது. மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

—•◆ { நைமித்திகம் முதலிய நான்குவகை ப்ரளயங்களை நிரூபித்தல். } ◆•—

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! பரமாணு முதல் த்விபரார்த்தம் வரையிலுள்ள காலத்தின் ஸ்வரூபத்தையும், க்ருதத்ரேதாதி யுகங்களின் பரிமாணத்தையும் உனக்கு முன்னமே மொழிந்தேன். கல்பத்தையும் ப்ரளயத்தையும் விரித்துச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. (தைனந்தினகல்பமென்றும் மஹாகல்பமென்றும் கல்பம் இரண்டுவிதம்). நாலாயிரம் யுகங்கள் சேர்ந்தால் ப்ரஹ்மதேவனுக்கு ஒரு தினம் (ஒரு பகல்) என்று கூறப்படுகின்றது. அதையே (தைனந்தின) கல்பமென்று உணர்வாயாக. மன்னவனே! அதில் பதினான்கு மனுக்கள் க்ரமமாக வருவார்கள். அந்த நாலாயிர யுகங்களடங்கிய கல்பத்தின் முடிவில் ப்ரளயம் உண்டாகும். அதுவும் அந்தக் கல்பத்தைப்போலவே நாலாயிரம் யுகங்களடங்கியது. அதையே ப்ரஹ்மதேவனுக்கு ஓரிரவென்று கூறுகிறார்கள். அப்பொழுது இம்மூன்று லோகங்களும் மறைந்துபோகின்றன. இந்த ப்ரளயத்தை நைமித்திகப்ரளயமென்று சொல்லுவார்கள். இந்த ப்ரளயத்தில் ஜகத்ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரஹ்மதேவன் ஜகத்தையெல்லாம் தனக்குள் அடக்கிக்கொண்டு ஆதிசேஷனென்கிற படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பான். ப்ரஹ்மதேவனுடைய சயனத்திற்கு நிமித்தமாயிருக்கையால் நைமித்திகப்ரளயமென்று கூறப்படும். உலகங்களுக்கெல்லாம் மேற்பட்டதாகிய ஸத்ய

லோகத்தில் வாஸஞ்செய்கின்ற ப்ரஹ்மதேவனுடைய வாழ்நாளாகிய இரண்டு பரார்த்தங்கள் கடக்கையில் மஹத்து அஹங்காரம் இவைகளும் பஞ்சபூதங்களும் ஆகிய ஏழு ப்ரக்ருதிகளும் மறைகின்றன. மன்னவனே! இந்த ப்ரளயமே ப்ராக்ருதப்ரளயமென்று கூறப்படும். (ப்ரஹ்மாவின் வாழ்நாளாகிய இரண்டு பரார்த்த காலத்தை மஹாகல்பமென்பர்கள்). இந்த ப்ராக்ருத ப்ரளயத்தில் விநாசநிமித்தம் நேர்ந்திருக்கையால் மஹத்து முதலிய ஏழு ப்ரக்ருதிகளின் பரிணாமமான ப்ரஹ்மாண்டம் மறைகின்றது. (அதை விவரித்துச் சொல்லுகிறேன்; கேட்பாயாக). ராஜனே! பர்ஜன்யதேவன் பூமியில் நூறு வருஷங்கள் மழை பெய்யாதிருக்கையில், அப்பொழுது அன்னமில்லாமையால் ஜனங்கள் பசியினால் பீடிக்கப்பட்டு ஒருவரை யொருவர் பக்ஷிப்பார்கள். இங்ஙனம் ஒருவர்க்கொருவர் உபத்ரவஞ்செய்துகொண்டு வருந்திக் காலக்ரமத்தில் மெல்ல மெல்ல ஜனங்கள் க்ஷீணித்து விடுவார்கள். ப்ரளய காலத்து ஸூர்யன் ஸமுத்ரத்திலும் தேஹங்களிலும் பூமியிலும் உள்ள ரஸத்தை யெல்லாம் பொறுக்க முடியாத கிரணங்களால் இழுத்துக்கொள்வானன்றி இப்பொழுதுபோல் சிறிதும் விடமாட்டான். பிறகு வாயுவேகத்தினால் ஸங்கர்ஷணமுகத்தினின்றுண்டான ப்ரளயகாலாக்னி ப்ரஜைகளே யின்றிச் சூன்யமாயிருக்கின்ற பாதாளாதி லோகங்களையெல்லாம் தஹிக்கும். இங்ஙனம் மேலும் கீழும் இடையில் நாற்புறத்திலும் ஸூர்யகிரணங்களாலும் அக்னி ஜ்வாலைகளாலும் தஹிக்கப்பட்ட ப்ரஹ்மாண்டம் கொளுத்தப்பட்ட கோமயபிண்டம் போல் தோற்றும். பிறகு மிகவும் பலிஷ்டமும் கொடியதுமான ப்ரளயகாலக்காற்று நூறு வர்ஷங்களும் அதற்

குமேல் சில காலமும் ஓயாமல் வீசிக்கொண்டிருக்கும். அப்பொழுது ஆகாசம் தூள்மூடிப் புகை சூழ்ந்தாற் போலிருக்கும். ராஜனே! அதற்குப் பிறகு பலவகை வர்ணங்களையுடைய பற்பல மேகக்கூட்டங்கள் பேரொலியுடன் கர்ஜனைகள் செய்துகொண்டு நூறு வர்ஷங்கள் மழை பெய்யும். அனந்தரம் ப்ரஹ்மாண்டத்தினிடையிலுள்ள ப்ரபஞ்சமெல்லாம் ஒரே வெள்ளமாய் விடும். இங்ஙனம் ப்ரபஞ்ச மெல்லாம் நீராய் விடுகையில், அப்பொழுது பூமியின் குணமான கந்தத்தை ஜலம் இழுத்துக்கொள்ளும். ஜலத்தினால் தன் கந்த குணம் இழுக்கப்பெற்ற பூமி ஜலத்தில் மறையும். பிறகு ஜலத்தின் குணமான ரஸத்தைத் தேஜஸ்ஸு இழுத்துக்கொள்ளும். அங்ஙனம் தன்னுடைய ரஸகுணம் பறியுண்ட ஜலம் தேஜஸ்ஸில் மறையும். பிறகு தேஜஸ்ஸின் குணமாண ரூபத்தை வாயு இழுத்துக் கொள்ளும். தன்ரூபகுணம் பறியுண்ட அந்தத் தேஜஸ்ஸு வாயுவில் மறையும். அந்த வாயுவின் குணமான ஸ்பர்சத்தை ஆகாசம் இழுத்துக்கொள்ளும். தன்னுடைய ஸ்பர்சகுணம் பறியுண்ட வாயு ஆகாசத்தில் மறையும். ராஜனே! பிறகு ஆகாசத்தின் குணமான சப்தத்தைத் தாமஸாஹங்காரம் இழுத்துக்கொள்ளும். தன்னுடைய சப்தகுணம் பறியுண்ட ஆகாசம் அந்தத் தாமஸாஹங்காரத்தில் மறையும். பிறகு ஸாத்விகாஹங்காரம் ராஜஸாஹங்காரத்துடன்கூடி ஜ்ஞானேந்த்ரியங்களையும் அவற்றின் குணங்களையும் இழுத்துக்கொள்ளும். ஸாத்விகமென்றும் ராஜஸமென்றும் தாமஸமென்றும் மூன்றுவகைப்பட்ட அஹங்காரதத்வத்தை மஹத்தத்வம் இழுத்துக்கொள்ளும். (அஹங்காரதத்வம் மஹத்தத்வத்தில் மறையும்). ஸத்வாதி குணங்களை

வடிவாகப்பெற்ற ப்ரக்ருதி அம்மஹத்தத்வத்தை இழுத்துக்கொள்ளும். ராஜனே! ஸத்வாதிகுணமயமான அந்த ப்ரக்ருதியைக் காலத்தினால் தூண்டப்பட்ட அவ்யாக்ருதமென்னும் ப்ரதானம் இழுத்துக்கொள்ளும். (மஹத்து முதலிய நாமரூபவிபாகங்களின்றி ஸத்வாதி குணங்கள் ஸாம்யாவஸ்தையை அடைந்திருக்கிற ப்ரதானம் அவ்யாக்ருதமென்று கூறப்படும்). அந்த அவ்யாக்ருதத்தைப் பரதேவனான பரமபுருஷன் இழுத்துக்கொள்ளுகிறான். அவன் மற்றொன்றில் மறைபவனல்லன். இப்பரமபுருஷனுடைய ஸ்வரூபத்திற்குக் காலத்தின அவயவங்களான அஹோராத்ராதிகளால் பரிணாமம் முதலிய குணங்கள் உண்டாகமாட்டா. அது ஆதியந்தங்களற்றது; இந்த்ரியங்களுக்கு எட்டாதது; என்றும் மாறுமல் ஒருவாறுயிருக்குந்தன்மையது; அவ்யக்தம் முதல் ப்ருதிவி வரையிலுமுள்ள ஜகத்திற்கெல்லாம் காரணமாயிருக்கும்; கார்யங்களின் தோஷங்களெவையும் தீண்டப்பெறுமல் அழிவற்றிருக்கும். பிறத்தல் வளர்தல் முதலிய வாக்குக்களும் அவற்றிற்கு நிதானமான மனமும் அப்பரமாத்மஸ்வரூபத்தைத் தீண்டவல்லவையாகமாட்டா. மற்றும், அதில் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்காவது மஹத்து முதலியவற்றிற்காவது ப்ராணன் புத்தி கர்மேந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் இவற்றிற்காவது உலகங்கள் அடங்கிய ப்ரஹ்மாண்டத்திற்காவது ஸம்பந்தம் கிடையாது. (ஜீவஸ்வரூபம் குணங்களுக்கு உட்பட்டிருப்பதுபோல் பரமாத்மஸ்வரூபம் குணங்களுக்கு உட்பட்டிராது. ஜீவனுக்குக் கர்மத்தினால் மஹத்து முதலிய தத்வங்களின் பரிணாமமான தேஹங்களின் ஸம்பந்தம் இருப்பதுபோல் பரமாத்மனுக்குக் கிடையாது. அவன் ஜீவனைப்போல்

சக்ஷுராதிகரணங்களைப் பற்றின அறிவுடையவனுமல்லன். ப்ரஹ்மாண்டம் ப்ரக்ருதியின் பரிணாமமேயன்றிப் பரமாத்மஸ்வரூபத்தின் பரிணாமமன்று). மற்றும், அப்பரமாத்மன் ஜீவனைப்போல் ஸ்வப்னம் ஜாகரம் முதலிய ஸங்கோச விகாஸங்களுக்குரிய ஞானத்திற்கிடமாகாமல் என்றும் ஸங்கோசமின்றிய ஞானத்திற்கிடமாயிருப்பான். ஸுஷுப்தி யென்னும் அவஸ்தையும் அவனுக்குக் கிடையாது. அவன் ஆகாசமுமல்லன்; ஜலமுமல்லன்; பூமியுமல்லன்; வாயுவுமல்லன்; அக்னியுமல்லன்; ஸூர்யனுமல்லன்; பின்னையோவென்றால் இவற்றைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். அப்பரமாத்மன ஸுஷுப்தி யவஸ்தையை அடைந்த (நன்குறங்குகிற) ஜீவனையும் ஆகாசத்தையும் ஒத்திருப்பான். ஜீவனுக்கு ஸுஷுப்தியில் நானென்கிற தோற்றந்தவிர ப்ராஹ்மணத்வம் ஸுகம் துக்கம் முதலிய விகாரங்கள் தோற்றமாட்டா. அங்ஙனமே பரமபுருஷன் ப்ராஹ்மணத்வாதி விகாரங்களும் ஸுகதுக்காதி விகாரங்களும் தீண்டப்பெறாதவன். ஆகாசம் எங்கும் நிறைந்திருப்பினும் அவ்வவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாதிருக்கும். அங்ஙனமே பரமபுருஷன் சேதனாசேதனரூபமான ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவாயிருப்பினும் அவ்வவற்றின் தோஷங்கள் எவையும் தன்மேல் தீண்டப்பெறாமல் பரிசுத்தனாயிருப்பான்; ஜடபதார்த்தங்களோடாவது அஜடமான ஜீவனோடாவது ஒத்திட்டு இத்தகையனென்று ஊஹிக்கமுடியாதவன்; ஸர்வகாரணமான இத்தகைய இப்பரமாத்மஸ்வரூபத்தையே அவ்யக்தத்திற்கு லயஸ்தானமாக வேதாந்தங்கள் கூறுகின்றன. எப்பொழுது புருஷன் அவ்யக்தம் இவைகளுக்கு லயம் உண்டாகிறதோ; அப்பொழுது ப்ருதிவி முதல்

மஹத்து வரையிலுமுள்ள சக்திகளென்று கூறப்படுகிற தத்வங்கள் காலத்தினால் தூண்டப்பட்டுத் தத்தம் செயல்களைச் செய்யுந் திறமையற்றுத் தத்தங்காரணங்களில் மறைகையாகிற லயத்தை அடைகின்றனவோ; இதுவே ப்ராக்ருதலயமாம். (புருஷனுக்கு லயமாவது மிகுதியும் ஜ்ஞானஸங்கோசம் உண்டாகப்பெற்றுப் பரமாத்மனிடத்தில் ஸம்பந்திக்கையேயாம்; அவ்யக்தத்திற்கு லயமாவது அவிபக்த தமஸ்ஸாயிருக்குந் தன்மையைப் பெறுகையே. ப்ருதிவி முதலிய பதார்த்தங்களெல்லாம் பரமாத்மனை விட்டுப் பிரியாமல் அவனுடைய சக்திகள்போன்றிருக்கையால் சக்திகளென்று கூறப்படுகின்றன. ஜ்ஞானஸ்வரூபனான பரமாத்மன் புத்தி இந்த்ரியம் முதலிய ஸகல பதார்த்தங்களையும் சரீரமாகவுடையவனாகையாலே ப்ராமாணிகர்களுக்கு (வேதம் முதலிய ப்ரமாணங்களின் கருத்தை உள்ளபடி அறிந்தவர்களுக்கு) அந்த புத்தி முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் ஆதாரமாகத் தோற்றுகிறான். இந்த்ரியங்கள் முதலிய ஸமஸ்த வஸ்துக்களும் அவனுக்குச் சரீரமென்றும் அவை அவனை விட்டு ஒரு க்ஷணமும் பிரிந்திருக்கமுடியாதென்றும் ப்ரமாணங்கள் கூறுகின்றனவாகையால் அவன் அவர்களுக்கு ஸர்வாதாரனாய்த் தோற்றுவது உண்மையேயன்றி வேறன்று. அவன் அவற்றைச் சரீரமாகவுடையவனாயினும், சரீரங்களான அவ்வஸ்துக்களுக்கும் சரீரியான பரமாத்மனுக்கும் ஸ்வபாவங்கள் ஒத்திருக்கமாட்டா. புத்தி இந்த்ரியம் முதலிய ஸகல பதார்த்தங்களும் பரமாத்மஸ்வரூபம்போல் நித்யங்களன்று; பின்னையோ வென்றால் ஆதியந்தங்களுடையவை. என்றும் ஒருவாறாயிருக்குந்தன்மையுள்ளதற்கே வஸ்துவென்னும்பெயருமையுமாகையால் அத்தன்

மையுள்ள பரமாத்மனொருவனே வஸ்துவாவானன்றி மற்றவையெல்லாம் என்றும் ஒருவாறுயிருப்பவையன்றாகை யால் உண்மையில் வஸ்துக்களாகமாட்டா. ஆனால் இவற்றை வஸ்துக்களென்று வழங்குவது எங்ஙனம் பொருந்து மென்றால், வஸ்துவாகிய பரமாத்மன் இவையெல்லாவற்றிலும் அமைந்திருக்கிறானாகையால் அவனை உட்கொண்ட இவை வஸ்துக்களென்று வழங்கிவருகின்றன: தீபம் தேஜஸ்ஸின் கார்யம். சக்ஷுரிந்த்ரியம் தேஜஸ்ஸின் உதவியில்லாமல் வஸ்துக்களை க்ரஹிக்க வல்லதன்று. (இந்த்ரியங்கள் தேஜஸ்ஸின் காரணமான அஹங்கார தத்வத்தின் கார்யங்கள்.) இவையெல்லாம் தேஜஸ்ஸின் திறம்போல் அதை விட்டுப் பிரிந்திருப்பவையல்ல. இங்ஙனமே இந்த்ரியங்களும் அந்தக்கரணமும் விஷயங்களும் பரமாத்மனால் ஸ்ருஷ்டிக்கப் பட்டவையாகையாலும் அவனால் உதவிசெய்யப் பெற்றவையாகையாலும் அவனையே ஆதாரமாகவுடையவையாகையாலும் இந்த இந்த்ரியாதிகளைக் காட்டிலும் அத்யந்த விலக்ஷணனான அப்பரமாத்மனை விட்டுப் பிரிந்திருக்க மாட்டா. (இங்ஙனம் ஸமஸ்தவஸ்துக்களுடைய ஸத்தாஸ்திதிப்ரவ்ருத்திகளும் பரமாத்மாதீனமென்று ஏற்படுகையில் ஜீவனுடைய அவஸ்தைகளும் பரமாத்மாதீனமென்பது ஸித்தமே. ஆனால் அதில் விசேஷம் உண்டு. என்னவென்றால்) ராஜனே! ஜீவனுக்கு தர்மபூதஜ்ஞானத்தின் மூலமாய் ப்ரஜாகரம் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்னும் பல அவஸ்தைகள் வழங்கிவருகின்றனவே; இவ்வவஸ்தைகள் அவனுக்கு ப்ரக்ருதிஸம்பந்தத்தினால் ஏற்பட்டவைகளே யன்றி இயற்கையன்று. எங்ஙனம் ஆகாசத்தில் மேகங்கள் ஒருகால் தோற்றுவதும் ஒருகால் மறைவதுமாயிருக்கின்றனவோ, அங்ஙனமே இந்த ப்ரபஞ்சமெல்லாம் பூ

மாத்மனிடத்தினின்றுண்டாகி ஒருகால் புலப்படுவதும் அவனிடத்தில் மறைந்து ஒருகால் புலப்படாமலும் இருக்கின்றது. சேதனுசேதனரூபமான இந்த ப்ரபஞ்சத்திற்கெல்லாம் அவன் ஆதாரமாயிருப்பினும் இதன் தோஷங்கள் சிறிதும் அவன்மேல் தீண்டுகிறதில்லை. அவன் ஆகாயம்போல் என்றும் நிர்மலனுயிருப்பவன். விகாரங்களெல்லாம் பரமாத்மனுடைய சரீரமாகிய சேதனுசேதனங்களைச் சேர்ந்தவை. மன்னவனே! அவயவங்களையுடைய வஸ்து அவயவியென்று கூறப்படுகின்றது. அவயவிகளான ஸமஸ்த வஸ்துக்களுடைய அவயவங்களும் உண்மையேயன்றி இல்லாதவைகளை இருப்பதாக வழங்குவதில்லை. அவயவங்களையுடைய வஸ்து அவயவங்களைக் காட்டிலும் தனியே பிரிந்திருப்பதன்று. அப்படியிருக்குமாயின், அவயவங்களைக்காட்டில் அவயவி தனியே தோற்றவேண்டும். அனுபவத்தில் அது கிடையாது. நூல்களாகிற பல அவயவங்கள் சேர்ந்து ஆடையாகிற அவயவியான ஓர் வஸ்து ஏற்படுகின்றது. அவ்வாடை தன் அவயவங்களான நூல்களை விட்டுத் தனியே புலப்படுகிறதில்லை. அங்ஙனமே ஜகத்து பரமாத்மனை விட்டுத் தனியே இராது. ஸூக்ஷ்ம சேதன அசேதன ஈஶ்வரர்களென்னும் ஸமுதாயம் ஸ்தூலசேதன அசேதன ஈஶ்வரர்களென்னும் ஸமுதாய ரூபமான ஜகத்தாகப் பரிணமித்துக் கார்யமென்று கூறப்படுகின்றது. ப்ராமாணிகர்களுக்கு ஒவ்வொரு வஸ்துவும் சேதன அசேதன ஈஶ்வரஸமுதாய ரூபமாகவே தோற்றுகிறது. ஆகையால் இல்லாத வஸ்து புதிதாய் உண்டாகிறதென்று சொல்லுகிறவர்களின் மதம் ஸரியன்று. கார்ய காரணங்கள் இரண்டும் ஒன்றுயிருக்குமாயின், கார்யமான குடத்தைக் குடமென்றும் காரணமான மண்ணை மண்ணென்றும் வெவ்வேறு

பெயர்களால் வழங்குகிறார்கள். மண்ணை மண்ணென்று நினைக்கிறோமன்றிக் குடமென்று நினைக்கிறதில்லை. குடத்தைக் குடமென்று நினைக்கிறோமன்றி மண்ணென்று நினைக்கிறதில்லை. குடம் ஜலம் கொண்டுவர உபயோகப் படுகிறது; மண் அதற்கு உபயோகப்படாது. இங்ஙனம் கார்யகாரணங்களைப் பற்றின அறிவும் பெயரும் கார்யமும் வெவ்வேறாயிருக்கின்றமை பொருந்தாதாகையால் கார்யகாரணங்கள் வெவ்வேறென்றே கொள்ளவேண்டுமென்றால்; அது பொருளன்று. அங்ஙனம் வெவ்வேறாக நினைப்பது ப்ரமமேயாம். கார்ய காரணங்கள் இரண்டும் ஒன்றைவிட்டு மற்றொன்று பிரியாதிருப்பவை. அறிவு பெயர் கார்யம் இவை வெவ்வேறாயிருப்பதற்குக் காரணம் மண் ஓர்வகை மாறுபாட்டை அடைந்திருக்கையே அதனால் அவை வெவ்வேறாகமாட்டா. அங்ஙனமே சேதன அசேதன ஈப்வரர்களென்னும் ஸமுதாயம் காரணமும் கார்யமுமாகிக் காரணாவஸ்தையிலும் கார்யாவஸ்தையிலும் ஒன்றேயன்றி வேறன்று. காரண தசையில் ஸூக்ஷ்ம சேதனு சேதனங்களைச் சரீரமாக வுடைய பரப்ரஹ்மம் கார்யதசையில் ஸ்தூலசேதனுசேதனங்களைச் சரீரமாகவுடைய பரப்ரஹ்மமாய் மாறுகின்றது. ஆகையால் கார்யம் முன்பில்லாமல் புதிதாய் உண்டாகிறதென்பது அஸம்பத்தமேயாம். அந்தச் சேதனு சேதன ஈப்வரர்கள் மூன்றும் ஸ்வபாவத்தில் ஒன்றோடொன்று ஒத்திருக்கமாட்டா; விலக்ஷணமாயிருக்கும். அசேதன பரிணாமமான தேவ மனுஷ்யாதி சரீரங்களெல்லாம் ஆதியந்தங்களையுடையவை. ஆகையால் அவை ஆத்மவஸ்துக்களாக மாட்டா. தேஹத்தையே ஆத்மாவென்று நினைப்பது ப்ரமமே. ஆத்மா தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனாயிருப்பவன். ப்ராஹ்மணத்

வாதிஜாதி ஸத்வாதிகுணம் நடை முதலிய செயல் ஜன்மம் வ்ருத்தி இவை முதலிய விகாரங்கள் பலவும் தேஹாத்மாபிமானிகளுக்கு ஆத்மாவினிடத்தில் இருப்பதாகத் தோற்றினும், அவை ஆத்மாவைச் சேர்ந்தவையன்று. அவர்கள் அங்ஙனம் நினைப்பது ப்ரமமே. ஆத்மாவினிடத்தில் விகாரம் உளதென்று நிரூபிக்கமுடியாது. அவனிடத்தில் சிறிதாயினும் விகாரம் உளதாயின், முக்திதசையிலும் தோற்றவேண்டிவரும். முக்திதசையில் விகாரமே கிடையாதென்று ப்ரமாணங்கள் முறையிடுகின்றனவன்றி உளதென்று எங்கும் சொல்லவில்லை. ஆகையால் விகாரங்கள் தேஹத்தைச் சேர்ந்தவைகளேயன்றி ஆத்மாவைச் சேர்ந்தவைகளன்று. என்றும் ஒருவாறுயிருக்குந்தன்மையதான பரிசுத்த ஜீவாத்மஸ்வரூபத்திற்கு தேவமனுஷ்யத்வாதி ஆகாரபேதங்கள் கிடையா. ஒருவன் உளவென்று நினைப்பானாயின், அவன் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்தவனல்லன்; பின்னையோவென்றால் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்தவன். ஆகாசம எங்கும் நிறைந்திருப்பினும் அவற்றின் விகாரங்கள் தீண்டப்பெறாதிருப்பதுபோலவும், ஸூர்யன் ஜலம் முதலியவற்றில் ப்ரதிபலிக்கினும் அவற்றின் விகாரங்கள் தீண்டப்பெறாதிருப்பதுபோலவும், வாயு எல்லாவிடங்களிலும் வியாபித்திருப்பினும் அவற்றின் விகாரங்கள் தீண்டப்பெறாதிருப்பதுபோலவும், ஆத்மா தேவமனுஷ்யாதி தேஹங்களில் அமைந்திருப்பினும் அந்த தேவமனுஷ்யாதி பேதங்கள் தீண்டப்பெறான். மற்றும், கடம் முதலியவற்றிலுள்ள ஆகாயமும் வெளியாகாசமும் ஒன்றுபோலவும், ஆகாசத்திலுள்ள ஸூர்யனும் ஜலம் முதலியவற்றில் ப்ரதிபலிக்கிற ஸூர்யனும் ஒன்றுபோலவும்,

தேஹங்களுக்குள்ளே இருக்கிற வாயுவும் வெளியில் வீசுகிற வாயுவும் ஒன்றுபோலவும், ஆத்மா ஒரு தேஹத்தை விட்டு மற்றொரு தேஹத்தைப் பெறினும் அவன் ஒருவனேயன்றி வேறன்று. (இங்ஙனம் ஆத்மா தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனென்று நிரூபித்த மாத்ரத்தினால் தேஹம் ஆத்மாவைக்காட்டிலும் விலக்ஷணமென்ற விஷயம் ஸித்தமே. அவ்விரண்டைக் காட்டிலும் பரமாத்மன் விலக்ஷணனென்பதுவும் நிரூபிக்கப்பட்டது). ஜனங்கள் பொன்னொன்றையே கைவளை தோள்வளை கிரீடம் குண்டலம் முதலிய பல ஆபரணங்களாகச் செய்து 'இது கைவளை. இது தோள்வளை. இது கிரீடம். இது குண்டலம்' என்று வழங்கி அவற்றை அணிகை முதலிய ப்ரயோஜனத்தையும் அனுபவிக்கிறார்கள். அந்தக் கைவளை முதலியவை தாரணாதி ப்ரயோஜனங்களுக்கிடமாயிருக்கையால் உண்மையேயன்றிப் பொய்யன்று. அவற்றிற்குக் காரணம் பொன்னே. அவை தங்கள் காரணமான பொன்னைக்காட்டிலும் வேறுபட்டவையென்று எவனேனும் நினைக்கக்கூடுமோ? ஒருவன் முத்துச்சிப்பியைப் பார்த்து வெள்ளியென்று ப்ரமிப்பானாயின், அது வெள்ளியாலாகவேண்டிய ப்ரயோஜனத்தை நிறைவேற்றுமோ? நிறைவேற்றாது. ஆகையால் அது பொய்யே. அப்படியன்றி இவை தாரணாதி ப்ரயோஜனங்களை விளைக்கின்றமையால் உண்மையென்பதில் ஸந்தேஹமில்லை. இங்ஙனமே ஸூக்ஷ்ம சேதனா சேதனங்களோடு கூடிய பகவான் லௌகிகவாக்யங்களாலும் வைதிகவாக்யங்களாலும் ஸ்தூல சேதனா சேதனங்களோடுகூடிய பகவானாகிற ஜகத்தாகக் கூறப்படுகிறான். ஆகையால் ஜகத்து உண்மையேயன்றிப் பொய்யன்று; பகவானைக் காட்டிலும் வேறுபட்டது

மனறு. ஆதலால் கார்யகாரணங்கள் வேறென்பது வும், 'காரணங்களே உண்மை, கார்யங்களெல்லாம் பொய்' என்பதுவும் பொருளாகமாட்டா. ஸூர்யனிடத்தினின்றுண்டான மேகம் ஸூர்யனால் விளங்கச் செய்யப்பெற்று ஸூர்யனுடைய அம்சமாகிய கண்ணுக்கு ஸூர்யனைப் பார்க்கவொட்டாமல் மறைவாயிருக்கின்றது. இங்ஙனமே பரமாத்மனிடத்தினின்றுண்டான தேஹம் அவனால் விளங்கச்செய்யப்பெற்று அவனுடைய அம்சமாகிய ஜீவனுக்கு ஆத்ம பரமாத்மஸ்வரூபம் தெரியாதபடி மறைவாயிருக்கின்றது. ஜீவனுக்கு ஆத்ம பரமாத்ம ஜ்ஞான விரோதியான இந்த தேஹபந்தத்தையே ஸம்ஸாரமென்று சொல்லுகிறார்கள். எப்பொழுது அம்மேகம் காற்றினால் தள்ளுண்டு சிதறிப்போகின்றதோ; அப்பொழுது கண் ஸூர்யனைப் பார்க்கின்றது. அங்ஙனமே அஹங்காரத்திற்கிடமான தேஹம் ஆத்ம பரமாத்மஸ்வரூபங்களை உள்ளபடி ஆராய்ந்தறிந்து செய்யும் உபாஸனத்தினால் எப்பொழுது நசிக்கின்றதோ, அப்பொழுது ஜீவன் பரமாத்மனைக் காண்பான். இங்ஙனம் விவேகம் முதலிய ஸாதனங்களால் உதவி செய்யப்பெற்ற பரமாத்மோபாஸனமாகிற ஆயுதத்தினால் ஆத்மாவுக்குள்ள தேஹஸம்பந்தமாகிற பந்தத்தை அறுத்துத் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் காப்பாற்றுந் தன்மையனான பரமாத்மனை அனுபவித்துக்கொண்டிருப்பானாயின்; ராஜனே! அப்பரமாத்மானுபவத்தையே ஆத்யந்திகப்ரளயமென்று கூறுகிறார்கள். பரந்தபனே! (சத்ருக்களைத் தவிக்கச் செய்பவனே!) ப்ரஹ்மதேவன் முதலிய ஸமஸ்த ஜீவாத்மாக்களுடைய சரீரங்களும் க்ஷணந்தோறும் பரிணமித்துக்கொண்டிருக்குந் தன்மையுடையவை. பரிணமிக்கையாவது முன்னுள்ள நிலைமையை விட்டு வே-

ெரு நிலைமையைப் பெறுகை. அவற்றில் மேல்வரும் நிலைமையை உத்பத்தியென்றும் கீழ்ப்போன நிலைமையைப்ரளயமென்றும் கூறுகிறார்கள். இவையே நித்யோத்பத்தியும் நித்யப்ரளயமுமாம். அவை ஸூக்ஷ்மஜ்ஞர்களுக்குத் தெரியுமேயன்றி ஸ்தூலத்ருஷ்டிகளுக்குத் தெரியா. ப்ரவாஹத்தின் வேகத்தினால் தள்ளுண்டு போகிற காஷ்டம் முதலியவைபோல், தேஹங்கள் ஒருநிலையில் இராமல் காலவேகத்தினால் க்ஷணந்தோறும் பரிணாமத்தை அடைந்துகொண்டிருக்கின்றன. க்ஷணந்தோறும் உண்டாகிற அவ்வவஸ்தைகளே அவற்றின் ஜன்மப்ரளயங்களுக்கு ஹேதுவாயிருக்கின்றன. ஆனால் தேஹங்களுக்கு க்ஷணந்தோறும் அவஸ்தைகள் விளைகின்றனவாயின், அவை ஏன் தெரிகிறதில்லை யென்றால், ஆதியந்தங்களற்றதும் பரமபுருஷனுடைய சரீரமுமாகிய இக்காலத்தின் வேகத்தினால் அவை தெரிகிறதில்லை. ஆகாயத்தில் ஸூர்யன் முதலிய க்ரஹங்கள் ஓரிடத்தில் நிலையாயிராமல் க்ஷணந்தோறும் போய்க்கொண்டேயிருப்பினும் அப்போக்கு நமக்குத் தெரிகிறதில்லை யல்லவா? அங்ஙனமே இதுவு மென்றுணர்க. நித்யமென்றும் நைமித்திகமென்றும் ப்ராக்ருதமென்றும் ஆத்யந்திகமென்றும் நான்குவகையான ப்ரளயங்களையும் சொன்னேன். காலத்தின் கதி இத்தகையது. ஜகத்ஸ்ருஷ்டிகர்த்தாவும் நாராயணனென்று பெயர் பெற்றவனும் ஸர்வாதாரனுமாகிய பகவானுடைய லீலாரூபமான சேஷ்டிதங்களை உட்கொண்ட கதைகளை உனக்குச் சுருக்கமாகச் சொன்னேன். ஆனால் அவற்றை விரித்துச் சொல்லலாகாதோ வென்று வினவவேண்டாம். ப்ரஹ்மதேவனும் அவற்றை முழுவதும் சொல்ல வல்லனல்லன். 'ஆமாம். எல்லாம் சொன்னீர். இதனால் என்ன உபயோ

கம்?' என்கிருயோ? சொல்லுகிறேன் கேள். பல வருத் தங்களாகிற காட்டுத் தீக்களால் வருத்தமுற்றுக் கடக்கமுடியாத ஸம்ஸாரஸாகரத்தைக் கடக்கவிரும் பும் புருஷனுக்குப் பகவானுடைய லீலாரூபமான கதை களின் ரஸத்தை அனுபவிக்கையைத் தவிர அதைக் கடத்தும் உபாயம் வேறென்றும் இல்லை. (ஆகையால் பகவானுடைய லீலைகளை வெளியிடுகிற இக்கதையைக் கேட்பானுயின், அவன் ஸம்ஸாரஸாகரத்தை அனுயாஸ மாகக் கடப்பான்) ஸர்வஜ்ஞனை நாராயணன் அநி ருத்தரூபியாய்க்கொண்டு (நான்முகன் மூலமாய் சதுப்ப லோகீரூபமான) இந்தப் புராணஸம்ஹிதையை முனபு நாரதருக்கு உபதேசித்தான. அந்த நாரதர் வயாஸ ருக்கு உபதேசித்தார். மஹாராஜனே! மஹானுபவரா கிய அந்த வயாஸர் வேதத்தோடொத்த பாகவதமென் னும் இப்புராண ஸம்ஹிதையைப் ப்ரீதியுடன் எனக்கு உப தேசித்தார் குருஸ்ரேஷ்டனே! இந்த ஸூதர் நைமி சாரண்யத்தில் தீர்க்கஸத்ரமென்னும் யாகத்தில் தீக்ஷி த்துக்கொண்டிருக்கிற சௌனகர் முதலிய ரிஷிகளால் வினவப்பெற்று இப்புராண ஸம்ஹிதையைச் சொல்லப் போகிருர். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீசுகர் பர்க்ஷித்துக்கு மீளவும் சுருக்க மாக பரஹ்மஸ்வரூபத்தை உபதேசித்தது தக்ஷக ஸாபம் கடிப்பதனுல் நேரும் மரண பயத்தைப் போக்குதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—இந்தப் புராணஸமஹி தையில் தன்னைப் பற்றினவருடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குந்தன்மையனும் ஸர்வாந்த்ராத்மாவும் ஷாட் குண்யபூர்ணனுமாகிய பரமபுருஷன் அடிக்கடி நிரூபிக் கப் படுகிருன். (இதில் பரமபுருஷனுடைய குணங்க

ளைச் சொல்லாமல் அன்யபரமான பாகம் சிறிதும் கிடை யாது). எவனுடைய அனுக்ரஹத்தினின்று ப்ரஹ்மதே வனும், கோபத்தினின்று ருத்ரனும் உண்டானார்களோ; அத்தகைய ஸர்வகாரணனான பரமபுருஷனை இந்த ப்ர பந்தம் ஆதியோடந்தமாக நிரூபித்துச் சொல்லுகின்ற து. (காரணவஸ்துவே த்யேயமென்று சாஸ்த்ரங்கள் முறையிடுகின்றனவாகையால் காரணவஸ்துவை அடி தோறும் நிரூபித்துச் சொல்லுகிற இந்த ப்ரபந்தத் தைக் கேட்பவர்களுக்குக் காரணவஸ்துத்யானம் அனு யாஸமாக நேரிடுமாகையால் அவர்களுக்கு மோக்ஷ மென்னும் பரம புருஷார்த்தம் கையிலங்கு நெல்லிக் கனியாமென்பதில் ஸந்தேஹமில்லை). (மரணம் ஸமீ பிக்கப் பெறாமல் ஜீவித்திருக்கிறவர்களுக்கன்றோ இவை யெல்லாம் உபாயங்களாம். மரணம் ஸமீபித்திருக் கிற நான் என்ன செய்வேனென்று நீ சிந்திக்கவேண் டாம்.) ராஜனே! மரணம் அடையப்போகிறேனே யென்னும் [1]இப்பசுபுத்தியைத் துறப்பாயாக. (ஏனென் றால், நானென்று தோற்றுகிற ஆத்மவஸ்து நித்யமாகை யால் அதற்கு மரணம் கிடையாது). நீ தேஹம்போல் முன்பில்லாமல் இப்பொழுது உண்டாகவில்லை; தேஹத் தைப்போல் மரணம் அடையப்போகிறது மில்லை. நீ உண்டாகி மீளவும் பீஜாங்குரம்போல் புத்ரபௌத்ராதி களுடன் உண்டாகப் போகிறதுமில்லை. இவ்வவஸ்தைக ளெல்லாம் தேஹத்திற்கே உள்ளவையன்றித் தேஹத் தைக் காட்டிலும் விலக்ஷணனான உனக்கு அவை கிடை யா. காஷ்டங்களில் பற்றி யெரிகிற அக்னி அவற்றைக் காட்டிலும் வேறுபட்டதே யல்லவா? அங்ஙனமே தே ஹங்களில் அமைந்திருக்கிற ஆத்மவஸ்துவும் அவற்

1. பசுபுத்தி-அவிவேகம்.

றைக்காட்டிலும் வேறுபட்டதே. ஜீவன் ஸ்வப்னதசை யில் தன்னுடைய தேஹத்திற்கு நேரும் சிரச்சேதத்தை யும் மரணம் முதலியவற்றையும் காண்கிறான். அங்ங னம் காண்கிற ஜீவன் மரணம் முதலியவற்றிற் கிடமான தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனல்லவா? அங் ஙனமே ஜாகரதசையிலும் ஆத்மா தேஹத்தைக் காட் டிலும் விலக்ஷணனே. ஆகையால் ஆத்மா தேஹத் தைப்போல் பிறப்பவனுமல்லன்; மரணம் அடைபவனு மல்லன். கடம் முதலியவற்றிலுள்ள ஆகாசம் அவை உடைந்தபின்பு பரமாகாசத்தோடு சேர்ந்து விடுகிறது. கடாகாசமென்னும் இவை முதலிய சொற்களுக்கிட மாகிறதில்லை. இங்ஙனமே ஜீவன் பரமாத்மோபாஸனத் திஞல் சரீரஸம்பந்தம் அடியோடு கழியப் பெறுகையில் மீளவும் பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம் தோன்றப் பெறுவான். மனம் ஜீவனுக்குப் புண்யபாபகர்மங்களை விளைத்து அவற்றின் மூலமாய் ஸத்வாதி குணமயமான தேஹங்களை விளைக்கின்றது. ஜீவனுக்கு அந்த மனத் தை மாயை உண்டாக்குகின்றது. ஆக மாயை மனம் தேஹம். கர்மம் இவைகளால் ஜீவனுக்கு ஸம்ஸாரம் உண்டாகின்றது. எண்ணெய் அதற்காதாரமான பாத் ரம் திரி அக்னிஸம்யோகம் இவை எதுவரையில் உளவோ, அதுவரையிலுமே தீபத்திற்கு தீபத்வம் உண் டாகின்றது. (விளக்கொளி ஜ்வாலாரூபமாய் எரிகின் றது.) தேஹாதிகளாலுண்டாகும் ஸம்ஸாரமும் இங்ங னமே யென்றுணர்க. (புண்யபாப கர்மங்கள் தைலம் போன்றவை. மனம் தைலத்திற்காதாரமான பாத்ரம் போன்றது. தேஹம் திரிபோன்றது. தேஹாத்மாபி மானம் அக்னிஸம்யோகம்போன்றது. ஸம்ஸாரம் தீபம்போன்றது). ஆகையால் ரஜஸ்ஸு ஸத்வம் தம

ஸஸ்ஸ' என்னும் இம்மூன்று குணங்களின் ஸம்பந்தமாகிற உபாதியினால் ஆத்மாவுக்கு ஜன்ம மரணாதிகள் உண்டாகின்றன. அவ்வுபாதி நீங்கினால் அவையும் மாறுகின்றன. இயற்கையில் ஆத்மாவுக்கு அவை கிடையா. தேஹம் பிறக்கும்பொழுது ஆத்மா பிறக்கிறதுமில்லை. அது மரணம் அடையும்போது அவன் மரணம் அடைகிறதுமில்லை. அவன் வ்யக்தமான தேஹத்தைக் காட்டிலும் அவ்யக்தமான மூலப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபட்டவன். அவன் ஸ்வயம்ப்ரகாசன் (தனக்குத் தானே தோற்றுந் தன்மையன்). தேஹாதிகள் ஜடங்கள் (பிறர்க்கே தோற்றுந்தன்மையுள்ளவை). இங்ஙனம் விஜாதீயனாகையால் ஆத்மா அவற்றைக்காட்டிலும் வேறுபட்டவனென்பதற்கு ஸந்தேஹம் உண்டோ? ஆகாசம் கடம் முதலியவற்றில் வியாபித்திருப்பினும் அந்தக் கடாதிகளைக் காட்டிலும் வேறுபட்டிருப்பது போல் ஆத்மா தேஹங்களில் அமைந்திருப்பினும் அவற்றைக் காட்டிலும் வேறுபட்டவனே. ஆத்மாவே தேஹத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறான். அவன் ஸ்வபாவத்தில் அளவிட முடியாதவன்; ஸ்வரூபத்தில் விகாரமற்றவன். இத்தகையனான ஆத்மா பரமாத்மனால் தரிக்கப்பட்டு அவனிடத்தில் நிலைகொண்டிருக்கின்றான். ப்ரபூ! தேஹத்தில் அமைந்திருக்கின்ற இத்தகையனான ஆத்மாவை அவ்வாத்மாவினாலேயே ஆராய்ந்துணர்வாயாக: அவன் தனக்குத் தானே தோற்றுந்தன்மையனாகையால் அவனைக் கொண்டே அவனை அறியவேண்டும். சாஸ்த்ரங்களைக் கற்று ஆத்மபரமாத்மஸ்வரூபங்களை உள்ளபடி ஆராய்ந்தறிந்த புத்தியுடன் ஸ்ரீவாஸு தேவனைச் சிந்தித்துக் கொண்டிருப்பாயாயின், ப்ராஹ்மண வாக்யத்தினால் தூண்டப்பட்ட தக்ஷகன் உன்னைக் கடித்து

விஷாக்னியினால் தஹிக்கினும் உனக்கு வருத்தத்தை விளைக்கவல்லனாக மாட்டான். ஈச்வரன் ம்ருத்யுக்களுக்கெல்லாம் ம்ருத்யுவாயிருப்பவன். ஆகையால் அவனை ம்ருத்யுக்கள் எவையும் தஹிக்கவல்லவையாக மாட்டா. அவனை த்யானித்துக் கொண்டிருக்கிற உனக்கும் அத்தன்மையே உண்டாமாகையால் தக்ஷகவிஷாக்னி உன்னை வருந்தச்செய்ய வல்லதாகாது. 'நான் பரந்தாமமான பரப்ரஹ்மமே. பரமபதமான பரப்ரஹ்மம் நானே. (நான் பரப்ரஹ்மத்தின் சரீரமாகையால் பரப்ரஹ்மமென்றே சொல்லத்தகுந்தவன். பரப்ரஹ்மம் எனனைச் சரீரமாகவுடையதாகையால் நானென்று சொல்லத் தகுந்ததே)' என்று இங்ஙனம் அநுஸந்தித்து ப்ராக்ருத சரீரமற்ற பரமாத்மனிடத்தில் ஆத்மாவை நிலைநிறுத்தி (ஆத்மா பரமாத்மாவுக்குச் சேஷமாயிருக்கையையே முக்ய ரஸமாகவுடையவனென்று த்யானித்து) நிற்பாயாயின், விஷங்களோடு கூடிய முகங்களால் பாதத்தில் நக்கிக் கடிக்கின்ற தக்ஷகனையாவது பரமாத்மனைக் காட்டிலும் வேறான சரீரத்தையாவது ஜகத்தையாவது நீ காணமாட்டாய். (வாஸுதேவஸ்மரண மஹாநந்தத்தில் மூழ்கிக்கிடக்கையால் துக்கஹேதுவான மற்றொன்றையும் நீ நினைக்கமாட்டாய்). அப்பனே! பகவானுடைய சேஷ்டிதங்களைப் பற்றி நீ ஏதேது வினவினையோ, அவையெல்லாவற்றையும் உனக்கு மொழிந்தேன். இன்னம் என்ன கேட்கவேண்டுமென்று விரும்புகின்றனை? (இன்னம் ஏதேனும் கேட்கவேண்டி யிருந்து கேட்டால் சொல்லுகிறேன். கேட்பாயாக). ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

பரீக்ஷித்து மோக்ஷம் அடைதலும், ஜனமேஜயன் ஸர்ப்பயாகஞ் செய்தலும், வேதங்களின் சாகைகளை நிரூபித்துக் கூறுதலும்.

ஸூதர் சொல்லுகிறார்:—ஸமஸ்த ஆத்மாக்களையும் ஸமமாகப் பார்க்குந்தன்மையரும் வ்யாஸமஹர்ஷியின் குமாரரும் பரப்ரஹ்மத்தையே மனனஞ் செய்பவருமாகிய ஸ்ரீசுகமுனிவரால் இங்ஙனம் மொழியப்பெற்ற பரீக்ஷித்து மன்னவன் வணங்கின தலையினால் அவருடைய பாதகமலத்தை ஸ்பர்சித்துக் கைகளைக் குவித்துக் கொண்டு அம்முனிவரைக் குறித்து மேல்வாறு கூறினான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—தேவரீர் என்னிடத்தில் கருணைகூர்ந்து ஆதியந்தங்களற்றவனும் தன்னைப் பற்றினாருடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குந்தன்மையனுமான பரமபுருஷனுடைய ஸ்வரூபத்தையும் உபாஸனத்தையும் நான் ஸாக்ஷாத்கரித்தாற்போல் அறியும்படி எனக்கு உபதேசித்திராகையால், நான் ஸித்தார்த்தனானேன். (விரும்பின பொருள் ஸித்திக்கப் பெற்றேன்); அனுக்ரஹிக்கப் பட்டேன். இவ்வளவு அனுக்ரஹஞ் செய்யப்பெற்றேனாகையால் எனக்கு இனி கேட்க வேண்டியது என்ன இருக்கின்றது? பற்றினவரைக் கைவிடாமல் காக்குந் தன்மையனான பரமபுருஷனிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களும் வாத்ஸல்ய ஸௌசீல்யாதி குணங்களால் மேன்மையுற்றவர்களுமாகிய உம்மைப்போன்ற பெரியோர்கள் ஆத்ம ஸ்வரூபாதிகளை அறியாதவர்களும் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களால் வருந்துகிறவர்களுமாகிய ப்ராணிகளிடத்தில் அனுக்ரஹஞ் செய்வது பெரிய ஆச்சர்யமாக எனக்குத் தோற்றவில்லை. (அவர்களுக்கு அதுவே தன்மையல்

லவா?) உத்தமச்லோகனை பகவானுடைய குணங்களையே முக்யமாக நிரூபிக்கிற இப்புராண ஸம்ஹிதையை உம்மிடத்தினின்று நான் கேட்டேன். உம்மால் நிரூபிக்கப் பட்டதும் பயங்களுக்கிடமாகாததும் மஹாநந்தஸ்வரூபமுமாகிய பரப்ரஹ்மத்தின் அனுபவத்தில் அழுந்தினேன். ஆகையால் தக்ஷகன் முதலிய ம்ருத்யுக்களிடத்தினின்று நான் சிறிதும் பயப்படவில்லை. ப்ரஹ்மரிஷி! நான் மௌனவ்ரதத்தை ஏற்றுக்கொண்டு விஷயாபிலாஷங்களும் அவற்றின் வாஸனைகளும் தீரப்பெற்ற மனத்தை 1 அதோக்ஷஜனிடத்தில் நிலைநிறுத்தி ப்ராணன்களை விட விரும்புகிறேன். எனக்கு அனுமதி கொடுப்பீராக. நீர் கேவலாநந்த ரூபமான பகவத் ஸ்வரூபத்தை எனக்குத் தெரிவித்து ஜ்ஞானவிஜ்ஞான நிஷ்டையை உண்டாக்கி தேஹாத்மப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ரமம் இவற்றிற்கிடமான அஜ்ஞானத்தைப் போக்கினீர். ஆகையால் நான் க்ருதார்த்தனானேன்.

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அம்மன்னவனால் சொல்லப்பட்ட மஹானுபாவரான சுகமுனிவர் அவனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு அவனால் பூஜிக்கப்பட்டு முனிவர்களுடன் புறப்பட்டுப் போனார். ஜ்ஞானியாகிய பரீக்ஷித்து மன்னவனும் கங்கையின் கரையில் கிழக்கு நுனியாக தர்ப்பங்களைப் பரப்பி அதன்மேல் வடக்கு முகமாக உட்கார்ந்து மூச்சை அடக்கி வ்ருக்ஷம் போல் அசையாதிருந்து தேஹத்திலும் தேஹானுபந்திகளிடத்திலும் அபிமானமற்று 'தேஹமே ஆத்மாவா? அல்லது இரண்டும் வேறா? ஜீவ பரமாத்மாக்களிரண்டும்

---

1. இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கெட்டாத பரமபுருஷனிடத்தில்.

ஒன்று? வேறு?" இவை முதலிய ஸம்சயங்களெல்லாம் அறப்பெற்று ஆத்மஸ்வரூபம் பரமாத்மனுக்கே சேஷப்பட்டதென்று தனக்குள் நன்ருக அனுஸந்தித்துப் பெரிய மனவூக்கத்துடன் பரமாத்மனை த்யானித்துப் பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம் தோன்றப்பெற்று 'முக்தியை அடைந்தான். அந்தணர்களே! கோபமுற்ற ப்ராஹ்மணகுமாரனுல் தூண்டப்பட்ட தக்ஷகன் அம்மன்னவனைக் கொல்ல விரும்பி அவனிடம் போகும்பொழுது வழியில் காஶ்யபரைக் கண்டான். தக்ஷகன் பரீக்ஷித்தைக் கடிக்கப் போகிருனென்று கேள்விப்பட்டு விஷசிகித்ஸை செய்து அவனை ரக்ஷித்து அவனிடத்தினின்று பணம் வாங்கிக் கொண்டு வரவேண்டுமென்று போகின்ற 1 விஷஹாரியான அந்தக் காஶ்யபருக்குப்பணங்களைக் கொடுத்து த்ருப்தி செய்வித்து அவரைத் திருப்பியனுப்பிக் காமரூபனுகிய தக்ஷகன் ப்ராஹ்மண வேஷத்தினுல் மறைந்து சென்று பரீக்ஷித்து மன்னவனைக் கடித்தான். முக்தாவஸ்தையை அடைந்த ராஜர்ஷியாகிய பரீக்ஷித்தினுடைய தேஹம் ஸமஸ்த ப்ராணிகளும் பார்த்துக் கொண்டிருக்கையில் தக்ஷக ஸர்ப்பத்தினுடைய விஷாக்னியினுல் அந்தக்ஷணமே பஸ்மமாய்விட்டது. பூமியிலும் ஆகாயத்திலும் திசைகளிலும் எல்லா விடங்களிலும் பெரிய ஹாஹாகாரம் உண்டாயிற்று. ஏனென்ருல், தேவர்கள் அஸுரர்கள் மனுஷ்யர்கள் முதலிய அனைவரும் வியப்புற்ருர்கள். அப்பொழுது தேவதுந்துபிவாத்யங்கள் முழங்கின. கந்தர்வர்களும் அப்ஸரமடந்தையர்களும் பாடினுர்கள். தேவதைகள் நல்லது நல்லதென்று மொழிந்துகொண்டு பூமழை பொழிந்தார்

1. விஷத்தைப் போக்குபவரான.

கள். ஜனமேஜயன் தன் தந்தையைத் தக்ஷகன் கடித்தா னென்று கேள்விப்பட்டு மிகவும் கோபமுற்று ஸர்ப்பங் களையெல்லாம் அழிக்க விரும்பிப் பெரிய அந்தணர்களைக் கொண்டு ஸர்ப்பயாகமென்றொருயாகஞ் செய்து (மந்த்ர பலத்தினால் ஸர்ப்பங்களை யெல்லாம் வரவழைத்து) அக்னி யில் ஹோமஞ் செய்தான். தக்ஷகன் ஸர்ப்பயாகத்தில் பெ ருப்பெரிய ஸர்ப்பங்களெல்லாம் எரிகிற அக்னியில் தஹிக் கப்படுவது கண்டு பயத்தினால் மனங்கலங்கி இந்த்ர னைச் சரணம் அடைந்தான். பரீக்ஷித்தின் புதல்வனா கிய ஜனமேஜய மன்னவன் தன்தகப்பனைக் கடித்த தக்ஷகன் யாகாக்னியில் வந்து விழுந்து சாகாமையைக் கண்டு அந்தணர்களைக் குறித்து 'ஸர்ப்பங்களில் அதம னாகிய தக்ஷகன் அக்னியில் வந்து விழுந்து பஸ்மமாகக் காணோனே. அதுவேன்?'' என்று வினவினான். அந் தணர்கள் 'அவன் இந்த்ரனைச் சரணம் அடைய, அவ னை அவ்விந்த்ரன் காத்துக் கொண்டிருக்கிறான். அத னால் அந்தத் தக்ஷக ஸர்ப்பன் தடுக்கப்பட்டிருக்கிறான். ஆகையால் அவன் மந்த்ரங்களைச் சொல்லி அழைத்தும் அக்னியில் வந்து விழாதிருக்கிறான்' என்றார்கள். விசா லபுத்தியனான ஜனமேஜயன் அதைக் கேட்டு யாகஞ்செ ய்விக்கிற அவ்வந்தணர்களை நோக்கி 'அந்தணர்களே! தக்ஷகனை இந்த்ரனுடன் அக்னியில் ஏன் விழுத்தள் ளலாகாது' என்று மொழிந்தான். அந்தணர்களும் அதைக்கேட்டுத் 'தக்ஷகனே! தேவகணங்களோடு கூ டிய இந்த்ரனுடன் இந்த யாகாக்னியில் வந்து விழுவா யாக' என்னும் பொருளடங்கிய மந்த்ரத்தைச் சொல்லி இந்த்ரனோடு கூடிய தக்ஷகன் வந்து விழும்படி யாகாக் னியில் ஹோமஞ் செய்தார்கள். அந்தணர்கள் இங்ங னம் மொழிந்த கொடிய வசனங்களால் தேவேந்த்ரன்

விமானத்தோடும் தக்ஷகனோடும் தன்னுடைய ஸ்தானத்தினின்று நழுவி, இனி நாம் என்ன செய்வோமென்று பயந்து மனக்கலக்க முற்றான். தக்ஷகனோடுகூடிய தேவேந்த்ரன் விமானத்துடன் அங்ஙனம் ஆகாயத்தினின்று விழுவதைக் கண்டு ப்ருஹஸ்பதி ஜனமேஜய மன்னவனிடம் வந்து மொழிந்தார்.

ப்ருஹஸ்பதி சொல்லுகிறார்:—இந்த்ரன் தேவர்களுக்கு ப்ரபுவாயிருப்பதுபோல் மனுஷ்யர்களுக்கு ப்ரபுவாயிருப்பவனே! இந்தத் தக்ஷகஸர்ப்பன் உன்னால் வதம் அடைவதற்கு உரியவனல்லன். இவன் அம்ருதபானஞ் செய்தவன். ஆகையால் இவன் ஜராமரணங்களுக்கிடமாகத் தகுந்தவனல்லன். (ஆனால் உனக்கு 'இவன் நந்தந்தையைக் கொன்றானே' என்று இவன்மேல் கோபம் இருக்கும். ஆயினும், அது உண்மையை ஆராய்ந்து பார்க்கில் துறக்கத்தக்கதே யன்றி அனுஸரிக்கத் தக்க தன்று.) ப்ராணிகள் பிழைத்திருப்பதற்கும் மரணம் அடைவதற்கும் ஸ்வர்க்க நரகாதிகதிகளைப் பெறுதற்கும் காரணம் அவ்வவற்றின் கர்மமே. ராஜனே! இந்த ப்ராணிகளுக்கு ஸுகதுக்கங்களைக் கொடுப்பது அந்தக் கர்மந் தவிர மற்றொன்றும் அன்று. (எங்கள் தகப்பனைத் தக்ஷகன் கடித்துக் கொல்ல ப்ரத்யக்ஷமாகக் கண்டதுண்டே யன்றிக் கர்மம் கொன்றதாகத் தெரியவில்லையே யென்றால், சொல்லுகிறேன். கேள்.) மன்னவனே! ஸர்ப்பம் திருடன் சத்ரு அக்னி ஜலம் பசி தாஹம் வியாதி இவைகளால் ஜந்துக்கள் மரணம் அடைகின்றனவே; அவை தாம் செய்த ப்ராரப்த கர்மத்தின் பலனை அனுபவிக்கின்றன. (ஸர்ப்பம் முதலியவை அவ்வவற்றின் கர்மத்தினால் தூண்டப்பட்டு மரணாதிகளை விளைவிக்கின்றனவே யன்றி அவை ஸ்வதந்த்ரித்

துச் செய்பவை யல்ல). ராஜனே! ஆகையால் சத்ருவ தத்திற்காகச் செய்கிற இந்த யாகத்தை நிறுத்துவாயாக. நிரபராதிகளான ஸர்ப்பங்களை வீணாகத் தஹித்துவிட்டனே. ஜனங்கள் தம்முடைய ப்ராரப்தகர்மத்தை அனுபவிக்குந் தன்மையர்களே யன்றி அதற்குப் பிறர் காரணமன்று. (ஆகையால் உங்கள் தந்தை தன் கர்மத்தினால் மரணம் அடைந்தானன்றித் தக்ஷகனாலன்று. நீ அங்ஙனம் நினைப்பது உண்மையன்று).

ஸூதர் சொல்லுகிறார்:— ஜனமேஜயமன்னவன் இங்ஙனம் ப்ருஹஸ்பதியால் மொழியப்பெற்று மஹர்ஷியாகிய அவருடைய வசனத்தை வெகுமதித்து ஸர்ப்ப யாகத்தினின்று மீண்டு அந்த ப்ருஹஸ்பதியைப் பூஜித்தான். (தெரிந்தவர்களுக்குங்கூட ஏன் இப்படி மதி மயக்கம் உண்டாகின்றது. ப்ராஹ்மண கோபத்தினால் பரீக்ஷித்து மரணம் அடைந்தான். ஜனமேஜயனுடைய கோபத்தினால் ஸர்ப்பங்கள் மரணம் அடைந்தன. ப்ராஹ்மணர் அறிந்தவர். ஜனமேஜயனும் தெரிந்தவன். ஏன் இவர்களுக்குங்கூட இப்படி மதிமயக்கம் உண்டாயிற்றென்றால் சொல்லுகிறேன்; கேளுங்கள்.) ஸ்ரீமஹாவிஷ்ணுவின் மாயை மிகுந்த மஹிமையுடையதென்பது எல்லோர்க்கும் தெரிந்த விஷயமே. இந்த மாயையே ஒன்றுக்கு பாதிக்கை மற்றொன்றுக்கு பாதிக்கப்படுகை இவ்விரண்டையும் விளைக்கின்றது. (ஒன்று பாதிப்பதற்கும் மற்றொன்று பாதிக்கப்படுவதற்கும் காரணம் இந்த மாயையே). இவ்வாத்மா அந்த மாயையினால் ஸத்வாதிகுணவ்ருத்திகளுக்குட்பட்டுப்ராணிகள் விஷயத்தில் மதிமயங்குகிறான். (ப்ராணிகள் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் மாயையினால் மதிமயங்கித் தன்னுடைய ஸுகதுக்கங்களுக்குத் தன்னுடைய புண்ய பாபகர்மங்களைக் காரணமாக

நினையாமல் பிறரைக் காரணமாக நினைக்கின்றன.) இந்த மாயை ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய தாகையால் இதனுடைய ஸம்பந்தம் அவனுக்கும் உண்டல்லவா? ஆகையால் இது அவனுக்கும் மோஹாதிகளை விளைக்குமோ என்னவோ வென்று சங்கிக்கவேண்டாம். பரமாத்ம ஸ்வரூபநிரூபணஞ் செய்யும் அறிஞர்கள் பல தடவைகளில் பரமாத்ம ஸ்வரூபத்தை ஆராயும்பொழுது இம்மாயை அவர்களுக்குத் தன்கார்யமான விகாரங்களை விளைக்கவல்லதாகிறதில்லை. இப்படியாயின், நேரே அப்பரமாத்ம ஸ்வரூபத்தில் இம்மாயை தன் கார்யத்தை விளைக்க மாட்டாதென்பதைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? மற்றும், இம்மாயையின் கார்யமான மோஹத்தினால் விளைகிற பற்பல விகாரங்களுக்கும் 1 அது இடமாகிறதில்லை. ஸங்கல்ப விகல்பங்களுக்கிடமான மனத்திற்கும் அது விஷயமாகிறதில்லை. (பரிசுத்தமான யோகிகளுடைய மனத்திற்கே அது விஷயமாம்). கர்மத்தினால் விளைகிற சரீரமும் கர்மமும் அதில் கிடையா. மற்றும், அக்கர்மத்தினாலும் கர்மமூலமான சரீரத்தினாலும் விளைகிற ஸுகதுக்காதிகளும் அதில் கிடையா. தேவன் மனுஷ்யன் முதலிய சப்தங்களுக்கும் அது விஷயமாகிறதில்லை. பரமாத்மஸ்வரூபத்தை தேவனென்றாவது மனுஷ்யனென்றாவது சொல்ல முடியாது. பரமாத்ம ஸ்வரூபம் இத்தகையது. ஜீவன் ஸத்வரஜஸ் தமோகுணங்களுக்கு உட்பட்டவனாயினும் இத்தகைய பரமாத்மஸ்வரூபத்தை மனனஞ் செய்துகொண்டு ப்ருதிவி முதலிய அசேதனதத்வங்களையும் பசி தாஹம் சோகம்மோஹம் ஜரை ம்ருத்யு என்னும் ஊர்மிகளையும் பரிஹரித்து ஒன்று தலையெடுத்து மற்றொன்றை அடக்

1. அந்தப் பரமாத்ம ஸ்வரூபம்.

குந் தன்மையுடைய ஸத்வாதி குணங்களையும் அடக்கி மனவூக்கமுற்று எல்லாச் செயல்களினின்றும் மீளவேண்டும். எங்கும் நிறைந்திருக்கின்றமையால் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்று கூறப்படுகிற பரமபுருஷனுடைய ஸ்வரூபம்ப்ரக்ருதிபுருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணமென்று கூறுகிறார்கள். அது சேதநாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமென்று தெரிவிக்கும்பொருட்டு ப்ரக்ருதிப்ராக்ருதங்களென்கிற ஜடவஸ்துக்களும் அஜடமான ஆத்மவஸ்துக்களும் எத்தகையனவோ அத்தகையதன்றென்று நிரூபிக்கிறார்கள். யோகிகள் ராகத்வேஷாதிகளையும் அஹங்கார மமகாரங்களையும் துறந்து பகவானைத் தவிர மற்ற எதிலும் ஸ்னேஹமின்றி இத்தகைய பரமபுருஷஸ்வரூபத்தை ஹ்ருதயத்தினால் த்யானித்து நிலைநிறுத்தி மனவூக்கத்துடன் நிச்சயிக்கிறார்கள். எவர்களுக்கு தேஹத்தில் அஹங்காரமும் (ஆத்மாபிமானமும்) க்ருஹம் முதலியவற்றில் மமகாரமும் (என்னுடையதென்னும் அபிமானமும்) ஆகிற தௌர்ஜன்யம் இல்லையோ, அவர்கள் ஸர்வத்திலும் விலக்ஷணமான ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஸ்வரூபத்தை அறிகிறார்கள். (இந்த அஹங்கார மமகாரங்களுக்கும் பாத்யபாதக பாவனைக்கும் காரணம் பகவானுடைய மாயையாகையால் அதைக் கடக்க விரும்புகிறவர்கள் இருக்கவேண்டிய நிலைமையைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக). பிறர் தன்னைப்பற்றி எவ்வளவு பருஷமாகப் பேசினும் அவற்றைப் பொறுக்கவேண்டும். ஒருவனையும் அவமதிக்கலாகாது. மரணம் அடையுந்தன்மையதான இத்தேஹத்தில் அபிமானங்கொண்டு அதற்கு விரோதியென்று ஒருவனோடும் வைரத்தை ஏற்றுக்கொள்ளலாகாது. எல்லாமறிந்த மஹானுபாவரும் எங்கும் தடைபடாத

மதியுடையவரும் க்ருஷ்ணத்வைபாயனரென்று ப்ரஸித்தி பெற்றவருமான அந்த வேதவ்யாஸருக்கு நமஸ்காரம். இவருடைய பாதாரவிந்தங்களின் த்யானத்தினாலல்லவோ நான் ஸ்ரீபாகவதமென்னும் இப்புராண ஸம்ஹிதையைக் கற்றேன்.

ஶௌனகர் சொல்லுகிறார்:—வேதங்களில் விதிக்கப்பட்ட ஆசாரங்களைத் தாம் அனுஷ்டித்துப் பிறரும் அனுஷ்டிக்கும்படி வெளியிடுகிறவர்களும் மஹானுபாவர்களுமான பைலர் முதலிய வ்யாஸமஹர்ஷியின் சிஷ்யர்கள் வேதங்களை எத்தனை வகையாகப் பிரித்தார்கள்? நல்லியற்கை யுடையவரே! இதை எங்களுக்குச் சொல்வீராக.

ஸூதர் சொல்லுகிறார்:—ப்ராஹ்மணஶ்ரேஷ்டரே! உலகங்களுக்கெல்லாம் மேலான ஸத்யலோகத்தில் வாஸஞ்செய்கிறவனும் பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடையவனுமாகிய ப்ரஹ்மதேவனுடைய ஹ்ருதயாகாசத்தினின்று ஒரு நாதம் உண்டாயிற்று. (ஹ்ருதயாகாசத்திலுள்ள வாயுவின் பரிணாமமான ப்ராணகோஷம் உண்டாயிற்று.) இந்த நாதம் காதை மூடுகையில் செவிப்படும். அந்தணரே! யோகிகள் இந்த நாதத்தை உபாஸித்து அதனால் ஜ்ஞானம் உண்டாகப்பெற்று த்ரவ்யம் க்ரியை காரகம் என்னும் ஆத்மமலத்தைப் போக்கி மோக்ஷத்தை அடைகின்றார்கள். (இங்கு த்ரவ்யமாவது-சரீரம். க்ரியையாவது-புண்யபாபகர்மம். காரகமாவது-இந்த்ரியம்.) அந்த நாதத்தினின்று அகர உகர மகரங்களென்னும் மூன்று அக்ஷரங்கள் அடங்கியதும் மூன்று மாத்ரைகளையுடையதுமாகிய ஓங்காரம் உண்டாயிற்று. யோகாப்யாஸமில்லாதவர்களுக்கு அதன் உற்பத்தியை அறியமுடியாது. அந்த ஓங்காரம் தானே ப்ரகா

சிக்குந்தன்மையது. பரமாத்மாவான பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை இந்த ஓங்காரம் விடுத்துக் கூறுகின்றது. இந்த ஓங்காரம் ப்ரணவமென்று கூறப்படும். காதை மூடிக்கொண்டிருப்பினும் இந்த ப்ரணவசப்தத்தை எவன் கேட்கிருனே, அவன் பரமாத்மனே; ஜீவனல்லன். ஜீவன் இந்த்ரியங்களால் அறிவனேயன்றி இந்த்ரியங்களின் உதவியின்றி எதையும் அறியவல்லனல்லன். பரமாத்மனேவென்ருல் இந்த்ரியங்கள் இல்லாதிருப்பினும் அறியுந்திறமுடையவன். (அவன் அறிவில் இந்த்ரியங்களை எதிர் பார்ப்பவனல்லன்). (ஜீவனுக்கு நாதம் செவிப்படுவது பரமாத்மாவின் மூலமாகவேயன்றி நேராகவன்று). லௌகிக வைதிக சப்தங்களெல்லாம் இந்த ப்ரணவத்தினின்று வெளியாகின்றன. இந்த ப்ரணவஸ்வரூபம் வெளியாகுமிடம் ஹ்ருதயாகாசம். இந்த ப்ரணவம் தன்னுடைய மஹிமையில் நிலைநின்றிருக்கிற பரமாத்மாவான பரப்ரஹ்மத்தை நேராக உள்ளபடி உரைக்கின்றது. இத்தகையதான அந்த ப்ரணவம் ஸமஸ்த மந்த்ரங்களுக்கும் உபநிஷத்துக்களுக்கும் வேதங்களுக்கும் காரணம். மற்றும், இது அனுதி, ப்ருகுகுலத்தை வளர்ப்பவரே! அந்த ப்ரணவத்தில் அகரம் உகரம், மகரம் என்னும் மூன்று எழுத்துக்கள் அடங்கியிருக்கின்றன. இம்மூன்று எழுத்துக்களும் அனன்யார்ஹசேஷத்வம் (பிறர்க்குரியனுகாமல் பரமபுருஷனுக்கே சேஷமாயிருக்கை) அனன்யமாரணத்வம் (வேருெரு மாரணமற்றிருக்கை) அனன்யபோக்யத்வம் (வேருெரு போக்ய மற்றிருக்கை) ஆகிய மூன்று அர்த்தங்களைக் கூறுகின்றன. மற்றும், ப்ராப்யத்வம் ப்ராபகத்வம் முதலிய குணங்களை வெளியிடுகிற நாராயணுதி நாமங்களுடைய தத்தம் பொருள்களை அறிவிக்கையாகிற வ்ருத்திகளுக்கும் காரணமாயிருக்

கும். நான்முகனைச் சரீரமாகவுடைய பரமபுருஷன் இத்தகையதான அந்த ப்ரணவத்தினின்று அந்தஸ்தங்களென்று ப்ரஸித்தங்களான ய ர ல வ என்னும் அக்ஷரங்களும் ஊஷ்மங்களென்று ப்ரஸித்தங்களான ஶ ஷ ஸ ஹ என்னும் அக்ஷரங்களும் ஸ்வரங்களென்று ப்ரஸித்தங்களான அ-இ-உ முதலிய அச்சுக்களும் ஸ்பர்சங்களென்று ப்ரஸித்தங்களான கவர்க்கம் சவர்க்கம் டவர்க்கம் தவர்க்கம் பவர்க்கம் என்று ஐந்துவகையாகப் பிரிந்த இருபத்தைந்து அக்ஷரங்களும் அடங்கி ஹ்ரஸ்வம் தீர்க்கம் ப்லுதம் முதலிய அச்சுக்களின் தர்மங்களும் அடங்கிய [1] அக்ஷரஸமாம்நாயத்தைப் படைத்தான். ப்ரஹ்மதேவனைச்சரீரமாகவுடைய இப்பரமபுருஷன் அந்த அக்ஷரஸமாம்நாயத்தினால் நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களையும் வெளியிட்டான்; பிறகு ப்ரணவத்தோடும் வ்யாஹ்ருதிகளோடும் கூடிய அந்நான்குவேதங்களையும் மரீசி முதலிய தன் புதல்வர்களுக்கு ஓதுவித்தான். அவர்கள் வேதமோதுவதில் திறமையுள்ளவர்களாயிருந்தார்கள்; மற்றும், ப்ரஹ்மரிஷிகள். வேதங்களில் கூறப்படுகிற தர்மங்களை அறிந்து அனுஷ்டித்துப் பிறர்க்கு உபதேசிக்குந்தன்மையர்களான அந்த மரீசி முதலியவர்கள் கஶ்யபர் முதலிய தம்புதல்வர்களுக்கு அவ்வேதங்களை உபதேசித்தார்கள். வ்ரதங்களைத் தவறுமல் அனுஷ்டிக்குந்தன்மையர்களான அவரவர் சிஷ்யர்களால் பரம்பரையாக இதுவரையிலும் அவ்வேதங்கள் ஒவ்வொரு சதுர்யுகத்திலும் ஓதப்பட்டு வருகின்றன. அவை த்வாபரம் வரையில் பிரிவினையில்லாமல் தண்டாகாரமாகவே இருக்கின்றன. பிறகு த்வாபரத்தின் கடைசியில் மஹர்ஷிகளால் பிரிக்கப்படுகின்றன. மஹர்ஷிகள், ஹ்ருதயத்தில் வஸி

1. அக்ஷரஸமூஹத்தை.

த்துக்கொண்டிருக்கிற அச்சுதனால் தூண்டப்பட்டு ஜனங்கள் காலதர்மத்தினால் ஆயுள் தேஹபலம் புத்திபலம் இவை குறையப் பெற்றிருப்பதைக் கண்டு வேதங்களைப் பிரித்தார்கள். ப்ராஹ்மண ஶ்ரேஷ்டரே! மிகுந்த பாக்யமுடையவரே! இந்த வைவஸ்வத மன்வந்தரத்திலும் (இருபத்தெட்டாவது சதுர்யுகத்தின் த்வாபரயுகாதியில்) உலகங்களின் க்ஷேமங்களை நடத்துந் தன்மையனாகிய பகவான் ப்ரஹ்மதேவன் ருத்ரன் முதலாக லோகபாலர்களால் தர்மரக்ஷணத்தின் பொருட்டு வேண்டப் பெற்று ப்ரபுவாகிய அப்பரமபுருஷன் பராசரமஹர்ஷியிடத்தினின்று ஸத்யவதியிடத்தில் தன்னுடைய அம்சாம்சகலையினால் (அதிஸூக்ஷ்மாம்சத்தினால்) அவதரித்து வேதங்களை நான்கு பாகங்களாகப் பிரித்தான். அப்பரமன் ருக்கென்றும் அதர்வமென்றும் யஜுஸ்ஸென்றும் ஸாமமென்றும் நான்குவகையான வேதராசிகளைத் தான் ஸாக்ஷாத்கரித்து, நானாவிதமான ரத்னக் குவியல்களினின்று ரத்னங்களைப் பொறுக்கி மாலைகள் கோப்பதுபோல், அந்த வேதராசிகளினின்று ஸாராம்சங்களை எடுத்து நான்கு ஸம்ஹிதைகளாகச் செய்தான். மிகுந்த மதியுடைய அப்பராசரகுமாரர் நான்கு சிஷ்யர்களை அழைத்து அந்த நான்கு ஸம்ஹிதைகளில் ஒவ்வொரு ஸம்ஹிதையை ஒவ்வொரு சிஷ்யனுக்கு உபதேசித்தார். அவற்றில் முதல் ஸம்ஹிதையான பஹ்வ்ருசமென்னும் பெயருடைய ருக்வேதத்தைப் பைலரென்னும் சிஷ்யருக்கு உபதேசித்தார். நிகதமென்னும் பெயருடைய யஜுர் வேதத்தை வைசம்பாயனரென்னும் சிஷ்யருக்கு உபதேசித்தார். சந்தோகஸம்ஹிதையான ஸாமவேதத்தை ஜைமினியென்னும் சிஷ்யருக்கு உபதேசித்தார். ஆங்கிரஸமென்னும் பெயருடைய அதர்வவேதத்தை ஸும

க்துவென்னும தன் ஸிஷ்யருக்கு உபதேஸித்தார். பைல மாமுனிவர் தாம் பாராசர்யரிடத்தினின்று அத்யயனஞ் செய்த பஹ்வ்ருசமென்னும் ருக்வேதசாகையை இரு வகையாகப் பிரித்துத் தன் புதல்வரான இந்த்ரப்ரமிதிக்கு ஒரு பாகத்தையும் ஸிஷ்யரான பாஷ்கலருக்கு மற்றொரு பாகத்தையும் உபதேஸித்தார். ப்ருகுகுலத்தில் பிறந்த மஹானுபாவரே! அவர்களில் பாஷ்கலர் தன் ஸம்ஹிதையை நான்கு வகையாகப் பிரித்துத் தன் ஸிஷ்யர்களான போத்யர் யாஜ்ஞவல்க்யர் பராசரர் அக்னிமித்ரர் இவர்களுக்கு ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பாகமாக உபதேஸித்தார். ஸிறந்த மதியுடைய இந்த்ரப்ரமிதியும் தன்சாகையைத் தன் புதல்வரும் அறிஞருமாகிய மாண்டூகேயரென்னும் ரிஷிக்கு உபதேஸித்தார். (அம் மாண்டூகேயர் அந்த ஸம்ஹிதையை வேதமித்ரரென்னும் தன் ஸிஷ்யருக்கு உபதேஸித்தார்) அம்மண்டூகேய ஸிஷ்யரான வேதமித்ரர் ஸௌபரிமுதலியவர்களுக்குஉபதேஸித்தார். மண்டூகேயரின் புதல்வரான சாகல்யரென்பவர் தன் ஸம்ஹிதையை ஐந்து பாகங்களாகப் பிரித்து வாத்ஸ்யர் முத்கலர் சாலீயர் கௌகல்யர் ஸிஸிரர் என்னும் இவர்களுக்கு உபதேஸித்தார். அந்த சாகல்யருடைய ஸிஷ்யரான ஜாதுகர்ண முனிவர் நிருக்தத்தோடு கூடிய தன் ஸம்ஹிதையை நான்கு பாகங்களாகப் பிரித்து பாலாகர் பைஞ்சர் வைதாலர் விரஜர் என்னும் இவர்களுக்கு உபதேஸித்தார். முன்சொன்ன பாஷ்கலருடைய புதல்வர் கீழ்ச்சொன்ன எல்லா ஸம்ஹிதைகளினின்றும் பொறுக்கி யெடுத்து வாலகில்யமென்னும் சாகையை ஏற்படுத்தினர். அதைப் பைலாயனி கார்க்கி காஸாரர் இவர்கள் அவரிடத்தினின்றும் அத்யயனஞ் செய்தார்கள். இங்ஙனம் பஹ்வ்ருசமென்று ப்ரஸித்த

மான ருக்வேத ஸம்ஹிதைகள் இத்தனை சாகைகளா கப் பிரிந்தன. இவற்றை இந்த ப்ராஹ்மரிஷிகள் அத்ய யனஞ்செய்து ஹ்ருதயத்தில் தரித்துக் கொண்டார்கள். இந்த வேதங்களின் பிரிவினையைக் கேட்பானாயின், ஸம ஸ்த பாபங்களாலும் விடுபடுவான். வைசம்பாயன சிஷ் யர்கள் சரகர்களென்றும் அத்வர்யுக்களென்றும் பெயர் பெற்றார்கள். ஏனென்றால், அத்வர்யுசாகையை அத்ய யனஞ் செய்தார்களாகையால் அத்வர்யுக்களென்றும், ப்ராஹ்மஹத்யையாகிற மஹாபாபத்தைப் போக்கும் வ்ர தத்தைத் தங்கள் குருவுக்காகத் தாங்கள் அனுஷ்டித் தார்களாகையால் சரகர்களென்றும் அவர்களுக்கு ப்ர ஸித்தி உண்டாயிற்று. வைசம்பாயனருடைய சிஷ்ய ரான யாஜ்ஞவல்க்யரென்பவர் தன் குருவைப் பார்த்து 'மஹானுபாபாவரே! அல்பமான தபோபலமுடைய இவர்களுடைய வ்ரதானுஷ்டானத்தினால் என்ன பலன்? நானேவென்றால் ஒருவராலும் அனுஷ்டிக்க முடியாத வ்ரதத்தை அனுஷ்டிக்கிறேன்' என்று மொழிந்தார். அங்ஙனம் மொழியப்பெற்ற குருவான வைசம்பாயனரும் கோபமுற்று 'ப்ராஹ்மணர்களை அவமதிக்கின்ற நீ எனக்குச் சிஷ்யனாயிருந்தது போதும். நீ புறப்பட்டுப் போவாயாக. ஆனால், என்னிடத்தில் அத்யயனஞ் செய்த வேதசாகையைக் கக்கிவிட்டுச் சீக்ரம் போகவேண்டும்' என்றார். தேவராதருடைய பிள்ளையான யாஜ்ஞவல்க் யரும் யஜுர்வேதங்களின் ஸமூஹத்தைக் கக்கிவிட்டுப் போனார். பிறகு முனிவர்கள் அந்த யஜுர்வேத ஸமூ ஹங்களைக் கண்டார்கள். அவர்கள் வேதங்களில் விருப் பமுடையவர்களாகையால் தித்திரிப்பறவைகளின் உரு வங்கொண்டு அந்த யஜுர்வேதங்களை எடுத்துக்கொண் டார்கள். ஆகையால் யஜுர்வேத சாகை தைத்

திரீய சாகையென்று ப்ரஸித்திபெற்றது. அது மிகவும் அழகாயிருக்கும். ப்ரஹ்மரிஷியே! பிறகு யாஜ்ஞவல்க்யர் குருவிடத்தினின்று அத்யயனஞ் செய்த வேதங்களை ஆராய்ந்து பார்க்கையில், கக்கி விட்டாராகையால் அவை அவர்க்குத் தோற்றவேயில்லை. அன்னவர் வேதங்களைப் பெறவிரும்பி ஸூர்ய மண்டலத்தினிடையி லிருக்கின்ற பரமபுருஷனை நன்கு துதி செய்தார்.

யாஜ்ஞவல்க்யர் சொல்லுகிறார்:—ஸூர்ய மண்டலத்தினிடையி லிருக்கின்றவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பரம புருஷனுக்கு நமஸ்காரம். இப்பரமன் நான்கு வகையான தேஹங்களையுடைய ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழுவரையிலுள்ள பற்பல ப்ராணிகள் அடங்கின ஸமஸ்த லோகங்களுடைய ஹ்ருதயங்களிலும் ஆத்மஸ்வரூபத்தினாலும வெளியில் காலஸ்வரூபத்தினாலும் ஆகாயம்போல வியாபித்திருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறுதவனாகித் தானொருவனே க்ஷணம் லவம் நிமிஷம் முதலிய அவயவங்களால் வளர்ந்திருக்கின்ற பற்பல ஸம்வத்ஸரங்களாக ஜலத்தை இழுப்பதும் விடுவதும் செய்து லோகயாத்ரையை நடத்திக்கொண்டு வருகிறான். தேவதைகளில் சிறந்தவனே! ஸவிதாவே! (ப்ராணிகளின் புத்தியைத் தூண்டுந்தன்மையனே!) உலகங்களுக்கு வெயில் காய்ந்து உபகாரஞ் செய்வதனால் தபனனென்று பெயர்பெற்றவனே! தினந்தோறும் வேதமார்க்கத்தினபடி உபாஸனஞ் செய்கிற ஜனங்களின பாபங்களும் அவற்றின் காரணமான அஜ்ஞானமும் அவற்றின் பலனான துக்கங்களுமாகிற விதைகளை வறுக்குந்தன்மையதான (அவை பலிக்காதபடி அவற்றை அழிக்குந் தன்மையதான) உன மண்டலம் இதோ கீழே காய்கின்றதே; இதை நன்கு த்யானஞ்

செய்வோமாக. நீயே உன்னுடைய சரீரங்களான ஜங்கம ஸ்தாவர ஸமூஹங்களின் இந்த்ரியப்ராண கணங்களை யும் ஜீவாத்மாக்களையும் அந்தராத்மாவாயிருந்து நியமித்துக் கொண்டிருக்கின்றனை. பரமகாருணிகனை நீ, இவ்வுலகமெல்லாம் மிகவும் பயங்கரமான முகமுடைய அந்தகாரமாகிற மலைப்பாம்பினுல் பிடியுண்டு மரணம் அடைந்தாற்போல் ப்ரஜ்ஞையற்றிருப்பதைக் கண்டு மிகுந்த கருணை யமைந்த கண்ணேக்கத்தினுல் எழுப்பி தினந்தோறும் மூன்று ஸந்திகளிலும் உன்னுடைய ஆராதனரூபமான தர்மமாகிற நன்மையில் மூட்டுகின்றனை. அதுவே யன்றோ இவ்வுலகத்திற்கெல்லாம் ஸ்வபாவ ஸித்தமான நன்மையாம். மற்றும், அதுவே மனுக்கத்திற்கு ஹேதுவாயிருக்கும். மற்றும், தேவதைகளுக்கு ப்ரபுவான நீ அரசன்போல் துஷ்ட ஜந்துக்களுக்கு பயத்தை விளைத்துக்கொண்டு திரிகின்றனை. அன்றியும், திக்பாலகர்கள் ஆங்காங்கு நாற்புறத்திலும் தாமரைமொட்டுபோன்ற அஞ்சலிகளால் உன்னை ஆராதிக்கின்றார்கள். ஷாட்குண்ய பூர்ணனே! மூன்று லோகங்களுக்கும் குருக்களான ப்ரஹ்மாதிகளாலும் வணங்கப்பட்ட உன்பாதாரவிந்த யுகலத்தை நான் பிறரால் உள்ளபடி அறியப்படாதவைகளும் அழியாத ஸாரமுடையவைகளுமான யஜுர் வேதங்களைப்பெற விரும்பி வணங்குகின்றேன்.

ஸூதர் சொல்லுகிறார்:—என்று யாஜ்ஞவல்க்யர் ஸூர்ய மண்டலாந்தர்வர்த்தியான பகவானைத் துதித்தார். இங்ஙனம் துதித்து அருள்புரிவிக்கப் பெற்ற ஸூர்யமண்டல மத்யவர்த்தியான அந்தப் பகவான் தன்னைப் பற்றினுருடைய பாபங்களைப் போக்கி விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுப்பவனுகையால் குதிரையின்

உருவந்தரித்துக் கொண்டுவந்து யாஜ்ஞவல்க்ய முனிவர்க்கு [1] அயாதயாமங்களான யஜுர்வேதங்களை உபதேசித்தான். ஸமர்த்தரான அம்முனிவரும் அளவற்றவைகளான அந்த யஜுர்வேதங்களைப் பதினைந்து சாகைகளாகப் பிரித்தார். குதிரையின் உருவங்கொண்ட பகவானால் யாஜ்ஞவல்க்யருக்கு உபதேசிக்கப்பட்ட அந்த யஜுர்வேத சாகைகளைக் காண்வர்களும் மாத்யந்தினர்களும் முதலியவர்கள் அவரிடத்தினின்று அத்யயனஞ் செய்தார்கள். ஸாமவேதங்களை ஓதின ஜைமினிக்கு ஸுமந்துவென்னும் பிள்ளை பிறந்தார். அவர் மிகுந்த அறிவுடையவர். அவர்க்கு ஸுதன்வானென்னும் பிள்ளை பிறந்தார். ஜைமினிமுனிவர் தான் ஓதின ஸாமவேதத்தை இரண்டு சாகைகளாகப் பிரித்துப் பிள்ளையும் பேரனுமாகிய அவ்விருவர்க்கும் ஒவ்வொரு சாகையாக உபதேசித்தார். அந்தணரே! அந்த ஜைமுனியின் சிஷ்யரும் மஹானுபாவருமான ஸுகர்மாவென்பவர் ஸாமவேதமாகிற வ்ருக்ஷத்திற்கு ஆயிரஞ் சாகைகளை ஏற்படுத்தினார். கௌஸல்யரான ஹிரண்யநாபர் பௌஷ்பிஞ்சர் என்னும் இருவரும ஸுகர்மாவின் சிஷ்யர்கள். அவர்கள் அவரிடத்தினின்று ஸாமவேதங்களை அத்யயனஞ் செய்தார்கள். அங்ஙனமே ஆவந்த்யரென்பவரும் அந்த ஸுகர்மாவின் சிஷ்யரே. அவர் ப்ராஹ்மஜ்ஞானிகளில் சிறந்தவர். அவரும் அவரிடத்தினின்று ஸாமவேதங்களை அத்யயனஞ் செய்தார். ஹிரண்யநாபர் பௌஷ்பிஞ்சர் ஆவந்த்யர் இம்மூவர்க்கும் ஐந்நூறு சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் ஸாமவேதங்களை அவர்களிடத்தினின்று அத்யயனஞ் செய்தார்கள். அவர்கள் உதீச்யர்களென்று ப்ரஸித்தி பெற்

1. நீரஸங்களாகாத.

றவர்கள். அவர்களில் சிலரை ப்ராச்யர்களென்றும் சொல்லுவார்கள். லோகாக்ஷி லாங்கலி குஸீதர் கல்யர் குக்ஷி என்னும் இவ்வைவரும் பௌஷ்பிஞ்சருடைய சிஷ்யர்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஸாமசாகைகளில் இருநூறு இருநூறு சாகைகளை அத்யயனஞ் செய்தார்கள். ஹிரண்யநாபருடைய சிஷ்யர் க்ருதரென்பவர் தன்னுடைய சிஷ்யர்களுக்கு இருபத்து நான்கு சாகைகளை உபதேசித்தார். மிகுந்தமதியுடைய ஆவந்த்யர் தன் சிஷ்யர்களுக்கு மற்ற சாகைகளை உபதேசித்தார். ஆறுவது அத்யாயம் முற்றிற்று.

---

அதர்வவேதத்தின் விபாகத்தைக் கூறுதல்.

ஸூதர் சொல்லுகிறார்:—அதர்வ வேதத்தை அறிந்த ஸுமந்தரென்பவர் தன் சிஷ்யரான கபந்தரென்பவர்க்குத் தான் அத்யயனஞ் செய்த அதர்வவேத ஸம்ஹிதையை உபதேசித்தார். அக்கபந்தர் அவ்வதர்வஸம்ஹிதையை இரண்டு சாகைகளாகப் பிரித்துப் பத்யரென்னும் சிஷ்யர்க்கு ஒரு சாகையையும், வேததர்சரென்னும் சிஷ்யர்க்கு ஒரு சாகையையும் உபதேசித்தார். ப்ரஹ்மரிஷியே! ஸௌல்காயனி, ப்ரஹ்மபிலி, மௌத்கலர், பிப்பலாயனர் என்னும் இந்நால்வரும் ப்ரஸித்தர்களல்லவா? அவர்கள் வேததர்சருடைய சிஷ்யர்கள். பத்யருடைய சிஷ்யர்களையும் சொல்லுகிறேன்; கேட்பீராக. குமுதர், சுனகர் ஜாஜலி என்னும் இம்மூவரும் பத்யருடைய சிஷ்யர்கள். (வேததர்சர் தன்னுடைய ஸம்ஹிதையை நாலு பாகங்களாகப் பிரித்துத் தன் சிஷ்யர்கள் நால்வர்க்கும் உபதேசித்தார். பத்யர் தன் ஸம்ஹிதையை மூன்று பாகங்களாகப் பிரித்துத் தன் சிஷ்யர்கள் மூவர்க்கும் உபதேசித்தார்). அவர்

களில் ஜாஜலி அதர்வ வேதத்தை நன்றாக உணர்ந்தவர். பப்ருவும் ஆங்கிரஸ கோத்ரத்தில் பிறந்த ஸைந்தவாயனரும் ஸௌனகருடைய சிஷ்யர்கள். (அந்த சௌனகர் தன் ஸம்ஹிதையை இரண்டு சாகைகளாகப் பிரித்துத் தன்சிஷ்யர்களுக்கு உபதேசிக்க) அவ்விருவரும் அவ்விரண்டு சாகைகளை அவரிடத்தினின்று பெற்றார்கள். பப்ரு ஸைந்தவாயனர் ஆகிய அவ்விருவருடைய சிஷ்யர்களான ஸாவர்ணி நக்ஷத்ரகல்பர் சாந்திகல்பர் ஆகிய இவர்களும் காஸ்யபர்களும் ஆங்கிரஸர்களும் அதர்வவேதத்தின் சாகைகளைப் பிரித்து ப்ரவர்த்திப்பித்தார்கள். முனிவரே! இங்ஙனம் வேத ஸம்ஹிதாவிபாகத்தைச் சொன்னேன்) இனிமேல் பௌராணிகர்களைச் சொல்லுகிறேன். கேட்பீராக. த்ரய்யாருணி, கஸ்யபர், ஸாவர்ணி, அக்ருதவ்ரணர், வைசம்பாயனர், ஹாரீதர் ஆகிய இவ்வறுவரும் பௌராணிகர்கள். இவர்கள் வ்யாஸருடைய சிஷ்யரான என் தகப்பனாரிடத்தினின்று ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஸம்ஹிதையை அத்யயனஞ் செய்தார்கள். நான் இவ்வறுவர்க்கும் சிஷ்யனாகி எல்லா ஸம்ஹிதைகளையும் அத்யயனஞ் செய்தேன். காஸ்யபர், நான், ஸாவர்ணி, ராமசிஷ்யரான அக்ருதவ்ரணர் ஆகிய நாங்கள் நால்வரும் வ்யாஸபுத்ரரான ஸ்ரீசுகரிடத்தினின்று மூலஸம்ஹிதைகள் நான்கையும் அத்யயனஞ் செய்தோம். ப்ராஹ்மணஸ்ரேஷ்டரே! ப்ரஹ்மரிஷிகள் வேதசாஸ்த்ரங்களை அனுஸரித்துப் புராணலக்ஷணத்தை நிரூபித்திருக்கிறார்கள். அதைச் சொல்லுகிறேன். மனவூக்கத்துடன் கேட்பீராக. ஸர்க்கம், விஸர்க்கம், வ்ருத்தி, ரக்ஷை, மன்வந்தரங்கள், வம்சம், வம்சானுசரிதம், ஸம்ஸ்தை, ஹேது, அபாஸ்ரயம் ஆகிய இப்பத்து விஷயங்களை நிரூபிக்கையாகிற

பத்து லக்ஷணங்களையுடையது புராணமென்று அப்பு ராணலக்ஷண மறிந்தவர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள். ப்ராஹ்மணஶ்ரேஷ்டரே! சில இடங்களில் ஐந்து லக்ஷ ணங்களுடையது புராணமென்று கூறப்பட்டிருக்கிறது. ஆனால் பத்து லக்ஷணங்களையுடையது அல்பபுராண மென்னும் பிரிவினையை உட்கொண்டு சிலர் அங்ஙனம் சொன்னார்களென்றுணர்க. (அந்த அல்பபுராணமா வது—ஸர்க்கம், ப்ரதிஸர்க்கம், வம்சம், மன்வந்த்ரங் கள், வம்சானுசரிதம் ஆகிய இவ்வைந்து விஷயங்களை நிரூபிக்கையாகிற ஐந்து லக்ஷணங்களை யுடையதாம்). அவ்யாக்ருதமென்று கூறப்படுகிற மூலப்ரக்ருதியின் குணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்கள் ஸாம்யாவஸ் தையைத் துறந்து வைஷம்யத்தை அடைகையில் அதி னின்று ஸத்வாதி குணமயமான மஹத்தத்வம் உண்டா கின்றது. அதினின்று ஸத்வாதிகுணமயமான அஹங் காரதத்வம் உண்டாகின்றது. அதினின்று அத்தகைய ஆகாசாதி பஞ்ச பூதங்களும் அவற்றின் ஸூக்ஷ்மங் களான சப்தாதி விஷயங்களும் இந்த்ரியங்களும் ஆகிய இவை உண்டாகின்றன. இந்த உற்பத்தியே ஸர்க்க மென்று கூறப்படுகின்றது. பரம புருஷனால் ஸ்ருஷ்டிக் குந்திறமை உண்டாகும்படி அனுக்ரஹஞ் செய்யப்பெற்ற இந்த மஹத்து முதலிய தத்வங்கள் ஒன்றோடொன்று கலந்து சேதனாசேதன ரூபமான ஜகத்தாகப் பரிணமிக் கின்றன. ஒரு விதையினின்று செடி உண்டாகி அது விதையை விளைப்பதுபோல், அவ்யாக்ருதமான மூல ப்ர க்ருதி மஹத்து முதலிய தத்வங்களைப் படைத்துச் சேத னாசேதனரூபமான ஜகத்தை விளைக்கின்றது. இதையே விஸர்க்கமென்று சொல்லுகிறார்கள். இந்த விஸர்க்கம் ஜீவனுடைய கர்மவாஸனையாலுண்டானது பற்றி

வாஸனாமயமென்று கூறப்படும். அசையும்பொருள்கட்கு அசையாப்பொருள்கள் ஜீவனோபாயமாக ஈஸ்வரனால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அந்த ஜீவனம் ப்ராணிகளுக்கு ராகப்ராப்தமாயிருக்கும்; அன்றியே,சாஸ்த்ரத்தினால் அனுமதிக்கப்பட்டதுமா யிருக்கும். இந்த ஜீவனத்தையே வ்ருத்தியென்று கூறுகிறார்கள். பரம புருஷன் யுகங்கள்தோறும் திர்யக்கு மனுஷ்யர் ரிஷிகள் தேவர் இந்த ஜாதிகளில் வந்தவதரித்து வைதிகதர்ம விரோதிகளை வதித்து ஜகத்தைப் பாதுகாக்கின்றான். இத்தகைய அவனுடைய அவதாரங்களும் சேஷ்டிதங்களும் ரக்ஷையென்று கூறப்படும். மனு, தேவதைகள், மனுபுத்ரர்கள், இந்த்ரர்கள், ரிஷிகள், ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அம்சாவதாரங்கள் ஆகிய இவ்வாறுமுள்ளது மன்வந்த்ரமென்று கூறப்படும். மனுவிடத்தினின்றுண்டான ராஜர்களுடைய மூன்று காலங்களிலுமுள்ள ஸந்ததியே வம்சமென்று கூறப்படும். அந்த ராஜர்களின் சரித்ரமும், வம்சநிர்வாஹகர்களான மற்றவர்களின் சரித்ரமும் வம்சானுசரிதமென்று கூறப்படும். காலகர்ம ஸ்வபாவத்தினால் நைமித்திகமென்றும் ப்ராக்ருதமென்றும் நித்யமென்றும் ஆத்யந்திகமென்றும் நான்குவிதமான இந்த ப்ரபஞ்சத்தின் ப்ரளயத்தையே ஸம்ஸ்தை என்று பண்டிதர்கள் கூறுகிறார்கள். அஜ்ஞானத்தினால் புண்ய பாப கர்மங்களைச் செய்கின்ற ஜீவாத்மாக்களே இந்த ப்ரபஞ்சத்தினுடைய ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு ஹேதுவாகையால் அவர்களையே ஹேதுவென்று சொல்லுகிறார்கள்; ஸ்ருஷ்டிக்கு முன்பு ஜீவன் கர்மசேஷத்தோடிருக்கிறானென்றும், அவன் அந்தக் கர்மபலனை அனுபவிக்கும் பொருட்டு ஈஸ்வரன் ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்ட்யாதிகளை நடத்துகிறானாகையால் கர்ம சேஷத்தோடு கூடின

ஜீவன் ஹேதுவென்று சிலர் சொல்லுகிறார்கள். வேறு சிலர், ஸ்ருஷ்டிக்கு முன்பு ஜீவன் நாமரூபங்களற்றிருக்கிறானென்றும், அவனுக்கு நாமரூபங்களை அளிப்பதற்காக ஈஶ்வரன் ஸ்ருஷ்ட்யாதிகளை நடத்துகிறானாகையால் அத்தகைய ஜீவன் ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு ஹேதுவென்றும் சொல்லுகிறார்கள். ப்ரக்ருதியின் பரிணாமமான சரீரங்களிலிருக்கின்ற ஜீவனுக்குண்டாகிற ஜாக்ர த்ஸ்வப்ன ஸுஷுப்திகளென்னும் அவஸ்தைகளை நிர்வஹித்துக்கொண்டு அந்த அவஸ்தைகள் தீண்டப்பெறாதிருக்கின்ற பரப்ரஹ்மமே அபாஶ்ரயமென்று கூறப்படும். (ஸர்வத்திற்கும் ஆதாரமாயிருக்கையால் பரப்ரஹ்மத்தை அபாஶ்ரயமென்கிறார்கள்). அந்தந்த நாமரூபங்களையுடைய கட படாதி பதார்த்தங்களுக்கு உத்பத்தி முதல் நாசம் வரையிலுள்ள அந்தந்த அவஸ்தைகள் உண்டாகின்றனவல்லவா? ஆயினும் அந்தக் கட படாதி பதார்த்தங்களில் மண் நூல் முதலிய த்ரவ்யம்மாத்ரம் அந்தந்த விசிஷ்டரூபங்களால் உற்பத்திமுதலிய விகாரங்களுக்கிடமாகி விஶேஷ்யமாத்ரஸ்வரூபத்தினால் அவ்விகாரங்களற்றவைகளுமாயிருப்பதுபோல, ப்ரஹ்மமும் விஶிஷ்டரூபத்தில் ஜீவனுடைய அவஸ்தைகளின் ஸம்பந்தமும் கேவல ஸ்வரூபத்தில் அவற்றின் வ்யதிரேகமும் (ஸம்பந்தமில்லாமையும்) உடையது. மனம் ஜாக்ரத்து ஸ்வப்னம் ஸுஷுப்தி என்கிற மூன்று அவஸ்தைகளுக் கிடமாயிருக்கையைத் துறந்து ஒருப்ரயத்னமுமின்றித் தானாகவாவது யோகாப்யாஸரூப யத்னத்தினாலாவது சப்தாதி விஷயங்களினின்று எப்பொழுது நீங்குமோ, அப்பொழுது அபாஶ்ரயமான பரமாத்மாவை அறியவல்லதாம்; அவ்வறிவினால்ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடும். இங்ஙனம்பத்

துலக்ஷணங்களுடையது மஹாபுராணமென்றும் ஐந்து லக்ஷணங்களுடையது உபபுராணமென்றும் புராணலக்ஷணங்களை அறிந்த முனிவர்கள் புராணங்களை இரண்டு வகையாகப் பிரித்துப் பதினெட்டு புராணங்கள் உள்ளவையென்று சொல்லுகிறார்கள். (அவையாவையென்றால் சொல்லுகிறேன்). ப்ராஹ்மம், பாத்மம், வைஷ்ணவம், சைவம், லிங்கம், காருடம் நாரதீயம், பாகவதம், ஆக்நேயம், ஸ்காந்தம், பவிஷ்யம், ப்ரஹ்மவைவர்த்தம், மார்க்கண்டேயம், வாமனம், வாராஹம், மாத்ஸ்யம் கௌர்மம், ப்ரஹ்மாண்டம் என்று பதினெட்டுப்புராணங்கள். ப்ராஹ்மணஶ்ரேஷ்டரே! பாதராயணமுனிவரும் அவருடைய ஶிஷ்யர்களும் ப்ரஶிஷ்யர்களும் வேதங்களைப் பல பிரிவுகளாகப் பிரித்துத் தத்தம் ஶிஷ்யர்களுக்கு உபதேசித்ததையும், அங்ஙனமே புராணஸம்ஹிதைகளை வெளியிட்டவிதத்தையும் இங்ஙனம் மொழிந்தேன். இது கேட்கிறவர்களுக்குங் கூட ப்ரஹ்மதேஜஸ்ஸை வளர்க்கும். (இனி இதை நடத்துகிறவர்களுக்கு ப்ரஹ்மதேஜஸ்ஸு வளர்ந்துவரு மென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ). ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ மார்க்கண்டேயர் தவஞ்செய்தலும், அவர் காமாதிகளால் மயங்காதிருத்தலும், நரநாராயணர்களை ஸ்தோத்ரஞ்செய்தலும். }

சௌனகர் சொல்லுகிறார்:— ஸூதரே! நீர் நெடுநாள் ஜீவித்திருப்பீராக. நல்லியற்கையுடையவரே! பிறருடைய கார்யங்களை நிறைவேற்றிக் கொடுக்குந் தன்மையரே!) பேசவல்லவர்களில் சிறந்தவரே! நாங்கள் இன்னம் என்ன கேட்கவேண்டுமென்று விரும்புகிறோமோ, அதையும் எங்களுக்குச் சொல்வீராக. அபார

மான அஜ்ஞானந்தகாரத்தில் அழுந்தியுழல்கின்ற ஜந்துக்களை நீர் அதினின்று கரையேற்றுவிக்கின்றீர். (ஆகையால் நீர் நெடுநாள் வளர்ந்த வாழ்நாளுடையவராகி எங்களைப்போன்றவர்களின் அஜ்ஞானத்தைப் போக்கிக்கொண்டிருப்பீராக). ஜனங்கள் மார்க்கண்டேய மஹர்ஷியைச் சிரஞ்சீவியென்று சொல்லுகிறார்கள். இவர் கல்பாந்தத்திலுங்கூட மரணம் அடையாமல் மிகுந்திருந்தாரல்லவா. மற்றும், இவர், எவன் இந்த ஜகத்தையெல்லாம் கல்பாந்தத்தில் விழுங்கினானோ அத்தகைய பகவானையும் கண்டாரல்லவா? பார்க்கவஸ்ரேஷ்டரான அந்த மார்க்கண்டேயர் இதே கல்பத்தில் எங்கள் வம்சத்தில் பிறந்தவர். இந்தக்கல்பத்தில் நைமித்திகம் ப்ராக்ருதம் முதலிய ப்ரளயங்களில் எவ்விதமான ப்ரளயமும் இதுவரையில் ப்ராணிகளுக்கு நேரிடவில்லை. இப்படியிருக்க அவர் ப்ரளயத்தில் மிகுந்திருந்தாரென்பது எங்ஙனம் பொருந்தும்? மற்றும், அவர் ஒருவரே ப்ரளயார்ணவத்தில் திரிந்துகொண்டிருந்து ஓராலிலையின் மேல் சயனித்துக்கொண்டிருக்கிற சிறிய சிசுரூபியான பரமபுருஷனைக் கண்டாரென்றும் சொல்லுகிறார்கள். ஸூதரே! இவ்விஷயத்தில் எங்களுக்குப் பெரிய ஸம்சயமாயிருக்கின்றது. ஆகையால் அந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்கவேண்டுமென்று எங்களுக்கு மிகவும் குதூஹலம் உண்டாயிருக்கின்றது. அதைச் சொல்லி எங்கள் ஸம்சயத்தைப் போக்குவீராக. நீர் யோகிகளில் சிறந்தவர். (ஆகையால் எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்குந் திறமையுடையவர்; அன்றியும், புராணங்களிலும் நல்ல அறிஞரென்று நன்கு புகழப்பட்டவர்.

ஸூதர் சொல்லுகிறார்:—மஹர்ஷீ! நீர் கேட்ட இவ்விஷயம் உலகங்களின் பாபங்களை யெல்லாம் போக்கவல்

லது. ஏனென்றால், இந்த வ்ருத்தாந்தத்தில் கலிமலங்களை யெல்லாம் போக்கவல்லதாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய கதை பெரும்பாலும் அமைந்திருக்கின்றது. (இதைச் சொல்லத் தொடங்கினோமாகில், ஸ்ரீமந்நாராயணனுடைய கதைகளையே பெரும்பாலும் சொல்லவேண்டியதாய்வரும். ஆகையால் இந்தவ்ருத்தாந்தம் மிகவும் பாவனமாயிருக்கும்). மார்க்கண்டேயர் தகப்பனாரிடத்தினின்று கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்களெல்லாம் க்ரமமாக நடக்கப்பெற்றுக் கடைசியில் உபநயனஸம்ஸ்காரத்தையும் பெற்றுச் சாஸ்த்ரங்களில் சொல்லிய விதியின்படி வேதங்களை அத்யயனஞ் செய்து தன்னுடைய வர்ணாஸ்ரமங்களுக்குரிய தவமும் வேதமும் அமையப்பெற்று நைஷ்டிக ப்ரஹ்மசர்ய வ்ரதத்தை ஏற்றுக்கொண்டு தன்னுடைய தர்மத்தின் அபிவ்ருத்திக்காக ஜடை தரித்து மரவுரி உடுத்திக் கமண்டலு தண்டம் உபவீதம் மேகலை க்ருஷ்ணாஜினம் அக்ஷமாலை தர்ப்பங்கள் இவைகளைத் தரித்து இந்த்ரியங்களை அடக்கிக் காலை மாலை ஆகிய இரண்டு ஸந்த்யைகளிலும் அக்னி ஸூர்யன் ஆசார்யன் ப்ராஹ்மணன் ஹ்ருதயம் இவ்விடங்களில் பகவானை ஆதரித்துக்கொண்டு குருவுக்காகப் பிக்ஷையெடுத்துக்கொண்டு வந்த அன்னத்தை அவர் முன்னே வைத்து அவர் அனுமதி கொடுப்பாராயின் அதைப்புசிப்பதும் ஒருகால் அனுமதி கொடாராயின் உபவாஸமிருப்பதுமாயிருந்தார். இங்ஙனம் தவத்திலும் வேதத்திலும் ஊக்கமுற்றுப் பத்துக்கோடிவர்ஷங்கள் இருடீகேசனை ஆதரித்து மிகவும் வருந்தியும் வெல்லமுடியாத ம்ருத்யுவை வென்று விட்டார். இங்ஙனம் நைஷ்டிகப்ரஹ்மசர்யவ்ரதத்தைச் சிறிதும் தவறாமல் அனுஷ்டித்துக் கொண்டுவந்த அந்த மார்க்கண்டேயர் தவம் வேதமோ

துதல் இந்த்ரியநிக்ரஹம் இவைகளால் ராகாதி தோஷங்களெல்லாம் தொலையப்பெற்ற மனத்தினால் த்யானித்தார். யோகியாகிய அந்த மார்க்கண்டேயர் இங்ஙனம் மிகுந்த ஊக்கத்துடன் மனத்தை அடக்கிப் பரமபுருஷனை த்யானஞ் செய்துகொண்டிருக்கையில், ஆறு மன்வந்தரங்கள் அடங்கியநெடுங்காலம் கடந்தது. ப்ராஹ்மணஶ்ரேஷ்டரே! இந்த்ரன் இம்மார்க்கண்டேயமஹர்ஷி இங்ஙனம் கடுமையாகத் தவஞ்செய்வதை அறிந்து ஏழாவது மன்வந்தரமான இந்த வைவஸ்வதமன்வந்தரத்தில் இவர் நம்பதவியை விரும்புகிறாரோ, என்னவோ?'' என்று அவருடைய தவத்திற்குப் பயந்து அதற்கு விக்னஞ் செய்யத் தொடங்கினான். அவ்விந்த்ரன் அம்மஹர்ஷியின் தவத்தைக் கெடுப்பதற்குக் கந்தர்வர்களையும் அப்ஸரஸ்த்ரீகளையும் வஸந்தருதுவையும் மலயமாருதத்தையும் லோபத்தையும் மதத்தையும் அனுப்பினான். திறமையுடையவரே! அவர்கள் ஹிமவத்பர்வதத்தின் வடபாகத்தில் புஷ்பபத்ராநதிக்கரையில் விசித்ரமென்னும் பெயருடைய ஓர் சிலையின் அருகாமையிலுள்ள அம்மஹர்ஷியின் ஆஶ்ரமத்திற்குச் சென்றார்கள். அவ்வாஶ்ரமம் அழகிய மரங்களும் செடிகளும் கொடிகளும் அமைந்து அழகிய பறவைக்கணங்களும் நிறைந்து அழகிய புண்ய தீர்த்தங்களுமுடையதாயிருந்தது. அங்கு வண்டுகள் மதுவைப் பருகி மதித்துப் பாடிக்கொண்டிருந்தன. மதித்த கோகிலங்களும் கூவிக்கொண்டிருந்தன. மயில்களும் மதித்துப் பேராரவாரத்துடன் ஆலித்துக்கொண்டிருந்தன. பறவைகளும் மதித்து இனமினமாய்க் குலாவிக்கொண்டிருந்தன. மலயமாருதம் இத்தகையதான அவ்வாஶ்ரமத்திற்குள் நுழைந்து குளிர்ந்த அருவிகளின் துளிகளைச்

சொரிந்துகொண்டு புஷ்பங்களால் அணைக்கப்பெற்று மன்மதனை மென்மேலென விளங்கச் செய்வதாகி வீசிற்று. வஸந்தருது சந்த்ரோதயத்தினால் திகழ்கின்ற ப்ரதோஷகாலங்களை யுடையதும் தளிர்கள் பூங்கொத்துகள் இவை யளவற்றிருப்பதும் ஒன்றோடொன்று இணைந்திருக்கின்ற மரங்கள் செடிகள் கொடிகள் இவற்றின் நிரைகளுடையதுமாகிய அவ்வாஸ்ரமத்தில் விளக்கமுற்றிருந்தது. அப்ஸரஸ்த்ரீகளின் கூட்டங்களுக்குத் தலைவனான மன்மதனும் ஸங்கீதக்காரர்களும் பற்பல வாத்யக்காரர்களும் கூட்டங் கூட்டமாய்த் தொடரப்பெற்ற கந்தர்வர்களோடுகூடி வில்லும் கணையுங் கொண்டு அவ்விடம் புறப்பட்டான். அக்னியில் ஹோமஞ்செய்து முடித்துப் பரமபுருஷனைத் தியானித்துக்கொண்டு மூர்த்தீகரித்த அக்னிபோன்றிருக்கிற அம்மார்க்கண்டேய மஹர்ஷியை இந்த்ரனுடைய வேலைக்காரர்களான அம்மன்மதன் முதலியவர்கள் கண்டார்கள். அப்பால் அப்ஸரமடந்தையர்கள் அந்த மார்க்கண்டேய மஹர்ஷியின் எதிரில் நர்த்தனஞ்செய்தார்கள். பாட்டுக்காரர்கள் பாட்டுப் பாடினார்கள். மற்றும், பலர் ம்ருதங்கம் வீணை பணவம் முதலிய வாத்யங்களை இனிதாக வாசித்தார்கள். மன்மதனும் அரவிந்தம் முதலிய ஐந்து முகங்களையுடைய அஸ்த்ரத்தைத் தன்தனுஸில் தொடுத்தான். வஸந்தருது மதம் லோபம் ஆகிய இந்த்ரனுடைய வேலைக்காரர்கள் அம்மஹர்ஷியின் மனத்தைக் கலக்கினார்கள். புஞ்சிகஸ்தலி யென்னும் அப்ஸர மடந்தை ஸ்தனபாரத்தினால் மிகவும் வளைந்த இடையுடையவளாகிப் பந்தை அடித்து விளையாடினாள். அப்பொழுது அவளுடைய தலைச்சொருக்கு அவிழ்ந்து அதினின்று பூமாலை நழுவிற்று. பந்தைத் தொடர்ந்து திரிகின்ற

அம்மடந்தையர்மணி இங்குமங்கும் அலைகின்ற கண்களு டையவளாகி விளையாடிக்கொண்டிருக்கையில் அவளு டைய அரைநாண்மாலை அறுந்துவிழுந்தது. அப்பொ ழுது அவளுடைய நுண்ணியதான அரையாடையைக் காற்று பறித்துவிட்டது. அப்பொழுது மன்மதன் அம் முனிவரைத் தான் ஜயித்து விட்டதாக நினைத்துக்கொ ண்டு அவர்மேல் பாணத்தைத் தொடுத்துவிட்டான். புணமில்லாதவனுடைய முயற்சிபோல், அவர்கள் செய் த முயற்சியெல்லாம் அம்முனிவர்விஷயத்தில் வீணாய் விட்டது. முனிவரே! இங்ஙனம் அந்த மார்க்கண்டேய முனிவர்க்கு அபகாரஞ்செய்ய முயன்ற அம்மன்மதா திகள், அறியாத சிறுவர்கள் உறங்குகின்ற ஸர்ப்பத்தை எழுப்பி அது விழித்துக்கொண்டு சீறுவதைக் கண்டு பயந்தோடுவதுபோல, அம்முனிவருடைய தேஜஸ்ஸி னால் தஹிக்கப்பட்டுத் திரும்பிப்போனார்கள். ப்ராஹ்ம ணஶ்ரேஷ்டரே! இந்த்ரனுடைய வேலைக்காரர்களான மன்மதாதிகள் தங்கள் திறமைகளையெல்லாம் காட்டி அவரை மதிமயக்கி அவமதிக்கப் பார்க்கினும், பகவா னுடைய குணங்களை மனனஞ் செய்பவர்களில் சிறந்த மஹானுபாவராகிய அம்முனிவர் அஹங்காரத்தின் பரி ணாமமான மோஹத்திற்குச் சிறிதும் இடங்கொடுக்க வில்லை. மஹானுபாவராகிய தேவேந்த்ரன் முகம் வாடி வந்திருக்கின்ற மன்மதனைக் கண்டு ப்ரஹ்மர்ஷியான மார்க்கண்டேயருடைய ப்ரபாவத்தையும் கேட்டு மிக வும் வியப்புற்றான். இங்ஙனம் தவம் வேதமோதுதல் இந்த்ரியநிக்ரஹம் இவைகளால் மனத்தை அடக்கி அதைப் பரமபுருஷனிடத்தில் ஊக்கமுறச் செய்து அவ னையே த்யானித்துக் கொண்டிருக்கின்ற அம்முனிவரை அனுக்ரஹிக்கும் பொருட்டுத் தன்னைப் பற்றினருடைய

வருத்தங்களைப் போக்குந்தன்மையனான பகவான் நரநாராயணரூபியாய் அவரெதிரே வந்து தோன்றினான். அந்த நரநாராயணர்களில் நரன் வெண்மை நிறமுடையவனும் நாராயணன் கருமைநிறமுடையவனுமா யிருந்தார்கள். இருவரும், அப்போதலர்ந்த செந்தாமரை மலர்போன்ற கண்களும் நான்கு புஜங்களும் அமைந்து க்ருஷ்ணாஜினம் மரவுரி இவைகளை உடுத்துக் கையில் பவித்ரமும் மார்பில் முப்புரிநூலுடன் திகழ்கின்ற யஜ்ஞோபவீதமும் கமண்டலுவும் கோணலின்றி நேராயிருக்கின்ற வேணுதண்டமும் பத்மாக்ஷமாலையும் கொசுமுதலிய ஐந்துக்களை ஓட்டுவதற்கான ஓர் வஸ்த்ரமும் தர்ப்பமுஷ்டியும் தரித்துத் தவமே இரண்டு வடிவங்கள் கொண்டு வந்தாற்போல் திகழ்பவர்களும் நிலைநின்று விளங்குகின்ற மின்னல்போன்ற பொன்னிறமுடைய தேஹகாந்தியால் முழுவதும் கிரணங்களைச் சொறிபவர்களும் தேவஸ்ரேஷ்டர்களால் பூஜிக்கப்பட்டவர்களுமாயிருந்தார்கள். ரிஷிவேஷம் பூண்ட பகவானுடைய உருவங்களான அந்த நரநாராயணர்களை அம்மார்க்கண்டேய முனிவர் கண்டு ஆவலுடன் எழுந்து நீண்ட தனது அங்கத்தைத் தடிபோல் சாய்த்து நமஸ்காரஞ் செய்தார். அம்முனிவர் அந்த நரநாராயணர்களைக் கண்ட ஆநந்தத்தினால் தேஹம் இந்த்ரியம் மனம் இவையெல்லாம் ஸுகிக்கவும் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகவும் கண்களில் நீர் நிரம்பவும் பெற்று அவர்களைப் பார்க்கவுங்கூட முடியாதிருந்தார். அம்முனிவர் எழுந்து கைகளைக் குவித்து வணங்கி ஆவலின் மிகுதியால் ஆலிங்கனஞ் செய்பவர்போன்று ஸர்வேஸ்வரர்களான அவர்களைக் குறித்து எழுத்துக்கள் தழதழத்திருக்குமாறு வெறுமனே நமோ நமவென்று மொழிந்தார். பிறகு அந்

த நராநாராயணர்களுக்கு ஆஸனமிட்டுப் பாதங்களை அலம்பிச் சிறந்த சந்தனம் குங்குமம் முதலிய அங்கராகத்தினாலும் தூபங்களாலும் பூமாலைகளாலும் அவர்களைப் பூஜித்தார். அம்முனிவர் தம்மை அனுக்ரஹிப்பதற்காக வந்திருக்கின்ற அம்மஹானுபாவர்கள் ஸுகமாக ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கையில் மீளவும் அவர்களுடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து மிகவும் பூஜிக்கத்தகுந்தவர்களான அன்னவர்களைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

மார்க்கண்டேயர் சொல்லுகிறார்:—ப்ரபூ! உன்னுடைய வைபவத்தை நான் என்னவென்று சொல்லுவேன்? நானும் மற்ற ப்ராணிகளும், ஆயிரம் சொல்லி என்? ப்ரஹ்மருத்ரர்களும் ஆகிய எல்லாருடைய ப்ராணனும் உன்னுடைய தூண்டுதலால்தான் நடையாடிக் கொண்டிருக்கின்றது. வாக்கும் மனமும் மற்ற இந்த்ரியங்களும் அந்த ப்ராணனை அனுஸரித்துத் தத்தம் வியாபாரங்களில் திறமை உண்டாகப் பெறுகின்றன. நீ இப்படி எல்லோர்க்கும் ப்ராணாதிகளைத் தூண்டி தேஹஸ்திதியை நடத்திக் கொண்டிருப்பினும் ப்ராணிகள் அங்ஙனம் நீ செய்கிற உபகாரத்தை அறியாமையால் உன்னைப் பணிகிறதில்லை. இவ்வுபகாரத்தை அறிந்தவர்கள் உன்னைப் பணிகின்றார்களோ, அவர்கட்கே நீ உன்னிடத்தில் மேன்மேலும் பாவபந்தத்தை விளைக்கின்றனை. (உன்னை உபாஸித்துக் கடைத்தேறும்படி அவர்களை அனுக்ரஹிக்கின்றாய்). பகவானே! இம்மூர்த்திகளிரண்டும் ஷாட்குண்ய பூர்ணனான ஸர்வேஸ்வரனுடைய அவதாரங்களே. மூன்று லோகங்களுக்கும் ஸுகத்தை விளைப்பதற்காகவும் ஜ்ஞானோபதேசத்தினால் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களைப் போக்குவதற்

காகவும் தன் பக்தர்கள் ம்ருத்யுவென்று கூறப்படுகின்ற ஸம்ஸாரத்தை வென்று மோக்ஷத்தை அடையும் பொருட்டும் நீ இந்த உருவங்களை ஏற்றுக்கொண்டிருக்கின்றனை. ஜகத்ரக்ஷணத்திற்காக நீ ராமக்ருஷ்ணாதி உருவங்களை அங்கீகரிப்பதுபோலவே இவ்வுருவங்களையும் அங்கீகரித்திருக்கின்றனை. (ஆகையால் 'நீ சொல்லுவதெல்லாம் ஸர்வேஶ்வரனுடைய செயல். நாங்கள் அந்த ஸர்வேஶ்வரனல்லோம்' என்று சொல்லி என்னை ஏமாற்றவேண்டாம்). நூல்பூச்சி நூலைக் கக்கி மீளவும் இழுத்துக்கொள்வதுபோல், நீயே இவ்வுலகங்களையெல்லாம் படைத்துக் கடைசியில் அழிக்கின்றனை.(நீ ஜகத்ரக்ஷணத்தைமாத்ரமே செய்கிறாயென்பதில்லை. ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களையும் நீயே நடத்துகின்றனை.) ஸ்ருஷ்டிஸம்ஹாரகர்த்தாவும் தனனுடைய அவதாரங்களால் ஜகத்தைப் பாதுகாப்பவனும் ஜங்கம ஸ்தாவரங்களுக்குள் புகுந்து அவற்றைத் தரித்து நியமித்துக் கொண்டிருப்பவனுமாகிய உனனுடைய பாதமூலத்தைப் பணிகிறவர்களுக்குப் புண்யபாபகர்மங்களில் மனஞ் செல்லுகிறதில்லை; கேவலம் உன்னுடைய முகமலர்த்திக்கிடமான காமங்களையே விரும்பிச் செய்யும். பாபத்தைப் போல் புண்யமும் பந்தஹேதுவாகையாலே இவ்விரண்டையும் நினைக்காது. ஆகையால் புண்ய பாபகர்மங்களின் பலனான ஸுகதுக்கங்கள் அவர்களுக்குக் கிடையா. மற்றும், ரஜஸ்தமோகுணங்களும் அவர்களைத் தீண்டுகிறதில்லையாகையால் அவற்றின் கார்யமான காமக்ரோதாதிகளும் அவர்களுக்குக் கிடையா. காலத்தினால் விளைகிற குளிர் வெயில் மழை முதலியவைகளும அவர்களை வருத்தமாட்டா. (ரோகங்களும் அவர்களுக்கு உண்டாக மாட்டா.) வேதங்களை மனத்தில் தேக்கிக்கொண்டு அ

வற்றின் உட்கருத்தை அறிந்த முனிவர்களும் உன் பாதமூலத்தை அடைவதற்காக அதையே இடைவீடின்றித் துதிப்பதும் வணங்குவதும ஆராதிப்பதும் த்யானிப்பதும் செய்கின்றார்கள். நிரதிசய புருஷார்த்தஸ்வரூபனே! ஜகதீச! உன்னுடைய பாதங்களைப் பணிகிறவர்களுக்கு எவ்விதத்திலும் பயம் உண்டாகிறதில்லை. ஆகையால் ப்ராணிகளுக்கு அத்தகைய உன்பாதங்களைப் பெறுவதைக்காட்டிலும் வேறொரு நன்மை இருப்பதாக எங்களுக்குத் தெரியவில்லை. (சதுர்முகலோகப்ராப்தி நன்மையனறோவென்றால், அதெல்லாம் நன்மையாகமாட்டாது. ஏனென்றால்) அந்த ப்ரஹ்மாவின் வாஸஸ்தானமாகிய ஸத்யலோகம் இரண்டு பரார்த்தம் வரையிலுமே நிலைநின்றிருக்கும்; அதற்குமேல் அழிந்துவிடும். அத்தகைய நான்முகன் காலஸ்வரூபனான உன்னிடத்தினின்று மிகவும் பயப்படுகிறான். (காலம் போகின்றதே. நமக்கு முடிவு ஸமீபித்து விடுகின்றதேயென்று க்ஷணந்தோறும் பயப்படுகின்றான). ப்ரஹ்மதேவனுக்கே இங்ஙனம் பயம் விளையுமாயின், அவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களும் பஞ்சபூதங்களின் பரிணாமமான தேஹங்களையுடையவர்களுமான மற்றவர் விஷயத்தைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆகையால் ஸத்யலோகாதிகளைப் பெறுவது நன்மையென்று நினைப்பது அறிவின்மையேயாம். ஆகையால் மிகவும் தோஷங்களுக்கிடமாயிருப்பதும் நிஷ்ப்பலமும் ஜ்ஞானத்தை மறைபபதும் ஜடமுமாகிய தேஹாதிகளை யெல்லாம் துறந்து ஸத்யஸங்கல்பனும் பரமாத்மனும் குருவும் (அஜ்ஞானாந்தகாரத்தைப் போக்குந்தன்மையனும்) ஸர்வஸ்மாத்பரனுமாகிய உன்னுடைய ஆத்மஹிதமான (ஸர்வாத்மாக்களுக்கும் ஹிதமான) பாதமூலத்தையே பணிகின்றேன். இங்ஙு

ளாம் உன்னை எவன் பணிகிருனே, அவன் தான் விரும்புகிற புருஷார்த்தங்களையெல்லாம் பெறுவான். ('ப்ரஹ்மருத்ரர்களுங்கூட என்னுடைய மூர்த்திகளே. அப்படியிருக்க, அவர்களை விட்டு என்னையே பணிகிறது என்ன காரணத்தினால்?' என்றால் சொல்லுகிறேன்). ஜகதீசனே! ஆத்மபந்துவே! (ஜீவாத்மாவுக்கு ஸகாவாயிருப்பவனே!) நீ ரஜோகுணம் தலையெடுத்த ப்ரஹ்மதேவனுக்கு அந்தராத்மாவாயிருந்து இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டியையும், தமோகுணம் தலையெடுத்த ருத்ரனுக்கு அந்தராத்மாவாயிருந்து ஸம்ஹாரத்தையும், சுத்தஸத்வமயமான ராம க்ருஷ்ணுதி அவதாரங்களால் ஸ்திதியையும் நடத்துகின்றனை. ஆகையால் ப்ரஹ்மருத்ரர்கள் உன்னுடைய மூர்த்திகளே. ஸ்திதி ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்துகிற அவ்வுருவங்கள் ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற உன்னுடைய மாயையினுல் செய்யப்பட்டவைகளே. நீ லீலைக்காகவே அவ்வுருவங்களை ஏற்றுக்கொள்கின்றனையன்றி ஜீவாத்மாக்களைப் போல் கர்மத்தினுலன்று. இங்ஙனம் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கு ஹேதுவான ப்ரஹ்மருத்ரர்கள் உன்னுடைய உருவங்களேயென்பது எங்களுக்குத் தெரியும். ஆயினும், ஸத்வமயமான உன்னுடைய மூர்த்தி யாதுண்டு, அதுவே மனுஷ்யர்களால் உபாஸிக்கப்பட்டு மோக்ஷத்திற்கு ஹேதுவான சாந்தியை விளைப்பதாம். ப்ரஹ்மருத்ரர்களாகிற மற்ற மூர்த்திகள் அத்தகைய சாந்தியை விளைக்கவல்லவையாகமாட்டா? பின்னையோவென்றால், அம்மூர்த்திகளை உபாஸிக்கிறவர்களுக்கு வ்யஸனம் மோஹம் பயம் இவைகளே உண்டாகும். ஆகையால், நிபுணபுத்திகள் உனக்கும் உன்பக்தர்களுக்கும் ப்ரியமாயிருப்பதும் சுத்த ஸத்வமயமுமான உன்னுடைய மூர்த்

தியையே பணிகின்றூர்கள். பஞ்சராத்ரஸித்தாந்தத்தின் உட்கருத்தை அறிந்த பெரியோர்களும் புருஷாக்ருதியாயிருக்கின்ற சுத்தஸத்வயமான உன்னுடைய உருவத்தையே உபாஸிக்கத்தகுந்ததென்று விரும்புகிறூர்கள். இந்த மூர்த்தியை உபாஸிக்கிறவர்களுக்கு ஸம்ஸாரபயம் நீங்கி விடுகின்றது. மற்றும், இந்த மூர்த்தியின் உபாஸனத்தினுல் ஆத்மஸுகம் உண்டாகின்றது. இம்மூர்த்தி தன்னை உபாஸிக்கிறவர்களுக்கு ஸம்ஸாரபயத்தோடு கூடின ப்ராக்ருதஸுகங்களைக் காட்டி மயக்குவதில்லை. நீ ஷாட்குண்யபூர்ணன். நீ தர்மம் அர்த்தம் காமம் என்கிற நான்கு புருஷார்த்தங்களையும் கொடுப்பவனுகையால் அபாரமாகக் கொடுப்பவன். உனக்கு மேற்பட்ட தானசீலன் மற்றொருவனுமில்லை. ஆனதுபற்றியே உன்னைப் புருஷனென்று கூறுகிறூர்கள். நீ ஸர்வாந்தராத்மாவாகையால் பூமாவென்று கூறப்படுகின்றனை. ஆகையால் இந்த ஜகத்தெல்லாம் நீயே. இந்த ஜகத்துக்கெல்லாம் ஹிதஞ்செய்கின்றனையாகையால் விஶ்வகுருவென்று கூறப்படுகின்றனை. (ஆத்மா சரீரத்தின் ஹிதத்தைத் தேடுபவனுகையால் உன் சரீரமான இந்த ஜகத்திற்கெல்லாம் நீ ஹிதத்தைநடத்துகின்றனை). நீயே பரதேவதை. உனக்கு மேற்பட்ட தேவதை மற்றொன்றும் இல்லை. நித்யவஸ்துக்களின் திரளுக்கு ஆதாரமாயிருக்கின்றனையாகையாலும் அவற்றை ஆதாரமாகவுடையவனுகையாலும் நாராயணனென்று கூறப்படுகின்றனை. ப்ராப்யனும் ப்ராபகமும் இரண்டும் நீயே. நீ ஸர்வஜ்ஞனுகையால் ரிஷியென்று கூறப்படுகின்றனை. நீ நரோத்தமன். நீ நரனென்னும் பெயருடைய சிஷ்யனும் நாராயணனென்னும் பெயருடைய ஆசார்யனுமாகி ஆத்மவித்யையை வெளியிட்டு ஜகத்தை

உஜ்ஜீவிப்பித்தனை. நீ பரிசுத்தனும் ஆம்ரிதர்களுடைய தோஷங்களைப் போக்குகின்றவனுமாகையால் ஹம்ஸனென்று கூறப்படுகின்றனை. உனக்கு ஈடெதிரில்லாமையாலும் ஒருவனை எதிர்பார்த்து ஆகவேண்டிய ப்ரயோஜனமில்லாமையாலும் பேசாதிருக்கின்றனை. நீ ப்ரஹ்மதேவனுக்கு வேதங்களை உபதேசித்து அவன் மூலமாய் அவற்றைப் பரவச் செய்தனையாகையால் வேதாசார்யனென்று கூறப்படுகின்றனை. ('உன்னைப்போல எல்லாரும் என்னை இத்தகையனாக ஏன் அறிகிறதில்லை' என்றால், சொல்லுகிறேன்). ஜனங்கள் உன் மாயையினால் மறைக்கப்பட்ட மதியுடையவர்களும் நிஷ்ப்பலமான இந்த்ரியமார்க்கங்களைத் தொடர்ந்து திரிகின்ற அறிவுடையவர்களுமாகித் தனனுடைய ப்ராணன்களிலும் ஹ்ருதயத்திலும் விஷயங்களிலும் அமைந்திருக்கின்ற உன்னை அறிகிறதில்லை. (ஆனால் ஒருவனும் அறிகிறதில்லையா? என்றால், சொல்லுகிறேன்.) எவன் ஸர்வகுருவாகிய நீ முதலில் வெளியிட்ட வேதங்களை ஓதியுணர்ந்து அவ்வழியில் உன்னை உபாஸிக்கிறானோ, அவன்தான் உன்னை உள்ளபடி அறிகின்றான். உன்னை அறிவதற்கு உபாயம் வேதமே அதுவே பரமாத்மாவான உன்னுடைய ரஹஸ்யத்தை நன்றாக அறிவிக்கின்றது. ப்ரஹ்மதேவன் முதலிய பண்டிதர்கள் ஸாங்க்யயோகாதிகளால் உன் ஸ்வரூபத்தை அறிய முயன்றும் அதை உள்ளபடி அறியமுடியாமல் மயங்குகிறார்கள். உன் ஸ்வரூபத்தைக்குறித்துப் பலா பலவாறு விவாதப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். உன்னுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வாதி ஸ்வபாவங்கள் அவர்கள் சொல்லும் சமயங்களையெல்லாம் எடுத்தெறிகின்றன. உன்னுடைய ஜ்ஞானாதிகுணவைபவத்தை ஒருவராலும் அளவிடமுடியாது. நீ

அவற்றை யெல்லாம் அவர்களுக்குத் தெரியாதபடி உன்னிடத்திலேயே மறைத்துக் கொண்டிருக்கின்றனை. நீ மஹாபுருஷன். இத்தகையனை உன்னை வணங்குகிறேன். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

(மார்க்கண்டேயர் பகவானுடைய மாயையைக் காணவேண்டுமென்று விரும்ப அவ்விருபத்தைப் பகவான் நிறைவேற்றுதல்.)

ஸூதர் சொல்லுகிறார்:—ப்ருகு வம்சத்தை மேன்மைப்படுத்தும் மஹானுபாவரே! நரனை நண்பனுகவுடைய நாராயணன் மிகுந்த மதியுடைய மார்க்கண்டேயரால் இங்ஙனம் நன்கு துதிக்கப்பெற்று ஸந்தோஷம் அடைந்து அவரைக்குறித்து மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ ஓ! மார்க்கண்டேயரே! நீர் மனவூக்கத்துடன் தவம் வேதமோதுதல் இந்த்ரியநிக்ரஹம் இவற்றைக் குறைவற அனுஷ்டித்து என்னிடத்தில் அழிவில்லாத பக்தியைச் செய்தததனால் ஸித்தி பெற்றீர்; ப்ரஹ்மரிஷிகளில் சிறந்தவரும் ஆய்விட்டீர். நீர் ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் நைஷ்டிகப்ரஹ்மசர்யவ்ரதத்தை அனுஷ்டித்ததற்கு நாங்கள் அனைவரும் ஸந்தோஷம் அடைந்தோம். உமக்கு நன்மை உண்டாகுக. வரங்கொடுக்கிறவர்களில் சிறந்த என்னிடத்தினின்று உமக்கிஷ்டமான வரத்தை வேண்டிக் கொள்வீராக.

மார்க்கண்டேயரிஷி சொல்லுகிறார்.—தேவதைகளுக்கெல்லாம் தேவர்களான ப்ரஹ்மாதிகளுக்கும் நியாமகனே! தன்னையே சரணமாக அடைந்தவர்களின் வருத்தங்களைப் போக்குந்தன்மையனே! ஆச்ரிதர்களைக் கைவிடாதவனே! உனக்கு ஜயம் உண்டாகுக. நீ எனக்

ளுப் புலப்பட்டனையே இந்த வரமே எனக்குப் போதும். (இதற்குமேல் நான் விரும்பவேண்டியது ஒன்றும் இல்லை. ப்ரஹ்மதேவன் முதலியவர்களுங்கூட மனத்தை யோகத்தினால் பரிசுத்தஞ்செய்து எவனுடைய அழகான பாதாரவிந்தங்களைக் காணவேண்டுமென்று விரும்புகிறார்களோ, அத்தகைய நீ என் கண்களுக்குப் புலப்பட்டனை. இதற்கு மேற்பட்ட வரம் என்ன இருக்கின்றது?) ஆயினும் உன்னுடைய ஆச்சர்யசக்தியைக் காண விரும்புகிறேன். ப்ரஹ்மாதிலோகபாலர்களோடு கூடிய இவ்வுலகமெல்லாம் உன்னுடைய ஆச்சர்ய சக்திரூபமான மாயையினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட தேவர் திர்யக்கு மனுஷ்யர் ஸ்தாவரம் என்னும் பேதத்தைக் காண்கின்றது. அத்தகைய மாயையைக் காணவிரும்புகிறேன். அதை எனக்குக் காட்டுவாயாக.

ஸூதர் சொல்லுகிறார்:—முனிவரே! இங்ஙனம் மார்க்கண்டேயமஹர்ஷியால் மொழிந்து பூஜிக்கப்பெற்ற பகவான் மந்தஹாஸத்துடன் 'அப்படியே ஆகட்டும்' என்று அனுக்ரஹித்து, அந்த ஸர்வேஸ்வரன் பதரிகாஸ்ரமத்திற்குச் சென்றான். பிறகு அம்மார்க்கண்டேய மஹர்ஷி பகவானுடைய மாயையைக் காண்கையாகிற அவ்விஷயத்தையே நினைத்துக்கொண்டு தன்னுடைய ஆஸ்ரமத்திலேயே முன்போல் வஸித்துக்கொண்டு அக்னி ஸூர்யன் சந்த்ரன் ஜலம் பூமி வாயு ஆகாசம் ஹ்ருதயம் இவற்றிலும் பசு ப்ராஹ்மணன் முதலிய மற்ற எல்லாப் பொருள்களிலும் ஸ்ரீஹரியை த்யானித்துக் கேவலம் மனோமயமான பூஜாத்ரவ்யங்களால் (மானஸோபசாரங்களால்) அவனைப் பூஜித்துக்கொண்டிருந்தார்; ஒருகால் பக்தியின்பெருக்கு மேலிடப்பெற்று அந்தப் பூஜையையும் மறந்திருந்தார். ப்ருகுஸ்ரேஷ்டரே!

இங்ஙனம் புஷ்யபத்ராநதியின் கரையில் அம்முனிவர் பரமபுருஷனை உபாஸித்துக் கொண்டிருக்கையில், ப்ரஹ்மரிஷியே! ஒருகால் ஸந்த்யாஸமயத்தில் பெருங்காற்று உண்டாயிற்று. பயங்கரமான சப்தத்தை விளைத்துக்கொண்டு வீசுகின்ற அந்தக் காற்றைத் தொடர்ந்து பயங்கரமான மேகங்கள் உண்டாயின. அவை மின்னற்களோடுகூடி உரக்கக் கர்ஜனைகள் செய்துகொண்டு வண்டியின் இருசளவு பருத்த மழைத்தாரைகளை முழுவதும் பெய்தன. அனந்தரம் நான்கு திசைகளிலிருக்கின்ற நான்கு ஸமுத்ரங்களும் பயங்கரமான முதலைகளோடுகூடிக் காற்று வேகத்தினால் மேன்மேலும் கிளம்பி வருகின்ற அலைகளால் பூமண்டலத்தை நாற்புறத்திலும் விழுங்குபவைபோல் வியாபித்துக் கொண்டு மிகவும் பயங்கரமான நீர்ச்சுழிகளும் கம்பீரமான கோஷங்களும் உடையவைகளாகிப் புலப்பட்டன. பொறுக்க முடியாதபடி மிகவும் உஷ்ணமான ஸூர்ய கிரணங்களாலும் மின்னல்களாலும் ஆகாயத்தைக் கடந்து வளர்ந்து வருகின்ற ஜலப்ரவாஹங்களாலும் தேவர் திர்யக்கு மனுஷ்யர் ஸ்தாவரமென்று நான்கு விதமான ஜகத்தெல்லாம் உள்ளும் புறமும் வருத்த முற்றிருப்பதையும் பூமியெல்லாம் ஜலத்தில் மூழ்கியிருப்பதையும் கண்டு அம்முனிவர் மனந்தளர்ந்து பயந்தார். மேகங்கள் ஓயாமல் மழையைப் பெய்து ஸமுத்ரத்தை நிறைத்துக் கரைபுரண்டு வெள்ளமோடச் செய்தன. காற்று ஜலத்தைச் சுழற்றி வேகமாக முழுவதும் நிரம்பியோடச் செய்தது. அக்காற்றுவேகத்தினால் பெருப்பெரிய அலைகள் கிளம்பின. இங்ஙனம் பயங்கரமான ஸமுத்ரம், அம்முனிவர் பார்த்துக்கொண்டே யிருக்கையில் த்வீபங்களோடும் வர்ஷங்களோடும் பர்வதங்களோடும்

கூடிய பூமண்டலத்தை யெல்லாம் மறைத்து விட்டது. பூமி அந்தரிக்ஷம் ஸ்வர்க்கம் நக்ஷத்ரகணம் இவைக ளோடுகூடிய மூன்றுலோகங்களும் திசைகளுடன் ஜலத் தினால் மூடப்பட்டதாயிற்று. அப்பொழுது அம்முனி வர் ஒருவர் மாத்ரமே மிகுந்திருந்தார். அவர் ஜடை கள் அவிழ்ந்தலையப்பெற்று மூடன்போலவும் குருடன் போலவும் ஒன்றும் தெரியாமல் திரிந்துகொண்டிருந் தார். பசி தாஹங்கள் தலையெடுக்கப்பெற்ற அம்முனி வர் அத்தகைய மகரங்களாலும் திமிங்கிலங்களாலும் பீடிக்கப்பட்டு அலைகளாலும் காற்றாலும் அடியுண்டு ஶ்ரமப்பட்டு வருத்தமுற்றுக் கரையில்லாத பெரிய அந் தகாரத்தில் அகப்பட்டு ஆகாயம் பூமி இவைகளை அறி யமுடியாதிருந்தார். அவர் ஓரிடத்தில் பெரிய பள்ளத் தில் விழுவதும், ஓரிடத்தில் பெருப்பெரிய அலைகளால் மோதப்படுவதும், ஓரிடத்தில் ஒன்றோடொன்று அடித் துக் கொள்கின்ற ஜல ஜந்துக்களால் பக்ஷிக்கப்படுவது மாயிருந்தார். மற்றும், அவர் ஓரிடத்தில் மோஹத் தையும், ஓரிடத்தில் சோகத்தையும், ஓரிடத்தில் துக் கத்தையும், ஓரிடத்தில் பயத்தையும் அடைந்துகொண் டு, ஓரிடத்தில் வியாதி முதலியவைகளால் பீடிக்கப் பட்டு மரணம் அடைவதுபோலவும் இருந்தார். ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மாயையினால் பறியுண்ட மனமுடைய அம்முனிவர் இங்ஙனம் ஜலப்ரவாஹத்தில் சுழன்றுகொ ண்டிருக்கையில் பற்பல பதினாயிரம் பதினாயிரம்பலகோடி நூறாயிரம் வர்ஷங்கள் கடந்தன. (நெடுங்காலம் கடந் தது.) இங்ஙனம் அந்தவெள்ளத்தில் சுற்றிக்கொண்டே யிருக்கிற அம்முனிவர் ஒருகால் பூமியின் முசுப்பு போல் உன்னதமாயிருக்கின்ற ஓரிடத்தில் காய்களோ டும் தளிர்களோடும் கூடி அழகியதான ஓர்சிறிய ஆல

மரத்தைக் கண்டார். அந்த மரத்தின் வடகிழக்கு மூலையிலுள்ள கிளையில் ஒரு தளிரில் சயனித்துக்கொண்டு தன்னொளியால் இருட்டையெல்லாம் விழுங்குவது போன்ற ஓர் சிசுவைக் கண்டார். அக்குழந்தை சிறந்த மரகதரத்னம்போல் கறுத்துத் தாமரைமலர்போல் அழகிய முகமும் சங்கம்போன்ற கண்டமும் அகன்ற மார்பும் அழகிய மூக்கும் அழகான புருவங்களும் அமைந்து, மூச்சுக்காற்றினால் அசைகின்ற முன்னெற்றி மயிர்களால் விளக்கமுற்றுச் சங்கத்தின் உட்புறம்போன்ற சோபையமைந்த காதுகளில் மாதுளம்பூபோன்ற ஆபரணங்களை அணிந்து பவழம்போன்ற அதரத்தின் காந்தியால் சிறிது சிவந்த பரிசுத்தமான மந்தஸ்மிதமும் பத்மகர்ப்பம் போல் சிவந்த கடைக்கண்களும் மனத்திற்கினிய சிரிப்போடுகூடிய கண்ணோக்கமும் மூச்சுக்காற்றுக்களால் சலிக்கின்ற திரிவலிகளால் சஞ்சலமாயிருக்கின்ற ஆழ்ந்த கொப்பூழுடன் கூடி விளங்குகின்ற அரசிலைபோன்ற திருவுதரமும் உடையதாகி அழகிய விரல்கள் அமைந்த கைகளால் தாமரை மலர்போன்ற பாதத்தை இழுத்து அதன் கட்டைவிரலை வாயில்வைத்துச் சும்பனஞ்செய்துகொண்டிருந்தது. ப்ராஹ்மணஸ்ரேஷ்டரே! அதைக் கண்டு அம்முனிவர் வியப்புற்றார். அவர் அந்தக் குழந்தையைக் கண்டமாத்ரத்தினால் ச்ரமமெல்லாம் தீர்ந்து ஹ்ருதயகமலமும் தாமரைக்கண்களும மலரப்பெற்று அக்குழந்தையின் அற்புதமான உருவத்தினால் ‘இப்படியுங்கூட ஒன்றுண்டோ?’ என்று சங்கித்து உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்று அதை நன்றாகப் பார்க்கவேண்டுமென்று அதன் அருகாமையில் சென்றார். பார்க்கவரே! அப்பொழுது அம்முனிவர் அக்குழந்தை

யின் மூச்சுக்காற்றினால் இழுக்கப்பட்டு மசகம்போல் அதன்வாயில் பிரவேசித்தார். அதற்குள் நுழைந்த அம்முனிவர் அங்கும் முன்பு தான் வெளியிற்கண்ட பிரபஞ்சம்போலவே யிருக்கின்ற பிரபஞ்சத்தையெல்லாம் கண்டு மிகவும் வியப்புற்று மயங்கினார்; அந்தரிக்ஷம் த்யாவாபூமிகள் நக்ஷத்ர கணங்கள் பர்வதங்கள் ஸமுத்ரங்கள் த்வீபங்கள் பாரதாதி வர்ஷங்கள் திசைகள் அஸுரர்கள் வனங்கள் தேசங்கள் நதிகள் புரங்கள் ரத்னம் முதலியன விளையுமிடங்கள் க்ருஷிசெய்து ஜீவிக்கிறவர் வஸிக்கும் க்ராமங்கள் இடைச்சேரிகள் ஆச்ரமங்கள் ப்ராஹ்மணாதிவர்ணங்கள அவற்றின் வ்ருத்திகள் ஆகிய இவையெல்லாவற்றையும் கண்டார். மற்றும், ஆகாசம் முதலிய பஞ்சமஹாபூதங்களையும் அப்பஞ்சபூதங்களின் பரிணாமங்களான தேவமனுஷ்யாதி தேஹங்களையும் நானாவிதமான யுகங்கள் கல்பங்கள் இவைகளை விளக்கின்ற காலத்தையும் கண்டார். பலபடச்சொல்லி யென்? அது இதுவென்று வியவஹாரங்களுக்குக் காரணமாகிஅறியாதமூடர்களுக்குநித்யம்போல்தோற்றுகிற வஸ்து எதுவெது உண்டோ, அதையெல்லாம்கண்டார். அன்றியும், ஹிமவத்பர்வதம், அங்குள்ள புஷ்பவஹை யெனனும் அந்நதி, எங்குத் தான் நரநாராயணரிஷிகளைக் கண்டாரோ அத்தகைய தன்னுடைய ஆச்ரமம் ஆகிய இவற்றையும் கண்டார். இங்ஙனம் ப்ரபஞ்சத்தை யெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கிற அம்முனிவர் திடீரென்று அச்சிசுவின் மூச்சுக்காற்றினால் வெளியில் இழுக்கப்பட்டு முன்போலவே ப்ரளயார்ணவத்தில் வந்து விழுந்தார். அவர் முன்போலவே பூமியின் முசுப்புபோல் உன்னதமான ஓரிடத்தில் முளைத்திருக்கின்ற ஆலமரத்தையும் அதன் தளிரில் சயனித்துக்கொண்டிருக்கின்ற சிசு

வையும் கண்டு ப்ரேமமும் அம்ருதம்போன்ற புன்னகையும்அமைந்த அந்தச்சிசுவின் கடைக்கண்ணுல் கடாக்ஷிக்கப்பட்டார். அவர் பாலகஸ்வரூபனுன அவ்வதோக்ஷஜனைக் கண்களால் கண்டு ஹ்ருதயத்திறுல் அணைத்து மீளவும் பாஹ்யமாக அணைக்கவிரும்பி மிகுந்த ஸந்தோஷத்துடன் அருகாமையில் சென்ருர். சிந்திக்கமுடியாத பலவகையான ஜ்ஞான சக்த்யாதி குணகணங்களுடையவனும் ஆக்சர்யசக்தியோகநிர்வாஹகனும் யோகிகளுடைய ஹ்ருதயகுஹைகளில் அமைந்திருப்பவனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய ஒன்ருன அப்பரமபுருஷன் அவ்வளவில் அந்தர்த்தானம் அடைந்தான். ரிஷியின் விருப்பம் (அணைக்கவேண்டுமென்னும்) விருப்பம் ஏழையின் விருப்பம்போல் பயனற்றதாயிற்று. ப்ராஹ்மணஸ்ரேஷ்டரே! அவன் மறைந்தவுடனே ஜகத்தையெல்லாம் வியாபித்திருந்த மஹாஜலமும் மறைந்தது. அந்த க்ஷணமே அம்முனிவருடைய அருகாமையிலிருந்த ஆலமரமும் மறைந்தது. அம்முனிவரோவென்ருல் முன் போலவே தன்னுடைய ஆஸ்ரமத்தில் இருந்தார். ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ருத்ரன் மார்க்கண்டேயருக்கு வரங்கொடுத்தல்.

ஸ்ரீஸூதர் சொல்லுகிருர்:—அம்மார்க்கண்டேய முனிவர் நாராயணனென்று ப்ரஸித்திபெற்ற பரமபுருஷன் காட்டின அவனுடைய யோகமாயையின் வைபவத்தை இங்ஙனம் அனுபவித்து அம்மாயையைத் தாண்டுவதற்கு அந்தப் பரமபுருஷனையே சரணம் அடைந்தார்.

மார்க்கண்டேயர் சொல்லுகிருர்:—ஸ்ரீஹரீ! (தன்னைப்பற்றினவர்களின் பாபங்களைப்போக்குகையால் ஹரி

யென்று பெயர் பெற்றவனே!) தன்னையே சரணமாகப் பற்றினவர்களுக்கு அபயங்கொடுப்பதாகிய உன்பாத மூலத்தை நான் சரணம் அடைந்தேன். தேவர்களுங்கூட எவனுடைய மாயையினால் மதியை இழந்து மனங்கலங்கி மோஹிக்கிறார்களோ, அத்தகையனான உன்னுடைய மாயையைக் கடப்பதற்கு நான் உன்னையே சரணம் அடைகின்றேன்.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—அப்பொழுது தன்னுடைய ப்ரமதகணங்களால் சூழப்பட்டுப் பார்வதியுடன் வ்ருஷபவாஹனத்தின்மேல் ஏறி ஆகாயத்தில் திரிகின்ற மஹானுபாவனான உருத்திரன் பரமபுருஷனிடத்தில் மனவூக்க முற்றிருக்கின்ற அம்முனிவரைக் கண்டான். பிறகு பார்வதி அம்மஹர்ஷியைக் கண்டு கிரிசனைக் குறித்து 'மஹானுபாவனே! இம்முனிவர் தேஹம் இந்த்ரியம் மனம் இவையெல்லாம் சிறிதும் சலியாதபடி அடக்கிக் காற்றில்லாதபொழுது ஜலமும் மீன்களின் கூட்டமும் அசையாதிருக்கப்பெற்ற மாஹாஸமுத்ரம்போன்றிருக்கிறார். இவரைக் கிட்டிச் சென்று காண்போம். நீ விரும்பின ஸித்திகளையெல்லாம் கொடுப்பவனல்லவா? ஆகையால் இம்முனிவர் எதை விரும்பித் தவஞ் செய்கிறாரோ, அந்த ஸித்தியை நீயே இவர்க்குக் கொடுப்பாயாக' என்று மொழிந்தாள்.

உருத்திரன் சொல்லுகிறான்:—இவர் ப்ரஹ்மரிஷி. இவர் இஹலோக ஸுகங்களையாவது பரலோகஸுகங்களையாவது எவற்றையும் விரும்புகிறவரல்லர். ஆயினுஞ்சொல்லியென். இவர் அழிவற்ற பரமபுருஷனான பகவானிடத்தில் அனன்யப்ரயோஜனமான பக்தி கைகூடப்பெற்றவர். (ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர்பாராமல் பகவானிடத்தில் நிலைநின்ற பக்தியுடையவர்கள் எதையும்

விரும்பமாட்டார்கள்). பவானி! ஆயினும் ஸாதுவாகிய இம்முனிவருடன் ஸம்பாஷணஞ் செய்வோம். (அவ்வளவுமாத்ரத்தினால் என்ன ப்ரயோஜனம்? என்கிறாயோ? சொல்லுகிறேன் கேள்.) பராணிகளுக்கு ஸத்புருஷர்களோடு ஸமாகமம் நேருமாயின், இதுவே அவர்களுக்குப் பரமலாபமாம்.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—ஸத்புருஷர்களுக்குக் கதியும் ஸர்வவித்யாநிர்வாஹகனும் ஸமஸ்தப்ராணிகளுக்கும் ஈஸ்வரனும் மஹானுபாவனுமாகிய அவ்வுருத்திரன் இங்ஙனம் மொழிந்து அம்மஹர்ஷியிடம் சென்றான். அம்முனிவர் அந்தக்கரண வ்ருத்திகளையெல்லாம் அடக்கிப் பரமபுருஷனிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி அவனையே த்யானித்துக்கொண்டிருக்கையால், ஒன்றான ஜகதீஸ்வரனும் ஸமஸ்த ஜகத்திற்கும் அந்தராத்மாவுமாகிய பரமபுருஷனுடைய அம்சமாகையால் அத்தன்மைகளெல்லாம் அமையப்பெற்ற பார்வதியும் பரமேஸ்வரனுமாகிய அவவிருவரும் எதிரில் வந்து நின்றிருப்பதையும் தன்தேஹத்தையும் மற்றுமுள்ள ப்ரபஞ்சத்தையும் அறியாதிருந்தார். மஹானுபாவனாகிய கிரிசனும் அதை அறிந்து பகவதுபாஸனத்தினால் தனக்கு ஏற்பட்டிருக்கின்ற பரகாயப்ரவேசஸாமர்த்யமாகிற சக்தியினால் காற்று ரந்த்ரத்தில் ப்ரவேசிப்பதுபோல் அம்முனிவருடைய ஹ்ருதயாகாசத்தில் ப்ரவேசித்தான். அம்முனிவர், மின்னல்போல் பொன்னிறமான ஜடைகளைத் தரித்து மூன்று கண்களும் பத்துபுஜங்களும் அமைந்து மிகவும் உயர்ந்து அப்போதுதிக்கின்ற ஸூர்யன்போல் ஜ்வலித்துக்கொண்டு புலித்தோலுடுத்துச் சூலம் தனுஸ்ஸு பாணம் கத்தி கேடயம் அக்ஷமாலை டமருகம் கபாலம் கோடரி இவைகளை ஏந்திக்கொண்டு திடீ

ரென்று தன்ஹ்ருதயத்தில் வந்து தோன்றுகிற அப்பர மசிவனைக் கண்டு 'இதுவென்? எப்படி நேர்ந்தது?' என்று வியப்புற்றுப் பரமாத்மத்யானத்தினின்று மீண்டார். பிறகு அம்முனிவர் கண்ணைத்திறந்து ப்ரமதகணங்களோடும்பார்வதியோடும் எதிரில் இருக்கின்ற த்ரிலோகக் குருவான ருத்ரனைக் கண்டு தலையால் வணங்கினர். அவர் ப்ரமதகணங்களோடும் பார்வதியோடும் கூடிய அந்த ருத்ரனுக்கு வரவேற்று ஆஸனம் அளித்துப் பாத்யம் அர்க்யம் கந்தம் பூமாலை தூபம் தீபம் இவைகளையும் அளித்துப் பூஜை செய்தார். மேல்வருமாறு மொழியவும் மொழிந்தார்.

மார்க்கண்டேயர் சொல்லுகிறார்:—ப்ரபூ! தன்ப்ரபாவத்தினால் விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்ற உனக்கு நாங்கள் என்ன செய்யவேண்டும்? ஈஸ்வரனே! எவனால் இந்த ஜகத்தெல்லாம் ஸுகித்திருக்கின்றதோ, அத்தகைய உனக்கு எங்களால் ஆகவேண்டியது என்ன இருக்கின்றது? ஒன்றும் இல்லை. உலகங்களுக்கெல்லாம் மங்களத்தை விளைப்பவனாகையால் சிவனென்று பெயர் பெற்றவனும் பசி தாஹம் முதலிய ஊர்மிகள் நீங்கப் பெற்றவனும் மிகுதியும் ஸுகத்தை விளைவிப்பவனும் சுத்தஸத்வமயமான திருமேனியையுடைய ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய அம்சமுமாகிய உனக்கு நமஸ்காரம் 'எனக்கு அந்தராத்மாவான பரமபுருஷனே ரஜோகுணம் தலையெடுத்த ப்ரஹ்மதேவனுக்கும் அந்தராத்மாவாயிருந்து ஸ்ருஷ்டி கார்யத்தை நடத்துகிறானென்னும் பரமாத்மனுடைய உண்மையை அறிந்து 'நானே ரஜோகுணப்ரசுரனான ப்ரஹ்மதேவன்' என்னும் பாவனையுடைய உனக்கு நமஸ்காரம். தமோகுணம் தலையெடுத்து ருத்ரனென்னும் பெயர் பூண்டு ஸம்ஹாரத்

தை நடத்துகின்றமையால் பயங்கரனை உனக்கு நமஸ் காரம்.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—ஆதிதேவனும் ஸத் புருஷர்களுக்குக் கதியுமாகிய அச்சிவபகவான் இங்ஙனம் அம்முனிவரால் துதிக்கப்பெற்று ஸந்தோஷம் அடைந்து மன இரக்கமுற்றுச் சிரித்துக்கொண்டே அம்முனிவரைக் குறித்து மொழிந்தான்.

ஸ்ரீருத்ரன் சொல்லுகிறான்:—முனிவரே! என்னிடத்தினின்று உமக்கு இஷ்டமான வரத்தை வேண்டிக் கொள்வீராக. ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களென்கிற நாங்கள் மூவரும் வரங்கொடுப்பவர்களில் சிறந்தவர்கள். எங்களுடைய காட்சி வீணாகாதது. எங்களிடத்தினின்றே மோக்ஷத்தைப் பெறுகின்றார்கள். (பரம புருஷன் நேரே மோக்ஷங் கொடுக்கிறான். ப்ரஹ்மாவும் நானும் பகவதுபாஸனத்திற்கு த்வாரமாயிருந்து மோக்ஷங் கொடுக்கிறோம். ஆகையால் நாங்கள் மூவரும மோக்ஷங் கொடுப்பவர்கள்). ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களால் மனம் கலங்கப் பெறாதவர்களும் சப்தாதி விஷயங்களில் பற்றற்றவர்களும் பகவானிடத்தில் ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாமல் பக்தி செய்பவர்களும் ப்ரஹ்மதேவன் நான் ஆகிய எங்களிடத்தில் பகவத்விபூதியென்னும் பாவனையால் வைரமற்றவர்களும் எல்லாம் பகவானுடைய சரீரமென்னும் பாவனையால் ஸர்வத்தையும் ஸமமாகப் பார்க்குந்தன்மையர்களும் ப்ரஹ்மநிஷ்டையுடையவர்களுமான ப்ராஹ்மணர்கள் ஸாதுக்களென்று கூறப்படுவார்கள். ஸமஸ்த லோகங்களும் இந்த்ராதிலோகபாலர்களும் நானும் ஜ்ஞானாதி குணங்கள் அமைந்த ப்ரஹ்மதேவனும் தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந் தன்மைய

னும ஸகலஜகந்நியாமகனுமான பரம புருஷனுமா னுமாகிய நாங்கள் அனைவரும் அத்தகைய அந்தணர்களை வணங்குவதும் பூஜிப்பதும் உபாஸிப்பதும் செய்கின்றோம். இந்த ப்ராஹ்மணர்கள் ப்ரஹ்ம தேவனிடத்திலும் என்னிடத்திலும் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந் தன்மையைப்பற்றி அச்யுதனென்னும் பெயர்பெற்ற பரமபுருஷனிடத்திலும் சிறிதும் பேதம் பார்க்க மாட்டார்கள். (இவர்கள் பரம புருஷனுடைய சரீரங்களாகையால் அவனைக்காட்டிலும் வேறுபட்டவர்களன்று; இவர்கள் அவனே யென்று பாவிப்பார்களன்றி அவனைக்காட்டிலும் பேதம் பாராட்டமாட்டார்கள்). அவர்கள் தம்மையும் மற்ற ஜனங்களையும் பரமபுருஷ சரீரங்களென்றே நன்றாக உணர்ந்தவர்களாகையால் தம்மையும் பிறரையும் அப்பரம புருஷனைக் காட்டிலும் வேறாக நினைக்கமாட்டார்கள். ஆகையால் நாங்களும் உங்களைப் பணிகின்றோம். ஜலமயமான புண்ய தீர்த்தங்கள் தர்சன மாத்ரத்தினால் பரிசுத்தஞ் செய்யமாட்டா; பின்னையோ வென்றால், நெடுநாள் ஸ்னானாதிகள் செய்யிற்றான் பரிசுத்தஞ் செய்யும். மற்றும், மண் சிலை முதலியவற்றால் இயற்றின தேவப்ரதிமைகளும் தர்சன மாத்ரத்தினால் பரிசுத்தஞ் செய்யமாட்டா; நெடுநாள் ஆவாஹனாதி ஷோடசோபசார பூஜாதிகளாற்றான் பரிசுத்தஞ் செய்யும். நீங்களோ வென்றால் தர்சன மாத்ரத்தினாலேயே பரிசுத்தஞ் செய்கிறீர்கள். ப்ராஹ்மணர்களுக்கு நமஸ்காரம். இவர்களுடைய உருவம் வேதமயமாயிருக்கும்; மற்றும், மன அடக்கம் தவம் ஸ்வாத்யாயம் (வேத மோதுதல்) இந்த்ரிய நிக்ரஹம் இவைகளால் பரிசுத்தமானது. மஹாபாதகிகளும் அந்திய ஜாதியில் பிறந்தவர்களும் கண்ணால் கண்ட மாத்ரத்

திலும் காதால் கேட்ட மாத்ரத்திலும் பரிசுத்தராவார்கள்; இவர்களோடு ஸம்பாஷணாதிகள் செய்யில் பரிசுத்தராவார்களென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ?

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஸத்புருஷஸேவையாகிற தர்ம ரஹஸ்யத்தை உட்கொண்டிருப்பதும் அம்ருதம் போன்றதுமாகிய சந்த்ரசேகரனுடைய வசனத்தை மார்க்கண்டேயமஹர்ஷி காதுகளால் பானஞ்செய்து த்ருப்தி அடையாதிருந்தார். விஷ்ணுவின் மாயையில் அகப்பட்டு நெடுநாள் சுழலமிட்டு மிகவும் வருத்தமுற்றிருக்கின்ற அம்முனிவர் சிவபெருமானுடைய வசனமாகிற அம்ருதத்தைப் பருகி வருத்தமெல்லாம் தீரப்பெற்று அச்சிவபெருமானைக் குறித்து மேல் வருமாறு கூறினார்.

ரிஷி சொல்லுகிறார்:—ஈஸ்வரனுடைய விபூதிகளான உங்களைப்போன்ற பெரியோர்களுடைய சேஷ்டைகள் ப்ராணிகளுக்கு அறியமுடியாத அபிப்ராயமுடையவை. ஏனென்றால், நீங்கள் ஜகத்தில் சிறப்புடையவர்களாயிருந்தும் சிறுமையான ஜந்துக்களையும் வணங்குவதும் துதிப்பதும் செய்கின்றீர்கள். (பகவானிடத்தில் பக்தியுடைய பெரியோர்களின் நிலைமை இத்தகையதேயாம்). தர்மத்தைப் பிறர்க்கு உபதேசிக்குந் திறமையுடையவர்களாயிருந்தும் ப்ராணிகளுக்கு அதை அறிவிக்கும்பொருட்டுத் தாங்கள் தர்மத்தைப் பெரும்பாலும் அனுஷ்டிப்பதும் பிறர் அனுஷ்டிப்பதைப் பற்றி ஸந்தோஷிப்பதும் துதிப்பதும் செய்கின்றார்கள். இங்ஙனம் பெரியோர்கள் தர்மத்தை அனுஷ்டிப்பதும் அனுஷ்டிக்கிறவர்களைப்பற்றி ஸந்தோஷிப்பதும் அவர்களைத் துதிப்பதுமாகிய இவை அவர்களுடைய ஆச்சர்ய சேஷ்

டைகளில் சில. இவ்வளவுமாத்ரத்திஞல் அவர்களு டைய ப்ரபாவம் தடைபடாது. ஜகத்ப்ரஸித்த மாயாவி யினுடைய கபட வ்யாபாரங்களால் அவனுடைய மாயா விஸ்வரூப ப்ரபாவம் வெளியாகுமேயன்றி அவனுடைய ப்ரபாவம் குறையாதல்லவா. அங்ஙனமே இதுவுமொன் று. பகவான் ஸங்கல்ப மாத்ரத்திஞல் இந்த ஜகத்தையெ ல்லாம் படைத்துத் தான் அதற்குள் புகுந்து, பூர்வ கர்ம வாஸனுனுகுணமாகப் பரிணமிக்கின்ற குணங்கள் உத்த ரோத்தரமான புண்யபாபரூப விஷம ஸ்ருஷ்டியை நடத் துகின்றன வாயினும், தானே அந்த விஷமஸ்ருஷ்டி யை நடத்துகிறவன்போல் தோற்றுகிருன். ஸ்வப்னத்தில் புலப்படுகின்றவஸ்துக்கள ஸ்வப்னங்காண்கிறவனுல் படை க்கப்பட்டவையல்ல. பகவானே அவரவர்களுடைய கர் மானுகுணமாகச் சில வஸ்துக்களைப் படைத்து ஸ்வப் னத்தில் அனுபவிப்பிக்கிருன். அவை ஸ்வப்னங்காண் கிறவனுக்குத் தவிர மற்றவனுக்குத் தெரியமாட்டா. அவனுக்கும் அந்த ஸ்வப்னஸமயந்தவிர அடுத்தக்ஷ ணத்திலுங்கூடத் தெரியமாட்டா. ஈஸ்வரன் அக்காலத் தில் மாத்ரமே அவனவன் அனுபவிக்கும்படி படைத்து உடனே மறைக்கின்றுன். இவ்வுண்மையை அறியாத வர்கள் ஸ்வப்னத்தில் புலப்படுகிற வஸ்துக்களை அந்தந்த ஜீவனே படைக்கிருனென்று ப்ரமிக்கின்றுர்கள். அங் ஙனமே பரம புருஷன் ஜீவாத்மாக்களுடைய புண்யபாப கர்மங்களுக்குத் தகுந்தபடி மேன்மையும் தாழ்மையு மான தேஹங்களைப் படைக்கிருனன்றி, அவன்ருனே மன இரக்கமில்லாமல் விஷம ஸ்ருஷ்டியை நடத்துகிரு னென்பதில்லை. ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூ ன்று குணங்களுக்கு நியாமகனும் எங்கும் தடைபடாத ஸங்கல்ப முடையவனும் ஸமஸ்த தோஷங்களும் தீண்

டப்பெருதவனும் தன்னைப் பற்றினருடைய தோஷங்களை யெல்லாம் போக்குந்தன்மையனும் தன்னைப்போன்ற வேறொரு வஸ்துவில்லாதவனும் வேத நிர்வாஹகனும் அளவிட முடியாமல் எங்கும் நிறைந்த ஸ்வரூபமுடையவனும் குருவும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய அத்தகைய பரம புருஷனுக்கு நமஸ்காரம். அளவிறந்த மஹிமை யுடையவனே! வரங்கொடுப்பவர்களில் சிறந்தவனும் சிறந்த காட்சியுடையவனுமாகிய உன்னிடத்தினின்று இதைக்காட்டிலும் வேறு எந்த வரத்தை வேண்டுவேன்? புருஷன் புண்யபாப கர்மங்களுக்கு உட்படாமல் ஸ்வதந்த்ரனும் ஸத்யகாமனுமாகையே அவனுக்கு வேண்டிய வரமன்றி வேறுண்டோ? ஆயினும், விருப்பங்களை யெல்லாம் குறைவற நிறைவேற்றுந் திறமையுடைய உன்னிடத்தினின்று இந்தவரத்தை வேண்டுகின்றேன். தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் காக்குந்தன்மையனான பகவானிடத்திலும் அவனுடைய பக்தர்களிடத்திலும் அவர்களில் சிறந்த உன்னிடத்திலும் எனக்கு அழியாத பக்தி உண்டாகும்படி அருள் புரிவாயாக.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அம்முனிவர் இனிய உரைகளால் துதி செய்கையில், தன் பக்தர்களைக் கைவிடாத பரம புருஷனிடத்தில் நிலைநின்ற மனமுடையவனாகையால் தன்மயனும் மஹானுபாவனுமாகிய ருத்ரன் பார்வதியாலும் அபிநந்தனஞ் செய்யப்பட்டு அம்முனிவரைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ருத்ரன் சொல்லுகிறான்:—மஹர்ஷீ! உமக்கு இவ்விருப்பம் நிறைவேறுமாக. இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கெட்டாத மஹானுபாவனான பரம புருஷனிடத்தில் உமக்குச் சிறந்த பக்தி உண்டாகுமாக.

உமக்குக் கல்பாந்தம் வரையில் புண்யமான புகழ் உண்டாகுமாக. மற்றும், நீர் ஜராமரணங்களற்றிருப்பீராக. ப்ராஹ்மணஸ்ரேஷ்டரே! உமக்கு த்ரிகாலஜ்ஞானம் உண்டாகுமாக.(வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாகிய மூன்று காலங்களி லுள்ளவற்றையும் நீர் அறிவீராக.) ப்ரஹ்மஸ்வரூப ரூபாதிகளைப் பற்றின அறிவும் விரக்தியும் உமக்கு விளையுமாக. ப்ரஹ்மவர்ச்சஸம் மிகுந்திருக்கப்பெற்ற உமக்குப் புராணாசார்யத்வம் உண்டாகுமாக. (நீர் ஏற்கனவே பரம புருஷனிடத்தில் மிகுந்த பக்தியுடையவராகையால் உம்முடைய விருப்பங்களெல்லாம் தானே கை கூடியிருக்கின்றன. மேன்மேலும் அவை தானே வளர்ந்து வரும். நீர் இதைப்பற்றிச் சிறிதும் சிந்திக்க வேண்டியதில்லை.)

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—முக்கண்ணனாகிய ருத்ரன் இங்ஙனம் அம்முனிவர்க்கு வரங்களைக் கொடுத்து, அம்முனிவர் முன்பு பகவானுடைய மாயையைக் கண்டமையாகிற அற்புத வ்ருத்தாந்தத்தைத் தன் பத்னியாகிய பார்வதிக்குச் சொல்லிக்கொண்டே புறப்பட்டுப் போனான். ப்ருகு வம்சத்தவர்களில் சிறந்தவரான அம்மார்க்கண்டேயமுனிவர் மஹாயோகவைபவம் கைகூடப்பெற்றுப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந்தன்மையனான பரம புருஷனிடத்தில் ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர்பாராத ஏகாந்த பக்தியுடையவராகி இப்பொழுதும் திரிந்துகொண்டிருக்கிறார். இது நிச்சயம். (இவ்விஷயத்தில் ஸந்தேஹம் இல்லை). சிறந்த மதியுடைய மார்க்கண்டேய முனிவர் பகவானுடைய அற்புதமான மாயாவைபவத்தை அனுபவித்த இந்த வ்ருத்தாந்தம் முழுவதும் உமக்கு வர்ணித்தேன். ஸம்ஸாரம் அனாதியென்பதை அறியாத சில மூடர்கள் ஜீவாத்மாக்களுக்கு

பகவானுடைய மாயையினாலுண்டான இந்த ஸம்ஸாரத்தைக் காதாசித்கமென்று (மார்க்கண்டேயருடைய மாயானுபவம்போல் ஒருகால் நேருவதென்று) சொல்லுகிறார்கள். பின்னையோ வென்றால், இந்த ஸம்ஸாரம் அநாதியாகச் சக்ரம்போல் சுழன்றுகொண்டு வருகின்றது. சக்கரக்கையனான பரம புருஷனுடைய ப்ரபாவத்தை உட்கொண்டிருக்கிற மார்க்கண்டேய மஹர்ஷியின் வ்ருத்தாந்தத்தை விவரித்துச் சொன்னேன். இதை எவன் பிறரைக் கேட்பிக்கிறானோ, எவன் கேட்கிறானோ, அவ்விருவர்க்கும் புண்யபாப கர்ம மூலமான ஸம்ஸாரம் மீளவும் தொடராது. பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

மஹாபுருஷனுடைய அங்கோபாங்கங்களான அஸ்த்ரபூஷணாதிகளை நிரூபித்தலும், த்வாதசாதித்யவ்யூஹவர்ணனமும்.

மௌனகர் சொல்லுகிறார்:—எல்லா மறிந்தவர்களில் சிறந்தவரான உம்மை நாங்கள் இந்த விஷயத்தைப்பற்றி வினவுகிறோம். புராணம் பஞ்சராத்ரம் முதலிய ஸமஸ்த சாஸ்த்ரங்களுடைய உண்மையும் உமக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் நீர் இந்த விஷயத்தை எங்களுக்குச் சொல்லவேண்டும். பகவதாராதன ரூபமான பாஞ்சராத்ராதி சாஸ்த்ரங்களின் உண்மையை அறிந்து அங்ஙனமே அனுஷ்டிக்கின்ற பெரியோர்கள் கேவல சுத்தஸத்வமயமான திவ்யமங்களவிக்ரஹமுடையவனும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனுமாகிய பகவானுடைய ஆராதனத்தில் பாணிபாதாதி அங்கங்களையும் ஹ்ருதயம் முதலிய உபாங்கங்களையும் ஸுதர்சனம் முதலிய ஆயுதங்களையும் கிரீடம் முதலிய ஆபரணங்களையும் எந்தெந்த தத்வங்களுக்கு அபிமானி தேவதை

களாக எப்படி த்யானிக்கிறார்களோ, அதையெல்லாம் எங்களுக்கு நிரூபித்துச் சொல்வீராக. பகவதாராதன ரூபமான கர்மயோகத்திற்கு இது வேண்டியதாகை யால் நாங்கள் இதை அறிய விரும்புகிறோம். ஜன்ம ஜராமரணாதி ரூபமான ஸம்ஸார துக்கங்களை அனுபவிக் கின்ற ஜீவன் அங்க உபாங்காதி கல்பனையோடு கூடிய இக்கர்மயோகத்தில் திறமை உண்டாகப் பெறுவானா யின், ஜன்ம ஜரா மரணாதி ரூபமான ஸம்ஸார துக்கங் களைக் கடந்திருக்கையாகிற மூக்தியைப் பெறுவான்.

ஸூதர் சொல்லுகிறார்:—ஆசார்யர்களை நமஸ்கரித் து ஸ்ரீமஹா விஷ்ணுவினுடைய அங்கோபாங்கங்களால் அபிமானிக்கப்பெற்ற அவனுடைய விபூதிகளைச் சொல் லுகிறேன். ப்ரஹ்மதேவன் நாரதர் முதலிய பூர்வாசார் யர்கள் இந்த விபூதிகளை வேதத்தினின்றும் பஞ்சராத்ர சாஸ்த்ரத்தினின்றும் அறிந்து கொண்டார்கள். மாயை யென்னும் பெயருடைய ப்ரக்ருதி மஹத்து அஹங்காரம் பஞ்ச பூதங்கள் காலம் ஆகிய இவ்வொன்பது தத்வங்க ளாலும் இவற்றின் விகாரங்களான பதினொரு இந்த்ரி யங்கள் பஞ்ச தன்மாத்ரங்கள் இவைகளாலும் இந்த ப்ரஹ்மாண்டம் நிர்மிக்கப்பட்டதென்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. மற்றும், ஜீவாத்மாக்கள் நிறைந்த இந்த ப்ரஹ்மாண்டத்தில் மூன்று லோகங்களும் புலப்படு கின்றன. இத்தகையதான இந்த ப்ரஹ்மாண்டத்திற் குப் பரம புருஷனுடைய திவ்யமங்கள விக்ரஹம் அபி மானதேவதை யாகையால் இதை அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹமாகச் சொல்லுகிறார்கள். பூமி முதல் கீழுள்ள ஏழு லோகங்களும் அம்மஹா புருஷனுடைய பாதங்கள். த்யுலோகம் அவனுடைய சிரஸ்ஸு. ஆகா சம் அவனுடைய கொப்பூழ். ஸூர்யன் அவனுடைய

கண்கள். வாயு அவனுடைய மூக்கு. ப்ரபூ! திசைகள் அவனுடைய காது. ப்ரஜாபதி அவனுடைய ஆண்குறி. ம்ருத்யு எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்குந் தன்மையனை அப்பரம புருஷனுடைய அபானம். லோகபாலர்கள் அவனுடைய புஜங்கள். சந்த்ரன் அவனுடைய மனஸ்ஸு. யமன் அவனுடைய புருவங்கள். லஜ்ஜை அவனுடைய மேலுதடு. லோபம் அவனுடைய கீழுதடு. நிலவு அவனுடைய பற்கள். ப்ரமம் அவனுடைய புன்னகை. வ்ருக்ஷங்கள் அப்பரமாத்மனுடைய ரோமங்கள். மேகங்கள் அப்பரம புருஷனுடைய கேசங்கள். இந்த வ்யஷ்டிபுருஷன் என்னென்ன அவயவங்களுடையவனோ, இம்மஹா புருஷனும் பூலோகாதி லோகங்களுக்கு அபிமானி தேவதைகளான அந்தந்த அவயவங்களெல்லா முடையவன். வ்யஷ்டி புருஷன் தன்னுடைய பரிமாணத்தினால் ஏழு [1]விதஸ்தியளவுடையவனா யிருப்பதுபோல், இம்மஹா புருஷனும் தன்னுடைய பரிமாணத்தினால் ஏழு விதஸ்தியளவுடையவன். (இவனுடைய பரிமாணம் ஆராதகனுடைய புத்தியைப் பொருந்தினது). பிறவி முதலிய விகாரங்களற்ற பரம புருஷன் கௌஸ்துபமென்னும் வ்யாஜத்தினால் தனக்குச் சேஷபூதனும் ஜ்ஞானத்தை வடிவாகவுடையவனுமாகிய ஆத்ம ஸ்வரூபத்தைத் தரிக்கின்றான். (கௌஸ்துபன் ஜீவ வர்க்கத்திற்கு அபிமானி தேவதை). அந்த ஜீவனுடைய தர்மபூத ஜ்ஞானம் விபுவாயிருக்கும். (எங்கும் வியாபிக்குந்தன்மையுடையது). அந்த தர்மபூத ஜ்ஞானத்தையே ப்ரபுவாகிய பகவான் ஸ்ரீவத்ஸ மென்னும்

1. விதஸ்தி—சாண். ஏழுவிதஸ்தியளவுடையவன்—ஏழுசாணளவுடையவன்.

அடையாளமாக மார்பினுல் தரிக்கின்ருன். விஷமாவஸ்தையை அடைந்த ஸத்வாதி குணங்களையுடைய ப்ரக்ருதியையே வனமாலையாகத் தரிக்கின்ருன். (வனமாலை ப்ரக்ருதிக்கு அபிமானி தேவதை). காயத்ரி முதலிய சந்தஸ்ஸுக்களைப் பீதாம்பரமாகத் தரிக்கின்ருன். (பீதாம்பரம் சந்தஸ்ஸுக்களுக்கு அபிமானி தேவதை). மூன்று மாத்ரைகளை யுடையதும் அகர உகர மகரங்களென்கிற மூன்றெழுத்துக்கள் அடங்கியதுமாகிய ப்ரணவத்தை ப்ரஹ்ம ஸூத்ரமாகத் தரிக்கின்ருன். (அவனுடைய ப்ரஹ்மஸூத்ரம் ப்ரணவத்திற்கு அபிமானி தேவதை)[1] ஜ்ஞானயோக கர்மயோகங்களை ஒரு மகர குண்டலமாகவும், வேதத்தை மற்றொரு மகரகுண்டலமாகவும், ஸமஸ்த லோகங்களுக்கும் மேலான ப்ரஹ்ம லோகத்தை ஸமஸ்த லோகங்களுக்கும் அபயங் கொடுப்பதாகிய கிரீடமாகவும் தரிக்கின்ருன். அவ்யாக்ருதமென்னும் பெயருடைய மூல ப்ரக்ருதியே பரம புருஷன் வீற்றிருக்கின்ற அனந்தனென்னும் பெயருடைய ஆஸனம். தர்மம் ஜ்ஞானம் முதலியவைகளோடு கூடிய சுத்த ஸத்வமே ஆஸனபத்மமென்று கூறப்படுகின்றது. இந்த்ரிய சக்தி மனச்சக்தி தேஹசக்தி இவைகளோடு கூடிய முக்ய தத்வத்தையே கதையாகவும், ஜலதத்வத்தையே பாஞ்சஜன்யமென்னும் சிறந்த சங்கமாகவும், தேஜஸ் தத்வத்தையே ஸுதர்சனமென்னும் சக்ரமாகவும், ஆகாசம்போல் நிர்மலனும் கருநிறமுடையவனுமாகிய பகவான் ஆகாசத்தையே நந்தகமென்னும் கத்தியாகவும், தமஸ்ஸையே கேடயமாகவும், கால தத்வத்தையே சார்ங்கமென்னும் தனுஸ்ஸாகவும், கர்மத்தை

1. ஜ்ஞானயோகம முதலியவை மகரகுண்டலம் முதலியவற்றிற்கு அபிமானிதேவதை யென்று கருத்து.

யே அம்பறாத் தூணியாகவும் தரிக்கின்றான். பரம புரு ஷனுக்கு இந்த்ரியங்களைக் குதிரைகளாகச் சொல்லு கிறார்கள். ஆகூதியே இவனுடைய ரதம். தன்மாத்ரங் கள் இவனுடைய அர்ச்சாவதாரங்கள். இந்த்ரிய வ்யா பாரங்கள் இவனுடைய செயல்கள். யஜ்ஞபூமி அவனு டைய ஆஸனத்திலுள்ள பத்மாகாரமான மண்டலம். யஜ மானனுடைய யாகதீக்ஷையும் ப்ரோக்ஷணம் அவகாதம் முதலிய ஸம்ஸ்காரமும் பகவானுடைய பரிசர்யை. அது ஆத்மாவினுடைய பாபங்களை யெல்லாம் போக்கும். பக வச் சப்தத்தில் அடங்கிய பகசப்தத்தின் பொருளான ஜ்ஞானம் பலம் முதலிய ஆறு குணங்களே அப்பரம புருஷன் கையில் தரித்திருக்கின்ற லீலாகமலம். தர்மம் அவனுடைய சாமரம். யசஸ்ஸு அவனுடைய விசிறி. அந்தணர்களே! எவ்விதத்திலும் பயத்திற் கிடமல்லாத வைகுண்ட மென்னும் திவ்யலோகமே அவனுடைய குடை. இப்பரம புருஷனுடைய வாஹனமான ஸுபர்ண னென்னும் கருடன் ருக்கென்றும் யஜுஸ்ஸென்றும் ஸாமமென்னும் மூன்று வகையான வேதங்கள். அப்பக வானை விட்டுப் பிரியாத ஸ்ரீமஹாலக்ஷ்மியே அவனு டைய அழியாத சக்தி. அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி அவ னுக்கு ஜ்ஞானாதி குணங்களைப்போன்றவள். ஸூர்ய னுடைய ஒளி அவனை விட்டுப் பிரியாதிருப்பதுபோல் இவளும் அவனை விட்டுப் பிரிபவளல்லள். பாரிஷதர் களில் தலைவரும் அறிஞரும் ப்ரஸித்தருமான விஷ்வக் ஸேனர் அவனுடைய மூர்த்திவிசேஷம். பகவானு டைய த்வாரபாலகர்களான நந்தாதிகள் எண்மரும் அந் தணரே! அணிமாதி அஷ்டைஸ்வர்யங்களுக்கு அபி மானி தேவதைகள். வாஸுதேவன் ஸங்கர்ஷணன் ப்ரத்யும்னன் அநிருத்தன் என்கிற மூர்த்திகள் நான்கும்

ஸாக்ஷாத் பரமபுருஷனே. அவ்வாஸுதேவாதி நான்கு மூர்த்திகளும் ஜாக்ர ஸ்வப்ன ஸுஷுப்தி முக்திகளென்கிற நான்கு அவஸ்தைகளால் விஶ்வனென்றும் தைஜஸனென்றும் ப்ராஜ்ஞனென்றும் துரீயனென்றும் நான்கு வகைப்பட்ட ஜீவாத்மாக்களுக்கு அபிமானி தேவதைகள். (அவற்றில் முக்தி யவஸ்தையை அடைந்த ஜீவனுக்கு அபிமானிதேவதை வாஸுதேவன். ஸ்வப்னாவஸ்தையை அடைந்த ஜீவனுக்கு அபிமானிதேவதை ஸங்கர்ஷணன். மற்ற இருவரும் மற்ற இரண்டவஸ்தைகளை அடைந்த ஜீவாத்மாக்களுக்கு அபிமானிதேவதைகள்). ஜாகராவஸ்தை அர்த்தமென்றும் ஸ்வப்னாவஸ்தை இந்த்ரியமென்றும் ஸுஷுப்தி யவஸ்தை ஆசயமென்றும் முக்தியவஸ்தை ஜ்ஞானமென்றும் கூறப்படுகின்றன. பாணி பாதாதி அங்கங்களோடும் ஹ்ருதயம் முதலிய உபாங்கங்களோடும் ஸுதர்சனம் முதலிய ஆயுதங்களோடும் கிரீடம் முதலிய ஆபரணங்களோடும் கூடிய ஷாட்குண்ய பூர்ணனாகிய பரம புருஷன் வாஸுதேவாதியான நான்கு மூர்த்திகளை ஏற்றுக்கொண்டு ப்ரஸித்தங்களான ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார மோக்ஷங்களென்கிற நான்கு வியாபாரங்களை நிறைவேற்றுகிறான். (அவர்களில் அநிருத்தன் ஸ்ருஷ்டியையும், ப்ரத்யும்னன் ஸ்திதியென்கிற ரக்ஷணத்தையும், ஸங்கர்ஷணன் ஸம்ஹாரத்தையும், வாஸுதேவன் மோக்ஷத்தையும் நடத்துகிறார்கள்.) ஓ ப்ராஹ்மணஶ்ரேஷ்டரே! ஸ்ருஷ்டி ஸம்ஹார பாலனங்களை நடத்துகிறானாகையால் ப்ரஹ்மருத்ராதி ஸம்ஜ்ஞையோடு கூடிய இப்பகவான் ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவிறந்தவனாகையால் ப்ரஹ்மமென்று கூறப்படுகிறான். இவனே ஸர்வகாரணன்; ஒரே காலத்தில் எல்லாவற்றையும் தானே

ஸாக்ஷாத்கரிக்குந் தன்மையன்; ஸ்வயம்ப்ரகாசன்; தன்னுடைய மஹிமையினால் அவாப்தஸமஸ்தகாமன்; என்றும் குவியாத அறிவுடையவன்; ஒருவர்க்கும் தெரியாமல் மறைந்திருப்பவன். இங்ஙனமே சாஸ்த்ரங்கள் அவனைப் பற்றிக் கூறுகின்றன. எவர்கள் அவனை உபாஸிக்கிறார்களோ, அவர்களுக்குப் பரிசுத்தமான மனத்தினால் அடையத் தகுந்தவன். [1]ஜகத்திற்கெல்லாம் ஸுகத்தைக் கொடுக்கையால் ஸ்ரீக்ருஷ்ணனென்னும் பெயர் பூண்டவனே! அர்ஜுனனுக்குத் தோழனே! வ்ருஷ்ணிகளில் சிறந்தவனே! ஜகத்திற்கு த்ரோஹஞ் செய்கின்ற பாபிஷ்டர்களான ராஜர்களின் வம்சங்களை எதிர்ப்பவனே! அபாரமான வீர்யமுடையவனே! கோவிந்தனே! கோக்கள் ப்ராஹ்மணர் தேவர் இவர்களின் வருத்தங்களைப் போக்குவதற்காக அவதரிப்பவனே! பரிசுத்தமான புகழுடையவனே! கேட்டமாத்ரத்தினால் மங்களத்தை விளைப்பவனே! உன் ப்ருத்யர்களைப் பாதுகாப்பாயாக. எவன் விடியற்காலத்தில் எழுந்திருந்து மஹாபுருஷனுடைய அங்கோபாங்காதிகளை விவரிக்கின்ற இந்த ப்ரகரணத்தை அவனிடத்தில் மனவூக்கத்துடன் ஜபிக்கிறானோ, அவன் ஹ்ருதயகுஹையில் இருக்கின்ற பரப்ரஹ்மத்தை உள்ளபடி அறிவான்.

ஸௌனகர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து மன்னவன் வினவுகையில் ஸ்ரீசுகமுனிவர் ஸூர்ய மண்டலாந்தர்வர்த்தியான பரம புருஷனை ஆராதிக்கின்ற ஏழு

1. இங்ஙனம் தத்வஸ்வரூபங்களான பகவானுடைய அங்க உபாங்கங்களை நிரூபித்து இந்த ப்ரபந்தத்தின் பொருள் முழுவதையும் தொகுத்துக் காட்ட முயன்று முதலில் தனது இஷ்ட தேவதையான ஸ்ரீக்ருஷ்ணனைப் பக்தரக்ஷணத்தின் பொருட்டு ப்ரார்த்திக்கிறார்.

வகையான ஆதித்யகணங்கள் நானாவிதமான கர்மங்களைச் செய்கின்றனவென்று அவனுக்கு மொழிந்தார். ஸூர்யாந்தராத்மாவான பரமபுருஷனை உபாஸிக்கின்ற அவ்வாதித்யகணங்களுடைய வ்யூஹத்தையும், அவற்றின் நாமங்களையும், அவர்கள் அந்தந்த மாஸங்களுக்கு அதிபதியான அந்தந்த ஸூர்யனால் நியமிக்கப் பட்டுச் செய்யுங் கார்யங்களையும் ச்ரத்தையுடன் கேட்க விரும்புகிற எங்களுக்குச் சொல்வீராக.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவான ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு இஷ்டப்படி நியமிக்கத் தகுந்ததும் அநாதியும் ஜ்ஞான விரோதியுமான ப்ரக்ருதியினால் இந்த ஸூர்யன் நிர்மிக்கப்பட்டவன். இவன் லோகயாத்ரையை நடத்திக்கொண்டு லோகங்களில் சுற்றிக் கொண்டிருக்கிறான். எவன் ஸமஸ்த லோகங்களுக்கும் ஸ்ருஷ்டிகர்த்தாவோ, எவன் தன்னைப்போன்ற வஸ்து வேறொன்றுமில்லாதவனோ, எவன் ஸர்வாந்தராத்மாவோ, அத்தகையனான பரமபுருஷனே ஸூர்யனைச் சரீரமாகக் கொண்டு காலங்களை அறிவித்து வைதிகமான கர்மங்களுக்கு மூலமாயிருக்கின்றான். இந்த ஸூர்யனொருவனையே பராசராதிரிஷிகள் பலவாறு (பன்னிருவகையனென்று) கூறுகிறார்கள். அந்தணரே! பரம புருஷனொருவனே காலம் தேசம் க்ரியை கர்த்தா கரணம் கார்யம் வேதம் த்ரவ்யம் பலன் என்ற இவ்வொன்பது விதமாகக் கூறப்படுவது போல் இந்த ஸூர்யனும் தானொருவனேயாயினும் பலவாறு கூறப்படுகின்றான். காலத்தின் கூறுகளை அறிவிக்கின்ற உருவமுடைய மஹானுபாவனான ஸூர்யன் சைத்ரம் முதலிய பன்னிரண்டு மாதங்களிலும் லோக யாத்ரையை நிர்வஹிக்கும் பொருட்டுத் தனித்தனியே பன்

ஸிரண்டு கணங்களுடன் ஸஞ்சரிக்கின்றான். (ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு கணம். ஒவ்வொரு கணத்திலும் எவ்வேழுபேர்கள். ஒவ்வொரு மாதத்திலும் ஒரு ஆதித்யன் ஒரு அப்ஸரஸ்ஸு ஒரு ராக்ஷஸன் ஒரு புஜங்கன் ஒரு யக்ஷன் ஒரு ரிஷி ஒரு கந்தர்வன் ஆகிய இவ்வெழுவரும் சேர்ந்து லோகயாத்ரையை நடத்துகிறார்கள். எந்தெந்த மாதங்களில் எவரெவர் நடத்துகிறார்களென்பதை விசதமாகச்சொல்லுகிறேன்; கேட்பீர்களாக). மதுவென்று ப்ரஸித்தமான சைத்ரமாதம் முழுவதும் தாதாவென்னும் ஆதித்யன் க்ருதஸ்தலியென்னும் அப்ஸரஸ்ஸு ஹேதியென்னும் ராக்ஷஸன் வாஸுகி யென்னும் புஜங்கன் ரதக்ருத்தென்னும் யக்ஷன் புலஸ்த்யரென்னும் ரிஷி தும்புருவென்னும் கந்தர்வன் ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோக யாத்ரையை நடத்துகிறார்கள். மாதவமென்று ப்ரஸித்தமான வைசாகமாதம் முழுவதும், அர்யமனென்னும் ஆதித்யன் புலஹரென்னும் ரிஷி ரதௌஜஸ்ஸென்னும் யக்ஷன் ப்ரஹேதி யென்னும் ராக்ஷஸன் புஞ்சிகஸ்தலி யென்னும் அப்ஸரஸ்ஸு நாரதனென்னும் கந்தர்வன் கச்சநீரனென்னும் புஜங்கன் ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோகயாத்ரையை நடத்துகிறார்கள். சுக்ரமென்னும் பெயருடைய ஜ்யேஷ்டமாதம் முழுவதும் மித்ரனென்னும் ஆதித்யன் அத்ரியென்னும் ரிஷி பௌருஷேய னென்னும் ராக்ஷஸன் தக்ஷகனென்னும் புஜங்கன் மேனகையென்னும் அப்ஸரஸ்ஸு ஹாஹாவென்னும் கந்தர்வன் ரதஸ்வனனென்னும் யக்ஷன் ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோக யாத்ரையை நடத்துகிறார்கள். சுசியென்னும் ஆஷாடமாதம் முழுவதும், வஸிஷ்டரென்

னும் ரிஷி வருணனென்னும் ஆதித்யன் ரம்பையென்னும் அப்ஸரஸ்ஸு ஸஹஜன்யனென்னும் யக்ஷன் ஹூஹூ வென்னும் கந்தர்வன் சுகனென்னும் புஜங்கன் சித்ரஸ் வனனென்னும் ராக்ஷஸன் ஆகிய இவ்வெழுவரும் தத் தம் கர்மங்களால் லோகயாத்ரையை நடத்துகிறார்கள். நபஸ்ஸென்னும் பெயருடைய ஸ்ராவணமாதம் முழுவ தும் இந்த்ரனென்னும் ஆதித்யன் விஸ்வாவஸு வென் னும் கந்தர்வன் ஸ்ரோதாவென்னும் யக்ஷன் ஏலாபுத்ர னென்னும் புஜங்கன் அங்கிரஸ்ஸென்னும் ரிஷி ப்ரம் லோசையென்னும் அப்ஸரஸ்ஸு சர்யனென்னும் ராக்ஷ ஸன் ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோக யாத்ரையை நடத்துகிறார்கள். நபஸ்யமென்னும் பெய ருடைய பாத்ரபதமாதம் முழுவதும், நபஸ்வானென்னும் ஆதித்யன் உக்ரஸேனனென்னும் கந்தர்வன் வ்யாக்ர னென்னும் ராக்ஷஸன் ஆஸாரணனென்னும் யக்ஷன் ப்ருகுவென்னும் ரிஷி அனும்லோசை யென்னும் அப்ஸ ரஸ்ஸு சங்கபால னென்னும் புஜங்கன் ஆகிய இவ் வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோகயாத்ரையை நடத்துகிறார்கள். தபஸ்ஸென்னும் பெயருடைய மாக மாதம் முழுவதும், பூஷாவென்னும் ஆதித்யன் தனஞ் சயனென்னும் புஜங்கன் வாதனென்னும் ராக்ஷஸன், ஸுஷேணனென்னும் கந்தர்வன், ஸுருசியென்னும் யக்ஷன், க்ருதாசியென்னும் அப்ஸரஸ்ஸு, கௌதமரென் னும் ரிஷி ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோக யாத்ரையை நடத்துகிறார்கள். தபஸ்யமென்னும் பெயருடைய பால்குனமாதம் முழுவதும், ருதுவர்ச்சஸ் ஸென்னும் ராக்ஷஸன், பரத்வாஜரென்னும் ரிஷி, பர் ஜன்யனென்னும், ஆதித்யன், ஸேனஜித்தென்னும் அப் ஸரஸ்ஸு, விஸ்வனென்னும் கந்தர்வன், ஐராவதனென்

னும் புஜங்கன் ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்க ளால் லோகயாத்ரையை நடத்துகிறார்கள். ஸஹஸ்ஸென் னும் பெயருடைய மார்க்கசீர்ஷ மாதம் முழுவதும், அம் சுமானென்னும ஆதித்யன், கஶ்யபரென்னும் ரிஷி, தார் க்ஷ்யனென்னும்யக்ஷன், ருதுஸேனனென்னும்கந்தர்வன், ஊர்வசியென்னும் அப்ஸரஸ்ஸு, வித்யுச்சத்ருவென்னும் ராக்ஷஸன், மஹாஶங்கனென்னும் புஜங்கன் ஆகிய இவ் வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோகயாத்ரையை நடத்துகிறார்கள். ஸஹஸ்யமென்னும் பெயருடைய பௌஷமாதம் முழுவதும், பகனென்னும் ஆதித்யன், ஸ்பூர்ஜனென்னும் ராக்ஷஸன், அரிஷ்டநேமியென்னும் கந்தர்வன், ஊர்ஜனென்னும் யக்ஷன், ஆயுஸ்ஸென் னும் ரிஷி, கர்க்கோடகனென்னும் புஜங்கன், பூர்வசித்தி யென்னும் அப்ஸரஸ்ஸு ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோகயாத்ரையை நடத்துகிறார்கள். இஷமென்னும் பெயருடைய ஆஶ்வினமாதம் முழுவதும் த்வஷ்டாவென்னும்ஆதித்யன்,ஜமதக்னியென்னும் ரிஷி, கம்பலாஶ்வனென்னும் புஜங்கன், திலோத்தமையென் னும் அப்ஸரஸ்ஸு, ப்ரஹ்மாபேதனென்னும் ராக்ஷ ஸன், ருதஜித்தென்னும் யக்ஷன், த்ருதராஷ்ட்ரனென் னும் கந்தர்வன் ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங் ளால் லோக யாத்ரையை நடத்துகிறார்கள். ஊர்ஜ மென்னும் பெயருடைய கார்த்திகமாதம் முழுவதும், விஷ்ணுவென்னும் ஆதித்யன், அஶ்வதரனென்னும் புஜ ங்கன், ரம்பையென்னும் அப்ஸரஸ்ஸு, ஸூர்யவர்ச்சஸ் ஸென்னும் கந்தர்வன், ஸத்யஜித்தென்னும் யக்ஷன், விஶ் வாமித்ரனென்னும் ரிஷி, மகாபேதனென்னும் ராக்ஷஸன் ஆகிய இவ்வெழுவரும் தத்தம் கர்மங்களால் லோக யாத் ரையை நடத்துகிறார்கள். அந்தணரே! மஹானுபாவ

னும் ஆதித்யனைச் சரீரமாகவுடையவனுமாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் விபூதிகளான இவர்கள் அனைவரும் தினந்தோறும் காலை மாலை ஆகிய இரண்டு ஸந்த்யைகளிலும் தங்களை நினைக்கும் மனிதர்களுடைய பாபத்தைப் போக்குகிறார்கள். இந்த ஆதித்யஸ்வரூபியான பகவான் பன்னிரண்டு மாதங்களிலும் இவ்வாறுவருடன் நாற்புறத்திலும் திரிந்து இந்த ப்ராணிகளுக்கு இஹத்திலும்பரத்திலும் நன்மைக்கிடமான புத்தியை விளைக்கின்றான். புலஸ்த்யாதிரிஷிகள் ஸூர்யனைச் சரீரமாகவுடைய பரமபுருஷனை வெளியிடுகின்ற ஸாமவேதங்களாலும் ருக்வேதங்களாலும் யஜுர்வேதங்களாலும் அந்த ஸூர்யனைத் துதிக்கின்றார்கள். கந்தர்வர்கள் அவனைப் பாடுகிறார்கள். அப்ஸரமடந்தையர் அவனெதிரில் ஆடுகிறார்கள். நாகர்கள் ரதத்தை உறுதியாகக் கட்டுகிறார்கள். யக்ஷர்கள் ரதத்தை ஓட்டுகிறார்கள். பலசாலிகளான ராக்ஷஸர்கள் ரதத்தைப் பின்புறத்தில் நடத்துகிறார்கள். வாலகில்யரென்று ப்ரஸித்தர்களும் பரிசுத்தர்களுமான அறுபதினாயிரம் ப்ரஹ்மரிஷிகள் எதிரில் சூழ்ந்து நின்று அவனுடன் போகின்றார்கள். மற்றும் விபுவான ஸூர்யனை அவர்கள் ஸ்தோத்ரங்களால் புகழ்கின்றார்கள். ஆதியந்த மற்றவனும் ஜன்ம ஜரா மரணாதி விகாரங்கள் தீண்டப் பெறாதவனும் தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந்தன்மையனும் ஸர்வநியாமகனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய பரம புருஷன் கல்பந்தோறும் ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாகவுடைய தன்னை இங்ஙனம் பன்னிரண்டு வ்யூஹங்களாகப் பிரித்து லோகங்களைத் தத்தம் கர்மங்களில் தூண்டிப் பாதுகாக்கின்றான். பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

## இப்புராணத்தில் சொன்ன விஷயங்களின் சுருக்கமும், பாகவத மஹிமையும் முதலியவை.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—அவரவர் விரும்பும் புருஷார்த்தங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பவனுகையால் பரமதர்மஸ்வரூபனும் அளவிறந்த மஹிமையுடையவனுமாகிய பரமபுருஷனுக்கு நமஸ்காரம். தர்மமர்யாதைகளை உபதேசாதிகளால் நிலைநிறுத்தி நடத்துபவரும் மஹானுபாவருமான பாதராயணமுனிவருக்கு நமஸ்காரம். நன்மைக்கு ஹேதுவான பெருமையுடைய பகவத்பக்திரூபமான தர்மத்திற்கு நமஸ்காரம். தர்மோபதேசஞ் செய்பவனான நான்முகனுக்கு நமஸ்காரம், நாரதர் ஸ்ரீசுகர் முதலிய அந்தணர்களுக்கு நமஸ்காரஞ் செய்து பூர்வர்களின் உபதேசபரம்பரையால் இடைவீடின்றி நடைபெற்றுவந்தவைகளும் கீழ் இந்த ப்ரபந்தத்தில் நிரூபிக்கப் பட்டவைகளுமான பாகவத தர்மங்களைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; கேட்பீர்களாக. அந்தணர்களே! நீங்கள் எதைப்பற்றி என்னை வினவினீர்களோ, எது மனுஷ்ய ஜன்மம் பெற்ற ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் கேட்பது முதலியவைகளால் ஆதரிக்கத் தக்கதோ, அத்தகையதும் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் சரித்ரங்களை எடுத்துரைப்பதும் மிகவும் அற்புதமுமான இந்தப் புராணத்தை உங்களுக்குச் சொன்னேன். இப்புராணத்தில் பாபங்களையெல்லாம் போக்குபவனும் தன்னைப் பற்றினருடைய ஸம்ஸாரபந்தத்தை அறுப்பவனும் இந்த்ரியங்களுக்கு நியாமகனும் ஷாட்குண்யபூர்ணனும் பக்தர்களுடைய அனிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களை நிறைவேற்றுபவனுமாகிய ஸ்ரீமந்நாராயணன் நேரே நிரூபிக்கப் படுகிறான். வேதாந்தங்களில் மறைத்துக் கூறப்படுபவனும்

ஜகத்தில் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்குக் காரணனும் பர ப்ரஹ்மமென்று பெயர் பெற்றவனுமாகிய பரம புருஷனை இப்புராணம் நன்றாக நேரே நிரூபித்துச் சொல்லுகின் றது. இதில் (முதல் ஸ்கந்தத்தில்) ஸாதுக்களாகிய நீங் கள் என்னை இப்புராணத்தைப் பற்றி வினவின உபாக் யானமும், ப்ரக்ருதி புருஷர்களைப் பிரித்தறிகையாகிற ஜ்ஞானமும், பரமாத்மனுடைய ஸ்வரூப ரூப குண விபூதி களை உள்ளபடி அறிகையாகிற விஜ்ஞானமும் கூறப்பட் டன. பிறகு பக்தியோகமும், அதற்கு அங்கமான வைரா க்யமும், பரீக்ஷித்தின் பிறவி முதலிய உபாக்யானமும், நாரத மஹர்ஷியின் வ்ருத்தாந்தமும், ராஜர்ஷியாகிய பரீ க்ஷித்து ப்ராஹ்மண சாபத்தினால் ப்ராயோபவேசஞ் செ ய்ததும், (இரண்டாவது ஸ்கந்தத்தில்)ப்ராஹ்மணஶ்ரே ஷ்டரான சுகமுனிவருக்குப் பரீக்ஷித்துமன்னவனோடு நடந்த ஸம்வாதமும், பரீக்ஷித்துமன்னவன் யோகதார ணையால் சரீரத்தினின்றுகிளம்பி அர்ச்சிராதிமார்க்கத் தினால் பரமபதத்திற்குப் போதலும், ப்ராஹ்ம தேவனுக் கும் நாரதமஹர்ஷிக்கும் நடந்த ஸம்வாதமும், (அந்த ப்ர ஹ்மநாரதஸம்வாத கட்டத்தில்)பகவானுடைய அவதா ரங்களும், அவதாரசரித்ரங்களும், வ்யஷ்டிஸ்ருஷ்டிக்கு முன்பு நடந்த ப்ராக்ருதமான மஹதாதிதத்வஸ்ருஷ்டி யும், (மூன்றாவது ஸ்கந்தத்தில்) விதுரருக்கும் உத்தவ ருக்கும் நடந்த ஸம்வாதமும், விதுரருக்கும் மைத்ரேய ருக்கும் நடந்தஸம்வாதமும், ஸ்ரீபாகவத புராணப்ரஶ்ன மும், ப்ரள்யத்தில் மஹாபுருஷனான பகவானொருவன் மாத்ரமே மிகுந்திருத்தலும், பிறகு ப்ரக்ருதியின்குணங்க ளான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்கள் ஸாம்யாவஸ்தையைத் துறந்து வைஷம்யத்தை அடைகையாகிற ப்ராக்ருதிக ஸ்ருஷ்டியும், ப்ரக்ருதியின் விகாரங்களாகிய மஹத்து

அஹங்காரம பஞ்சபூதங்கள ஆகிய இவ்வேழுதத்வங்களின் ஸ்ருஷ்டியும், ப்ராக்ருதி விகாரங்களான மஹத்து முதலிய அவ்வேழுதத்வங்களினின்று ப்ரமாண்டம் உண்டாதலும், அதில் ப்ரஹ்மதேவன் பிறத்தலும், பரமாணு முதல் ஸம்வத்ஸரம் வரையிலுள்ள ஸூக்ஷ்ம ஸ்தூல ரூபங்களோடிருக்கின்ற காலத்தின் கதியும், ஸமஸ்த ப்ராணிகளுடைய உத்பத்தியும் (வ்யஷ்டிஸ்ருஷ்டியும்), மஹாஸமுத்ரத்தினின்று பூமியை உத்தரித்தலும், அப்பொழுது பகவான ஹிரண்யாக்ஷனை வதித்ததும், ஊர்த்வலோகம் திர்யக்லோகம் அதோலோகம் இவைகளின் ஸ்ருஷ்டியும், ருத்ரஸ்ருஷ்டியும், ப்ரஹ்மதேவனுடைய சரீரம் பாதி பெண்ணும் பாதி ஆணுமாய் மாறுதலும், அவற்றில் ஆண்பாதி ஸ்வாயம்புவமனுவும் பெண்பாதி ஸ்த்ரீகளில் சிறந்த முதலுருவமான சதரூபையென்னும் பெயர்பூண்ட அம்மனுவின் பத்னியுமாதலும், கர்த்தம ப்ராஜாபதியின் தர்மபத்னியான தேவஹூதியின் ஸந்தானமும், அவளிடத்தில் கபிலரென்னும் பெயர்பூண்ட மஹானுபாவனுன பகவானுடைய அவதாரமும், தேவஹூதிக்குச் சிறந்த மதியுடைய கபிலரோடு நடந்த ஸம்வாதமும் கூறப்பட்டன; (நான்காவது ஸ்கந்தத்தில்) நவப்ரஜாபதிகளின் உத்பத்தியும், ருத்ரன் தக்ஷப்ரஜாபதியின் யஜ்ஞத்தைப் பாழ்செய்த வ்ருத்தாந்தமும், த்ருவனுடைய சரித்ரமும், ப்ருதுவின் சரித்ரமும், ப்ராசீனபர்ஹியின் சரித்ரமும், நாரதருடைய ஸம்வாதமும் கூறப்பட்டன. (ஐந்தாவது ஸ்கந்தத்தில்) அந்தணர்களே! ப்ரியவ்ரதோபாக்யானமும், நாபி ருஷபன் பரதன் இவர்களுடைய சரித்ரங்களும், த்வீபங்கள் ஸமுத்ரங்கள் இவை முதலியவற்றின் வர்ணனமும், பாரதாதி வர்ஷங்கள் நதிகள் இவற்றின்

வர்ணனமும், ஜ்யோதிச்சக்ரத்தின் நிலைமையும், பாதாளநரகங்களின் ஸந்நிவேசமும் கூறப்பட்டன. (ஆறுவது ஸ்கந்தத்தில்) ப்ரசேதஸ்ஸுக்களிடத்தினின்று தக்ஷர் பிறந்ததும், அவருடைய பெண்களின் வரலாறும், அவர்களிடத்தினின்று தேவதைகள் அஸுரர்கள் மனுஷ்யர்கள் திர்யக்குகள் நாகர்கள் பக்ஷிகள் முதலியவற்றின் பிறவியும், வ்ருத்ராஸுரனுடைய ஜன்மமரண வ்ருத்தாந்தங்களும் நிரூபிக்கப்பட்டன. அந்தணர்களே! (ஏழாவது ஸ்கந்தத்தில்) திதியின் பிள்ளைகளான ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபுக்களின் ஜனன மரண வ்ருத்தாந்தங்களும், தைத்யர்களில் சிறந்தவனும் மஹானுபாவனுமாகிய ப்ரஹ்லாதனுடைய சரித்ரமும் கூறப்பட்டன. (எட்டாவது ஸ்கந்தத்தில்) மன்வந்தரங்களின் சரித்ரங்களும், கஜேந்த்ரமோக்ஷமும், அந்தமன்வந்தரங்களில் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஹயக்ரீவாதி அவதாரங்களும், ஜகத்ரக்ஷகனை அப்பகவானுடைய கூர்மாவதாரமும், மத்ஸ்யாவதாரமும், நரஸிம்ஹாவதாரமும், வாமனாவதாரமும், தேவதைகளுக்கு அம்ருதங்கொடுப்பதற்காகப் பகவான் க்ஷீரஸமுத்ரத்தைக் கடைந்ததும், தேவாஸுரர்களின் மஹாயுத்தமும் கூறப்பட்டன. (ஒன்பதாவது ஸ்கந்தத்தில்) ராஜவம்சங்களின் வரலாறும், இக்ஷ்வாகுவின் ஜன்மமும், அவனுடைய வம்சத்தில் மஹானுபாவனான ஸுத்யும்னனுடைய ஜன்மமும், இலோபாக்யானமும், தாரோபாக்யானமும், ஸூர்யவம்சத்தின் வரலாறும், அவ்வம்சத்தில் பிறந்த சசாதன் முதலிய மன்னவர்களின் சரித்ரமும், ஸுகந்யாவ்ருத்தாந்தமும், சர்யாதியின் சரித்ரமும், மிகுந்த மதியுடைய ககுத்ஸ்தனுடைய சரித்ரமும், கட்வாங்கன் மாந்தாதா ஸௌபரி ஸகரன் இவர்களுடைய

சரித்ரங்களும், கோஸலேந்த்ரனான ஸ்ரீராமனுடைய புண்யசரித்ரமும், நிமி அங்கங்களைத் துறந்ததும், ஜனகவம்சத்தரசர்களின் உத்பத்தியும், பார்க்கவ ஸ்ரேஷ்டனான பரசுராமன் பூமியில் க்ஷத்ரியர்களை இல்லாதபடி செய்ததும், ஸோமவம்சத்தில் பிறந்த ஐலன் யயாதி நஹுஷன் துஷ்யந்தனுடைய பிள்ளையாகிய பரதன் சந்தனு அவனுடைய பிள்ளை ஆகிய இவர்களின் வ்ருத்தாந்தமும், யயாதியின் ஜ்யேஷ்ட புத்ரனான யதுவின் வம்சமும், அவனுடைய வம்சத்தில் வஸுதேவனுடைய பார்யையாகிய தேவகியிடத்தில் ஜகதீஸ்வரனான பரமபுருஷன் ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்ததும், அவன் கோகுலத்தில் வளர்ந்ததும் கூறப்பட்டன. (பத்தாவது ஸ்கந்தத்தில்) அஸுரர்களுக்கு த்வேஷியான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய அற்புத சரித்ரங்களும், அவன் குழந்தையாயிருக்கும்பொழுது பூதனையின் ஸ்தன்யத்தை ப்ராணன்களோடு பருகினதும், சகடாஸுரனை முறித்ததும், த்ருணாவர்த்தனை முடித்ததும், பகாஸுரன் வத்ஸாஸுரன் இவர்களைக் கொன்றதும், அகாஸுரனுடைய ப்ராணன்களை ஸம்ஹரித்ததும், ப்ரஹ்மதேவனுக்குத் தன் மாயையைக் காட்டினதும், பரிவாரத்தோடு கூடின தேனுகாஸுரனையும் ப்ரலம்பாஸுரனையும் அழித்ததும், சூழ்ந்து வருகின்ற காட்டுத்தீயினின்று கோபர்களைக் காத்ததும், காலியமஹாஸர்ப்பத்தின் கொழுப்பை அடக்கினதும், நந்தகோபனை வருணனிடத்தினின்று விடுவித்ததும், கோபகன்னிகைகள் நோன்பு நோற்றதும், அதற்கு ஸ்ரீக்ருஷ்ணன் அருள்புரிந்ததும், ப்ராஹ்மண பத்னிகளை அனுக்ரஹித்ததும், ப்ராஹ்மணர்கள் தங்கள் பத்னிகளுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் உண்டான பக்தியையும் தங்களுக்கு அது உண்டாகா

மையையும் கண்டு அனுதபித்ததும், இந்த்ரனைப் பரிப
விக்கும்பொருட்டுக் கோவர்த்தனகிரியை எடுத்து மழை
தடுத்ததும், இந்த்ரனும் காமதேனுவும் ஸ்ரீக்ருஷ்
ணனைப் பூஜித்தலும், கோவிந்தபட்டாபிஷேகமும்,
ஸ்ரீக்ருஷ்ணன் இரவுகளில் கோபஸ்த்ரீகளோடு ராஸக்
ரீடை செய்ததும், துர்ப்புத்தியான சங்கசூடன் அரிஷ்
டன் கேசி இவ்வஸுரர்களைக் கொன்றதும், ஸ்ரீராம
க்ருஷ்ணர்களை அழைத்துக் கொண்டுபோவதற்காக
அக்ரூரன் வருதலும், பிறகு ஸ்ரீராமக்ருஷ்ணர்கள் கோ
குலத்தினின்று மதுரைக்கு ப்ரயாணமாய்ப்போதலும்,
கோபஸ்த்ரீகள் ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரியமுடியாமல் புலம்
புதலும், ஸ்ரீராமக்ருஷ்ணர்கள் மதுரையைக் காணுத
லும், குவலயாபீடமென்னும் யானை முஷ்டிகன் சாணூ
ரன் கம்ஸன் முதலியவர்களை வதித்தலும், ஆசார்ய
னை ஸாந்தீபினி நெடுநாளைக்கு முன் மரணம் அடை
ந்த என் புத்ரனைத் திருப்பிக்கொண்டு வரவேண்டுமெ
ன்று கேட்க அப்படியே மீட்டுக்கொண்டு வருதலும்,
அந்தணர்களே! உத்தவரோடும் பலராமனோடும் ஸ்ரீக்
ருஷ்ணன் மதுரையில் வஸித்துக்கொண்டிருக்கையில்
யாதவர் கூட்டத்திற்கு வேண்டிய ப்ரியத்தைச் செய்த
தும், ஜராஸந்தன் பல தடவைகளில் கொண்டுவந்த ஸை
ன்யங்களை யெல்லாம் அழித்தலும், காலயவனனைக்
கொன்றதும், குசஸ்தலியை ஏற்படுத்தினதும், ஸ்வர்க்
கத்தினின்று ஸுதர்மையென்னும் தேவேந்த்ரனுடைய
ஸபையையும் பாரிஜாத வ்ருக்ஷத்தையும் கொண்டு வந்
ததும், சத்ருக்களை வென்று ருக்மிணியைப் பலாத்கார
மாகக் கொண்டு வந்ததும், ருத்ரன் பாணாஸுரனுக்கு
உதவி செய்ய வந்து ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பரிபவப்பட்
டதும், பாணாஸுரனுடைய புஜங்களைத் துண்டித்த

தும்,ப்ராக்ஜ்யோதிஷ புரத்திற்கு நாதனாகிய நரகாஸுரனைக் கொன்று கன்னிகைகளைக் கொண்டுபோனதும், சிசுபாலன் பௌண்ட்ரகன் ஸால்வன் துர்ப்புத்தியாகிய தந்தவக்த்ரன் சம்பரன் த்விவிதன் பீடன் முரன் பஞ்சஜனன் முதலியவர்களின் மாஹாத்மியமும், அவர்களை வதித்தலும், காசிபட்டணத்தைக் கொளுத்தினதும், பாண்டவர்களை நிமித்தமாகக் கொண்டு பூமியின் பாரத்தைப் போக்கினதும் நிரூபிக்கப்பட்டன. (பதினொருவது ஸ்கந்தத்தில்)ப்ராஹ்மணசாபமென்னும் வியாஜத்தினால் தன் வம்சத்தை ஸம்ஹரித்ததும், உத்தவனுக்கும் வாஸுதேவனுக்கும் நடந்த அற்புதமான ஸம்வாதமும், அதில் ஆத்மவித்யையை முழுவதும், நிரூபித்தலும்,வர்ணாஸ்ரமதர்மநிர்ணயமும், பிறகு ஸ்ரீக்ருஷ்ணன் தனது யோகப்ரபாவத்தினால் மனுஷ்யலோகத்தை விட்டுப்போதலும் கூறப்பட்டன. (பன்னிரண்டாவது ஸ்கந்தத்தில்) யுகலக்ஷணங்களும் அவற்றின் நடத்தைகளும், மனுஷ்யர்களுக்குக் கலிதோஷங்களால் நேரிடும் உபத்ரவமும், ப்ராக்ருதிகம் நைமித்திகம் ஆத்யந்திகம் நித்யம் என்று நான்குவிதமான ப்ரளயங்களும், ப்ராக்ருதிகமென்றும் நித்யமென்றும் நைமித்திகமென்றும் மூன்று விதமான உத்பத்தியும், மிகுந்த மதியுடையவனும் ராஜர்ஷியுமாகிய பரீக்ஷித்து தேஹத்யாகஞ் செய்ததும், வேதத்தின் சாகாவிபாகங்களும், மார்க்கண்டேய மஹர்ஷியின் புண்யசரித்ரமும், மஹாபுருஷனுடைய அங்கோபாங்கவிந்யாஸமும், ஜகதாத்மகனான ஸூர்யனுடைய கணவிபாகமும் கூறப்பட்டன. ப்ராஹ்மண ஸ்ரேஷ்டர்களே! நீங்கள் என்னை ஏதேது வினவினீர்களோ, அவையெல்லாம் நிரூபிக்கப்பட்டன. இப்புராணத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் லீலாரூபமான அவதாரவ்ருத்தாந்தங்க

ளெல்லாம் கூறப்பட்டன. பதிதனாவது ஸ்கலிதனாவது ஆர்த்தனாவது பரவசனாவது 'ஸ்ரீஹரிக்கு நமஸ்காரம்' என்று சொல்லினும், பிறர் சொல்லக் கேட்கினும் ஸம ஸ்தபாபங்களினின்று விடுபடுவான். (புணரத்தகாத மாதர்களைப் புணர்தல், போகத்தகாத இடங்களுக்குப் போதல், அணுகத்தகாதவர்களை அணுகுதல் பக்ஷிக்கத்தாகாதவைகளைப் பக்ஷித்தல், மத்யபானஞ் செய்தல் முதலியவற்றால் தன்னுடைய வர்ணாச்ரமங்களினின்று நழுவினவன் பதிதனாவான். மேடு கல் முதலிய இடங்களில் கால் தடுக்கல் பெற்றவன் ஸ்கலிதன். மன வருத்தமுற்றவன் ஆர்த்தன். பிறருக்கு வசப்பட்டவன் பரவசன். அதாவது ஒருவன் தனக்கு இஷ்டமில்லாமற் போயினும் பிறனுடைய நிர்ப்பந்தத்தினால் 'ஸ்ரீஹரிக்கு நமஸ்காரமென்று சொல்லுவானாயின் பாபங்களினின்று விடுபடுவான்.) தன்னைப் பற்றினாருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனான பரமபுருஷனுடைய மஹிமையைச் சொல்லினும் பிறர் சொல்லக் கேட்கினும், அவன் அவர்களுடைய நெஞ்சில் புகுந்து, ஸூர்யன் இருட்டைப் போக்குவதுபோலவும், பெருங்காற்று மேகத்தைப் பறக்கடிப்பதுபோலவும், அவர்களுடைய துக்கத்தையெல்லாம் போக்குகிறான். இந்த்ரியங்களால் விளையும் அறிவுக்கு விஷயமாகாத மஹானுபாவனான பரமபுருஷனுடைய ஸ்வரூப குண விபூதிகளில் ஏதேனு மொன்றைத் தழுவாத சொற்களெல்லாம் பொய்ச் சொற்களேயல்லாமல், தோஷங்களுக்கு மிடமாயிருக்கும். பகவானுடைய குணங்களை உட்கொள்ளாத கதைகளெல்லாம் பாபிஷ்டகதைகளே. எதில் பகவத் குணங்களின் ஸம்பந்தம் உள்ளதோ, அந்தப் பேச்சே ஸத்யமானது. அதுவே மங்களங்களையெல்லாம் விளைப்

பது. அதுவே புண்யங்களை விளைப்பதும். எதில் உத்தம ஶ்லோகனான பகவானுடைய புகழ் பாடப்படுகிறதோ, அதுவே அழகியதாம். அதுவே புதிது புதிதாகக் கேட்பவர்களுக்கு ருசியை விளைக்கும். அதுவே அடிக்கடி மனத்திற்கு மஹாநந்தத்தை விளைக்கும். அதுவே மனுஷ்யர்களின் சோகஸாகரத்தை உலர்த்தவல்லது. எந்த வாக்கு அழகிய பதங்கள் அமைந்திருப்பினும், ஜகத்தையெல்லாம் பரிசுத்தஞ் செய்யவல்லதான பகவானுடைய புகழை எவ்விதத்திலும் எடுத்துரைக்கமாட்டாதோ, அந்த வாக்கு காக்கைகள்போன்ற காமுகர்களுக்கு மனக்களிப்பை விளைப்பதாமேயன்றி ஹம்ஸங்கள் போல் பரிசுத்தர்களான ஞானிகளுக்கு அணுகத் தக்கதன்று. தன்னைப்பற்றினவர்களை நழுவவிடாமல் பாதுகாக்குந் தன்மையனான பரமபுருஷனை எந்த ப்ரபந்தம் எடுத்துரைக்குமோ, அந்த ப்ரபந்தத்தில்தான் பரிசுத்தமான மனமுடைய பெரியோர்கள் மனக்களிப்புறுவார்கள் எதில் ஶ்லோகங்கள்தோறும் அபத்தங்கள் இருப்பினும் அளவற்ற கல்யாணகுணங்கள் அமைந்த பரமபுருஷனுடைய புகழை வெளியிடுபவைகளான திருநாமங்கள் திகழ்கின்றனவோ, அந்த ப்ரபந்தம் ஸகல ஜனங்களுடைய பாபத்தையும் போக்கவல்லதாம். பெரியோர்களும் அந்த ப்ரபந்தத்தையே கேட்பார்கள்; கேட்கிறவர்களுக்குத் தாங்களும் சொல்லுவார்கள். சொல்பவரும் கேட்பவரும் இல்லாதபக்ஷத்தில் தாமே தமக்குள் அந்த ப்ரபந்தத்தைப் பாடியனுபவிப்பார்கள். கர்மபந்தத்தையெல்லாம் போக்குவதும் ப்ரக்ருதிஸம்பந்தத்தை அடியோடழிப்பதும் பரிசுத்தமுமான ஜ்ஞானயோகமும் தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந்தன்மையனான பரமபுருஷனுடைய குணங்க

ளைக் கேட்பது முதலிய அபிஸந்திகளற்றிருக்குமாயின், அது நிலைப்படாமல் நழுவிப்போமாகையால் நன்கு விளங்காது. இப்படியிருக்கையில், எல்லாவற்றிலும் சிறந்த கர்மமாயினும், பரமபுருஷனிடத்தில் அர்ப்பணஞ் செய்யப் பெறாதாயின், ஸர்வகாலமும் கெடுதிகள் நேரக்கூடுமாகையால் துக்கத்தை விளைப்பதாகி எங்ஙனம் விளங்கும்? புகழையும் ஸம்பத்தையும் பெற விரும்பி வர்ணாஶ்ரம தர்மங்களை அனுஷ்டித்தல் தவம்புரிதல் வேதங்களை ஓதுதல் முதலியவற்றில் ஊக்கமுற்றிருத்தல், பெரிய பரிஶ்ரமமேயாம். புகழும் ஸம்பத்தும் நஶ்வரங்களாகையால் சிறந்த புருஷார்த்தங்களாகமாட்டா. ஆனால் அதற்கு எது பலனென்றால், சொல்லுகிறேன். வர்ணாஶ்ரமதர்மாதிகளின் அனுஷ்டானம், பகவானுடைய குணங்களைக் கீர்த்தனஞ் செய்வது கேட்பது முதலியவற்றை விளைத்து ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனான அப்பகவானுடைய பாதாரவிந்தங்களில் நினைவு மாறாதிருக்கச் செய்யுமாயின், அதுவே அதற்குச் சிறந்த பலனாம். பகவானுடைய பாதாரவிந்தங்களின் நினைவு மாறாதிருக்குமாயின், அது துக்கங்களுக்கு ஹேதுவான பாபங்களையெல்லாம் போக்கும்; ராகத்வேஷாதிகளால் கலக்கமுறாமையாகிற சாந்தியை விளைக்கும்; ரஜஸ்தமஸ்ஸுக்களால் தீண்டப்பெறாத சுத்தஸத்வத்தை வளர்க்கும், பரமாத்மனிடத்தில் மேலான பக்தியை உண்டாக்கும்; பரமாத்மனுடைய ஸ்வரூபத்தையும் அவனுடைய ப்ரகாரங்களையும் உள்ளபடி அறிவித்து வைராக்யத்தையும் கொடுக்கும். ப்ராஹ்மணஶ்ரேஷ்டர்களே! நீங்கள் மிகுந்த பாக்யமுடையவர்கள். ஏனென்றால், நீங்கள் பாஹ்யவிஷயங்களின் சிந்தையைத் துறந்து, ஸர்வாந்தராத்மாவும் தன் தேஜஸ்ஸி

ஞல் நிகழ்பவனும் தனக்கு மேற்பட்ட மற்றொரு தேவதையில்லாதவனும் ஸர்வசியாமகனுமாகிய ஸ்ரீமந்நாராயணனை அவனுடைய குணஸ்ரவணம் முதலிய உபாயங்களால் ஹ்ருதயத்தில் நிலைநிறுத்திக்கொண்டு அவனையே பணிகின்றீர்களல்லவா? பரீக்ஷித்து மன்னவன் ப்ராயோபவேசஞ் செய்யும்பொழுது மஹானுபாவர்களான பல மஹர்ஷிகள் ஸபைகூடி அவர்கள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கையில் ஸ்ரீசுக மஹர்ஷியின் முகத்தினின்று ஆத்மதத்வத்தை வெளியிடுகிற இந்தப் புராணத்தைக் கேட்டேன். நீங்கள் இப்பொழுது அதை எனக்கு நினைவூட்டினீர்கள். நீங்கள் எனக்கு மஹோபகாரஞ் செய்தீர்கள். ஆத்மதத்வத்தை வெளியிடுகிற இந்தப் புராணத்தை அனுஸந்திக்கையால் நானும் க்ருதார்த்தனானேன். பகவானுடைய செயல்கள் அளவற்றவை. அவையெல்லாம் ப்ரீதியுடன் கீர்த்தனஞ் செய்யத் தகுந்தவை. இத்தகையனும் எங்கும் நிறைந்திருப்பவனாகையால் விஷ்ணுவென்றும் வாஸுதேவனென்றும் பெயர்பெற்றவனுமாகிய பகவானுடைய மஹிமையை வெளியிடுவதாகிய இப்புராணம், கேட்பவர் சொல்லுபவர் ஆகிய இருவர்களுடைய ஸமஸ்த அசுபங்களையும் போக்கவல்லது. இத்தகையதான இப்புராணத்தை உங்களுக்குச் சொன்னேன். இந்தப் புராணத்தை எவன் தினந்தோறும் ஒரு யாமகாலமாவது அல்லது ஒருக்ஷணகாலமாவது பிறரைக் கேட்பிக்கிறானோ, எவன் ஸ்ரத்தையுடன் கேட்கிறானோ, அவ்விருவரும் தம்மைப் புனிதஞ் செய்வார்கள். இவ்விஷயத்தில் ஸந்தேஹமே இல்லை. த்வாதசியின்னன்றும் ஏகாதசியினன்றும் இப்புராணத்தைக் கேட்பானாயின், அவன் வாழ்நாள் வளரப்பெறுவான். பாதகியாயினும் வேறொரு ப்ரயோஜனத்தையும்

விரும்பாமல் மனவூக்கத்துடன் இப்புராணத்தைப் படிப்பானாயின், அவன் அந்தப் பாதகத்தினின்று விடுபட்டுப் பரிசுத்தனாவான். புஷ்கரத்திலும் மதுரையிலும் த்வாரகையிலும் உபவாஸமிருந்து மனவூக்கத்துடன் இப்புராணத்தைப் படிப்பானாயின், பயத்தினின்று விடுபடுவான். இந்தப் புராணத்தில் தேவதைகளும் முனிவர்களும் ஸித்தர்களும் ரிஷிகளும் பித்ருக்களும் மன்னவர்களும் நிரூபிக்கப்படுகிறார்களாகையால் அவர்கள் இதைச் சொல்லுகிறவனுக்கும் கேட்கிறவனுக்கும் விருப்பங்களை யெல்லாம் கொடுக்கிறார்கள். ப்ராஹ்மணன் ருக்கு யஜுஸ்ஸு, ஸாமம் ஆகிய மூன்று வேதங்களையும் ஓதுவதனால் எந்தப் பலனை அடைவானோ, தேனாறுகளும் பாலாறுகளும் நெய்யாறுகளும் அமைந்த அன்னதானத்தினால் எந்தப் பலனை அடைவானோ, அந்தப் பலன்களையெல்லாம் இந்தப்புராணத்தைப்படிக்கிறவனும் கேட்கிறவனும் அடைவான். ப்ராஹ்மணன் மனவூக்கத்துடன் இந்தப் புராண ஸம்ஹிதையை ஓதுவானாயின், ஷாட்குண்யபூர்ணனாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடையதென்று யாதொரு ஸ்தானம் கூறப்பட்டிருக்கின்றதோ, அத்தகைய பரம பதத்தைப் பெறுவான். இந்தப் புராணத்தை ப்ராஹ்மணன் ஓதுவானாயின் சிறந்த அறிவையும், க்ஷத்ரியன் ஓதுவானாயின் ஸமுத்ரங்களால் சூழப்பட்ட பூமண்டலத்தையும், வைஸ்யன் ஓதுவானாயின் ஸம்ருத்திகளெல்லாம் அமைந்த பெரிய ப்ரபுத்வத்தையும் பெறுவார்கள். சூத்ரன் கேட்பானாயின் பாதகத்தினின்று விடுபடுவான். மற்ற ப்ரபந்தங்களில் கலிகாலத்தினால் விளையும் பாபங்களின் ஸமூஹங்களைப் போக்குந்தன்மையனும் ஸர்வேஸ்வரனுமாகிய ஸ்ரீஹரி அடிக்கடி நிரூபிக்கப்படுகிறதில்லை. இந்த ப்ரபந்தத்திலோவென்றால், சேதன

சேதன ரூபமான ஸமஸ்த ப்ரபஞ்சத்தையும் சரீரமாக வுடையவனும் ஷாட்குண்யபரிபூர்ணனுமாகிய அந்த ஸ்ரீ ஹரி தன்னுடைய கதாப்ரஸங்கங்களால் அடிக்கடி நிரூபிக்கப்படுகிறான். (ஆகையால் இந்த ப்ரபந்தத்திற்குச் சொல்லுகிற வைபவங்களெல்லாம் உண்மையே யென்றுணர்க). இங்ஙனம் இந்தப் புராணத்தினால் நன்கு நிரூபிக்கப்பட்ட ஸ்வரூப ரூப குண விபூதிகளை யுடையவனும் கர்மத்தினால் விளையும் பிறவி முதலிய விகாரங்களற்றவனும் தேசகால வஸ்து பரிச்சேதங்கள் தீண்டப்பெறாதவனும் ப்ரஹ்மதேவன் இந்த்ரன் ருத்ரன் முதலிய தேவதைகளாலும் கரைகாண முடியாத ஸ்தோத்ரங்களுடையவனும் பரமாத்ம தத்வமுமாகிய அத்தகைய அச்சுதனை நான் வணங்குகிறேன். ஸம்ருத்திகள் அமைந்த காலம் ப்ரக்ருதி மஹத்து அஹங்காரம் பஞ்ச பூதங்கள் ஆகிய இவ்வொன்பது சக்திகளால் தன்னிடத்தில் படைக்கப்பட்ட ஜங்கம ஸ்தாவர ரூபமான ப்ரபஞ்சத்தையே ஆதாரமாகவுடையவனும் அஜ்ஞானத்தின் ப்ரஸங்கமே யின்றிய கேவலஜ்ஞானாத்மக தேஜஸ் ஸ்வரூபனும் ஷாட்குண்ய பூர்ணனும் தேவஸ்ரேஷ்டனும் அநாதியுமாகிய பரமபுருஷனுக்கு நமஸ்காரம். ப்ரஹ்மதேவனும் வருணன் இந்த்ரன் ருத்ரன் இவர்களும் மருத்துக்களும் அங்கங்கள் பதம் க்ரமம் உபநிஷத்துக்கள் இவைகளோடு கூடிய வேதங்களாலும் அவற்றை அனுஸரித்த திவ்யமான ஸ்தோத்ரங்களாலும் எவனைத் துதிக்கின்றார்களோ, ஸாமவேதங்களை ஓதுகிறவர்கள் எவனைப் பாடுகிறார்களோ, யோகிகள் த்யானத்தினால் சஞ்சலமற்று அந்த த்யேயவஸ்துவில் நிலைநின்றிருக்கிற மனத்தினால் எவனை ப்ரத்யக்ஷஞ் செய்கிறார்களோ, தேவகணங்களும் அஸுரகணங்களும் எவனுடைய மஹிமையின் எல்

லையை அறியவில்லையோ; அத்தகைய தேவனுக்கு நமஸ்காரம். முதுகில் சுழல்கின்ற பெரிய மந்தர பர்வ தத்தின் சிலைகளுடைய நுனிகள் உறைவதனால் தினவு சொரியப்பெற்று நித்ராஸுகத்தை அனுபவிக்கின்ற கூர்ம ரூபியான பகவான் மூச்சுவிடுகையில், அம்மூச்சுக் காற்றுக்கள் பேரலைகள் எழும்படி ஸமுத்ர ஜலத்தை அசைத்துக் கொண்டிருந்தன; அந்த ஸம்ஸ்காரம் இப் பொழுதும் சிறிது தொடர்ந்து வருவதுபற்றி ஸமுத்ர ஜலம் இப்பொழுதும் மேலுக்குப் போவதும் திரும்பி உள்ளே வருவதுமாகிச் சோம்பலின்றி ஓயாமல் அலைந் துகொண்டே யிருக்கின்றது. இதுவே உண்மை. ஜல ப்ரவாஹம் காற்றினால் பேரலைகள் எழுப்பப்பெற்று மேலெழும்புவதும் அடங்குவதுமாயிருப்பது பொய்யே. அத்தகைய கூர்மரூபியான பகவானுடைய மூச்சுக்காற் றுக்குள் உங்களைப் பாதுகாக்குமாக. புராணங்களின் க்ரந்த ஸங்க்யைகளையும் இப்புராணத்தின் விஷயத்தை யும் ப்ரயோஜனத்தையும் இப்புராணஸ்ரீகோசத்தின் தான மாஹாத்மியத்தையும் இதைப் படித்தல் முதலிய வற்றின்மஹிமையையும் தெரிந்து கொள்வீர்களாக.ப்ரா ஹ்மம் பதினாயிரம் க்ரந்தங்கள் அடங்கியது. பாத்மம் ஐந்து குறைய அறுபதினாயிரம் க்ரதங்கள் அடங்கியது. ஸ்ரீவிஷ்ணு புராணம் இருபத்து மூவாயிரம் க்ரந்தங்க ளடங்கியது. சைவம் இருபத்து நாலாயிரம் க்ரந்தங்க ளடங்கியது. ஸ்ரீபாகவதம் பதினெண்ணாயிரம் க்ரந் தங்களடங்கியது. நாரதபுராணம் இருபத்தையாயி ரம் க்ரந்தங்களடங்கியது. மார்க்கண்டேய புராணம் ஒன்பதினாயிரம் க்ரந்தங்களடங்கியது. ஆக்னேய புரா ணம் பதினையாயிரத்து நானூறு க்ரந்தங்களடங்கி யது. பவிஷ்யத் புராணம் பதினாலாயிரத்தைந்நூறு

க்ரந்தங்களடங்கியது. ப்ரஹ்மவைவர்த்தம் பத்தாயிரத்தெண்ணூறு க்ரந்தங்கள் அடங்கியது. லிங்கம் பதினோராயிரங் க்ரந்தங்களடங்கியது. வராஹபுராணம் இருபத்துநாலாயிரம் க்ரந்தங்களடங்கியது. ஸ்காந்தம் நாற்றெண்பத்தோராயிரம் க்ரந்தங்களடங்கியது. வாமனபுராணம் பதினாயிரம் க்ரந்தங்களடங்கியது. கூர்மபுராணம்பதினேழாயிரம்க்ரந்தங்களடங்கியது. மாத்ஸ்யபுராணம் பதினாலாயிரம் க்ரந்தங்களடங்கியது. காருடபுராணம் பத்தொன்பதினாயிரம் க்ரந்தங்களடங்கியது. ப்ரஹ்மாண்டபுராணம் பன்னிரண்டாயிரங் க்ரந்தங்களடங்கியது. இங்ஙனம் புராணங்கள் முழுவதும் நாலு லக்ஷம் க்ரந்தங்களடங்கியவையென்று கூறப்படுகின்றன. அவற்றில் இப்புராணமே பதினெண்ணாயிரங்களடங்கிய ஸ்ரீபாகவதமென்று கூறப்படுகின்றது. பகவான் முன்பு தன்னுடைய நாபீ கமலத்திலிருக்கின்ற ப்ரஹ்மதேவன் ஸம்ஸாரத்தினின்று பயந்து வருந்துகையில் அவனிடத்தில் கருணை கூர்ந்து இப்புராணத்தை வெளியிட்டான். இப்புராணம் ஆதியிலும் மத்யத்திலும் அவஸானத்திலும் வைராக்யத்தை வெளியிடுகிற பலவகை உபாக்யானங்கள் அடங்கியது. ஆயினும், இது முழுவதும் ஸ்ரீஹரியின் லீலாரூபமான கதைகளின் தொகுதிகளாகிற அம்ருத ப்ரவாஹங்களால் ஸத்புருஷர்களையும் தேவதைகளையும் ஸந்தோஷப்படுத்தவல்லது. ஸமஸ்தவேதங்களிலும் எது ஸாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றதோ, ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவிறந்திருக்கை சேதனாசேதனரூபமான ஸமஸ்த ப்ரபஞ்சத்திலும் உட்புகுந்து தரித்துக்கொண்டிருக்கை ஆகிய இத்தன்மைகளையே எது அஸாதாரண தர்மமாகவுடையதோ, தன்னோடொத்த வஸ்துவில்லாத அத்தகைய பரவஸ்துவே

இப்புராணத்தில் முக்யமாக நிரூபிக்கப்படுகிற விஷய மாம். அந்த வஸ்துவின் கருணையால் உண்டாகக் கூடிய ப்ரக்ருதி ஸம்பந்த மற்றிருக்கையாகிற முக்தியே இப்புராணத்தைப் படிப்பது இப்புராண ஸ்ரீ கோசத்தைத் தானஞ் செய்வது முதலியவற்றின் முக்யப்ரயோஜன மாம்.

தன்னுடைய அந்தராத்மாவான பரம புருஷனுடைய அனுஸந்தானத்தினுலுண்டான ஸந்தோஷம நிறைந்த மனமுடையவரும் அந்த ஸந்தோஷத்தினுல் பகவானை யொழிந்த மற்ற விஷயங்களில் மனப்பற்றைத் துறந்தவரும் பகவானுடைய லீலைகளால் மனம்பறியுண்டவருமாகிய எவர் அப்பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை வெளியிடுவதும் சேதனு சேதனங்களில் ஏறிட்டப்பட்ட ஆகாரங்களை விளக்கிக்காட்டுவதும் பயங்களையெல்லாம் போக்கவல்லதுமாகிய இப்புராணத்தைக் கருணையினுல் வெளியிட்டனரோ; அத்தகையரும் வ்யாஸ மஹர்ஷியின் புதல்வருமாகிய ஸ்ரீ சுகமுனிவரை வணங்குகிறேன.

உத்தரட்டாதி நக்ஷத்ரங் கூடிய பௌர்ணமாஸியினன்று இந்த ஸ்ரீபாகவத ஸ்ரீ கோசத்தை ஸ்வர்ணமயமான ஸிம்ஹாஸனத்தில் வைத்து எவன் தானஞ் செய்கிருனே, அவன் பரமகதியைப் பெறுவான். அழகியதும் சிறப்புடையதுமாகிய இந்த ஸ்ரீபாகவதபுராணம் எதுவரையில் நேரே புலப்படாதோ, அதுவரையிலுமே ஸத்புருஷர்களின் கூட்டத்தில மற்றப் புராணங்கள் விளக்கமுறும். இந்த ஸ்ரீபாகவத புராணம் ஸமஸ்த வேதாந்தங்களின் ஸாரார்த்தங்களையும் உட்கொண்டிருப்பது. இதன் தாதபர்யார்த்தங்களாகிற அம்ருதத்தைப் பருகி அதனுல் த்ருப்தி அடைந்தவனுக்கு மற்ற

எதிலும் மனப்பிடிப்பு உண்டாகாது. நதிகளுக்குள் கங்கைபோலவும், தேவதைகளுக்குள் அச்சுதன்போலவும், விஷ்ணுபக்தர்களுக்குள் ருத்ரன்போலவும், புராணங்களுக்குள் இந்த ஸ்ரீபாகவதபுராணம் முக்யமானது. இந்த ஸ்ரீபாகவதமென்னும் புராணம் பரமபுருஷனுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி நிரூபிக்கையாகிற சோபையும் செல்வமும் அமையப்பெற்றது; ஆனதுபற்றியே மிகவும் பரிசுத்தமானது. இப்புராணம் வைஷ்ணவர்களுக்கு ப்ரியமாயிருக்கும். இதில் பரமஹம்ஸர்களுக்கு ப்ராப்யமான ஜ்ஞானயோகம் முழுவதும் மேலாக நிரூபிக்கப்படுகின்றது. அந்த ஜ்ஞானயோகத்தில் ஆத்ம பரமாத்ம ஜ்ஞானம் வைராக்யம் பக்தி இவைகளோடு கூடிய நிவ்ருத்திமார்க்கம் நன்கு வெளியிடப்பட்டது. அதைக் கேட்கிறவனும் படிக்கிறவனும் ஊக்கத்துடன் அதை ஆராய்ந்தறிகிறவனும் பரமபுருஷனிடத்தில் பக்தி உண்டாகப் பெற்று அதனால் ஸம்ஸாரத்தினின்று விடுபடுவான். விளக்கு வெளிச்சம் கொடுப்பதுபோல் ஜ்ஞானத்தை அளிக்கவல்ல இப்புராணத்தை எவன் தானே ப்ரஹ்மதேவனுக்கு நேராக உபதேசித்தானோ, மற்றும், எவன் அந்த ப்ரஹ்மதேவ ஸ்வரூபியாயிருந்து நாரதருக்கும், அந்த நாரதஸ்வரூபியாயிருந்து வேதவ்யாஸருக்கும், அந்த வேதவ்யாஸரூபியாயிருந்து சுகமுனிவருக்கும், அந்தச்சுகஸ்வரூபியாயிருந்து பரீக்ஷித்துமன்னவனுக்கும் கருணையினால் இப்புராணத்தை உபதேசித்தானோ; அத்தகையனும் பரிசுத்தனும் ஸர்வாந்தராத்மாவாயிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாதவனும் சோகமற்றவனும் மரணமற்றவனும் என்றும் ஒருவாறுயிருப்பவனும் ப்ரக்ருதிபுருஷர்களைக்காட்டிலும்

விலக்ஷணனுமாகிய பரமபுருஷனை த்யானிப்போமாக. எவன் ஸம்ஸாரத்தினின்று விடுபடவேண்டுமென்று விரும்புகிற ப்ரஹ்ம தேவனுக்கு இப்புராணத்தைக் கருணையினால் உபதேசித்தாரோ, அத்தகையனும் சேதனாசேதன ரூபமான ப்ரபஞ்சத்தில் அமைந்திருப்பவனும் அந்த ப்ரபஞ்சமெல்லாம் தன்னிடத்தில் அமையப்பெற்றவனும் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாமல் திகழ்பவனும் ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிப்பவனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய அப்பரமபுருஷனுக்கு நமஸ்காரம். எவர் ஸம்ஸாரமாகிற ஸர்ப்பத்தினால் கடியுண்ட பரீக்ஷித்து மன்னவனை அவ்விஷக் கடியினின்று விடுவித்தாரோ; அத்தகையரும் யோகிகளில் சிறந்தவரும் பரப்ரஹ்ம ஸ்வரூபியுமாகிய அந்த ஸ்ரீசுக முனிவர்க்கு நமஸ்காரம். பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

பன்னிரண்டாவது ஸ்கந்தமும் முற்றுப் பெற்றது.

இந்த ஸ்ரீபாகவத மஹாபுராணமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

